

# கி இராவின்
# கரிசல் உலகம்

100

கோவில்பட்டியில் அமைக்கப்பெற்றுள்ள முழு திருவுருவச்சிலையுடன் கூடிய நினைவரங்கம்



"கோபல்லபுரத்து மக்கள்" எனும் புதினத்திற்காக 1991 – ம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்.

https://www.kirajanarayanan.com/

வணக்கம், இந்திய மற்றும் தமிழிலக்கியத்தின் மாபெரும் கதை சொல்லியான கி.ராஜநாராயணனின் இணையதளத்திற்கு உங்களை வரவேற்கிறோம். இத்தளம், கி.இராவுடைய சிறுகதைகள், கட்டுரைகள், மற்ற படைப்புகள், அவரைப் பற்றி மற்ற எழுத்தாளர்கள் எழுதிய ஆய்வுகள், பதிவுகள், ஆவணப்படம், காணொளிகள், புகைப்படங்கள் என அனைத்தும் அடங்கிய ஒரு கருவூலமாக இலக்கிய வாசகர்களுக்குப் பயன்படும் என நம்புகிறோம். மண்ணிடமும் மனிதனிடமும் அளவற்ற கரிசனத்துடன் உரையாடும் கி.ராவின் படைப்புலகத்துக்கு இந்தத் தளம் ஒரு நுழைவாயிலாக இருக்கும்.



இவர் தொகுத்த *கரிசல் வட்டார வழக்கு அகராதி* என்பது கரிசல் வட்டாரத்தில் சிறப்பாக வழங்கும் தமிழ்ச் சொற்களுக்கான அகராதி ஆகும். இது தமிழில் வட்டார அகராதிகளுக்கு ஒரு முன்னோடி முயற்சியாகக் கருதப்பெறுகின்றது.

## தமிழ்த்துறை

டாக்டர். எம்.ஜி.ஆர்
கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
நிகர்நிலை பல்கலைக்கழகம்
சிறப்பு தர அந்தஸ்து பெற்ற நிகர்நிலை பல்கலைக்கழகம்
An ISO 21001 : 2018 தர சான்றிதழ் பெற்ற நிறுவனம்
மதுரவாயல், சென்னை-600 095, தமிழ்நாடு, இந்தியா.

# தமிழ்த்துறை

டாக்டர்.எம்.ஜி.ஆர்.
கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
(நிகர்நிலைப் பல்கலைக்கழகம்)
(உலகத்தரச் சான்றிதழ் பெற்ற நிறுவனம்)
மதுரவாயல் (அடையாளம்பட்டு), சென்னை - 600 095

தமிழ்த்துறை வெளியீடு எண் : ୨

# 'கி.இராவின் கரிசல் உலகம்'

(கரிசல் இலக்கியத்தந்தையின் நூற்றாண்டினை முன்னிட்டு)

# கி இராவின் கரிசல் உலகம்

[கரிசல் இலக்கியத் தந்தையின் நூற்றாண்டினைத் தொடர்ந்து]

தொகுப்பும் பகுப்பும்
முனைவர் சு இராமலிங்கம்
இணைப்பதிவாளர் ~ மொழிப்புலம்






## தமிழ்த்துறை

டாக்டர். எம்.ஜி.ஆர்
கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
நிகர்நிலை பல்கலைக்கழகம்
சிறப்பு தர அந்தஸ்து பெற்ற நிகர்நிலை பல்கலைக்கழகம்
An ISO 21001 : 2018 தர சான்றிதழ் பெற்ற நிறுவனம்
மதுரவாயல், சென்னை-600 095, தமிழ்நாடு, இந்தியா.

# அன்புப்படையல்

*********************************************

# கு அழகிரிசாமி



**23 Sep 1923 <::::> 5 Jul 1970**

***அறிய, இணையவும் :***

[1] https://tamil.wiki/wiki/Ku._Azhagirisamy

[2] https://www.exoticindiaart.com/book/details/ku-alakirisami-cirukataikal-tamil-uax758/

[3] https://www.youtube.com/watch?v=SGexLX4gUDY

[4] https://www.panuval.com/ku-azhagirisami

[5] https://www.researchgate.net/publication/362359708_Ku_Azhagirisami's_Anbalippu_Short_Stories_Human_Ideals

பேரா.முனைவர் நா.சுலோசனா
தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113.

## அணிந்துரை

கோபல்ல கிராமம் கதை மாந்தர்களில் ஒருவர் நூலுக்குள்ளிருந்து வெளியேறி கோபல்லக் கிராமத்தை வாசிக்க நேர்ந்தால் இந்த நூலின் ஒரு வரியும் ஒரு அம்சமும் அவருக்குப் புரியாமல் போகாது. தீவிர வாசகனுக்கான உள்ளோட்டமும் மேலோட்டமான வாசிப்புக்கு உகந்த எளிமையும் உள்ள ஆபூர்வமான வசீகரம் கொண்ட எழுத்து இது. வாசிப்பவனின் தோள்மீது கைபோட்டுக்கொண்டு பேசும் இயல்பான குரலில் பேசும் எழுத்து. பேச்சு வழக்கும் எழுத்து மொழிக்குமான இடைவெளியை மெல்ல மெல்ல அழித்துச் செல்லும் எழுத்து. எளிமையாகவும் நேரடியாகவும் கதை சொல்வதால், மொழியின் அழகிலும் லாகவத்திலும் சமரசம் செய்துகொள்வதில்லை. கோபல்லபுரத்து மக்கள் என்னும் புதினம் கோபல்ல கிராமம் என்னும் புதினத்தின் தொடர்ச்சியே. “**கோபல்லபுரத்து மக்கள்**” எனும் புதினத்திற்கு 1991-ம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருது வழங்கியது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

கோபல்லபுரத்து மக்கள் என்னும் புதினம் கோபல்ல கிராமம் என்னும் புதினத்தின் தொடர்ச்சியே என்பதை கி ரா இவ்வாறு குறிப்பிடுகின்றார் (சாகித்திய அகாதெமி விருது பெற்றபின்பு, அவரது ஏற்புரையில் 25.2.1992):

> “ஆரம்பத்தில் பிறந்த அந்தக் கதைகளை, தாத்தாக்களும் பாட்டிகளும் தங்கள் பேரன் பேத்திகளுக்குச் சொன்னார்கள். அந்தப் பேரன்மாரும் பேத்திமாரும் கிழவர்களாகித் தங்கள் பேரன்பேத்திகளுக்குச் சொன்னார்கள். இப்படியாக அந்த நடப்புச் சம்பவங்கள் கதையாகி, கதை புராணமாக உருவெடுத்து, மனசைத்தொடும் கதைகளாகக் கேட்ககேட்க தெவிட்டாதபடி ஆகிவிட்டது! “கோபல்லபுரத்து மக்க”ளின் முதல்பாகமான “கோபல்ல கிராம” நாவலுக்கு அடிப்படையாக இந்த நாட்டுப்புறக் கதைகளே அமைந்தன.
>
> இந்நாவலின் முதல்பாகம், கிழக்கிந்தியக் கம்பெனியார் இங்கே வந்து காலூன்றி, ஆட்சியைக் கைப்பற்றியதோடு முடிகிறது.
>
> இரண்டாம் பாகமான “கோபல்லபுரத்து மக்களில்” பிரிட்டி‘ ஆட்சி வந்ததின் விளைவால் இந்த கிராமத்தில் ஏற்பட்ட மாற்றங்கள், அந்த ஆட்சியை எதிர்த்து இந்திய மக்கள் கிளர்ந்தெழுந்து போராடிய போராட்டம், அப்போராட்டம் இந்தச் சிறிய கிராம மக்களை எவ்வாறு பாதித்தது என்பதைச் சொல்லுகிறேன்.
>
> இந்தியா சுதந்திரம் பெற்ற கதையோடு இந்நாவல் இப்போதைக்கு முடிவடைகிறது.”

கரிசல் இலக்கியத்தந்தை எனக்கருதப்பெறும் கி ராஜநாராயணனை 21-ஆம் நூற்றாண்டின் இளைய தலைமுறைக்கு அறிமுகப்படுத்தும் வகையில் “**கி ராவின் கரிசல் உலகம்**” எனும் இந்நூல் வெளியிடப்பெற்றிருப்பது ஒரு சிறந்த முயற்சி. கி.ராவின் நூற்றாண்டையொட்டி ஒருங்கிணைத்தக் கருத்தரங்கத்தின் விழைவாக ’**கி ராவின் கரிசல் உலகம்**’ என்னும் நூல்

வெளிவருகின்றது என்றால் அது கி.ரா.வின் படைப்புகள் ஏற்படுத்திய தாக்கம் என்றுதான் சொல்லமுடியும். இது நூல் அன்று. பல்வேறு தகவல்களை அடக்கிய தகவல் களஞ்சியம் ஆகும்.

பல்வேறு முக்கியமான தகவல்களை தன்னிடத்தே கொண்டிருக்கின்றது இந்நூல். கி.ரா., நூற்றாண்டுக் கருத்தரங்கம் நடைபெற்ற புகைப்படம், விழாச் சிறப்பு, ஆய்வுக்கோவையிலிருக்கும் கட்டுரைகள், பேட்டிகள் தொடர்பான இணையதளங்கள் இவற்றையெல்லாம் வெளியிட்டிருப்பது கூடுதல் சிறப்பு. சாகித்ய அகாதமி விருது பெற்ற செய்திகளைப் புகைப்படங்களாக நம் கண்முன் காட்சிப்படுத்தியிருக்கிறார் தொகுப்பாசிரியர். கோபல்லபுரத்து மக்கள் நாவலின் கதைச் சுருக்கம், கதை தொடர்பான பார்வைகள், திறனாய்வுகள் இவற்றை முழுமையாக வாசிக்கக்கூடிய இணையதளங்களை நம்மிடையே பகிர்ந்திருக்கிறார். கரிசல் வட்டார வழக்கு அகராதியின் அறிமுகம், முன்னுரை, ஆய்வுக் கட்டுரைகளை முழுமையாக வாசிக்க கூடிய இணையதளங்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. கி.ரா.,வின் நூல்களை வாசிக்கும் விதமாக வாசிப்பு அனுபவத்தை எதிர்கால தலைமுறைகளுக்குக் கொடுப்பதற்காக வாழைப்பழத்தை உரித்துக் கொடுத்தது போல அந்த புத்தகத்தில் ஆங்காங்கே நிறைய இணையதள முகவரிகளையும் பல்வேறு காணொளிகளின் இணைப்பையும் தந்திருப்பது மிகச் சிறப்பு.

கி.ரா.,வின் படைப்புகளை ஆய்வு செய்து பட்டம் பெற்ற முனைவர்பட்ட ஆய்வேடுகளை முழுமையாக வாசிக்கும் வகையில் இணையதள முகவரியும் கொடுத்திருப்பது கூடுதல் சிறப்பு. கி.ரா.,வின் மறைவுக்குப் பிறகு தூத்துக்குடி மாவட்டம், கோவில்பட்டியில் கரிசல் இலக்கிய மையம் அமைக்க வைத்த கோரிக்கைக்கானப் புகைப்படத்தையும் நம்மோடு பகிர்ந்து இருக்கிறார். கி.ரா.,வினுடைய கதைகளில் கிடை நாவல் '**ஒருத்தி**' என்று தமிழிலும் கரண்டு எனும் நாவல் **கரண்ட்** இந்தியிலும் திரைப்படமாக வந்திருக்கும் இணைப்பைக் கொடுத்திருக்கிறார். அதைச் சொடுக்கினால் இணைப்பு திறக்கும் வகையில் வகை செய்யப்பட்டிருக்கிறது . கி.ரா.,வினுடைய 95வது பிறந்தநாள் உரை, அவருடைய பேட்டி, சிறுகதைகள் கதை சொல்லியாக ஒரு சிலவற்றை ஒலி நூல் வடிவில் இணைப்பு நம்மை கி.ரா.,வுடன் இணைக்கின்றன. கி.ரா.,வும் முத்துக்குமாரசாமியும் இணைந்து கொடுத்த பேட்டியினுடைய இணையதள முகவரி, காணொலிப் பதிவு இணைப்பெல்லாம் இந்த நூலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

ஆக மொத்தம் கி.ரா.,வைப் பற்றிப் பல்வேறு இணையதள முகவரிகளை இந்த புத்தகத்தில் சுட்டிக்காட்டியிருப்பது ஆகச்சிறந்த ஒரு பணியாகும். வெறுமனே நூல் வடிவம் மட்டும் படித்துவிட்டு போகாமல் அந்த நூலுக்கான இணைப்புகள் கொடுத்திருப்பது தொழிநுட்ப வளர்ச்சியின் புதுமைப் போக்காகும். கி.ரா.,வின் எழுத்து வகைமைகள் பெரிய கடலாக இருந்தாலும் அதற்கு முத்தாய்ப்பாக ஒரு சில மட்டும் நூலில் கோடிட்டுக் காட்டியிருப்பது எதிர்கால தலைமுறையினருக்கும் அனைவருக்குமான வித்தாக இந்த நூல் விளங்குகிறது.

தரப்பட்டிருக்கும் இணையதள இணைப்புகள் வாசகர்கள் பல்வேறு தகவல்களை சென்றடையும் பொருட்டு செயல்படுகின்றன. மேலும், அனைவரும் அனைத்து வகையிலும் பயன்பெறும் வகையில் இந்நூலின் இறுதியில் **கோபல்லபுரத்து மக்கள்** எனும் நூலும் (270 பக்கங்கள்), நூலை பதிவிறக்கம் செய்யும் பொருட்டு அதன் இணையதள இணைப்பும் தரப்பெற்றிருக்கின்றன.

கி இராஜநாராயணனும் (16.9.1923 - 17.5.2021), கு அழகிரிசாமியும் (23.9.1923 - 5.7.1970) ஒரே கிராமத்தைச் சேர்ந்தவர்கள் (இடைச்செவல்); ஒரே தெருவில் வசித்தவர்கள். ஒரே காலத்தவர்கள்ளூ ஐந்தாம் வகுப்புவரை வகுப்புத் தோழர்கள்; விளையாட்டுத் தோழர்கள். இருவரும் சாகித்திய அகாதெமி விருதாளர்கள் (முறையே 1991 ரூ 1970). இந்திய இலக்கிய உலகில் இ∴து ஓர் ஈடு இணையற்ற வரலாறு. எனவே, "**கி ராவின் கரிசல் உலகம்**" எனும் இந்நூல் கு அழகிரிசாமி அவர்களுக்கு காணிக்கையாக்கி இருப்பது ஒரு முன்னேடியான புதிய முயற்சி.

இந்நூலின் தொகுப்பாசிரியர் முனைவர் சு.இராமலிங்கம் அவர்கள் இணைப்பதிவாளராக, டாக்டர் எம்.ஜி.ஆர்.கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தில் (சென்னை-600 095) பணிபுரிந்து வருகின்றார். இந்நூல் அங்குள்ள தமிழ்த்துறையின் வெளியீடு. பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை வழியாகத் தமிழ்நாட்டிலுள்ள கல்லூரிகள் மட்டுமல்லாது பல்வேறு அயல்நாட்டுப் பல்கலைக்கழகங்களுடனும் தமிழ் அமைப்புகளோடும் இணைந்து பல்வேறு தமிழ்ப் பணிகளை ஆற்றி வருகிறார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தொடங்கப்பட்ட அறக்கட்டளையின் வழியாகத் '***திறனாய்வுச் செம்மல் விருது'*** வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். தந்தையார் எழுதிய 105 புத்தகங்களை பின்புலமாக வைத்து 105 நாள் ஒவ்வொரு தலைப்பிலும் இணைய வழியாகப் பல்வேறு பேராசிரிய ஆளுமைகளை அழைத்துப் பேச வைத்த பெருமைக்குரியவர். அது மட்டுமல்லாமல் தன் தந்தையாருடைய நூல்களை பின்புலமாக வைத்து ஆய்வு செய்யும் மாணவர்களுக்குப் பல்வேறு உதவிகளைச் செய்து வருகின்றார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கல்வி அறக்கட்டளையின் வழியாகப் பல்வேறு கருத்தரங்கங்கள், பல்வேறு வாசிப்பு அனுபவங்கள், பல்வேறு திறனாய்வு அனுபவங்கள், எழுத்துகளை வாசிப்போருக்கு விருது வழங்கி அங்கீகரிக்கும் பண்பு. இப்படிப் பல்வேறு பணிகளை மேற்கொண்டிருக்கும் நூலாசிரியர் முனைவர் சு. இராமலிங்கம் அவர்களின் இந்த நூலாக்கம் ஒரு சிப்பிக்குள் அடைத்த முத்தாக நமக்குக் கிடைத்திருக்கிறது. சத்தமில்லாமல் இலக்கியச் சமூகத்தைக் கொண்டாடும் பெருந்தகையாளரின் பணிகள் மேலும் மேலும் சிறக்க என்னுடைய வாழ்த்தும் பாராட்டும்.

*****************

# நூல்முகம்

தொல்காப்பியர் செந்தமிழ் நிலத்தில் பேசப்பட்ட சொற்களை இயற்சொற்கள் என்றும் மற்ற தமிழ் நிலங்களில் பேசப்படும் சொற்களை திசைச் சொல் என்றும் குறிப்பிடுகின்றார். பெரும்பாலான வட்டார மொழி வழக்குகளின் சொல் அகராதியில் குறிப்பிடத்தக்க மாற்றம் இல்லை எனினும், சில வழக்குகள் பெரிதும் மாறுபடுகின்றன.

மொழி குறித்து, மற்றும் அதன் கூறுகள், அதன் பன்முகத் தன்மை, அதன் பயன்பாட்டுப் பரப்பு குறித்துப் பேசுவதற்கு நுணுக்கமான பார்வை தேவையாகின்றது. காரணம், மொழி மாறிக்கொண்டேயிருப்பது மட்டுமின்றி வளர்ந்து கொண்டேயிருக்கின்றது. மொழி தனித்து இயங்கக் கூடிய ஒன்றல்ல. அது குறிப்பிட்ட இனக்குடியின் வாழ்க்கைமுறை சார்ந்து, நிலம் சார்ந்து, கலைகள், தொழில்கள், கலாச்சாரப் பண்பாட்டுக் கூறுகள் சார்ந்து உருவாவது. இந்த மொத்தக் கூறுகளும் சேர்ந்ததுதான் மொழி எனப்பெறுகின்றது. தமிழ் மொழியில் வட்டார வழக்குகள் குறித்த பேச்சு வெகு காலத்திற்கு முன்பே தொடங்கப்பட்டுவிட்டது.

அதிகப்படியான போக்குவரத்து வசதி, தொழிற்சாலைகள், நகரங்களை நோக்கிய குடிபெயர்வு, அச்சு ஊடகங்கள், காட்சி ஊடகங்கள், உலகமயமாக்கம் என்று அனைத்தும் சேர்ந்து தமிழ் வாழ்க்கைமுறையை முற்றிலுமாகக் குலைத்துப் போட்டுவிட்டது எனக்கருதுவது நடைமுறை. வழக்குச் சொற்களில் உயர்ந்தது தாழ்ந்தது என்பது இல்லை.

வட்டார வழக்குகள் என்பது குறிப்பிட்ட நிலப்பரப்பிற்குள் செய்யப்படும் தொழில்கள், மக்களின் வாழ்க்கை சார்ந்த, சடங்குகள், சம்பிரதாயங்கள், உணவு பழக்க வழக்கங்கள், பொழுதுபோக்கு அம்சங்கள், விளையாட்டு, அன்றாட வாழ்வியல், கடந்த தலைமுறையினர் கைமாற்றிவிட்டு சென்ற கதைகள், பாடல்கள், புராண, இதிகாச, ஐதீக கட்டுக்கதைகளின் வழியாகவே உருவாகின்றன. வட்டார வழக்குகள் சொல்நயம், பொருள்நயம், ஓசைநயம், அடுக்குத்தொடர் என்று அமைந்திருப்பதோடு ஒரு வாக்கியத்திலேயே, ஒரு பாடலிலேயே, ஒப்பாரியிலேயே ஒரு மனிதனுடைய, ஒரு குடும்பத்தினுடைய ஒரு சமூகத்தினுடைய முழுக்கதையையும் கூறிவிடும் என்பது கண்கூடு.

உலகத்தில் இன்று செழுமையான மொழிகள் என்று சொல்லப்படும் எல்லா மொழிகளுமே ஒரு காலத்தில் வட்டார மொழிகளாக, பேச்சு மொழிகளாகத்தான் இருந்துள்ளன என்பது கண்கூடு.

ஒரு மொழியின் சொல்வளத்தைப் பெருக்குவதற்கு வட்டார வழக்குமுறைகள், பொதுப் பேச்சு வழக்குகள் பெரிய பங்களிப்பைச் செய்ய இயலும். 1980க்குப் பிறகு இலக்கியத்தில் கிராமப்புற வாழ்வையும் மொழியையும் அதன் தன்மை மாறாமல் ஓரளவு பதிவுசெய்தவர்களில் முதன்மையானவர் கி. ராஜநாராயணன் ஆவார். பொது எழுத்து மொழியைப் பயன்படுத்துபவர்களை விட வட்டார வழக்குகளைப் பயன்படுத்தி எழுதுகிறவர்கள் கூடுதல் அக்கறையுடன் மொழியின் வலுவைப் புரிந்துகொண்டு எழுத வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றனர். கி.ராஜநாராயணனின் எழுத்தின் ஆதாரமாக அவரது குறிப்பிலிருந்து:

“நான் பிறந்து விழுந்தது இந்த மண்ணில்தான். இந்தப் புழுதியை நான் தலையில் வாரி வாரிப் போட்டுக்கொண்டும் என் கூட்டாளிகளின் தலையில் வாரி இறைத்தும் ஆனந்தப்பட்டிருக்கிறேன். இந்தக் கரிசல் மண்ணை நான் ருசித்துத் தின்றதற்கு என் பெற்றோரிடம் எத்தனையோ முறை அடிவாங்கியிருக்கிறேன். இன்றைக்கும் தெவிட்டவில்லை இந்த மண்”.

தமிழ்த்துறையின் வெளியீடான இந்நூல் (கரிசல் உலகம்) கி.ராஜநாராயணனை 21-ஆம் நூற்றாண்டின் இளைய தலைமுறைக்கு அறிமுகப்படுத்தும் நோக்கில் அமைந்திருப்பது மிகவும் பாராட்டிற்குரியது. நூலில் தரப்பெற்றுள்ள இணையதளங்கள் நூலிற்கு மேலும் வலுசேர்க்கின்றன.

# உள்ளடக்கம்

https://www.kirajanarayanan.com/

|  | ஒலிநூல் வடிவில் சில சிறுகதைகள் (இணையதளங்கள் வழியாக) |  |
|---|---|---|
| 11 | **கி இராவும் முத்துக்குமாரசுவாமியும்**<br>தமிழ் உரையாடலின் ஆங்கில மொழியாக்கம் – (தமிழில்) பேட்டியின் இணையதளம்<br>https://www.youtube.com/watch?v=gJYw6LQvV5c | 149 |
| பின்னிணைப்பு<br>**கோபல்லபுரத்து மக்கள் – நூல்** |  |  |











# கி இரா @ 100




மூன்று தலைமுறையும் போற்றும்
எழுத்தாளராக கி.ராஜநாராயணன் இருக்கிறார்
என இந்திய குடியரசு முன்னாள் துணைத் தலைவர்
வெங்கய்யா நாயுடு புகழாரம் சூட்டியுள்ளார்.

*நூற்றாண்டு விழா குறித்து மேலும் அறிய,*
*கீழ்க்கண்ட இணையதளத்தில், இணையவும்:*

https://www.etvbharat.com/tamil/tamil-nadu/state/chennai/centenary-celebrations-of-writer-ki-rajanarayanan-venkaiah-naidu-released-ki-ra-100-books/tamil-nadu20230313183127767767739

| கி இராஜநாராயணன் அவர்களை முழுமையாக அறிய, இணையவும்: https://www.kirajanarayanan.com/ |
|---|

# கி இராஜநாராயணன்

https://ta.wikipedia.org/wiki/%E0%AE%95%E0%AE%BF._%E0%AE%B0%E0%AE%BE%E0%AE%9C%E0%AE%A8%E0%AE%BE%E0%AE%B0%E0%AE%BE%E0%AE%AF%E0%AE%A3%E0%AE%A9%E0%AF%8D

*************************

## எழுத்தாளர் கி ராஜநாராயணன்

**தொகுப்பு : பிரேமாவதி நீலமேகம்**
https://www.tamilwriters.in/2021/05/blog-post_65.html

'என்னுடைய மக்கள் பேசுகிற பாஷையில், அவர்கள் சிந்திக்கிற மனோ இயலில் அவர்கள் வசிக்கிற சூழ்நிலையில் என்னுடைய சிருஷ்டிகள் அமையவேண்டும் என்று நினைக்கிறவன் நான். அவர்கள் சுவாசிக்கிற காற்றின் வாடை, அவர்கள் பிறந்து விளையாடி நடந்து திரிகிற என் கரிசல் மண்ணின் வாசமெல்லாம் அப்படியே என் எழுத்துக்களில் கொண்டுவந்து விடவேண்டும் என்பது என்னுடைய தீராத விருப்பம். இந்த மண்ணை நான் அவ்வளவு ஆசையோடு நேசிக்கிறேன்' என்று கூறிய கி.ரா. அவர்கள் தன் எளிமையாக எழுத்தின் மூலம் அந்த விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டவர்.

கோவில்பட்டியில் உள்ள இடைசெவல் கிராமத்தில் 16-9-1922 அன்று திரு. ஸ்ரீ கிருஷ்ண ராமானுஜம் - திருமதி. லட்சுமி அம்மாள் தம்பதியரின் 5வது மகனாகப் பிறந்தவர் கி.ரா. என்று இலக்கிய உலகில் அழைக்கப்பெறும் கி.ராஜநாராயணன் அவர்கள். அவரின் துணைவியார் கணவதி அம்மாள். இரண்டு மகன்கள்.

கரிசல் இலக்கியத்தின் தந்தை எனப் புகழப்படும் கி.ரா. அவர்களின் முழுப்பெயர் ராயங்குல ஸ்ரீ கிருஷ்ணராஜ நாராயண பெருமாள் ராமானுஜர் என்பதாகும்.

'மழைக்காகத்தான் நான் பள்ளிக்கூடத்தில் ஒதுங்கினேன். அப்போதும்கூட நான் மழையைத்தான் பார்த்துக்கொண்டு நின்றேன்' என்று சொல்லும் கி.ரா. அவர்கள் ஏழாம் வகுப்பு வரையே படித்தவர். இருப்பினும் பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தின் நாட்டுப்புற இலக்கிய மதிப்பீட்டுத் துறையின் இயக்குநராகவும், வருகைதரு பேராசிரியராகவும் பணியாற்றினார் என்பது அவரின் இலக்கிய ஆளுமைக்குக் கிடைத்த அங்கீகாரமாகும்.

கி.ரா. அவர்கள் எளிய விவசாய குடும்பத்தில் பிறந்தவர். சிறந்த கதைசொல்லி. நல்ல இசைஞானம் வாய்க்கப் பெற்றவர். வட்டார வழக்கு மொழியில் தம் படைப்புகளைப் படைத்து, தமிழ் இலக்கியத்தில் அதற்கென ஒரு தனி இடத்தை உருவாக்கியவர். நாட்டார் வழக்காறுகளைத் தொகுத்தவர்.

அவரின் 'சொந்தம்' என்ற சிறுகதை கு. அழகிரிசாமி அவர்கள் ஆசிரியராக பணியாற்றிய சக்தி இதழில் 'சொந்தச்சீப்பு' என்ற பெயரில் முதன்முதலாக வெளிவந்தது.'கதவு' 'மாயமான்' போன்ற சிறுகதைகள் பரவலான வரவேற்பைப் பெற்றவை

இவரது கதவு என்ற முதல் சிறுகதை தொகுப்பிற்கு, தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் முதல் பரிசு கிடைத்தது. 1986இல் வானொலி நாடக விழாவில் ஒலிபரப்பப்பட்ட இவரது 'முரண் பாடுகள்' கதைக்கு இரண்டாம் பரிசு கிடைத்துள்ளது.

இடைசெவலில் விவசாயிகள் சங்கத்தை உருவாக்கிய கி.ரா. அவர்கள் ஒன்றுபட்ட இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினராக இருந்தவர்.

இறுதிக் காலம் வரை எழுத்துப் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்த கி.ரா. அவர்கள் தனது 97வது வயதில் 'அண்டரெண்ட பட்சி' என்ற குறுநாவலை தனது அழகான கையெழுத்தில் எழுதி வெளியிட்டுள்ளார். இவரது சில கதைகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன.

















புகைப்படக் கலைஞர் இளவேனில் அவர்கள் தான் எடுத்த கி.ரா.வின் புகைப்படங்களை ஒருங்கிணைத்து, 2003இல் பாண்டிச்சேரியில் ஒரு புகைப்படக் கண்காட்சியை நடத்தியுள்ளார்.

தன் இறுதிக் காலத்தில் பாண்டிச்சேரியில் வசித்து வந்த நிலையில் 17-5-2021 அன்று தனது 98ஆவது வயதில் இயற்கை எய்தினார். பாண்டிச்சேரி அரசால் தக்க மரியாதையுடன் தொடங்கி வைக்கப்பட்ட அவரின் இறுதி ஊர்வலம் இடைசெவல் கிராமத்தில் தமிழக அரசு மரியாதையுடன் முடிவுற்று, நல்லடக்கம் நடைபெற்றது.

'மனுஷனோட வாழ்க்கையை யார் மதிப்பீடு பண்ணமுடியும். அப்படி மதிப்பீடு பண்ணிட்டா சொல்லவே விஷயமிருக்காதே. மனுஷ வாழ்க்கை மட்டுமில்ல. எதையும் மதிப்பீடு பண்ண முடியாது. ஒரு விஷயத்தை மதிப்பீடு பண்ணி முடிச்சு வச்சிருப்போம். எவனாவது ஒருத்தன் வந்து அத தப்புன்னு சொல்லுவான். இன்னொருத்தன் வந்து அவன் சொன்னதையும் மறுப்பான். எது நிஜம், எது பொய்யுன்னு எளிதா கண்டுபிடிக்க முடியாது. வாழ்க்கையின் சுவாரஸ்யமே அதுதான்...' வாழ்க்கையைப் பற்றிய அவர் மதிப்பீடு இதுதான்.

## பொறுப்புகள்

கதை சொல்லி என்ற காலாண்டு இலக்கிய இதழின் ஆசிரியராக பணியாற்றியுள்ளார்.

1998 முதல் 2002 வரையில் சாகித்ய அகாதெமியின் தமிழ் ஆலோசனைக் குழு உறுப்பினராக இருந்துள்ளார்.

## படைப்புகள்

### அகராதி

கரிசல் வட்டார வழக்கு அகராதி

### சிறுகதை தொகுப்புகள்

கன்னிமை
மின்னல்
கோமதி
நிலைநிறுத்தல்
கதவு
பேதை
ஜீவன்
நெருப்பு
விளைவு
பாரதமாதா
கண்ணீர்
வேட்டி
கரிசல் கதைகள்
கி.ரா. பக்கங்கள்
கிராமிய விளையாட்டுகள்
கிராமியக் கதைகள்
குழந்தை பருவக் கதைகள்
கொத்தைப் பருத்தி

புதுவை வட்டார நாட்டுப்புறக் கதைகள்
பெண் கதைகள்
பெண் மனம்
வயது வந்தவர்களுக்கு மட்டும்
கதை சொல்லி
மாயமான்
அப்பாபிள்ளை அம்மாபிள்ளை
பெருவிரல் குள்ளன் - சொல்கதை (குழந்தைகளுக்கானது)

**குறுநாவல்கள்**
கிடை
பிஞ்சுகள்

**நாவல்**
கோபல்ல கிராமம்
கோபல்லபுரத்து மக்கள்
அந்தமான் நாயக்கர்

**கட்டுரை**

ருஷ்ய மண்ணின் நிறம் என்ன?
புதுமைபித்தன்
மாமலை ஜீவா
இசை மகா சமுத்திரம்
அழிந்துபோன நந்தவனங்கள்
கரிசல் காட்டுக் கடுதாசி
கி.ரா. கடிதங்கள்
கி.ரா. கட்டுரைகள்

**தொகுதி**
நாட்டுப்புறக் கதை களஞ்சியம்
தமிழ்நாட்டு நாடோடி கதைகள்
தமிழ் கிராமியக் கதைகள்
தாத்தா சொன்ன கதைகள்

**திரைப்படம்**
கிடை என்ற சிறுகதை ‘ஒருத்தி’ என்ற பெயரில் திரைப்படமாக எடுக்கப்பட்டுள்ளது.

கரண்ட் என்ற சிறுகதை இந்தி மொழியில் கரண்ட் என்ற பெயரில் திரைப்படமாக்கப் பட்டுள்ளது.

## விருதுகள்
தமிழக அரசின் விருது - 1965
தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் விருது - 1971
இலக்கியச் சிந்தனை விருது - 1979
சாகித்ய அகாடமி விருது - 1991
மா.சிதம்பரம் விருது - 2008
தமிழ் இலக்கியத் தோட்டம் - 2016
கனடா தமிழ் இலக்கியத் தோட்டத்தின் 2016ஆம் ஆண்டு
தமிழ் இலக்கிய சாதனை விருது
மனோன்மணியம் சுந்தரனார் விருது - 2016 - 2017

************************

# கரிசல் இலக்கியக் கதாநாயகன்



இந்து கணேஷ்

https://suvadu.in/p-2023-0916-01/




### கி.ரா. பிறந்தநாள் (100) சிறப்புக் கட்டுரை

*கி.ரா. என்று பிரியமாய் அழைக்கப்படுகிற கி. ராஜநாராயணன் அவர்கள் **கரிசல் இலக்கியத்தின் தந்தை** என்று அறியப்பட்டவர். இவரது முழுப்பெயர் ராயங்குல ஸ்ரீ கிருஷ்ணராஜ நாராயணப் பெருமாள் ராமானுஜ நாயக்கர் என்பதாகும். எதனால் தனக்கு இவ்வளவு நீளமான பெயர் வந்தது என்பதைக்கூட எள்ளல் நடையுடன் எழுத இவரால் மட்டுமே முடியும். அது என்ன என்பதை கட்டுரையின் இறுதியில் சொல்கிறேன்.*

இவரது காலம் செப்டம்பர் 16, 1922 முதல் மே 17, 2021 வரை. கோவில்பட்டி அருகில் உள்ள இடைச்செவல் கிராமத்தைச் சேர்ந்தவர். கிட்டத்தட்ட 98 ஆண்டுகள் வாழ்ந்த கி. ரா, இந்தியாவை சுதந்திரத்திற்கு முன்பும் பின்பும் கண்டவர். இதனால்தான் இவரால் இன்றைய அறிவியல் முன்னேற்றங்களைக் காணாத, கல்வியறிவு இல்லாத அசல் கிராமங்களைப் பற்றி எழுத முடிந்திருக்கிறது.

கி. ராஜநாராயணன் இயல்பில் ஒரு விவசாயி. ஒரு தேர்ந்த கதை சொல்லி. ‘நான் மழைக்குத்தான் பள்ளிக்கூடம் ஒதுங்கியவன். பள்ளிக்கூடத்தைப் பார்க்காமல் மழையைப் பார்த்துக்கொண்டு இருந்துவிட்டேன்’ என்று கூறும் கி.ரா., இந்திய சுதந்திரத்திற்கு முன்பு எட்டாம் வகுப்புப் பொதுத்தேர்வுத் தாளில் ஸ்ரீராமஜெயத்திற்கு பதில் ‘வந்தே மாதரம்’ என்று எழுதியதால் தேர்வில் தோற்றுப் போனார். பிறகு அப்படியே தன் படிப்பை நிறுத்திக்கொண்டார். பள்ளிப் படிப்பு மட்டுமே படிப்பல்ல; அனுபவம் கற்றுக் கொடுக்கும் கல்வி அளப்பரியது என்பதைத் தன் எழுத்தின் வழி நிரூபித்த கி.ரா., 1991ஆம் ஆண்டில் பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தில் வருகை தரும் சிறப்புப் பேராசியராகப் பணியாற்றிய பெருமைக்குரியவர்.

சாகித்ய அகாடமி விருது, இலக்கியச் சிந்தனை விருது, தமிழக அரசின் விருது, கனடா தமிழ் இலக்கியத் தோட்டத்தின் 2016ஆம் ஆண்டுக்கான தமிழ் இலக்கியச் சாதனை விருது உள்ளிட்ட தமிழின் முக்கிய இலக்கிய விருதுகள் பெற்ற கி.ரா. தனது இறுதிக் காலத்தில் புதுச்சேரியில் வாழ்ந்தார்.

தமிழ் இலக்கியத்தில் கி.ரா.வின் பங்களிப்பு இன்றியமையாதது. தமிழ் எழுத்துலகில் முதன்முதலில் வட்டார வழக்கில் எழுதியவர் இவர்தான். பேச்சு வழக்கு ஒருபுறம் இருக்க, எழுதினால் அது தூய தமிழில்தான் இருக்க வேண்டும் என்ற விதியை நம் எழுத்தாளர்கள் கடைபிடித்து வந்தார்கள். அந்த முறைமையை மாற்றி, தன் முதல் நாவலான 'கோபல்ல கிராம'த்தை வித்தியாசமான முறையில் எழுதி ஒரு நாவல் போட்டிக்கு அனுப்பியிருக்கிறார் கி.ரா. அதை வாசித்துப் பார்த்த நடுவர்களுக்கு ஆச்சரியம் ஒருபுறம் இருந்தாலும் இதை ஏற்றுக்கொள்ளலாமா வேண்டாமா என்ற தயக்கம் இருந்ததாம். ஏனெனில், வட்டார வழக்கில் நிறைய கெட்ட வார்த்தைகள் இருந்ததால் அவர்களுக்கு அப்படி ஒரு தயக்கம் வந்திருக்கிறது. பலத்த வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு, கோபல்ல கிராமத்துக்கே முதல் பரிசு என்று அறிவித்தார்கள். இதை நாவல் என்றே சொல்ல முடியாது என்று கோபல்ல கிராமத்தை ஏற்க மறுத்த சுந்தர ராமசாமி அவர்கள்கூட, பின்னாளில் கி.ரா.வின் எழுத்துகளில் திளைத்து அவற்றை ரசிக்கத் தொடங்கிவிட்டார்.

வட்டார வழக்கில் எழுவதுவதைப் பற்றிக் கூறும்போது, "அப்படி எழுதும்போது நம் முன்னோர்களின் மொழியை நாம் ஆவணப்படுத்துகிறோம்" என்கிறார் கி.ரா. இதற்காகவே இவர் பல எழுத்தாளத் தோழமைகள் துணையுடன், "கரிசல் காட்டு வட்டாரச் சொல் அகராதி"யை உருவாக்கினார். இது தமிழுக்கு அவர் செய்த மிகப் பெரிய பங்களிப்பாகும். கி.ரா.வின் எழுத்துக்களில், அது கதையோ அல்லது கட்டுரையோ எதுவாக இருந்தாலும் நாலு பத்திக்குள் ஒரு சொலவடை வந்துவிடும். இந்தச் சொலவடைகளே, பாட்டிமார்கள் நமக்கு அருகில் அமர்ந்து கதை சொல்லும் உணர்வை ஏற்படுத்திவிடும்.

கி.ரா.வின் படைப்புலகம் பெரும்பாலும் கிராமங்களை மையமாகக் கொண்டே இருக்கும். பாம்படக் கிழவிகள் வாயில் ஊறும் வெற்றிலையோடு கலந்திருக்கும் கதைகளின் குரல் பதிவாகவே இருக்கும், அவரின் எழுத்துக்கள். எந்தவிதக் கூச்சமும் இல்லாமல் கதை சொல்லும் இவரின் பாங்கு அலாதியானது. அதைக் கேட்கும்போது எனக்கு, எங்கள் ஆச்சி அவ்வையார் விரதத்திற்குக் கதை சொல்வது ஞாபகம் வரும். 'இப்படித்தான் ஒரு ராஜா இருந்தாராம்..' என்று நீளும் கதை சொல்பவர்களாலேயே இந்தக் கதைகளுக்குக் கால் முளைத்து நம் மனத்திற்குள் காலடி பதிக்கும்.

இவர் எழுத்துக்களில் இழையோடும் நையாண்டியும் நகைச்சுவை உணர்வும் நமக்கு இவர் படைப்புகளை வாசிக்கும்போதெல்லாம் ஒரு ஆசுவாசத்தை ஏற்படுத்திவிடும். இன்று காப்பி/ டீ கடைகள் இல்லாத ஊர்களைப் பார்க்க முடியாது. ஆனால் அந்த நாட்களில் காப்பி/டீ என்றால் என்ன என்பதுகூட மக்களுக்குத் தெரியாது. அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் காட்டுக்குப் போகும் முன்பு கொஞ்சம் நீராகாரம் குடிக்கவேண்டும் என்பது மட்டுமே. இப்படி இருந்த மக்களை எப்படி காப்பி / டீ பருக வைத்து அதற்கு அடிமையாக்கினார்கள் என்பதையும், முதன்முதலில் தான் ஒரு கும்பா நிறைய தேநீர் குடித்த அனுபவத்தையும் அழகாகச் சொல்லியிருக்கிறார் கி.ரா.

இதேபோல, முதல் ரயிலைப் பார்த்து மக்கள் நெடுஞ்சாண் கிடையாக விழுந்ததையெல்லாம் இவர் எழுத்தில் வாசிக்கும்போது நமக்கும் சிரிப்பாணி பொத்துக்கொள்ளும்.

கி.ரா. நாவல்கள் வகைமையில் மிகச் சொற்பமாகவே எழுதியிருக்கிறார். அவை, கோபல்ல கிராமம், கோபல்லபுரத்து மக்கள் மற்றும் அந்தமான் நாயக்கர் என்ற மூன்று நாவல்கள் மட்டுமே.

மற்றவை அனைத்தும் குறுங்கதைகளே. மூன்றுமே ஒன்றுக்கொன்று தொடர்புடையவை என்றே கூறலாம். அந்தமான் நாயக்கர் சினிமாவுக்காக எழுதப்பட்ட கதையாம். மன்னராட்சிக் காலத்தில் நாயக்கர் சமூகத்து மக்கள் தங்கள் பெண்டுகளைப் பாதுகாக்க, பிற மாநிலங்களில் (ஆந்திரா மற்றும் கர்நாடகா) இருந்து புலம் பெயர்ந்து தமிழ்நாட்டிற்குக் குடிவந்ததை ஒரு வயதான கிழவியின் வாய்மொழியில் விவரிக்கிறது கோபல்ல கிராமம்.

அதன் தொடர்ச்சியாக, புலம் பெயர்ந்து ஒரு கிராமமாய் வாழும் சம்சாரிகளின் வாழ்க்கைப் பாடுகளையும் அவர்கள் சமூகத்தோடு எப்படி மற்ற சமூகத்தினர் ஒன்று கலந்து ஒரு கிரமமமாய் உருவானார்கள் என்பதையும் ஒரு அழகான சேலையை நெய்வதைப் போல எளிமையான நடையில் விவரிக்கிறார். சுதந்திரத்திற்கு முன்பும் பின்புமான கிராம மக்களின் எழுச்சி, காந்தியின் பேரில் மக்களுக்கு இருந்த கோபம் என்று பல விஷயங்களை நுட்பமாகவும் ஆழமாகவும் விவரிக்கிறது கோபல்லபுரத்து மக்கள். இதில் ஆசிந்துலு கிட்டப்பன் காதல் சேலையில் அழகாய்ச் சேர்த்து நெய்த ஜரிகை போலக் கூடுதல் மனோகரத்துடன் மிளிரும்.

இந்தியக் கொடியை ஏற்றியதால் அந்தமான் சிறைக்கு அனுப்பப்பட்டு இரட்டை ஆயுள் தண்டனைக்குப் பிறகு ஊர் திரும்பும் அழகிரி, அந்தமான் நாயக்கர் ஆகிறார். அவர் ஊருக்குள் நுழையும்போது நாட்டிற்குச் சுதந்திரம் கிடைத்துவிடுகிறது. அவரின் மனநிலையையும் சுதந்திரத்திற்குப் பிறகு வந்த அதிகாரிகளின் ஏதேச்சதிகாரப் போக்கையும் அதனால் சம்சாரிகளின் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களையும் அக புற அழுத்தங்களையும் விரிவாக ஆராய்கிறது இந்த நாவல்.

கி.ரா.வின் நாயகிகள் எல்லாம் புற அழகையும் தாண்டித் தங்கள் உழைப்பால் நம் மனத்தில் நிலைபெறுபவர்கள். பெண்களின் உணர்வுகளைத் தன் படைப்புகளில் மிக நுட்பமாகக் கி.ரா. கையாண்டிருக்கிறார். ‘பேதை’ என்கிற சிறுகதையில் மனநலம் பிறழ்ந்த நிலையில் உள்ள ஒரு பெண், யாரால் தான் ஏமாற்றப்பட்டோம் என்று அறியாமல் கர்ப்பமாகிவிடுவதையும் அவள் குழந்தையின் மேல் அவளுக்குக் கரை காணாத அன்பு பீறிடுவதையும் ஒருகட்டத்தில் குழந்தை இறந்துபோகும்போது அந்தப் பெண்ணின் தவிப்பையும் அவர் எழுத்தில் வாசிக்கும்போது நம்மையும் அறியாமல் நம் மனம் பதைக்கும்; விழிகளில் நீர் கோர்த்துவிடும். இந்தக் கதையில் யார் அவளை அப்படி ஒரு நிலைக்குத் தள்ளியது என்ற ஆராய்ச்சியில் ஈடுபடாமல், அந்தப் பெண்ணின் தாய்மை உணர்வை எழுதிய விதத்தில் கி.ரா. முத்திரை பதிக்கிறார்.

‘கன்னிமை’ கதையில் வரும் நாச்சியாரும் நம்மை வெகுவாக ஈர்ப்பாள். இந்தக் கதையைப்போல இயல்பாகப் பெண்ணியம் பேசும் கதைகளை இவ்வளவு வருடங்களுக்குப் பிறகுகூட யாராலும் எழுதிவிட முடியவில்லை என்றே தோன்றுகிறது.

‘கோமதி’ என்கிற கதையில் திருநங்கையாக மாறிக்கொண்டிருக்கும் ஒரு ஆணின் நினைவுகளை அசைபோடுகிறார். அறுபதுகளில் எழுதப்பட்ட இந்தக் கதை நமக்குக் கடத்தும் உணர்வுகள் அற்புதமானவை; மிகவும் துல்லியமானவை.

‘இந்த இவள்’ என்கிற குறுங்கதையில் அந்த இவளுக்கு என்ன பேர் என்பதைக் கடைசிவரை கூறியிருக்க மாட்டார். ஆனால் வயதானவரை மணமுடித்து விதவையாகிப்போன அவளின் கரை காண முடியாத காம உணர்வுகளையும் அதை வெல்ல அவள் எப்படித் தன்னை மடை மாற்றிக்கொள்கிறாள் என்பதையும் மிக நாசூக்காகச் சொல்லியிருப்பார். இந்தக் கதையில் ஒரு சிறப்பம்சம் உண்டு. புத்தகத்தின் இடப்புறம் கி.ரா.வின் கையெழுத்திலும் வலப்புறம் அச்செழுத்திலும் இருக்கும் விதத்தில் இந்த நூலை வடிவமைத்திருப்பார்கள். அநேகமாகத் தமிழில் இது முதல் முயற்சி என்றும் சொல்லலாம். 90 வயதைத் தாண்டியிருப்பினும் நடுக்கமில்லாத தெளிவான கையெழுத்து கி.ரா.வினுடையது. மனத்திற்குள் புகமுடியாத முதுமையால், பேனா பிடிக்கும் அந்த விரல்களுக்குள் மட்டும் புகுந்துவிட முடியுமா என்ன?!

காதல் இவர் மொழியில் எப்படிக் கையாளபட்டிருக்கும் என்று வாசிக்க எனக்கு மிகுந்த ஆவல் வந்தது. கோபல்லபுரத்து மக்களில் காதல் மெல்லிய நீரோடையாய் ஓடும். ஆனால் 'கனிவு' என்கிற சிறுகதை மூலம் இயல்பான கிராமத்துக் காதல் உலகத்தைக் காட்டி இருக்கிறார் கி.ரா. கிராமங்களில் புதிதாய் மணமான தம்பதிகளுக்கெல்லாம் சினிமாக்களில் காட்டுவதுபோல அன்று இரவே முதல் இரவாக அமைந்துவிடுவதில்லை. கூட்டுக் குடும்பத்தில் வாக்கப்பட்டுப் போகும்போது பல விஷயங்களை ஒரு பெண் கடக்க வேண்டியது இருக்கிறது. அது அவர்களுக்குள் ஒரு நெருக்கத்தையும் காதலையும் கனிய வைக்கும் என்பதை வெகு நாசூக்காகச் சொல்லி இருப்பார். காதலன் காதலியை ரசித்தான் என்பதைக்கூட இவர் நேரடியாக எழுதாமல், "பால் பீச்சும்போது அவள் பாத நுனியில் பல்லியின் வயிற்றில் முட்டை இருப்பது தெரிவதுபோல மனித ரத்தத்தின் சிவப்பு நிறம் தெரிந்தது. அதை அவன் பார்த்தான்" என்று எழுதுகிறார்.

'கதவு' கதையைப் போன்ற அழுத்தமான ஒரு சிறுகதையை இதற்கு முன்பும் பின்பும் யாரும் எழுதியிருக்க முடியாது. குழந்தைகளின் பார்வை வழியாகவே அந்தக் கதவு பறிபோன வேதனையும் துக்கமும் மிக நுட்பமாக நமக்குக் கடத்தப்பட்டிருக்கும். 'ஒரு சம்சாரியின் கதை'யில் சம்சாரி படும் இன்னல்கள், அது சார்ந்த அரசியல் என்று அனைத்தும் அழகாகப் பின்னப்பட்டிருக்கும். நாற்காலி, மின்னல் இன்னும் எத்தனையோ கதைகளில் கி.ரா.வின் குறும்பும் அக்கறையும் வெளிப்பட்டிருக்கும்.

சிறுகதைகள், குறுங்கதைகள், நாவல்கள், கட்டுரைகள் என்று எல்லாவற்றையும் கனக் கச்சிதமாக எழுதக்கூடிய மனிதர், பள்ளிக் கல்வியைக்கூட முடிக்காதவர் என்று சொன்னால் நம்பவா முடிகிறது?!

இவர் படைப்புகளில் இவருக்கு இயற்கை சார்ந்த ஆழமான அறிவு இருப்பது புலப்படும். பிஞ்சுகளில் பறவைகளின் வகைகள், அவை இடும் முட்டைகளின் வடிவங்கள்,தேன் சிட்டின் உடல் எந்த நிறத்தில் இருக்கும், வால்குருவி எப்படிச் சத்தமிடும் என்பதையெல்லாம் மிக உன்னிப்பாகக் கவனித்து எழுதியிருப்பார். வாலாட்டிக்குருவி, போர்க்குயில், கருங்குயில், வல்லயத்தான், தேன்கொத்தி, தேன்சிட்டு, தட்டைச்சிட்டு, செஞ்சிட்டு, பூஞ்சிட்டு, பட்டுச்சிட்டு, வேலிச்சிட்டு, முள்சிட்டு, மஞ்சள்சிட்டு, செஞ்சிட்டு கருஞ்சிட்டு, தைலான் பறவை, தாராக்கோழி, தண்ணிக்கோழி, இப்படி நிறைய பறவைகளின் பெயர்களைப் போகிறபோக்கில் அடுக்கிக்கொண்டே போகிறார் கி.ரா. காக்காய் பிடிப்பது என்றால் நிஜத்தில் எவ்வளவு கடினம் என்பதைப் 'பிஞ்சுகள்' வாசித்தால் தெரிந்துகொள்ள முடியும். வல்லயத்தான் பறவையை வைத்து வேட்டையாடுவதையும் திருவேதி நாயக்கரின் வாய்வழி அவர் கூறும் பறவைகளைப் பற்றிய தகவல்களும் நம்மை பிரமிப்பில் ஆழ்த்தும்.

கிடை குறுநாவலில் ஆடுகளின் அனைத்து வகைகளையும் விவரித்திருப்பார். இவ்வளவு நுணுக்கமான தகவல்களை அதே வாழ்வியலில் ஊறித் திளைத்தவர்களால்கூடத் தர இயலுமா என்று தெரியவில்லை. இடைக்காடர் சித்தர் கதை, ராமனின் கடைசி நாள் கதை, துரோபதி அம்மன் கதை, லட்சுமணனின் மனைவி ஊர்மிளையின் கதை என்று புராணக் கதைகளையும் இவர் விட்டுவைத்ததில்லை. அவை இதுவரை கேள்விப்படாத புது வகையில் இருப்பது மிகப் பெரிய ஆச்சர்யம்.

கழனியூரான் அவர்களுடன் சேர்ந்து கிராமங்களில் பேசப்பட்ட நாட்டுப்புறக் கதைகள், சொலவடைகள், பாடல்கள், பாலியல் கதைகள் என்று அனைத்தையும் சேகரித்துள்ளார். இவையெல்லாம் அவர் எந்தப் பிரதிபலனும் எதிர்பாராமல் தமிழுக்குச் செய்த தொண்டு மட்டுமே. தென்காசி பகுதிகளில் ஒரு குறிப்பிட்ட சமூகத்துப் பெண்கள் வாரம் ஒருநாள் தன் பிறந்த வீட்டிற்குச் சென்று 'சடவாறிட்டு' வரேன் என்று செல்வார்களாம். அதென்ன சடவாறுவது என்றால், வாரம் ஆறு நாட்கள் புகுந்த வீட்டிக்காகச் செய்யும் வேலையால் களைப்பாகி, ஒருநாள்

தன் பெற்றவர்கள் வீட்டிற்குப் போய் அந்தச் சடைப்பை ஆற்றிக்கொள்வதாக ஒரு ஐதீகம். அந்த ஊரில் இதைச் சடவாறுவது என்று கூறுவார்களாம். திருமணமான பெண் சாகும் வரை, எத்தனை வயதானாலும் அவர்களுக்கு இந்த முறைமை பின்பற்றப்படுகிறது.

இந்தத் தகவல்களை எதற்காக நாம் சேகரிக்க வேண்டும், இதிலிருந்து நமக்குத் தெரியப்போவது என்ன என்று கேள்வி எழுப்பியபோது, இந்த முறைமை மூலம் பெண்களுக்கு வாரத்தில் ஒருநாள் சுதந்திரம் தரப்பட்டதைக் குறிப்பிட்டு, இது பெண்ணுரிமைக்கான ஆதாரம் என்றாராம். எப்படி வாழை மரத்தில் அனைத்துப் பகுதிகளையும் நாம் உபயோகப்படுத்துக்கிறோமோ அப்படி, மக்களின் வாய் வழி உதிரும் ஒவ்வொரு வார்த்தையையும் நாம் சேகரித்து ஆவணப்படுத்த வேண்டும் என்பது கி.ரா.வின் நிலைப்பாடு.

ஒரு பேட்டியின்போது, ‘நீங்கள் எழுத்தாளராக இல்லாமல் இருந்திருந்தால் என்னவாகி இருந்திருப்பீர்கள்?’ என்று கேட்டதற்கு, ‘நான் ஒரு பாடகனாக ஆகி இருப்பேன்’ என்று கூறியிருக்கிறார். அவரின் கதைகளின் வழி அவரை அனுமானிக்க எண்ணுபவர்கள், அவர் நாட்டுப்புறப் பாடல்கள் மேல் ஆர்வம் கொண்டவர் என்று நினைக்கக்கூடும். ஆனால், நம் கற்பனைகளைத் தகர்த்தெறியும் வகையில் நிஜத்தில் அவர் மிகப் பெரிய கர்நாடக இசைக் கலைஞர். அவருடைய ஆத்ம நண்பரான கு. அழகிரிசாமியுடன் சின்ன வயதிலிருந்து ஒன்றாய் பஜனை மடங்களில் பாடல்கள் பாடி வந்தவர். ஒருகட்டத்தில் இசையின் மேல் இருந்த ஆர்வத்தால், குருமலை பொன்னுச்சாமிப் பிள்ளை அவர்களிடம் முறையாக இசை பயின்றிருக்கிறார். கி.ராவும் கு.அழகிரிசாமியும் ஒன்றாய் இணைந்து தமிழில் சில கீர்த்தனைகளை வடித்திருக்கிறார்கள். ஆனால் அவற்றைக் கர்நாடக இசை உலகம் அங்கீகரிக்கவில்லை. அதைப்பற்றிக் கவலையும் அவர்களுக்கு இல்லை. கர்நாடக இசைக் கலைஞர்களைக் குறித்துக் கி.ரா. எழுதிய அனைத்துக் கட்டுரைகளையும் கழனியூரான் தொகுத்திருக்கிறார். பெரும்பாலும் கி.ரா. ரசிகமணி டி.கே.சி., திருவாவடுதுறை ராஜரத்தினம், காருக்குறிச்சி அருணாச்சலம், விளாத்திகுளம் சுவாமிகள், வில்லிசைக் கலைஞர் பிச்சுக்குட்டி என்று இவர்களின் கச்சேரிகளையும் வாசிப்பையும் பற்றியே நிறைய எழுதியிருக்கிறார்.

கி.ரா.வின் வீட்டில் ஒரு நீண்ட அறை இருந்ததாம் அங்குதான் அவருடைய நண்பர்கள், பாடகர்கள் அனைவருடம் அமர்ந்து கச்சேரிகள் செய்வார்களாம். அந்த இடத்திற்கு சங்கீத மஹால் என்று பெயரிட்டாராம் விளாத்திகுளம் சுவாமிகள். காருக்குறிச்சி அருணாச்சலம் கி.ரா.வின் ஊரில் பெண் எடுத்ததால், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்ற கி.ரா. அடிக்கடி அவரை ராகங்களின் வடநாட்டு வடிவங்களை இசைத்துக் காட்டச்சொல்லி ரசித்து மகிழ்வாராம். ஏற்கனவே தெரிந்த ராகங்களைப் பல வித்யாசமான புது வடிவத்தில் வழங்கியவர்கள் என்று மூன்று பேரைக் குறிப்பிடுகிறார் கி.ரா. விளாத்திகுளம் சுவாமிகள், திருவாவடுதுறை ராஜரத்தினம் மற்றும் டி.ஆர்.மகாலிங்கம் ஆகியோரே அம்மூவர்.

சுதந்திரத்திற்குப் பின்பான காங்கிரஸ் ஆட்சியின்போது வரி வசூல் செய்வதற்காக சம்சாரிகளின் மாடுகளையெல்லாம் பறிமுதல் செய்து பவுண்டு என்கிற கால்நடைகளுக்கான ஜெயிலில் வைத்திருந்தார்களாம். இதை எதிர்த்துப் பாடப்பட்ட பல வில்லிசைக் கச்சேரிகளில் பானை தாளம் எப்படி அபாரமாக வேலை செய்தது என்பதை அவர் இப்படிக் கூறுகிறார்:

“பானை தாளம், சலங்கை ஒலியோடு மேடையில் இசைக்கத் தொடங்கினால், தெரு வழியாக நடந்துசெல்வோரை நிறக்கச் செய்யும். மீறி நடந்துபோகிறவர்கள் அந்தத் தாள லயத்திற்கு ஏற்பத் தப்படிகளை வைக்கச் சொல்லும். நம்முடைய இதயத் துடிப்புகூட இந்தத் தாளத்திற்கு ஏற்பத்தான் அடிக்கும் என்று நான் சொன்னால் ஆச்சர்யப்படுவீர்கள்” என்று ரசனையுடன் பகிர்கிறார் கி.ரா.

தமிழில் ஏன் நிறைய கீர்த்தனைகள் இல்லை? எதைச் செய்தால் தமிழிசையை முன்னேற்றலாம்? போன்ற ஆலோசனைகளைத் தன் இசை சார்ந்த கட்டுரைகளில் தருகிறார். இளையராஜா

ராகங்களில் செய்யும் வித்தைகளைப் போற்றுகிறார். பழைய காலத்துக் கிராமபோன் ரெக்கார்டில் இருந்து தொடங்கி, நவீன காலத்து மெமரி கார்ட் வரை அனைத்து சாதனங்களையும் பயன்படுத்திப் பாடல்களைக் கேட்ட பெருமை கி.ரா.வையே சேரும். இறுதிக்காலங்களில் அவர் பயன்படுத்திய கார்வான் இசைக்கருவியைத் தற்போது அவருடைய இடைச்செவல் வீட்டில் காணலாம்.

கி.ரா.வின் எழுத்துகளைத் தொடர்ந்து வாசித்துவரும் எந்த வாசகருக்கும் இவர் ஒரு சமூகத்தினரின் வாழ்க்கைப்பாடுகளைப் பற்றி மட்டுமே எழுதியிருப்பதாய்த் தோன்றலாம். ஆனால், இப்படி ஒரு சமூகத்தினரின் பழக்க வழக்கங்கள், உணவு வகைகள், சடங்குகள் என்று அனைத்தையும் தன் படைப்புகளில் ஆவணப்படுத்துவதை இன வரைவியல் என்று கூறுகிறார்கள். இன வரைவியல் (Ethnography) என்பது, கள ஆய்வுகளின் அடிப்படையில், மனித சமூகத் தோற்றப்பாடுகள் தொடர்பான பண்புநிலை விளக்கமாக அமையும் ஒருவகை எழுத்தாக்கம் ஆகும். தனிப்பட்ட இனக்குழு அல்லது மக்களைப்பற்றி எழுதுவது இனவரைவியல் எனலாம். தமிழில் இந்த வகையான எழுத்துக்கும் கி.ரா.வே முன்னோடியாகத் திகழ்கிறார்.

தன்னுடைய நீளமான பெயர் குறித்துக் கி.ரா. கூறுவதாவது: “கிறிஸ்தவர்களுக்கு எப்படி ஞானஸ்தானம் என்று இருக்கிறதோ அப்படி வைணவர்களுக்கு முத்திரைத் ஸ்தானம் என்று உண்டாம். அத்தகைய முத்திரைத் ஸ்தானம் பெற்றவர்களின் பெயர்கள் மாற்றப்படும். அவர்கள் முழு வைணவர்கள் என்று அறிவிக்கப்படுவார்கள். ஆண்களுக்குப் பெரும்பாலும் ராமானுஜம் என்று முடிகிற பெயர்களைத்தான் வைப்பார்கள். இவர்களை மணிகட்டி வைணவப் பரம்பரை என்றும் கூறுவார்களாம். அதாவது, இரண்டு காதுகளிலும் வெள்ளியில் செய்த சிறு மணியைப் போட்டிருப்பார்கள். யாராவது சிவனைப் பற்றிப் பேசினால் உடனே வேகமாகத் தலையைக் குலுக்க வேண்டும். அப்படிக் குலுக்கும்போது மணிகள் ஒலித்து சிவநாமத்தைக் கேட்க முடியாமல் செய்துவிடுமாம். இப்படி மணிக்கட்டிப் பரம்பரையில் வந்த கி.ரா. அவர்கள் வைணவத்தில் பற்றுடன் இருந்தாரா என்பது பற்றி அதிகக் குறிப்புகள் இல்லை. ஆனால் அவர் எழுத்துக்கள் சம்சாரிகளைச் சுற்றியேதான் இருந்தன. அவர் தன் வாழ்நாள் முழுவதும் கம்யூனிஸ்டாக இருக்கவே விரும்பினார். முக்கியமாக, எளிய மக்களின் குரலாகத்தான் அவர் கதைகள் வெளிப்பட்டன.

வாசிப்பைத் தொடங்கியிருக்கும் ஆரம்ப வாசகர்களிலிருந்து முதிர்ந்த இலக்கிய மேதைகள் வரை அனைவரும் வியக்கும்படியான, எளிமையான, சுவை குன்றாத எழுத்து நடை கி.ரா.வினுடையது.

கி.ரா.வினுடைய நினைவேந்தல் நிகழ்வில் அவரைப் பற்றிப் பேசிய அனைவருமே, அவரால் மட்டுமே கிட்டத்தட்ட ஐம்பதுக்கும் மேற்பட்ட எழுத்தாளர்கள் உருவாகியிருப்பதாய்க் கூறினார்கள். இவ்வளவு பெரிய பங்களிப்பை வேறு யாருமே இதுவரை தமிழ் எழுத்துலகில் நிகழ்த்தியிருப்பதாய் நான் அறியவில்லை. கி.ரா. என்பவர் வெறும் எழுத்தாளர் அல்லர். நூறாண்டு காலம் கரிசல் மண்ணில் போராடும் சம்சாரிகளுக்குள் ஒளிந்திருக்கும் இசையை அகழ்ந்தெடுத்து, நமக்கு அழகாகப் பாடிக்காட்டும் அற்புதக் கலைஞர். விருதுகள் இந்தக் கலைஞனுக்கு வழங்கப்பட்டதாலேயே கௌரவத்தை அடைந்தாய்த்தான் எனக்குத் தோன்றுகிறது.

இதுவரை சொன்னவை கொஞ்சம்; சொல்லாதவை ஏராளம். இத்தனைச் சிறப்புகளுக்குச் சொந்தக்காரரான கி.ரா. நுழைபுலம் அமர்வில் பங்கேற்றுப் பேசும்போது, அவரை எல்லாரும் ‘ஐயா’ என்று அழைக்க, “ஐயா என்று அழைக்காதீர்கள், என்னைக் கி.ரா. என்றே அழையுங்கள். அதுவே எனக்கான அங்கீகாரம்” என்று குறிப்பிட்டார். மேன்மக்கள் என்றென்றும் மேன்மக்களே!

****************************************



## 'கரிசல் இலக்கியத் தந்தை' ஐயா கி.ரா.வின் மறைவு தமிழ் இலக்கிய உலகிற்கே ஏற்பட்ட பேரிழப்பு! – சீமான் புகழாரம்

நவீன தமிழ் இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவரும், கரிசல் இலக்கிய வகைமையின் தந்தையும், மூத்த இலக்கிய ஆளுமையுமான ஐயா கி.ராஜநாராயணன் அவர்கள் மறைவுற்ற செய்தியறிந்து பெரும் அதிர்ச்சியும், ஆழ்ந்த மனத்துயரமும் அடைந்தேன். அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கும், உறவுகளுக்கும், இலக்கிய வட்டத்திற்கும் எனது ஆறுதலைத் தெரிவித்து, அத்துயரில் பங்கெடுக்கிறேன்.

தன் இறுதி மூச்சை சுவாசிக்கும் நொடிவரை எழுத்துலகில் பெருமைமிக்கப் பங்களிப்புகளைச் செய்து வந்த ஐயா கி.ரா அவர்கள், கரிசல் நிலத்துப்பண்பாட்டு விழுமியங்களை, கரிசல் நிலத்தின் எளிய மனிதர்களை ஒப்பற்றத் தனது படைப்புகள் மூலமாக இலக்கிய ஆவணங்களாக செதுக்கி வைத்த பெரும்பணியைச் செய்தவராவார். அவர் எழுதிய 'கோபல்ல கிராமம்', 'கோபல்லபுரத்து மக்கள்', 'அந்தமான் நாயக்கர்' போன்ற பல படைப்புகள் கரிசல் நிலத்தின் எளிய மனிதர்களைப் பற்றிய இலக்கிய மேதமையும், எளிமையும் ஒருங்கே அமைந்த நவீன இலக்கிய உலகின் தனித்துவ அடையாளங்களாகும். நாவல் மட்டுமன்றி, 'கதவு' போன்ற புகழ்பெற்ற சிறுகதைகளை எழுதியதோடு மட்டுமல்லாது, 'கரிசல் வட்டார வழக்கு அகராதி' என்பதைத் தமிழில் முதன்முதலாக உருவாக்கி, கரிசல் நிலத்தின் வளமையான சொற்கூட்டத்தைச் சேகரித்து ஆவணப்படுத்தியவராவார். அவர் தொகுத்த 'நாட்டுப்புறக்கதைக் களஞ்சியம்' தமிழ் இலக்கிய உலகிற்கு அவர் அளித்த மற்றுமொரு கொடை எனலாம். 1991ஆம் ஆண்டு 'கோபல்லபுரத்து மக்கள்' எனும் நூலுக்காகச் சாகித்ய அகாதமி விருதுபெற்று தமிழ்மொழிக்குப் பெருமை சேர்த்தவராவார்.

ஒப்பற்ற இலக்கியப் பெருவாழ்வினை வாழ்ந்து, தமிழின் பெருமைமிக்க இலக்கிய அடையாளமாக, கரிசல் நில இலக்கியத்தின் முகமாக, முகவரியாக மாறி இருக்கிற 'கரிசல் இலக்கியத் தந்தை' ஐயா கி. ராஜநாராயணன் அவர்களது மறைவு தமிழ் இலக்கிய உலகிற்கே ஏற்பட்டிருக்கிற ஈடு செய்ய இயலாதப் பேரிழப்பாகும். அவர் மண்ணைவிட்டு மறைந்தாலும் தனது மகத்தான படைப்புகள் வாயிலாக என்றென்றும் மக்கள் மனங்களில் வாழ்ந்துகொண்டுதானிருப்பார்.

**ஐயாவுக்கு எனது புகழ் வணக்கம்!**
**– செந்தமிழன் சீமான்**
**தலைமை ஒருங்கிணைப்பாளர்**
**நாம் தமிழர் கட்சி.**

(😊)(😊) *** (😊)(😊)

# பேட்டி

## ஆனந்தவிகடன்

கி.ராஜநாராயணனுக்கு உ.வே.சா விருது வழங்கியிருக்கிறது தமிழக அரசு. மூட்டை முடிச்சுகளிலும் பரண்களிலும் கிடந்து உழுத்துப்போன அபூர்வ ஓலைச்சுவடிகளை மீட்டு பாதுகாத்து ஆவணப்படுத்திய உ.வே.சாவின் பெயரில் கி.ராவுக்கு விருது வழங்கியது மிகவும் பொருத்தம். கரிசல் காட்டு மண்ணில் படிந்து கிடக்கும் வாழ்க்கையையும், பண்பாட்டையும் தேடியெடுத்து ஆவணப்படுத்தி இலக்கியமாக்கியவர் கி.ரா.

எழுதியும் பேசியும் தீராக்கதைகளை சுமந்துகொண்டிருக்கும் இந்த 98 வயது தமிழ் தாத்தாவைச் சந்திப்பது இனிய அனுபவம். அந்த அபூர்வ தருணம் சமீபத்தில் வாய்த்தது.

பாண்டிச்சேரி அரசு அலுவலர் குடியிருப்பில், மெல்லிய குளிர் நிரம்பிய அறையில் தவிலில் தோய்ந்த நாகஸ்வர இசையைக் கேட்டு ரசித்தபடி படுத்திருந்தார் கி.ரா. எங்களைக் கண்டதும், லேசாக படுக்கையை மேலேற்றி வசதியாக சாய்ந்து அமர்ந்துகொண்டு, "அண்டரெண்டப் பட்சி படிச்சியளா?" என்றார்.

**"ஏன் அண்டரெண்ட பட்சியை அச்சுக்குக் கொண்டுபோகவில்லை... கையெழுத்துப் பிரதியாக மட்டுமே பரவிக்கொண்டிருக்கிறதே?"** என்றேன்.

"அதை எல்லார்கிட்டயும் கொண்டு போய் சேர்க்கனும்லா... அச்சுக்குப் போனா ஆகுமா? இப்போ கமலஹாசன்கூட படிச்சிருக்காரே... ஏதோவொரு நிகழ்ச்சியில அதைப் பத்தி பேசினதா சொன்னாங்க" என்கிற கி.ரா, எதைப்பற்றிப் பேசினாலும், ராமாயணமும் மகாபாரதமும் தளும்ப தளும்ப நிறைந்திருக்கிறது. பேசும் விஷயத்துக்குப் பொருத்தமாக அவற்றுக்குள் இருந்து ஓர் பாத்திரத்தை, சம்பவத்தை உதாரணமாக்குகிறார்.

**"கொரோனாவால் உலகமே முடங்கிப்போச்சு. குறிப்பா முதியவர்கள் வீட்டுக்குள்ளேயே முடங்க வேண்டியதாகிடுச்சு... நீங்க எப்படி தனிமையை எதிர்கொண்டீங்க?"**

"இசை தெரிஞ்சவனுக்கு ஏதய்யா தனிமை... அது துணைக்கிருக்குமே... எழுதத் தெரிஞ்சவன், படிக்கத் தெரிஞ்சவனுக்கெல்லாம் தனிமையே தெரியாது. இதெல்லாம் வரும்... போவும்... நிறைய பாத்துருக்கேன். எவ்வளவோ விஷயங்கள் வந்து போயிருக்கே... ஒவ்வொரு அறுபது வருஷத்துக்கும் ஒரு தாது வருஷம் வரும். அதோட சேர்த்து பஞ்சமும் வரும். அய்யோ தாது வருஷம் வந்திருச்சேன்னு எல்லாரும் பயப்படுவாங்க. 98 வயசாயிருச்சுல்ல... ரெண்டு தாது வருஷப் பஞ்சத்தைப் பாத்திருக்கேன். அதோடவா இது பெரிசு...

மழை காலத்துலக்கூட வானம் இறங்காது. மக்களெல்லாம் தஞ்சாவூர் பக்கம் பஞ்சம் பிழைக்க நடப்பாங்க. போற வழியிலேயே செத்துப்போவாங்க. ரொம்பக் கொடுமை... வானம் இறங்காம கொன்னது ஒரு பக்கம், அடைப்பெடுத்தும் கொல்லும். 60 நாள், 90 நாளெல்லாம் விடாமப் பெய்யும். மழைக்காலம் வரப்போகுதுன்னா, பெரிய சம்சாரி வீட்டாளுக காட்டுல உள்ள கருவை, உடை மரங்களையெல்லாம் வெட்டிக் காயப்போட்டு அடுப்புக்கு மேல அடுக்கி தீதாங்கி போட்ருவாங்க. கொடியடுப்புல எப்பவும் ரசம் சூடா இருக்கும். அடுப்போட இன்னொரு வாயில பெரிய பானையில தண்ணி கொதிச்சுக்கிட்டே இருக்கும். வீட்டுல கங்கு அணையாது. வருமானம் இல்லாத எளியவுகதாம் தவிச்சுப்போவாக. அந்த துயரத்தோடல்லாம் ஒப்பிடும்போது இதெல்லாம் ஒண்ணுமில்லையா..." சிரிக்கிறார் கி.ரா.

### "*கிடை* நாவல் சினிமாவானது. அதுக்குப்பிறகு உங்கள் நாவல்களோ, சிறுகதைகளோ திரைப்படமாகலேயே?"

"குழந்தைகளுக்காக பிஞ்சுன்னு ஒரு கதை எழுதினேன். ஆனா, அந்தக் கதையை குழந்தை எழுத்தாளர்களோ, விமர்சகர்களோ கண்டுக்கவேயில்லை. என்னோட பிறந்தநாள் விழாவுக்கு வந்திருந்த எடிட்டர் லெனின், என் பாக்கெட்டுல ஒரு பணக்கட்டை வச்சு 'பிஞ்சு கதைக்காக என் அட்வான்ஸ்'ன்னு சொன்னார். சீக்கிரமே அது படமாகப்போகுதுன்னு சொல்றாங்க. நிறைய சினிமாக்காரங்க நான் எழுதின விஷயங்களை எடுத்துப் பயன்படுத்திக்குவாங்க. 'ஏன் நீங்க இதையெல்லாம் கேட்க மாட்டேங்கிறீங்க'ன்னு சிலபேர் என்கிட்ட கேப்பாங்க. 'அடப்போப்பா... இல்லேன்னு தான் என்கிட்ட இருந்து எடுக்குறாங்க. எடுத்துக்கட்டும் விடுங்க'ன்னு உதறிட்டுப் போயிருவேன்.

வெத்திலை மாத்துறதுன்னு ஒண்ணு உண்டு. அதுபத்தி முன்னால எழுதியிருக்கேன். அதை ஒரு படத்துல பாத்தேன்... அதுல ஹீரோ தான் மென்னுக்கிட்டிருக்கிற வெத்திலையை அந்த ஹீரோயினுக்கு நாக்கால ஊட்டுவாரு... அதுவாய்யா வெத்திலை மாத்துறது. நல்ல கொழுந்து வெத்திலை... சரி விகிதத்துல பாக்கு, சுண்ணாம்பு சேர்த்து போடணும். நல்லா செக்கச் சிவப்பா மாறும்போது ஒரு சுகந்தமான வாசனை வரும். அந்த நேரத்துல ஆணோ, பெண்ணோ தாய்ப்பறவை குஞ்சுக்கு ஊட்டுறமாதிரி மென்னுக்கிட்டிருக்கிற வெத்திலையை நுனி நாக்கால ஊட்டிக்குவாக.. அதெல்லாம் தனி சுகம்யா..."

கண்கள் சொருக சிலாகிக்கிறார் கி.ரா. "நீங்க எப்பவாவது வெத்திலை மாத்திருக்கியளா?" கேட்டு சிரிக்கிறார்.

**"இந்த இடத்துல நின்னு பாக்கும்போது மனுஷ வாழ்க்கை பத்தின மதிப்பீடு என்னவா இருக்கு?"** என்றேன்

முகம் மாறுகிறது. சிறு யோசனைக்குப் பிறகு பேசுகிறார்.

"மனுஷனோட வாழ்க்கையை யார் மதிப்பீடு பண்ண முடியும். அப்படி மதிப்பீடு பண்ணிட்டா சொல்லவே விஷயமிருக்காதே... மனுஷ வாழ்க்கை மட்டுமில்ல... எதையுமே மதிப்பீடு பண்ணமுடியாது. ஒரு விஷயத்தை மதிப்பீடு பண்ணி முடிச்சு வச்சிருப்போம். எவனாவது ஒருத்தன் வந்து அது தப்புன்னு சொல்லுவான். இன்னொருத்தன் வந்து அவன் சொன்னதையும் மறுப்பான். எது நிஜம் எது பொய்யுன்னு எளிதா கண்டுபிடிக்க முடியாது... வாழ்க்கையின் சுவாரஸ்யமே அதுதான்..."

கி.ராவுக்கு சூப் வருகிறது. ரசித்துப் பருகுகிறார்.

**"கம்யூனிஸ்ட் கட்சியில தீவிரமா செயல்பட்டிருக்கீங்க... விவசாய சங்கப் போராட்டங்கள்ல கைதாகி சிறைக்கும் போயிருக்கீங்க... இப்போ அரசியலைக் கவனிக்கிறீங்களா?"**

கி.ராவின் முகம் இறுக்கமாகிறது. "இன்னைக்கு நினைச்சுப் பாத்தா எல்லாம் பைத்தியக்காரத்தனமா இருக்கு. அரசியல்ல நல்லவங்க அருகிட்டாங்க. இடதுசாரிகளோட செயல்பாடும் திருப்தியா இல்லை. இடதுசாரிகள் நாட்டுக்குத் தேவை. ஆனா அவங்க ஆள ஆசைப்படக்கூடாது. ஆள்றவனுக்கு சுயநலம் வந்திடும். ரஷ்யாவுல 70 ஆண்டுகள்தான் இடதுசாரிகளால நிற்கமுடிந்தது. நாங்க வந்தா தேவலோகமா இருக்கும்னு சொன்னோம். நடக்கலேயே... ஏன்... தத்துவத்துல பிரச்னையில்லை... வழிநடத்துனவங்களோட பிரச்னை. இங்கே மனுஷங்களோட போக்கு சரியில்லை. வாழ்நாள் பூரா அந்தக் கட்சிக்குப் பாடுபட்டேன்... வீழ்ந்தேன்..."

அமைதியாகிறார்.

**"கடிதங்களுக்கு இலக்கிய அந்தஸ்து கிடைத்தது உங்களால்... தொழில்நுட்பம் கடிதங்களையே இல்லாமல் செஞ்சிருச்சே"**

சிரிக்கிறார் கி.ரா.

"அந்தக் காலத்துல நிறைய கடிதங்கள் எழுதினேன். இப்போ அதுக்கான தேவைகளே இல்லாமப்போச்சே... யாருக்கு எழுதுவேன். வயசு ஆக ஆக நோய்கள்

வந்து தாக்குது. திடீர்னு இடதுபக்கம் ஒன்னுமில்லாமப் போச்சு. ஸ்ட்ரோக் வந்து செயலிழந்து விழுந்துட்டேன். அதிர்ஷ்டவசமா மருந்து மாத்திரைகளால பிழைச்சிருக்கேன். சங்கீதம் கேட்டு ஆனந்தப்பட்டுக்கிட்டிருக்கேன். நினைச்சதை எழுதுறேன். முன்னாடி எழுதினதையெல்லாம் திரும்பவும் பரிசீலிக்கிறேன். இதை இப்பிடி எழுதியிருக்கலாமோன்னு நிறைய விஷயங்கள் தோணுது..."

கி.ரா எப்போதும் மனம் திறந்து பேசக்கூடியவர். எழுதும்போதும் அப்படித்தான்.

"தொழில்நுட்பமெல்லாம் வருமய்யா... வந்துக்கிட்டேதான் இருக்கும். ரயில் வரும்போது அப்படித்தானே எல்லாரும் நினைச்சிருப்பாக. தொழில்நுட்பத்துல ஜனங்களுக்கு நல்லது வரும். கண்டுபிடிச்சவனுக்கு பேராசை வந்துட்டா தீங்கும் வரும். எல்லாம் சேர்ந்ததுதான் மனுஷ வாழ்க்கை. அய்யோ இப்படி நடக்குதேன்னு எதுக்காகவும் பதறவேண்டிய அவசியமில்லை." என்கிறார் கி.ரா.

### "வயலின் வாசிப்பீங்கன்னு தெரியும்... இப்போவும் வாசிக்கிறதுண்டா?"

"சின்ன வயசுல வயலின் கத்துக்கிட்டேன். இப்போ எங்கே வாசிக்கிறது... நாகஸ்வரத்து மேல ஆர்வம் உண்டு. அது ராட்சச வாத்தியம். அதை எளிமைப்படுத்தனும்ன்னு ஒரு ஆசை உண்டு. கோயில்ல தேர் புறப்படுறதுக்கு முன்னால சீவாளியை சொருகி கச்சின்னு ஒரு வாத்தியம் வாசிப்பாங்க. கொஞ்சம் எளிமையா இருக்கும். அந்த வாத்தியத்தைக் கொஞ்சம் நீளமாக்கி வாசிக்கலாமேன்னு முயற்சி செஞ்சேன். நமக்கு ஒலிதானே முக்கியம். நாகஸ்வரத்துல இருந்து வந்தா என்ன, கச்சியில இருந்து வந்தா என்ன? இனிமே அதைத் தொடரமுடியுமா தெரியலே..."
இசை பற்றிப்பேசும்போது கி.ரா கண்களில் ஒளி மின்னுகிறது.

### "ஏழாம் வகுப்பு மட்டுமே படிச்ச கி.ரா. புதுவை பல்கலைக்கழகத்தில பேராசிரியர்... அந்த அனுபவம் பற்றிச் சொல்லுங்க."

"ஏழாவது வரைக்கும் பள்ளிக்கூடம் போனேனே தவிர, படிக்கல. அட்டென்டண்ஸ் கொடுக்கிறதோட கி.ரா வகுப்பறையிலயே இருந்ததில்லை. துணைவேந்தரா இருந்த வெங்கடசுப்ரமணியம் ஒருநாள் வந்து, யுனிவர்சிடிக்கு சிறப்பு பேராசிரியரா வரணும்ன்னு கூப்பிட்டார். நான் முடியாதுன்னுட்டேன். ஏன்னா, 'கல்லூரி வகுப்புகள்ல பிள்ளைகள் கூப்பாடு போட்டுக்கிட்டே இருப்பாக. எனக்கு அது ஒத்துவராது'ன்னேன். 'இங்கே ஆராய்ச்சி பண்ற மாணவர்கள் மட்டும்தான் வருவாங்க. சாந்தமாத்தான் இருப்பாங்க, நீங்க வரலாம்'னார். அடுத்து 'எனக்கு சுகர் இருக்கு, பிபி இருக்கு... சரியா வராது'ன்னு இன்னொரு கடிதம் போட்டேன். 'இது எல்லாமே எனக்கும் இருக்கு... வாங்க சேந்து போராடுவோம்'னாரு. 'நீங்க டைம் டேபிளுக்கெல்லாம் வேலை செய்ய வேண்டாம். உங்க வகுப்பு வரும்போது மாணவர்களோட உக்காந்து பேசுங்க. அதுதான் பசங்களுக்குக் கல்வி... உங்க

அனுபவங்களைப் பகிர்ந்துகிட்டாப் போதும்'னாரு. அப்படித்தான் அந்தப் பயணம் தொடங்குச்சு. கதைகள், சினிமா, நாடகம்ன்னு பிள்ளைகள்கிட்ட நிறைய பேசினேன். பல்கலைக்கழகத்தைவிட்டு பிள்ளைகளை வெளியில அழைச்சுக்கிட்டுப் போனேன். மூணு வருஷம்தான்... இதுல புதுவையில இருந்த தமிழ் அறிஞர்களுக்குக் கொஞ்சம் வருத்தம். அவலட்சணமா, படிக்காத ஒருத்தனை பல்கலைக்கழகத்துல பேராசிரியரா போட்டுருக்காகளேன்னு எரிச்சல். அதெல்லாம் இருக்கத்தானே செய்யும்."

முகத்தில் சோர்வு தெரிகிறது. கரம் பற்றி விடை கொடுக்கிறார் கி.ரா.

தன்னை சபையால் புறக்கணிக்கப்பட்டவன் என்று அடையாளப்படுத்துகிறார் கி.ரா. அதனால் அவருக்கு எந்த இழப்புமில்லை. பெருமிதம் கொள்ளக்கூடிய அளவுக்கு அடர்த்தியான படைப்புகளைத் தந்தவருக்கு இப்போதுதான் உ.வே.சா விருதை அளித்துக்கொண்டிருக்கிறது தமிழ்ச்சமூகம். ஆகச்சிறந்த படைப்புகளை உருவாக்கிய உலகின் எந்தப் படைப்பாளிக்கும் குறைந்தவரல்ல கி.ரா. விருதுகளுக்கு அப்பாற்பட்ட தமிழின் தனித்த அடையாளம் அவர்!

https://www.vikatan.com/literature/writer-so-dharman-remembering-karisal-memories-of-ki-rajanarayanan

*(😊)(😊)(😊)(😊)(😊)(😊)

# `நான் விவசாயின்னு பெருமையா சொல்வார்!'

## கி.ரா-வின் கரிசல் நினைவுகள் பகிரும்

# சோ.தர்மன்



**கரிசல் பகுதி மக்களின் வாழ்க்கை, துன்பங்கள், நம்பிக்கைகள், ஏமாற்றங்கள், விவசாயம் என, அனைத்து அம்சங்களையும் தன் எழுத்தில் பதிவிட்டவர். கரிசல் வட்டார மொழிக்கு எனத் தனி அகராதியை உருவாக்கியவர் மறைந்த எழுத்தாளர் கி.ராஜ நாராயணன்.**

தமிழ் இலக்கிய உலகில் கரிசல் இலக்கியத்தின் தந்தையாகப் போற்றப்படுபவர் கி.ராஜநாராயணன். `ராயங்குல ஸ்ரீ கிருஷ்ண பெருமாள் ராமானுஜம்' என்பதுதான் இவரது இயற்பெயர். தூத்துக்குடி மாவட்டம் கோவில்பட்டி அருகிலுள்ள இடைச்செவலில் 1922-ல் பிறந்தவர். 7-ம் வகுப்பு வரை மட்டுமே படித்தார். இவர், அடிப்படையில் ஒரு விவசாயி. கரிசல் பகுதி மக்களின் வாழ்க்கை, துன்பங்கள், நம்பிக்கைகள், ஏமாற்றங்கள், விவசாயம் என, அனைத்து அம்சங்களையும் தன் எழுத்தில் பதிவிட்டவர். கரிசல் வட்டார மொழிக்கு எனத் தனி அகராதியை உருவாக்கியவர். `கோபல்லபுரத்து மக்கள்' என்ற இவரின் நாவலுக்காக 1991-ல் சாகித்திய அகாடமி விருது பெற்றவர்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராக இருந்தவர், பல விவசாயப் போராட்டங்களில் கலந்துகொண்டு இரண்டு முறை சிறை சென்றவர். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கட்சி தடை செய்யப்பட்ட காலத்திலேயே இடைச்செவல் கிராமத்தில் மே தினத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் கொடியை ஏற்றியுள்ளார். புதுச்சேரி மத்திய பல்கலைக்கழகத்தில் நாட்டுப்புறவியல் துறையின் சிறப்பு பேராசிரியராகவும், துறையின் தலைவராகவும் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். இவருடைய `கரிசல் காட்டுக் கடுதாசிகள்' மிகவும் புகழ்பெற்றவை. ஆழ்ந்த இசை ஞானம் கொண்ட அவர், குற்றாலம் டி.கே.சிதம்பர முதலியார், காருகுறிச்சி அருணாச்சலம், விளாத்திகுளம் நல்லப்பசாமி, குருமலை லட்சுமி அம்மாள் ஆகியோரிடம் நெருங்கிய நட்பு கொண்டிருந்தார்.

காசநோயால் பாதிக்கப்பட்டதால் அவரோட உடல் சங்கீதத்துக்கு ஒத்துவரவில்லை. அதனால், எழுத்தின் பக்கம் அவரது கவனம் திரும்பியது. 40 வயதிலிருந்துதான் எழுத்துப் பணியைத் தொடங்கினார். ஆனாலும், அவர் விவசாயத்தைக் கைவிடவில்லை. வயது மூப்பினால் புதுச்சேரியில் நேற்று இரவு காலமானார். இவரின் மனைவி கணபதி அம்மாள் கடந்த 2 ஆண்டுகளுக்கு முன்பு காலமானார்.

கி.ரா-வைப் பற்றி `சூல்' நாவலுக்காக, `சாகித்திய அகாடமி விருது' பெற்ற எழுத்தாளர் சோ.தர்மனிடம் பேசினோம்.

``தென் மாவட்டத்தில் 20-க்கும் மேற்பட்ட எழுத்தாளர்களைக் கொண்ட ஊர் கோவில்பட்டி. இவர்கள் அனைவரையும் உருவாக்கியது `கி.ரா'தான். தான் மட்டும் எழுத்தாளனா இருந்தா மட்டும் போதாது.




எழுத்தில் ஆர்வமுள்ளவர்களையும் எழுத்தாளனாக உருவாக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர் `கி.ரா'. புதிய படைப்பாளியை மட்டம்தட்டிப் பேசாமல், குறைகளை சுட்டிக் காட்டி சரி செய்து, எழுதக் கற்றுக் கொடுத்தவர். வாசிப்பு அனுபவம் மட்டுமே உள்ளவர்கள், வாழ்க்கை அனுபவம் கொண்டவர்கள்னு எழுத்தாளர்கள்ல ரெண்டு வகை இருக்கு. இதுல, கி.ரா ரெண்டாவது வகை எழுத்தாளர். அவர் அடிப்படையில் ஒரு மானாவாரி விவசாயி. அவர் எழுத்தாளராக இருந்தபோதிலும், ``நான் ஒரு விவசாயி" எனச் சொல்வதில் பெருமைப்படுவார்.

அவரோட சொந்த ஊரான `இடைச்செவல்' கிராமம், முழுக்க முழுக்க மழையை மட்டுமே நம்பியுள்ள மானாவாரி விவசாயம் நிறைஞ்ச ஊரு. கம்பு, குதிரைவாலி, சோளம், தினை, சாமை, வரகுன்னு சிறுதானியங்கள் பயிரிடப்பட்டாலும், `நிலக்கடலை'தான் முக்கிய சாகுபடிப் பயிரா இருந்துச்சு. `இடைச்செவல் கடலை'ன்னு சந்தையில் தனி இடத்தைப் பிடிச்சுது. கருத்த கரிசல் மண் நிலமும், வளமான ஆட்டுகிடையும்தான் `செவல் கடலை'யோட சிறப்புக்கு முக்கியமான காரணம். ``எங்க செவலூரு கரிசக்காட்டு கடலைன்னா ஒத்த ரூவா கூட கொடுத்து வாங்குவாங்க"ன்னு பெருமையாச் சொல்லுவார் கி.ரா. அது உண்மைதான். `கோவில்பட்டி கடலைமிட்டாய்' தயார் செய்ய இடைச்செவல் கடலையை கடலைக்காரர்கள் (கடலை மிட்டாய் உற்பத்தியாளர்கள்) விரும்பி வாங்குவதைப் பார்த்திருக்கேன்.

`மண் வாசனைன்னா... அது, `கரிசக்காட்டு வாசனை'தான். மழைத் தூத்தல்ல நின்னு மூச்சை இழுத்து சுவாசிச்சுப் பாத்தா மணக்கும்னு சொல்லுவார். கோடை உழவு, பொன்னேர் பூட்டுதல், மழை பெய்ய மழைக்கூழ் வழிபாடு, மழையை நிறுத்த மழையனுப்பு வழிபாடு எனக் கரிசல் விவசாயத்தையும், விவசாயம் சார்ந்த சடங்கு முறைகளையும் பதிவு செய்தவர். மழையை மட்டுமே நம்பியிருக்குற அந்த விவசாயி படும்பாட்டையும், உழைப்பையும் கதை, சிறுகதை, கட்டுரைகள் எனப் பல தளங்களில் பதிவு செய்தவர். ஆந்திராவிலிருந்து குடிபெயர்ந்து தமிழகத்துக்கு வந்து குடியேறிய மக்கள், தரிசு நிலத்தை அயராத உழைப்பால், வளமிக்க சோலையாக மாற்றி பரம்பரை பரம்பரையாக மண்மணத்தோடு வாழ்ந்தார்கள் என்பதைப் பற்றிய நாவல்தான் `கோபல்ல கிராமம்'.

குடிக்கவிடாமல் எப்படியாவது தடுத்து நிறுத்துங்கள்' என்று உருக்கமாகக் கேட்டுக் கொண்டார்.

அடுத்தபடியாகப் பேசியவர் "பஞ்சாப் படுகொலை சொக்கலிங்கம்பிள்ளை" என்பவர். இவர் பெயரைக் கேட்டதுமே ஊர்க்காரர்கள் முதலில் நினைத்தது, பஞ்சாப் படுகொலைகளில் இவரும் சம்பந்தப்பட்ட ஆளாக இருப்பார் போலிருக்கு (!) என்று.

பேசியபிறகு தான் தெரிந்தது அவருக்கு அந்தப்பேர் வந்ததுக்கான காரணம். ஜாலியன் வாலாபாக்கில் நடந்த அந்தப் படுகொலையை அந்தப் பாஞ்சால நாட்டுமக்கள் பட்ட இன்னலை, அப்படியே இந்த மக்களின் கண்ணெதிரே, நடந்தது நடந்தது போலக் கொண்டுவந்து காட்டினார்.

பேசிக்கொண்டு வரும்போது அவருடைய முகம் அழுகையினால் கோணியது. கண்ணீரைத் துடைத்துக் கொள்ள மூக்குக் கண்ணாடியை பலதடவை கழற்றினார். அங்கிருந்த பெண்களை யெல்லாம் ஒரு நொடியில் அழவைத்து விட்டார். ஒரு அப்பாவின் தோளில் உட்கார்ந்து கொண்டிருந்த சிறுவன் "வீட்டுக்குப் போகலாம் ப்பா" என்று சொல்லும்போதும் அவனுக்கு நாக்குக் குழறியது.

ஒரு பாவமும் அறியாத மக்களை, பெண்களை மண்டி போட்டு நடக்கும் படியாக நிர்ப்பந்தித்து, வெள்ளை அதிகாரி அவர்களை சவுக்கால் அடித்ததாக அவர் சொன்னபோது இவர்கள் நெஞ்சிலே அந்த அடி விழுந்தது போலிருந்தது.

வெள்ளையர்கள் இவ்வளவு கொடூர மானவர்களா என்று தோன்ற ஆரம்பித்தது. இந்தக் கொடூரம் நாளைக்கு இங்கேயும் தோன்றாது என்று எப்படிச் சொல்ல முடியும்?

அவருக்குப் பிறகு பேசிய பிரசங்கி, பம்பாயில் நடந்த அந்நியத்துணி பகிஷ்கரிப்பு (புறக் கணிப்பு) போரட்டாத்தில் ஒரு சத்யாகிரகி மீது வேண்டுமென்றே லாரியை ஏற்றிக் கொன்றதைப் பற்றிச் சொன்னார்.

ஜெயிலுக்குப் போன இளைஞன் எதீந்தி நாத்தாஸ் என்பவர், ஜெயிலில் ஒருவாய் மோருக்காக - சாப்பாட்டில் ஒரு வேளைக் காவது கொஞ்சம் மோர் தரவேண்டும் அனைத் துக் கைதிகளுக்கும் என்று- 63 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து 64வது நாளில் உயிர் நீத்ததைப் பற்றிச் சொன்னார்கள். அதைக் கேட்கும் போதே அங்குள்ள மக்களின் மனசைப் பிசைந்தது அந்தச் செய்தி.

"எதீந்திரநாத் மரணம் பம்பாயை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. பம்பாயை மட்டுமா, இந்தியா பூராத்தையும்தான். பத்திரிகைக ளெல்லாம் அதைப்பற்றித் தலையங்கங்கள் எழுதின. டெல்லி சட்டசபையில் அதைப்பற்றிக் கேள்விகள் கேட்டார்கள்.

"இந்தியா உஷ்ணமான நாடு. ஜெயிலில் அடைக்கப்பட்டுள்ள கைதிகளின் உணவில் ஒரு வேளைக்காவது 'ஒரு வாய்' மோர் தர வேண்டாமா?" என்று கேட்டார்கள்.

" ஒ பொன்னான உயிரைப் பலிகொடுத்து, பத்திரிகைகளும் சட்டசபைக்குள்ளும் கேள்விக்

கணைகள் தொடுத்து, மக்களும் கிளர்ந்தெழுந்த பிறகே இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், ஜெயில் கைதிகளுக்குச் சிறிது மோர் தர ஒப்புக் கொண்டது.

"அப்பேர்ப்பட்ட கெடுங்கோலான அரசாங்கம் இது" என்றார் பிரசங்கி.

கூட்டத்தின் கடைசியில் பேசியது ஒரு சிறிய பையன் ! இளங்கோ என்று பேர் சொனனார்கள். பத்து வயசுக்குள்ள தானிருக்கும். மேஜை மீது அவனைத் தூக்கி விட்டார்கள். எல்லோருக்கும் ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

கால்களையும் கைகளையும் ஆட்டி உடம்பை நிமிர்த்தி அழகான தமிழில் அவன் அமளப்பொரி பொரிந்தான். பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தையே, 'என்னோட சண்டைக்கு வாராயா?" என்று கேட்பது போலிருந்தது! கைதட்டி அவனை உத்ஸாகப்படுத்தினார்கள் வந்திருந்த பிரசங் கிகள்; அதைப் பார்த்த ஊர்க்காரர்களும் கை தட்டினார்கள்.

கூட்டத்தின் முடிவில் ஜே கோஷம் வானைப் பிளந்தது. இப்படியாக இந்திய நாட்டு சுதந்திரப் போரின் சங்கநாதம் அந்த கிராமத்தினுள்ளும் வந்து ஒலிக்கத் தொடங்கியது. அந்த கிராமத்தின் குழந்தைகள், அந்த அரசியல் பொதுக்கூட்டத்துக்குப் பிறகு தங்கள் விளையாட்டில் ஒரு புதுவிளையாட்டைச் சேர்த்துக்கொண்டார்கள். சோளத் தட்டையின் நுனியில் சிறிய துண்டுத் துணிகளைக் கட்டிக் கொண்டு ஊர்வலம் வந்தார்கள். "நமதே ராஜ்யம்: அடைந்தே தீர்வோம்" என்று கத்தினார்கள்.

இப்படிப் பல ஊர்வலங்களை தினமும் குழந்தைகள் தவறாமல் நடத்தி விளையாண் டார்கள். "பாரதமாதாக்கி ஜே" "மகாத்மா காந்திக்கி ஜே" "வந்தே...மா..தரம்".

காலையில் எழுந்திருந்த கிராம முன்சீப் அய்யர் கச்சேரிக்கு (கிராமச்சாவடி) முன்னால் நின்று கொண்டு 'காச்மூச்' என்று கத்திக் கொண் டிருந்தார். என்னமோ ஏதோ என்று தலையாரித் தேவர் ஓடோடி வந்தார்.

"என்னடா இது: ஊருக்கு விநாசகாலமா? பாரு மரத்துக்கு மேலே. இப்படிப் பண்ணியிருக் கானே! மேலாவிலிருந்து வந்தா நா என்னடா பதில் சொல்றது? யாரு பண்ணுன காரியம்டா இது. குடியெக் கெடுத்தானே பாவி..."

மூச்சு இறைக்க அய்யர் கூவிக் கொண் டேயிருந்தார்.

தலையாரிக்கு முதலில் விளங்கவில்லை. பிறகுதான் தெரிந்தது ராவோடு ராவாய் யாரே ஒரு பாவி மூவர்ணக்கதர்- கொடியை பிள்ளையார் மேடை அரசமரத்தின் உச்சியில் கொண்டுபோய் உயரமான வருச்சியில் கட்டி அதை "ஊரு உலகத்துக்கெல்லாம்" தெரியும்படியாகப் பண்ணியிருந்தான்.

வெகுதூரத்திலிருந்து பார்த்தாலே தெரியும் படியாக இருந்தது கொடி. மங்கம்மாசாலை வழியே போகிறவர்களுக்குக் கட்டாயம் தெரியும். வேணுமென்றே அக்கிரமத்துக்காக - செய்த காரியமாப்பட்டது அய்யருக்கு. "கூட்டம் போட்டுப் பேசினார்கள். சரி. பேசிட்டுத் தொலை. பொ. காத்தொடபோறதுன்னு இருந்தேன். இப்பொ 'அடி மடியிலே' கையைக் கொண்டாந்துட்டானெ? நா ஒர்த்தன் பிராமணன் இங்கெ உத்யோகம் பாக்றது யாருகண்ணெ உறுத்தறதுன்னு தெரியவில்லை." கொஞ்ச நேரத்துக்குள் ஒரு கூட்டத்தையே கூட்டிவிட்டார் தனது கூப்பாட்டின் மூலம்.

திகாலை மம்மல் நேரத்திலேயே சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு தோட்டத்துக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த நுன்ன கொண்ட நாயக்கரைப் பார்த்ததும் அய்யர் குரலை உயர்த்தினார். "பாத்தியளா மொதலாளி, பயல்களோட காரியத்த!" என்று அரச மரத்தின் உச்சியைக் காண்பித்தார்.

புகையும் சுருட்டைப் பற்களால் கடித்துக் கொண்டு இடது கைவிரல்களைப் புருவக்கட்டில் வைத்து 'கண்ணாடி போட்டு' அண்ணாந்து பார்த்தார் நுன்னகொண்ட. பகீரென்றது வயிற்றில் அவருக்கு.

ம்செரி' என்று எண்ணிக்கொண்டு அங்கே கூடியிருந்த இளவட்டங்களின் முகங்களை ஒருபார்வையால் ஆராய்ந்தார். ஓரளவுக்கு யூகிக்க முடிந்தது அவரால்.

அய்யரைப் பார்த்துச் சொன்னார் கையில் சுருட்டை எடுத்துக் கொண்டு. "கட்டுச்சோறு கட்டிக்கிட்டா வரப்போறான் அசலூரிலிருந்து இதுக்கு. சவத்துப் பயல்க." என்று சொல்லிவிட்டு நகர்ந்தார். அவர் போனதுக்குப் பிறகும் கொஞ்ச நேரம் சுருட்டின் வீச்சம் அங்கே மணத்துக் கொண்டிருந்தது.

அய்யர் இந்த மாதிரி 'பேசக்கூப்பாடு' போடுவாரே தவிர தன்னுடைய கிராம மக்கள் பேரில் எப்பவும் எந்த விஷயத்துக்காகவும் மேலாவுக்கு எழுதி அனுப்பியதில்லை. இந்த விஷயங்களில் அவர் மக்களிடம் நல்ல பெயர் எடுத்திருந்தார்.

பிரிட்டிஷ் அரசு மூவர்ணக் கொடியைத் தடைசெய்திருந்தது. அதனால் எல்லா இடங்களிலும் இப்படி ராவோடு ராவாக கொடி ஏத்தங்கள் நடைபெற்றுவந்தன.

இதே கொடியைப் பிடித்துக் கொண்டு பகிரங்கமாக ரோட்டில் நடந்து கைதியானவர் களும் உண்டு. அப்படிப் கொடியைக் கையில் பிடித்துக்கொண்டு போகும்போது, 'போடு கீழே' என்று சொல்லி போலீஸார் லத்தி' யால் அறைவதும் உண்டு. உடம்பில் அடிமேல் அடி தொடர்ந்து விழும்போது, வலி பொறுக்க முடியாமல், தன்னையறியாமல் அய்யோ அம்மா என்று அலறுவதற்குப் பதில் "வந்தேமாதரம் வந்தேமாதரம்" என்று மாறிமாறிச் சொல்லு வார்கள். திருப்பூர் என்கிற ஊரில் குமரன் என்ற பேருடைய பிள்ளையாண்டான் ஒருத்தனை இப்படி அடித்தே கொன்று விட்டார்களாம் பாவிகள் என்று பேசிக்கொண்டார்கள். தலையாரியை மரத்தின் மேலே ஏறி அந்தக் கொடியை அவிழ்க்கும்படிச் சொன்னார் கிராம முன்சீப் அய்யர். வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு தலையாரி கிட்ணத் தேவர் மேலே ஏறினார். வளர்ப்பு ஆட்டுக்குக் குழைஓடிக்க மரம் ஏறிப் பழக்கந்தான் அவருக்கு. மேலே ஏறிப்போன கிட்ணத்தேவருக்கு மலைப்பு ஏற்பட்டது. ஒருப்பூட்டாக எழுந்துநின்று உச்சிக் கொம்பில்

கொண்டுபோய் அதிலும் இருட்டு வேளையில் எப்படிக் கட்டினான் இந்தக் கொடியை என்று யோசித்தார். கொம்பைப் பிடித்து தொத்தி எப்படியாவது மேலே போய் விடலாம். கட்டுவதோ, அவிழ்ப்பதோ என்பது சாத்தியமே இல்லை என்று தோன்றியது. சாமி வந்து ஆவேசத்தோடு ரவ்வாளி போடுகிறவனை பத்துப்பேர் சேர்ந்து பிடித்தாலும் அமைக்க முடிவதில்லை. இதெல்லாம் ஒரு வெறிச்சியில் செய்கிற காரியம் என்று நினைத்தார்.

மேலே ஏறி எந்த ஆசில் இருந்து கொண்டு கட்டிய கொடிக்கம்பத்தை அவிழ்ப்பது என்று பார்த்தார். நினைக்க நினைக்க உடம்பு புல்லரித்தது. தவறிக் கீழேவிழுந்தால் அவ்வளவு தான். நச்சத்திரம் கழண்டுறும் என்பதோடு கழைக்கூத்தாடிக்காரன் சொல்லுவது போல எண்ணுவதற்கு ஒரு எலும்புக்கூடக் கிடைக் காது !

இறங்கிக் கீழே வந்த விஷயத்தைச் சொன்ன கிராம முன்சீப்பிடம் அதைக் கேட்டவர்களுக்கு மகிழ்ச்சியும் குஷியும் ஏற்பட்டது.

ஒருத்தருக்கொருத்தர் கலந்து யோசித் தார்கள். இது யார் செய்த காரியமாக இருக்கும் என்று. கொத்தனார் சாமிநாயக்கரும் அங்கே இருந்தார். துண்டை இழுத்துப் போர்த்திக் கொண்டு, குளத்தின் கைப்பிடிச் சுவரில் உட்கார்ந்து முழங்கால்களை ஆட்டிக் கொண்டு, இந்தத் தலையாரி எப்படித்தான் அந்தக் கொடியை அவிழ்க்கிறான் பார்ப்போம் என்று. அவருக்குப் பக்கத்தில் வந்து செவிட்டு குருசாமி நாயக்கர் உட்கார்ந்து கொண்டு சந்தோஷத் துடன் கேட்டார் "இத எப்பிடி அங்கன போயி கட்டியிருக்கான்!" சாமிநாயக்கர் பதில் சொல்லாமல் வேகமாகக் காலை ஆட்டினார். மனசுக்குள் 'எங்கலெ வந்து மெல்ல விளாறு ஒட்டுதெ' என்று நினைத்துக் கொண்டார்.

பேருதான் செவிட்டு குருசாமி நாயக்கர். யாருடைய ரகசியங்களும் அவர் காதுக்குள் நுழைந்துவிடும். நுழைத் வேகத்தில் பத்து ஜோடி காதுகளில் போய் எதிரொலிக்கும். யார் என்ன பேசிக் கொண்டிருந்தாலும், செவிட்டு குருசாமி நாயக்கர் வாரார் என்றால் பேச்சை நிப்பாட்டி விட்டுப் பாட ஆரம்பிப்பார்கள் !

கிராமத்தில் எப்பவாவது சில காரியங்கள் நடக்கும். யார் இதைச் செய்திருப்பார்கள் என்று யூகிக்கவே முடியாதபடி இருக்கும். அப்போது செவிட்டு குருசாமி நாயக்கர் எங்கே என்ற எல்லோரும் தேடுவார்கள். அவரும் ஓடியாடி, விஷயத்தின் நுனி நூலைப் பிடித்துக் கொண்டு வந்து தந்துவிடுவார்.

இளவட்டங்களின் ஒருமித்த ஏளனப்பார்வை தலையாரியை உசுப்பிவிட்டு விட்டது. குழை அறுக்கும் கத்தி கட்டிய தொறட்டிக் கம்பை எடுத்துக்கொண்டு வந்தார் வேகமாக. மரத்தில் ஏறி, அதைக் கொடுக்கச் சொல்லி வாங்கி, ஒவ்வொரு கொம்பிலும் அதைத் தொங்கவிட்டுக் கொண்டே மேலே ஏறிப்போனார். வசமான ஒரு கிளையில் இருந்து கொண்டு உச்சிக்கொம்பில் கட்டிய கயிற்றைக் கொஞ்சங்கொஞ்சமாக அறுத்துக் கொடியோடு கம்பைக் கீழே விழச்செய்தார்.

கீழே விழுந்த கொடியை கிராம முன்சீப் அதைக் கம்பிலிருந்து பிரித்து எடுத்தார். அதை என்ன செய்வது என்றே தெரியவில்லை ! வீட்டுக்கும் கொண்டு போக முடியாது கச்சேரியில் வைத்துக் கொண்டிருக்கமுடியாது. பிள்ளையார் சதுர்த்தி முடிந்ததும் களிமண் பிள்ளையாரை குளத்து தண்ணீரில் கொண்டு போய் போடுவதுபோல, அவர் அதில் நாலைந்து கற்களை எடுத்து வைத்து

மூட்டைபோல் கட்டினார். குளத்தில் கொண்டு போய் வீசி எறிந்துவிட்டு, விசுக்விசுக்கென்று வேகமாக வீட்டைப் பார்க்க நடந்தார். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த குழந்தைகள் கைதட்டிப் பலமாகச் சிரித்தார்கள்.

இது நடந்து கொஞ்சநேரத்துக்கெல்லாம், பார்வதியம்மன் கோவிலுக்கு பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த தன்னுடைய மாட்டு வண்டிக்கு அருகே நின்றுகொண்டு "ஊர்பய பிள்ளைகளை" வாய்க்கு வந்தப்படி திட்டி நொறுக்கிக் கொண்டிருந்தார் வெல்லம் ரங்கசாமி நாயக்கர். அருடைய வண்டிப் பைதாவில் யாரோ சாக்பீஸால் வந்தேமாதரம் என்று எழுதிவைத்து விட்டார்களாம். "நா ஒரு வண்டி வச்சிப் பெளைக்கிறது இந்தப் பயபிள்ளெகளுக்குப் பிடிக்கலெ" என்று சொல்லிக் கொண்டே அதை அழித்தார். அழித்ததில் எழுத்துக்கள் கலைந்த தே தவிர மறையவில்லை. வாளியில் தண்ணீர் கொண்டு வந்து துணியை மூக்கித் துடைத்துக் கொண்டிருந்தபோது செவிட்டு குருசாமி நாயக்கர் வந்து "என்ன மாமா இது?" என்று விசாரித்தார். "பாத்தியாடா இந்த கொடுமயெ; எந்த நாறப்பய புள்ளையோ வந்து ஏம் வண்டியில் 'வந்தேமாதம்' எழுதித் தொலைச்சிருக்கான் பாத்துக்கொ."

"அதானெ மாமா, சர்க்காருக்கு தெரிஞ்சா அம்புட்டுதான். வண்டியும் பொயிரும், நீங்களம் கம்பியெ எண்ணணும். செருக்கிபிள்ளையளுக்கு வந்தே மாதரம் எழுத வேற எடமே கெடைக் கலை பாத்தியளா !"

வேகம் வந்துவிட்டது வெல்லம் ரங்கசாமி நாயக்கருக்கு. தனக்கு எத்தனை வசவுகள் தெரியுமோ அத்தனையும் மனப்பாடமாக ஒப்பிப்பதுபோல மள மளவென்று சொல்லிக் கொண்டே போனார்.

ஊர்ப்பிள்ளைகளெல்லாம் சுற்றி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். இது வேறு அவருக்கு எரிச்சலாக இருந்தது. அவர்களைப் பார்த்து எரிந்த விழுந்தார். அவர்கள் நகருவது போல பாவலாக் காட்டினார்களே தவிர நகரவில்லை. ஆகவே அவர்களையும் ஒரு பாட்டம் வசவுகளால் 'அர்ச்சனை' செய்துக் கொண்டே வாளியையும் துணியையும் எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் கிளம்பினார். நாலு எட்டுகள்தான் எடுத்து வைத்து நகர்ந்திருப்பார். யாரோ ஒரு பையன் அவரைப் பார்த்து வந்தே மாதரம் என்று கத்தினான். மற்ற பிள்ளைகள் அதை வாங்கிச் சொன்னார்கள் !

நாயக்கருக்கு ஆங்காரம் வந்துவிட்டது. "எவண்டா அவன் வந்தே மாதரம் சொன்னது" என்று கேட்டார்.

"பொடிப்பய புள்ளக. நீங்க போங்க மாமா" என்று சமாதானப்படுத்தினார் செவிட்டுக் குருசாமி நாயக்கர்.

சமாதானம் பண்ணவும் சேர்த்துப் பிடித்துத் தடுக்கவும் ஒரு ஆள் கிடைத்துவிட்டால் அதுக்கென்று ஒருவேகம் வருமே; அந்த 'வேகம்' வந்தது வெல்லம் ரங்கசாமி நாயக் கருக்கு. அதன் பலனை அவர் ஆயுள் பூராவும் அனுபவித்தார் ! தினமும் காலையில் வந்து பார்க்கும் போதெல்லாம் அவருடைய வண்டிப் பைதாவின் அலகில் வந்தே மாதரம் எழுதியிருப்பதும், அதை அவர் வாளியும் தண்ணீரும் கொண்டு வந்து துடைத்துக் கொண்டே வைது விட்டுப் போவதும் கொஞ்ச

நாள் இருந்தது. ஒருநாள் காலையில் வாளியும் தண்ணீரோடும் வந்து பார்த்தபோது, சாக்பீஸ¤க்கு பதில் கீல் எண்ணெய் கொண்டு எழுதப்பட்டிருந்தது! ரொம்ப நேரம் அதைச் சொரண்டி எடுத்துக் கொண்டிருந்தார். அன் றைக்கு அவர் வேலைக்குப் போக முடியவில்லை. இனி வண்டியை வெளியே வைத்தால் சரிப்பட்டு வராது என்று பைதாக்களை அச்சிலிருந்து உருவி எடுத்து, சட்டத்தையும் வீட்டுத் தொழுவுக்குள் கொண்டுபோய் வைத்துக் கொண்டுவிட்டார். பிரச்சனை அதோடு முடியவில்லை. எந்நேரமும் நாலு பையன்கள் அவருடைய வீட்டு வாசலைப் பார்த்துக் கொண்டே கொஞ்சதூரத்தில் காத்துக் கொண்டிருப்பார்கள். வெளியில் அவருடைய தலை தெரிய வேண்டியதுதான் தாமதம், வந்தே மாதரம் என்று கத்துவார்கள். திட்டிக் கொண்டே அவர்களைக் கொஞ்ச தூரம் விரட்டுவார். தெருவிலோ காட்டிலோ எங்கே அவரைக் கண்டாலும் பிள்ளைகள் வந்தே மாதரம் என்று தூரத்தில் இருந்து கொண்ட கூப்பாடு போட்டுச் சொல்லுவார்கள்.

ஊர்மடத்துக்கு முன்னால் பிள்ளைகள் தெல்லு விளையாடிக் கொண்டிருந்தார்கள். வெளியூர்க்காரர்கள் யாரோ ரண்டுபேர் வந்து வெல்லம் ரங்கசாமி நாயக்கர் வீடு எது என்று பையனிடம் விசாரித்தார்கள்.

"என்னது, வெல்லம் ரங்கசாமி நாயக்கரா" என்று முகத்தை ஒரு மாதிரி வைத்துக் கொண்டு கேட்டான் அதில் ஒரு பையன் ஒன்றுமே தெரியாதது போல.

"அதாண்டா நம்ப வந்தேமாதர நாயக்கர் வீட்டைக் கேக்கறாங்க" என்றான் மற்ற ஒருவன்.

"வந்தே மாதர நாயக்கரா!" என்று கேட்டார் வந்தவர்களில் ஒருத்தர்.

"ஆமாம். அது தெரியாதா ஒங்களுக்கு? அவரு இப்ப வந்தேமாதரம் கட்சியிலெ சேந்துட்ட ரில்லெ" என்றான் பையன். இவர்கள் சிரித்த விதம் வந்தவர்களுக்கு, இது தெரியாதா உங்களுக்கு என்பது போல் பட்டது.

"ஏங்கூட வாங்க நாங் காட்டுரென்" என்று அவர்களை அழைத்துக்கொண்டு போய், "அந்தோ தெரியிதில்லெ, அந்தக் கல்லு வீடுதான்" என்று காட்டிவிட்டு வந்தான்.

"என்னடே "வந்தே மாதரம்" இருந்தாரா? என்று மடத்தில் பதினைஞ்சாம்பிள்ளை விளையாட்டில் உட்கார்ந்து ஆடிக்கொண்டி ருந்த கொண்டுசாமி கேட்டார் குறும்பாகச் சிரித்து.

"இருக்காரு, தொளுவுக்குள்ளெ சத்தம் கேட்டது" என்றான்.

"என்ன விசயமாத் தேடி வந்திருக்காகளாம்?"

"பசுமாடு ஒண்ணு வெலைக்கி நிக்கில்லா அவரு தொளுவுல; அதெ வாங்கீட்டுப்போக"

"அத அவரு யான வெலெ குருதெ வெலெ சொல்லுவா ரெ"

"சொன்னா என்ன வந்தேமாதரம்னு மாத்திரம் சொல்லுங்க; செ, நம்ம கச்சி ஆளுகள்ளெ வந்திருக்காக போலுக்குன்னு நெனச் கொஞ்சம் கொறைச்சிக் கொடுத்துருவாருன்னு சொல்லிக் கொடுத்துட்டுத்தாம் வந்திருக்கென்" என்று அந்த வினாடியில் அவனுக்குத் தோன்றியதைச் சொன்னான். அவனுடைய கற்பனையை மடத்தில் இருந்தவர்கள் பாராட்டிச் சிரித்தார்கள்.

நுன்னகொண்டநாயக்கர் ஒருநாள் வெல்லத் தைக் கூப்பிட்டு "ஏண்டா யாரு என்ன சொன்னா ஒனக்கென்ன. எதுக்காக அப்படிக் கோவப் படணும். நீ அப்படிக் கோவப்படப்படத்தான் அதும் அதிகமாகும்" என்று சண்டை பிடித்தார். "நா யாருக்கு என்ன செஞ்சென் பெரியப்பா. என்ன இப்படிக் கண்ணுலெ காங்காம வையிராங்களெ" என்று சொல்லும்போது அவருக்குத் தொண்டை அடைத்துக் கொண்டு வந்தது.

வெல்லம் ரங்கசாமி என்று துலங்கி வந்த அவருடைய பெயர் அதன்பிறகு "வந்தேமாதர நாயக்கர்" என்று சொன்னால்தான் தெரியும் என்கிற அளவுக்கு வந்துவிட்டது. அவர் விரும்பினாலும் - விரும்பாவிட்டாலும் அதுவே அவருடைய பட்டப்பெயராக நிலைத்து நின்றது அவருடைய வாழ்நாள் பூராவும் ! அதுக்குப் பிறகும்கூட.

கையில் கரித்துண்டோ சாக்பீஸோ எது கிடைத்தாலும், சுவர் என்று ஒன்று கிடைத்து விட்டால் அந்தவூர் குழந்தைகள் தப்பும் தவறுமாக வந்தேமாதரம் என்று எழுதியும் கை ராட்டையில் படத்துடன் மூவர்ணக் கொடி யையும் வரையாமல் விடமாட்டார்கள்.

(😊)(😊)(😊)(😊)(😊)

## கோபல்லபுரத்து மக்கள் - கி. ராஜநாராயணன்

Posted by Balaji

http://www.omnibusonline.in/2012/09/blog-post_15.html

பிறந்த எல்லோருக்குமே ஒரு வரலாறு இருக்கும், ஆனா எல்லோருக்கும் அதைப் பதிவு செய்யும் எண்ணம் வருவதில்லை, அல்லது பதிவு செய்வதற்கான நேரம் இருப்பதில்லை , வரலாற்றுப் பதிவு செய்வதெல்லாம் ஒரு வேலையான்னு கேக்கலாம் (என்னை மாதிரி ஆளுங்க).

அதை விடுங்க, நமக்கு 60-80 வருடங்கள் முன்பு வாழ்ந்த மக்களை பற்றி நமக்கு என்ன தெரியும்? அவங்க எப்படி வாழ்ந்தாங்க, என்ன சாப்பிட்டாங்க, எப்படி பொழுது போக்கினாங்கன்னு ஏதாவது தெரியுமா? கி. ராஜநாராயணன் அதையெல்லாம் சொல்ற மாதிரி ஒரு புத்தகம் எழுதியிருக்கார் - "கோபல்ல கிராமம்". இந்தியா சுதந்திரம் அடைவதற்கு 30- 40 வருடங்கள் முன்பிருந்து , இந்தியா சுதந்திரம் அடையும் நாள் வரை "கோபல்ல கிராமத்தில்" நடைப்பெற்ற நிகழ்ச்சிகளின் தொகுப்பே "கோபல்லபுரத்து மக்கள்". இந்தப் புத்தகத்தை எந்த அத்தியாயத்தில் இருந்து வேணா படிக்கலாம், எங்கேயாவது ஒண்ணு ரெண்டு

அத்தியாயத்தில் வரும் கதைகள் அடுத்ததில் தொடர்ந்து வரும், மற்றபடி இது கோபல்ல கிராமத்தின் வாழ்க்கை வரலாற்றின் வேவ்வேற காட்சிகளின் தொகுப்பு.




மொத்த புத்தகமும் இரண்டு பாகமாக பிரிக்கப்பட்டுள்ளது, முதல் பாகம் முழுக்க கிட்டப்பன் என்கிற மனிதனின் வாழ்க்கை வரலாற்றை சொல்கிறது, அதனூடே நாம் அந்த ஊரிலிருக்கும் மனிதர்களின் வாழ்க்கை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் அறிய முடிகிறது. லாந்தர் விளக்கிலிருந்து கோபல்ல கிராமத்துக் கதை ஆரம்பிக்கிறது , மண்ணெண்ணெய் ஊற்றி லாந்தர் எரிய வைப்பதை அதிசயமாகப் பார்ப்பதும். ஊரில் ஏட்டுப் பள்ளிக்கூடம் ஏற்படுவதும், அதற்கு ஆசிரியராக சாமிக்கண்ணாசாரி வருவதும், மாணவர்கள் ஒவ்வொரு தடவை பள்ளிக்கு வரும்போதும், பள்ளிவிட்டுப் போகும்போதும், ஆசிரியரை வணங்கிப் பாடும் பாடல்கள் , அந்த காலத்தில் மாணவர்- ஆசிரியர் உறவு எவ்ளோ அழகா, ஆழமா இருந்தது என்பதைக் காட்டுது.

மா நோம்பு விழாவின்போது, காட்டிலிருந்து வன்னி மரத்தைப் பிடுங்கி வந்து ஊரில் நடுவார்கள், அதை வெளியே எடுப்பது விழாவில் ஒரு நிகழ்ச்சி. கிராமத்து பிள்ளைகள், விளையாட்டு தனமாக, கிட்டப்பனைப் பழி வாங்க வன்னிமரத்தை ஆழமாக நட்டு விட , எப்போதும் வன்னி மரத்தை வெளியே எடுக்கும் கிட்டப்பன், மிகுந்த வலியோடு மரத்தை வெளியே எடுத்து , நோய்வாய்ப்படுகிறான். அதே சமயம் அவனது மனதும் அவனைப் படுத்துகிறது, தனக்குப் பேசி வைக்கப்பட்ட பெண்ணை(அச்சிந்த்தலு) வேறு இடத்தில் மணம் செய்து கொடுத்ததும், இவனும் வேறு இடத்தில் மணம் புரிந்ததும், இவன் மனைவி இவனை விலகி போவதுமாக கதை நகர்கிறது. ஆச்சிந்த்த்லுவின் கணவனும் ,கல்யாணம் ஆன சிறிது காலத்திலே இறந்து விட, அவளுடைய மனது கிட்டப்பனோடு வாழாதது குறித்து ஏங்குகிறது, எல்லோருடைய வாழ்விலும் ஒரு காதல் இருக்கும். சில பேருக்கு அது நிறைவேறுகிறது, சிலருக்கு நிறைவேறுவது இல்லை. ஆனால் கிட்டப்பன் இறக்கும்போது அச்சிந்த்தலுவும் இறந்து, தன்னுடைய நிறைவேறாக் காதலை முடிவுக்குக் கொண்டுவருகிறாள்.

இரண்டாம் பாகத்தில் பல ஊரில் இருந்து மக்கள் கோபல்ல கிராமத்தில் குடியேறுவதும், கிராமத்து மாணவர்கள் ஏட்டுப் பள்ளியை விட்டுட்டு நகரப் பள்ளியில் படிக்கப் போவதும், குடுமியை எடுத்துவிட்டு கிராப் வைத்துக் கொள்வதுமாக ஆரம்பிக்கிறது. இரண்டாவது பாகத்தின் சிறப்பு ஒவ்வொரு அத்தியாத்திலும் மக்களிடம் பரவி இருந்த மூட நம்பிக்கைகள் எப்படி மறைந்தன, அதே சமயம் அவர்களிடம் இருந்த நற்குணங்கள் எப்படி மாற்றம் அடைந்தன என்பதைச் சொல்கிறார். அது பிரமாதமாக இருக்கிறது.

மாணவர்கள் கல்வி கற்கும் முறை அந்த காலத்தில் இருந்தே கடுமையாக விமர்சனம் செய்யப்பட்டுள்ளது என்பது தெரிகிறது. ஏட்டுப் பள்ளிக்கூட மாணவர்கள் நன்றாகக் கணக்கு போடுவதையும், நகரப் பள்ளியில் படித்த மாணவர்கள் தடுமாறுவதையும் சொல்லி நம் நவீனக் கல்வி அமைப்பை வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் விமரிசிக்கிறார் கி ராஜநாராயணன். ஃபவுண்டெய்ன் பேனாவை அதிசயமாகப் பார்ப்பதும், பேட்டரியால் எரியும் விளக்கு வந்தபின் பல பெரிய மனிதர்கள் விடும் அதிசயக் கதைகள் பொய்யாகிப் போவதும் நடக்கிறது.

கடைசி சில அத்தியாயங்களில் கொஞ்சம் வேகமாக சுதிந்தரப் போர் குறித்து அலச ஆரம்பிக்கிறார், ஒரு நடுநிலைமையோடு பல விஷயங்களைக் குறிப்பிடுகிறார், முக்கியமாக கள்ளு, கள்ளு குடிப்பவர்கள் பற்றியும், அதற்கு எதிராக காந்தியின் கொள்கையையும் விவரித்து, கள்ளு வேண்டுமா வேண்டாமா என்பதை நம் முடிவுக்கு விட்டுவிடுகிறார். காங்கிரஸ், பெரியார், கம்யுனிசம் என்று எல்லா கட்சிகளைப் பற்றியும் , அவர்களது கொள்கைகள் பற்றியும், ஒரு அலசல். யாரையும் நம்ப முடியாத தற்போதைய அரசியல் சூழ்நிலையை ஒப்பீடு செய்ய முடிகிறது. "சுதந்திர தினச் செய்தியாக நாட்டு மக்களுக்கு உங்கள் செய்தி என்ன?" என்று மகாத்மாவிடம் செய்தியாளர்கள் கேட்க, அதற்கு காந்தி, ""ஒண்ணுமில்லை,"" என்று சொல்வதுடன் கதை முடிவடைகிறது.

நெடும் தூரம் செல்லும் ரயிலில் நட்பாகி வரும் தாத்தா கதை சொல்வது போல், ரொம்ப நெருங்கிய உணர்வை இந்த நாவல் படித்தவுடன் உணரமுடிகிறது.

(😊)(😊)(😊)(😊)(😊)

# கி.ரா. என்றொரு மானுடம்

## கி.ராஜநாராயணன் நூற்றாண்டு தொடக்கம்



க.பஞ்சாங்கம்

https://www.hindutamil.in/news/opinion/columns/869353-k-ra-a-human-being-k-rajanarayanan-at-the-beginning-of-the-century.html



கி.ரா.வின் படைப்புக்களில் குறிப்பிடத்தக்க மூன்று நாவல்கள், 'கோபல்ல கிராமம்', 'கோபல்லபுரத்து மக்கள்'; இதில் இரண்டாம் நூலுக்குத்தான் 1991இல் சாகித்ய அகாடமி விருது கிடைத்தது. பிறகு, 'அந்தமான் நாயக்கர்'. இவை தவிர்த்து, இரண்டு குறுநாவல்களான 'கிடை', 'பிஞ்சுகள்' குறிப்பிடத்தக்கவை. கிட்டத்தட்ட எண்பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகளை எழுதியிருக்கிறார். ஒவ்வொன்றும் அற்புதமான கதைகள். மனிதர்களை அலசக்கூடிய கதைகளும் அரசியல் கதைகளுமாக இருந்தாலும் எல்லாம் அழகியலோடு படைக்கப்பட வேண்டும் என்கிற விழிப்புணர்வோடு படைத்தார். அவரின் கதைகளைப் படித்துவிட்டு கதை இத்தோடு முடிந்துவிட்டது என்று நம்மால் வெளியேறிவிட முடியாது. கதை முடியும்போதுதான் நாம் கதைக்குள்ளே பயணம் செய்யக்கூடியவர்களாக மாறுவோம். அவ்வளவு நுட்பமாகக் கதைகளைப் படைப்பார்.

**கைக்கொண்ட மொழி:** கி.ரா. கலை இலக்கியப் பண்பாட்டுத் தளத்திலும் மேல், கீழ்

என்கிற பேதங்களைக் களைந்து சமத்துவம் நிலவ வேண்டும் என்று விரும்பினார். குறிப்பிட்ட சிலருடைய கலைகள் மட்டும் சிறந்தவை என்றும், பெருவாரி மக்கள் கையாளுகின்ற கலைகளெல்லாம் தாழ்ந்தவை என்றும் கட்டமைக்கப்பட்டிருக்கக்கூடிய பொய்யான புனைவுகளை உடைக்க வேண்டும் என்று எண்ணினார். அதே மாதிரி, சிறுவாரி மக்களின் வாழ்க்கைதான் சிறந்தது. பெருவாரி மக்களின் வாழ்க்கை தாழ்ந்தது என்ற பண்பாட்டு ஆதிக்கத்தையும் சமப்படுத்த வேண்டும் என்று கருதினார். அவருடைய எழுத்துக்குப் பின்னால் இப்படியொரு பண்பாட்டு அரசியல் இருக்கிறது. இதைப் புரிந்துகொண்டு அவருடைய கதைகளையும் நாவல்களையும் வாசிக்கும்போதுதான் எவ்வளவு பெரிய மகத்தான பணியை அவர் சத்தமில்லாமல் செய்திருக்கிறார் என்பது நமக்குப் புரியவரும். அதனால்தான் அவர் ஆதிக்கவாதிகள் கையாளக்கூடிய மொழியைப் புறக்கணித்து, தன்னுடைய நாட்டுப்புற, வட்டார மக்கள் பயன்படுத்தக்கூடிய மக்களின் மொழியில்தான் கதை சொல்ல முன்வந்தார். இதற்கு எவ்வளவோ எதிர்ப்பு உருவானது. ‘அந்த வட்டார மொழி யாருக்குத் தெரியும், கி.ரா. வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் படித்துக்கொள்ள வேண்டியதுதானா, அதில் இருக்கக்கூடிய வழக்குச் சொற்கள் யாருக்குப் புரியும்?’ இப்படியான கேள்விகள் முன்வைக்கப்பட்டன. எதைப் பற்றியும் அவர் கவலை கொள்ளவில்லை. தொடர்ந்து அதில் இயங்குவேன் என்று உறுதியோடு இயங்கித் தனக்கான மொழியை அவர் உருவாக்கிக்கொண்டார். அதுதான் கி.ரா.வுடைய வெற்றி.

ஐரோப்பிய இலக்கியக் கோட்பாடுகளில் இன்று வரைக்கும் செல்வாக்குச் செலுத்திக்கொண்டிருக்கின்ற கிரேக்கத்தில் தோன்றிய அரிஸ்டாட்டிலுடைய ‘கவிதையியல்’. அத்துடன் நாடகத்திற்கும் காவியத்திற்கும் முக்கியமாகத் தேவைப்படுவது ‘pity’ என்று சொல்லக்கூடிய ‘இரக்கம்’தான். கி.ரா. இந்த ‘இரக்க’த்தைப் பிடித்துக்கொண்டார். அவருடைய படைப்பில் இரக்க உணர்ச்சியை அற்புதமாகப் படைத்திருப்பார். அதற்குச் சான்றாகச் சில கதைகளைச் சுட்டலாம்.

**காட்சியாக விரியும் கதை:** கி.ரா.வின் கதைகளில் மிக முக்கியமான, இன்று வரலாற்றில் பேசப்பட வேண்டிய ஒரு கதையாக, ‘கோமதி’ கதையைச் சொல்ல வேண்டும். மூன்றாம் பாலினத்தவரான திருநங்கையர் பற்றிய கதைதான் அது. இப்படிக் கி.ரா. சிந்தித்திருப்பதற்கு அந்த உயிரின் மேலிருந்த இரக்கம்தான் காரணம். கோமதியின் குடும்பத்தில் எட்டுப் பெண்கள். இவன் ஒருவன்தான் ஆண். ஆணாகத்தான் பிறந்தான். வளரவளர பெண்ணாக மாறிக்கொண்டிருக்கிறான். பெண்களைப் போல் பூச்சூடி தன்னை அலங்கரித்துக்கொள்கிறான். கோமதிக்கு

நன்றாகச் சமைக்கத் தெரியும். சமையல் வேலைக்காகச் சென்ற இடத்தில் ரகு என்கிற அந்த வீட்டு இளைஞன் மீது அவளுக்குக் காதல் மலர்கிறது. ஆனால், அதை வெளிப்படுத்தும்போது அவன் கோமதியின் நெஞ்சில் ஓங்கி மிதித்துத் தள்ளுகிறான். ஆனால், இறுதியில் அவனது படத்தை வைத்துக்கொண்டு பூச்சூடி, புடவை கட்டி, வளையல்கள் அணிந்து தனி ஆளாய்ப் பூட்டிய அறையில் கோமதி அழுதுகொண்டிருக்கும் காட்சியை ரகுவின் தங்கை சுலோச்சனா என்கிற சுலோ கண்டு அதிர்ந்துபோய் வருத்தப்படுவதாய்க் கதை முடிகிறது.

இப்படியொரு கதையை எழுதுவதற்கு இரக்கம் மட்டும் போதாது. கி.ரா.விடம் அதற்கும் மேலாகக் கதையை அப்படியே காட்சிப்படுத்தும் நுட்பம் கைவந்த கலையாக இருந்தது. அதனால்தான் திரைத் துறையினர் கி.ரா.வைத் தேடியோடி வந்தனர். அவரின் எழுத்து, காட்சி காட்சியாக விரியும். இதற்குக் கதையிலிருந்து ஒரு சான்று: "எதாவது அதிசயமான சங்கதியைக் கேள்விப்பட்டால், பட்டென்று கையைத் தட்டி இடது மணிக்கட்டின்மேல் வலது முழங்கையை ஊன்றி, ஆள்காட்டி விரலை மூக்கின்மேல் ஒட்டவைத்துக்கொள்வாள்". இதை நாம் வாசிக்கும்போதே நமக்குள் அந்தச் சித்திரம் காட்சியாய் ஓடும். இதுதான் கி.ரா.வின் மொழியாற்றல்.

**ஒரு குடும்பச் சித்திரம்:** கி.ரா.வின் எழுத்துக்களை வாசிக்கும்போது கதையைப் போலத்தான் இருக்கும். ஆனால், கதை அதனுடைய செயல்பாட்டை நம்முள் நிகழ்த்தத் தொடங்கிவிடும். இதற்குச் சான்றாக இன்னொரு அற்புதமான கதையைச் சுட்டலாம். 'கன்னிமை' என்கிற கதை. கதையை இப்படித் தொடங்குகிறார்: "சொன்னால் நம்ப முடியாதுதான். நாச்சியார் அம்மாவா இப்படி மாறுவார் என்று நான் நினைக்கவில்லை. அவர் எனக்கு ஒன்றுவிட்ட சகோதரி" என்று அந்தக் கதையைச் சொல்கிறவன் சொல்வதுபோலத் தொடங்குவார். ஒன்றுவிட்ட சகோதரி என்று சொல்வதற்குக் காரணம், அந்தக் குடும்பத்தில் எட்டுப் பேர் ஆண் பிள்ளைகளாகப் பிறக்கிறார்கள். ஒரு பெண் வாரிசு இல்லையே என்று அந்த அம்மா, தன் வீட்டுக்காரரின் சகோதரருக்குப் பிறந்த பெண் குழந்தையான நாச்சியாரம்மாவை எடுத்து வளர்ப்புப் பிள்ளையாக வளர்க்கிறார். எட்டு சகோதரர்களும் அவளிடம் பாசம்பொழிந்து வளர்க்க, நாச்சியாரும் பெரிய குடும்பத்தில் ஓடி ஓடி வேலை செய்கிற பெண்ணாக வளர்கிறாள். அந்த வீட்டுப் பணியாளர்களுக்குக் 'கும்பா' என்று சொல்லக்கூடிய கலயம் நிறைய கம்பங்கஞ்சியையும், குதிரைவாலிக் கஞ்சியையும் ஊற்றிப் பசியைப் போக்கும் தாராள மனம் கொண்டவளாய் நாச்சியார் விளங்குகிறாள். கஞ்சிக்குத்

தொட்டுக்கொள்ள பச்சை மிளகாயும் உப்பும் தந்து வாஞ்சையோடு பார்த்துக்கொள்வதை, அந்த மக்கள் மனதில் நீங்காமல் வைத்துக்கொண்டிருக்கின்றனர்.

ரெங்கையாவை மணந்து பிள்ளைகள் பெற்ற பிறகு, கண்ணுங்கருத்துமாகக் குடும்பத் தலைவியாக மாறிய நாச்சியார், முன்புபோல நேசிப்பில் அகன்ற வானம்போல் இல்லாமல் தற்போது சுருங்கிச்சுருங்கிக் குடையைப் போல் தன்னைச் சுருக்கிக்கொண்டவளாய் மாறிப்போனாள். ஒரு கட்டத்தில், காய்ச்சலில் படுத்துக் கிடக்கும் ரெங்கையாவையும் கண்டுகொள்ளாமல், பிள்ளைகளையே கவனித்துக்கொண்டிருப்பதைக் கண்ட அவர் மனம் வெதும்பிப் பேசும் பேச்சை நாம் வாசிக்கும்போது கி.ரா.வின் மகத்துவமான சாரம் வெளிப்படும். ‘குடும்பம்’ என்பது பாதுகாப்பான வளையம் என்கிற பாவனையில், எவ்வளவு பெரிய மகத்தான உள்ளம் கொண்ட மனிதர்களையும் எப்படிப் புரட்டிப்போட்டுவிடுகிறது என்கிற வாதத்தை நம்மிடையே எழுப்புகிறார் கி.ரா.

கி.ரா. வெறுமனே கதைகளை மட்டும் எழுதிச் செல்லவில்லை; அவற்றினூடாக மானுடத்தின் சாரமான கருணைமிக்க மனதையும் அன்றாட வாழ்க்கைப்பாடுகளையும் ஒவ்வொரு கதையிலும் ஓராயிரம் துணுக்குகளாகப் பொதிந்துவைத்திருக்கிறார். அவற்றை இனங்கண்டு, அவற்றின் மகத்துவத்தை அடுத்தடுத்த தலைமுறைகளுக்குக் கொண்டுசேர்க்கும் பொறுப்பில் இருக்கிறோம் என்பதை நாம் அனைவரும் நினைவில் கொள்ள வேண்டும்.

## Videos:

**கோபல்லபுரத்து மக்கள்**

இப்புதினத்தின் தொடர்புடைய காணொளியை கண்டுகளிக்க இணையவும்

01] https://www.youtube.com/watch?v=8oYCvrm0boI

02] https://www.youtube.com/watch?v=8_JUq90P6TE

03] https://www.youtube.com/watch?v=NLcSYFffotw

04] https://www.youtube.com/watch?v=lvaxobXLnDI

# கரிசல் வட்டார வழக்கு




இந்நூலை வாசிக்க, கீழ்க்கண்ட இணையதளத்தில், இணையவும்:

https://archive.org/details/dli.jZY9lup2kZl6TuXGlZQdjZt9k0ly



# கி இரா : வட்டார வழக்கிற்கு ஓர் அண்ணல்

https://www.keetru.com/index.php/2010-06-24-04-31-11/ungal-noolagam-aug21/42624-2021-09-16-02-19-51

********************

வட்டார வழக்கு என்பதைக் கையின் விரல்களைப் போலக் குறிப்பிடலாம். எல்லோருக்கும் தெரியும் சொல், புரியும் பொருள் என்பவை பொது மொழி உள்ளங்கை என்றால் வட்டார வழக்குகள் விரல்கள். சுண்டு விரல், மோதிர விரல், நடுவிரல், ஆள்காட்டி (சுட்டு) விரல், கட்டை விரல் எனப் பெயர்கள் இருக்கின்றன. கரிசல் வட்டார வழக்கு, நாஞ்சில் நாட்டு வட்டார வழக்கு, செட்டி நாட்டு வட்டார வழக்கு, சோழ நாட்டு வட்டார வழக்கு, கொங்கு நாட்டு வட்டார வழக்கு எனத் தமிழுக்குப் பல வட்டார வழக்குகள் இருக்கின்றன.

ஒரு சொல்லுக்கு உள்ள பொதுப்பொருளோடு இன்னொரு பொருளைப் பெற்றிருப்பதாலும் பிற வட்டார வழக்கில் இல்லாமல் அந்த வட்டார வழக்கில் மட்டுமே பல சொற்கள், பழமொழி, விடுகதை போன்றவை இருப்பதாலும் தனித்தனி வட்டார வழக்குகள் ஆகும்.

இந்தியாவிலும் பாகிஸ்தானின் பலுசிஸ்தான் மாவட்டத்திலும் எனத் தற்போதுவரை இருபத்தாறு திராவிட மொழிகளில் கண்டறியப்பட்டுள்ளன (Bh.Krishnamurti, 2003:19). இலக்கணம், மொழியமைப்பு அடிப்படையில் இம்மொழிகளைத் தென்திராவிட மொழிகள் (11), நடுத்திராவிட மொழிகள் (12), வடதிராவிட மொழிகள் (3) எனத் திராவிட மொழியியல் அறிஞர்கள் பாகுபாடு செய்துள்ளனர். இவை அனைத்தும் ஒரு மூல மொழியில் (Proto-Lan-guage) இருந்து பிரிந்தவை ஆகும். ஒட்டு மொத்தமாக இதுவரை அறியப்பட்ட திராவிட மொழிகளின் மீட்டுருவாக்கம் (Reconstruction) செய்யப்படும் தொன்மை மொழியை மூலதிராவிடம் (Proto-Dravid-ian) என்பர்.

திராவிடம் வேறு, தமிழ் வேறு என்னும் அரசியல் வேறு பேசப்படுகின்றது. அதற்குள் விரிவாகப் போக வேண்டியதில்லை. ஆனால் இன்னொரு உண்மையையும் மறந்துவிடக்கூடாது. ஆரியர்கள் கைபர், போலன் கணவாய் வழியாக இந்தியாவிற்குள் நுழைந்தார்கள் என்பது உண்மையான வரலாறு (ஆர்.எஸ். சர்மா, ஆரியரைத் தேடி, ப.14, ந.சுப்பிரமணியன், இந்தியவரலாறு, ப.30). இந்தியாவில் அருகிய வழக்கில் உள்ள சமஸ்கிருதம், பெரு வழக்கில் உள்ள

இந்தி, மராத்தி, குஜராத்தி போன்ற மொழிகளும் இலங்கையில் பேசப்படும் சிங்களமும் இந்தோ-ஆரிய மொழிகள். இந்தோ-ஐரோப்பிய மொழிகளாகிய கிரேக்கம், இலத்தீன் போன்ற தொன்மையான மொழிகளோடு இரத்த உறவு கொண்டவை இந்தோ-ஆரிய மொழிகள். முதன்முதலாகச் சர் வில்லியம் ஜோன்ஸ் (1788) என்பவர் சமஸ்கிருதத்திற்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும் உள்ள தொன்மை உறவை வெளிப்படுத்துகின்றார். பலர் இக்கோட்பாட்டை விரிவாகப் பேசுகின்றார்கள்.

மண்ணுக்கு வந்த குதிரை மனைக்குச் சடுத்தம் (உரிமை) போட்டுதாம் என்று ஒரு பழமொழி உண்டு. அப்படி, தமிழ் மற்றுமுள்ள திராவிட மொழிகளுக்குச் சமஸ்கிருதம் தாய்மொழி என்று வெளிநாட்டினர் பேசுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மண்ணில் ஊறிய நீரைக் குடித்தும் விளைந்ததை உண்டும் வாழ்ந்தவர்களே கூறியுள்ளார்கள். 11ஆம் நூற்றாண்டில் புத்தமித்திரனார் வீரசோழியம் என்னும் இலக்கண நூலை வடமொழி இலக்கண மரபு அடிப்படையில் தமிழுக்கு எழுதியுள்ளார். அவரின் மாணவர் பெருந்தேவனார் தமிழ்ச் சொல்லிற்கு எல்லாம் வடநூலே தாயாகி நிற்கின்றமையின் அங்குள்ள வழக்கு எல்லாம் தமிழும் பெறும் (வீரசோ. 60 உரை). திராவிட மொழிகளும் இந்தோ-ஆரிய மொழிகளும் வேறுவேறு மொழிக் குடும்பங்களைச் சார்ந்தவை என்பதை வெளிநாட்டு அறிஞர்களே சான்றுகளுடன் மறுத்தார்கள் (Francies White Ellis, 1816; Robert Caldwell, 1856)

எனவே, தமிழுக்கும் பிற திராவிட மொழிகளுக்கும் இடையே உள்ள உறவை மறுத்தால் ஆரியர் இந்தோ-ஐரோப்பியருடன் தொடர்புடையவர் அல்லர் என்னும் வரலாற்றுப் பிழையையும் ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும். ஆரியர் இந்தியாவின் தொன்மைக் குடியினர் என ஏற்கனவே தொகுதி தொகுதியாக எழுதித் தள்ளிக் கொண்டிருக்கின்றார்கள் (தமிழக அந்தணர் வரலாறு1,2, 2008). அரசியல் பேசுவதும் வரலாறும் ஒன்றல்ல என்பதற்குப் பல சான்றுகள் இருந்தாலும் மொழிகளில் காணப்படும் ஆயிரக்கணக்கான இணைச் சொற்கள் (Cognate words) இன உறவை வெளிப்படுத்திக் கொண்டே இருக்கும். சான்றுக்கு ஒரு சொல்லைக் குறிப்பிடலாம்.

நால் என்பது நான்கைக் குறிக்கும் வேர்ச்சொல் எண்ணடையாகச் செயல்படும். பல்வேறு திராவிட மொழிகளில் இதன் இணை வடிவம் காணப்படுகின்றது. மலையாளம் na:l, குடகு na:l, தெலுங்கு na:l, நாய்கி na:l, தோண்டி na:l, கூயி

na:l, குரூக் na:x (DED-3655), இவை ஒரு குடும்ப மொழி இல்லை என்றால் ஒரே பொருள் தரும் வேர்ச்சொல் எவ்வாறு எல்லா மொழிகளிலும் இருக்க முடியும்?

ஒன்று இரண்டு அல்ல, நால் என்னும் வேர்ச்சொல் போல ஆயிரக் கணக்கான வேர் இணை வடிவங்கள் ஒலி இழப்பு, மாற்றம், சேர்த்தல் என்னும் அடிப்படையில் ஒரு குடும்ப மொழிகளுள் காணப்படும். இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்துடன் இந்தோ-ஆரிய மொழிக் குடும்பம் தொடர்புடையது என்பதையும் இணை வடிவங்கள் காட்டிக் கொடுக்கும். எவ்வளவு காலம் ஆனாலும் தொலைவில் இருந்தாலும் ஒப்பியல் மொழியியல் (Comparative Linguistics) ஆய்வு காட்டிக் கொடுத்து விடும்.

ஒரு மொழி பேசுவோரின் தொன்மையை அறியப் புதை பொருட்கள் எவ்வளவு அடிப்படையாக இருக்கின்றனவோ அந்த அளவுக்குக் குடும்ப மொழிகளின் இணை வடிவங்களும் இருக்கும். கால ஓட்டத்தில் பிரிந்து பல பகுதிகளில் வாழ்பவர்களையும் பல நாடுகளில் வாழ்பவர்களையும் ஒப்பிட்டுப் பார்க்க உதவும். மற்றபடி அவர்களை ஒன்று சேர்த்துக் கட்டமைத்து ஒரு குடும்ப மொழி பேசுவோரின் நாடாக உருவாக்க முடியாது. திராவிட மொழிகளைப் பேசுவோரையே சான்றாகக் குறிப்பிடலாம்.

இந்த அடிப்படையில்தான் ஒரு குடும்ப மொழிகள் போலப் பொது மொழியும் அதன் வட்டார வழக்குகளும் சேர்ந்தே ஒரு முழுமையான மொழி எனப்படும். வட்டார வழக்குக் கோட்பாடு புதிதாக உருவானது அன்று! மரபிலக்கணங்களிலேயே தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

பவணந்தி முனிவர் (நன்.273) செந்தமிழ் பேசக்கூடிய நிலத்தோடு அதன் வட்டார வழக்குகளாகப் பன்னிரண்டு பகுதிகளைக் குறிப்பிடுகின்றார். உரையில் கொடுக்கப்படுபவை தமிழின் வட்டார வழக்குகள். உரையில் இன்னும் பதினேழு நாடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. மரபிலக்கணப்படி இரண்டு வகையும் திசைச் சொற்கள்.

மொழியியல் அடிப்படையில் முன்னர்க் குறிக்கப்படும் பன்னிரண்டும் வட்டார வழக்குகள். பின்னர்க் குறிக்கப்படும் பதினேழு வழக்குகளில் இரண்டு வகைகள்

உள்ளன. ஒருவகை தமிழோடு தொடர்புடைய திராவிட மொழிகள்; மற்றவை வேறு குடும்பமொழிகள்.

தமிழில் தற்காலத்தில் குறிக்கப்படும் வட்டார வழக்குகள் எல்லாமே ஒரே மதிப்புடையவை. இருப்பினும் கரிசல் வட்டார வழக்குக் குறிப்பிடத்தக்க ஒன்றாகக் கருதப்படுகின்றது. அதற்குக் காரணம் கரிசல் வழக்கை நூல்களில் பதிவு செய்தவர் கி.ராஜநாராயணன்.

கரிசல் வட்டார இலக்கியம் வளர்ச்சி அடைந்ததன் தாக்கத்தால் தான் தமிழ் மொழியின் பிற வட்டார வழக்குகளிலும் இலக்கியங்கள் வளர்ச்சி அடைந்தன. பழமொழி, விடுகதை, வழக்குச் சொற்கள் போன்றவை காலங்காலமாக இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டாலும் கி.ராஜநாராயணன் வழியாகவே வட்டார வழக்கு இலக்கியம் பேரளவில் வளர்ச்சி அடைந்துள்ளது. எனவே தான் கிரா வட்டார வழக்கிற்கு ஓர் அண்ணல் ஆகின்றார். இவருக்கு முன்னத்தி ஏர் கு.அழகிரிசாமி என்றாலும் இவர் அளவிற்கு அவர் எழுதவில்லை (கரிசல் கதைகள் 2002:6).

கிரா கரிசல் காட்டு இலக்கியத்திற்குச் செய்துள்ள பணி அளப்பரியது. பல ஆய்வாளர்கள் குறிப்பதைப் போல அவருடைய பணியை இலக்கிய உலகம் முழுமையாகக் கண்டு கொள்ளவில்லை.

நம்முடைய இலக்கண, இலக்கிய மரபுகளும் உழைக்கும் மக்களை - அதாவது, பிறரிடம் அடிமைத் தொழில் செய்வோரை ஐந்திணை ஒழுக்கத்திற்குள் அடக்கவில்லை. அவர்களின் உணர்வுகளை கைக்கிளை, பெருந்திணை என ஒதுக்கியே பார்க்கின்றன (தொ.பொ.25, 26).

சங்க கால மக்களின் வாழ்வியலை அறியும் அளவிற்குப் பிற்கால இலக்கியங்களைக் கொண்டு அறிய முடியவில்லை. வளமிக்க சோழநாடு ஆய கலைகளை வளர்த்த பெருமைக்கு உரியது. படித்தவர்கள் நிறையப் பேர் இருந்தமையால் புதினம், சிறுகதை போன்றவை சோழ மண்ணில் நிறைய எழுதப்பட்டன. உழைக்கும் மக்களைப் பற்றிய பதிவே குறிப்பாகப் பொதுவுடைமை, திராவிட இயக்கங்கள் தோன்றுவதற்கு முன்னர் இல்லை.

இருந்தாலும், அப்பதிவு மேட்டுக்குடி மக்களுக்கு அடிமை வேலை செய்தவர்களைப் பற்றியதாக இருக்கும். அவர்களின் உணர்வுகளைக் காணமுடியாது.

கிரா அந்த வகையில்தான் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றமை போலக் கரிசல் காட்டு இலக்கியத்திற்கு மட்டுமல்லாமல் வட்டார வழக்கு இலக்கியத்தின் பிதாமகன் ஆகின்றார்.

தமிழ் நவீன இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவரான கிரா நாட்டாரியலும் செவ்வியலும் நவீனவியலும் இயைந்த புள்ளியில் இயங்கினார் என்பதும் பேச்சு நடைக்கும் எழுத்து நடைக்கும் இடையே அவருடைய படைப்புகள் பாலமாக அமைந்தன என்பதும் அவருடைய தனித்துவம் ஆகும். தான் சார்ந்த கரிசல் மண்ணையும் அதன் மனிதர்களையும் தமிழ் இலக்கியத்தின் மையப் பரப்புக்குக் கிரா கொண்டு வந்த பிறகே தமிழகத்தின் வெவ்வேறு நிலப்பகுதிகளிலிருந்தும் மண்ணை மையமாகக் கொண்ட இலக்கியங்கள் உருவெடுத்தன.

என இந்து-தமிழ்-திசை (2-1-5.2021:6) தலையங்கம் குறிப்பது எதார்த்தமான உண்மையாகும்.

எழுபது - எண்பதுகளில் மாணவர்களும் பேராசிரியர்களும் பொதுவாக மக்களும் இலக்கியங்களை - குறிப்பாகப் படைப்பிலக்கியங்களைப் படிக்கக் கொண்டிருந்த ஆர்வம் தற்போது இருக்கின்றதா என்பது தெரியவில்லை. மாணவர்கள் கல்கி, சாண்டில்யன் எழுதிய வரலாற்றுப் புதினங்களையும் மு.வ., அகிலன், ஜெயகாந்தன், நா.பார்த்தசாரதி போன்றவர்களின் சமுதாயம் சார்ந்த படைப்புகளையும் தேடிப்பிடித்துப் படிப்பார்கள்.

இவ்வாறு படித்த சூழலில் பின்னாளில் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஆகிய மதுரைப் பல்கலைக்கழகத்தில் படிக்கும் போது பொன்னீலனின் 'கரிசல்' என்னும் புதினத்தைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. மார்க்சிய சிந்தனையுடன் எழுதப்பட்ட புதினமாகும். அக்காளும் தங்கையும் தந்தைக்கும் மகனுக்கும் மனைவி ஆகின்றனர். அக்காள் மகள் என்ற முறையில் மூத்தவள் தந்தைக்கு மனைவி ஆகின்றாள். அவர்களுக்குப் பிறந்த மகனுக்கு அத்தை மகள் என்ற முறையில் அம்மாவின் தங்கை - சித்தி கட்டி வைக்கப்படுகின்றாள். இரண்டுமே முறையான திருமணம் தான். இருந்தாலும் படிக்கும் போது வியப்பாக இருந்தது.

கிராமப்புறங்களில் காலங்காலமாக உள்ள வழக்கம்தான். பங்காளி வீடுகளில் அக்காள் சித்தப்பனுக்கும் தங்கை அண்ணன் மகனுக்கும் வாக்கப்பட்டிருப்பார்கள்.

‘கரிசல்’ புதினத்தைப் படித்த பிறகுதான் கிரா வைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

படைப்பிலக்கியத்திற்குத் தேவையான கரு கிடைப்பதற்கு வளமான சோழ மண், வறண்ட கரிசல் மண் என்னும் வேறுபாடில்லை. சொல்லப் போனால் வறண்ட மண்ணில் தோன்றும் படைப்புகளிலேயே ‘பரக்கப் பரக்கப் பாடுபட்டேன் படுக்கப்பாயில்ல; தட்டானுக்கு வாக்கப்பட்டேன் அறுக்கத்தாலி இல்ல’ என மக்கள் வாழ்க்கை தெரிவதோடு அம்மண்ணில் வாழும் உயிரினங்களின் நிலையும் தெரியும்.

பொதுவாக, படைப்பாளர்கள் விளைந்துள்ள கடலைக் கொடியை அரித்து அதிலுள்ள கடலையை ஆய்வார்கள் என்றால் கிரா மண்ணில் தங்கி உள்ள தப்பு கடலையைக் களைக் கொட்டால் சீய்த்து எடுப்பது போலச் சமுதாயத்தில் விடுபட்ட அல்லது விலக்கப்பட்டவற்றை எல்லாம் தோண்டி எடுத்துப் பதிவு செய்துள்ளார்.

ஒரு படைப்பு அல்லது ஆய்வைப் படிக்கும் போது அது இன்னொன்றை எழுதத் தூண்ட வேண்டும்; அல்லது மனதில் மறைந்து கிடப்பவற்றை வெளிப்படுத்த வேண்டும். ஏறக் குறையத் தமிழ்ப் படைப்பாளர்களில் கிரா வின் படைப்புகள் செய்துள்ள தாக்கம் மற்றவர்களின் படைப்புகள் செய்துள்ளவற்றை விட அதிகம் என்றே குறிப்பிடலாம். அவர் சார்ந்து எழுதியவை நாட்டுப்புறவியல் (Folklore) தொடர்பானவை.

கிரா கரிசல் காட்டு மண்ணைப் பற்றி எழுதினாலும் அவை எல்லா மண்ணுக்கும் உரியவை. அவர் எல்லாவற்றையும் நினைத்து, நினைத்துத் தோண்டி வெளிப்படுத்துகின்றார்.

உறவுமுறை உள்ளவர்கள் செய்து கொள்ளும் கிண்டலுக்கு அளவே இருக்காது. வயது வேறுபாடு இல்லாமல் உறவுமுறைக்காரர் ஒருவரைப் பார்த்தால் பரிகாசம் பண்ணத் தோன்றும். ஆண், பெண் என்னும் வேறுபாடும் இருக்காது. எப்போதும் கடுகடுவென்று முகத்தை வைத்திருப்பவர்களுக்குக் கூட உறவுமுறைக்காரர்களைப் பார்க்கும்போது கிண்டல் பண்ணத் தோன்றும். அந்தக் கிண்டல் திட்டமிட்டு வருவதில்லை; இயல்பாக வரும்.

‘எனக்கு ரெண்டு ஆளு வேணும் அமசு’ என்கிறார் அத்தை மகன். ‘நீங்க வேற அத்த மகனே, எனக்கு நாலு ஆளு வேணும்; நானும் நாலு நாளா கெடந்து அலையுறேன், ஒரு ஆளு கூடக் கெடக்கல!'

நடவு நேரத்தில் நடவு ஆள் திண்டாட்டம் அதிகமாக இருக்கும். எதிரும் புதிருமாக வரும் அவர்கள் இயல்பாகக் கூறிக் கொண்டு கடக்கிறார்கள். அவரோடு வந்தவர், ‘வயதான காலத்துல ஆளுக்கா அலையுறிய’ என்று போகிற போக்கில் கூறிப் பொருளையே புரட்டிப் போட்டுவிட்டார். நடவு நட்டுக் கொண்டிருப்பார்கள். மாமா, மாமன் மகன், அத்தை மகன் என்று யாராவது நாற்று முடி எடுத்துப் போடுவார்கள். திடீரென்று முறை உள்ள இளவட்டப் பெண்கள் சிலர்

கண்ணிமைக்கும் நேரத்தில் அவரைச் சுற்றி வட்டமாக நாற்றை நட்டுவிடுவார்கள். அவர் பத்து - இருபது பணத்தைக் கொடுத்த பிறகுதான் வட்டத்தை விட்டு வெளிவர முடியும்.

புதுமாப்பிள்ளை விருந்து சாப்பிடும்போது மணப்பெண்ணின் தங்கைகள் அக்காள் கணவனைச் செய்யும் கிண்டலுக்கு அளவே இருக்காது. விருந்து சாப்பிடும் இடம் மின்சாரம் இல்லாத காலத்தில் இருட்டாக இருக்கும். மாப்பிள்ளை பாயில் உட்காரும் போது பட பட என்னும் சத்தம் காற்று பறிவது போல வரும். பாய்க்குக் கீழே பானை ஓட்டை வைத்திருப்பார்கள். சாப்பிடும் வாழை இலையின் நரம்பில் நூலைக் கட்டிச் சோற்றில் கை வைக்கும்போது இலையை இழுப்பார்கள். இப்படி ஐம்பது - அறுபது ஆண்டுகளுக்கு முன்னர்ப் பரிகாசங்களை நிறையக் கேட்கலாம்; காணலாம்.

## கோபல்ல கிராமம்

எழுபதுகளில் கோபல்ல கிராமம் (1976) வெளிவந்த போது படித்த நிகழ்வொன்று இத்தனை ஆண்டுகள் உருண்டோடிய பிறகும் மனதை விட்டு நீங்கவே இல்லை. உறவு முறை உள்ளவர்களுக்குள் செய்யும் பரிகாசம் அல்லவா! எப்படி மறந்து போகும்?

அக்கையாவும் சுந்தரப்ப நாயக்கரும் மாமன்-மச்சான் முறை உள்ளவர்கள். முன்னவர் கிண்டல் பண்ணுவதில் கொஞ்சம் தூக்கலான பேர்வழி. உறவுமுறை உள்ளவர்கள் விளையாடும் இடமாக இருந்தாலும் வேலை இடமாக இருந்தாலும் எச்சரிக்கையாக இருப்பார்கள். எப்படி இருந்தாலும் ஒருத்தர் ஏமாந்துதான் போக வேண்டும்.

வேலை முடிந்தபிறகு சுந்தரப்ப நாயக்கர் வெளியே போக ஒதுங்குகின்றார். தண்ணீர் இல்லாத கரிசல் காட்டில் மேயப் போகும் மாடு கொம்பில் புல்லைக் கட்டிக் கொண்டு போகாது; ஆனால் வெளியே போகின்றவர் தண்ணீர் கொண்டு போக வேண்டும்.

சுந்தரப்ப நாயக்கரிடம் ‘கால் கழுவத் தண்ணீரை ஊற்றவா?’ என்று அக்கையா கேட்கின்றார். இவரும் ஒரு உள்நோக்கத்துடன் கேட்கின்றார். அவரும் ஒரு உள்நோக்கத்துடன் ஊற்றச் சொல்கின்றார்.

சுந்தரப்ப நாயக்கர் கழுவக் கையை வைத்தபோது கொஞ்சம் ஊற்றியவர் திடீரென்று தோண்டித் தண்ணீரைத் தரையில் ஊற்றிவிட்டு அக்கையா ஊரை நோக்கி ஓடுகின்றார்.

‘உன்மேல் இதைத் தேய்க்காமல் விடமாட்டேன்! என்று சுந்தரப்ப நாயக்கர் பின்னால் துரத்திக் கொண்டு ஓடிவர ஒரே களேபரம்! (2014 : 62-63)

அறுபது-எழுபது ஆண்டுகளுக்குமுன் தற்போது நாட்டுக்குள் மதுபானம் பெருக்கெடுத்து ஓடுவது போல வயற்காட்டில் பங்குனி மாதம் வரை சேறும்

சகதியுமாகத்தான் இருக்கும். தை மாதம் அறுவடை முடிந்தாலும் பாதைகள் இல்லாத வயற்காட்டிற்குள் இருந்து நெல், வைக்கோலைப் பூமி காய்ந்த பிறகு பங்குனி மாதம் தான் வெளியே கொண்டு வர முடியும். அதுவரை தேவைப்படும்போது வைக்கோலைக் கட்டித் தலைச் சுமையாகத்தான் தூக்கி வருவார்கள்.

அத்தை மகன் முரடன், விவரம் தெரியாது. அத்தை சொன்னதால் மாமன் மகன்கள் வைக்கோலைக் கட்டி அவன் தலையில் தூக்கி விடுகின்றார்கள். சிறுகட்டுதான், இருந்தாலும் தூக்கி வர முடியவில்லை, அவ்வளவு கனம்! கொண்டு வந்து போட்டு விட்டுக் கழுத்தை அத்தை மகன் இப்படியும் அப்படியும் சுளுக்கு எடுக்கிறான்.

அத்தைக்கு ஒரு ஐயம். கட்டை அவிழ்க்கிறார். உள்ளே இரண்டு கிராய்கள்! புல்லோடு சேர்த்து வெட்டிக் கட்டி மாமன் மகன்கள் தூக்கி விட்டுள்ளார்கள். அவற்றைப் பார்த்துவிட்டு, ‘இதனாலதான் கட்டுக் கனமா இருந்துச்சா?’ என்று அப்பாவித்தனமாக ஆயாவிடம் கேட்டானாம்.

இப்படிப்பட்ட நிகழ்வுகளை எல்லாம் நாட்டுப்புற இலக்கியங்களில் தான் காண முடியும். இப்படித்தான் மகாகவியைத் தொடர்புபடுத்தி ஒரு நிகழ்வைக் கூறுவார்கள். பாரதியார் தெரு வழியாக நடக்கின்றாராம். குழாயடிச் சண்டை இலக்கியப் பதிவில்லாத வார்த்தைகள்; பாம்பைப் பிடித்துச் சுற்றும்போது முழுமுழு எலிகள் வந்து விழுவது போலப் பல சொற்கள் அவர் காதில் பாய்கின்றனவாம்.

மகாகவி ஆவலோடு கேட்டுக் கொண்டு நிற்கின்றாராம். துணையாக வந்தவர் ‘அசிங்கமான பேச்சு வாங்க’ என்றாராம் ‘ஓய் இந்த வார்த்தைகளை எந்த இலக்கியத்திலும் படிக்க முடியாதுங்காணும், இன்னும் சற்றுக் கேட்போம்’ என்றாராம்.

இலக்கண நூல்கள் நாட்டுப்புற மக்களின் புழங்கு மொழியைப் பயன்படுத்துவதற்கு விதிகள் விடுத்துள்ளன. சாணம் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. மாட்டுச் சாணத்தைக் குறிக்கவில்லை. சாணம், சாணி என்பவை வழக்கில் உள்ளன.

பசுவின் சாணத்தைக் குறிக்க (ஆப்பீ-ஆப்பி) வரும் புணர்மொழிக்குத் தொல்காப்பியர் பின்வருமாறு விதி கூறுகின்றார். *ஆன்முன் வரூஉம் ஈகார பகரம் / தான் மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே* (தொ.எ.234) ஆன்-பீ.ஆ-பீ.ஆப்பி.ஆப்பி, வருமொழியாக வரும் பீ என்பதைக் குறிக்கத் தொல்காப்பியர் ஈகாரப் பகரம் என்கின்றார். பெருமாள்முருகன் *பீக் கதைகள்* என்னும் தலைப்பில் சிறுகதைத் தொகுதி ஒன்றை எழுதியுள்ளார். தொல்காப்பியர் இவ்வாறு கூறுவதை அவையல் கிளவி (தொ.சொ.436) என்பார். பவணந்தி முனிவரும் (நன். 267) மொழிப்பயன்பாட்டை இயல்பு வழக்கு (இலக்கணம் உடையது, இலக்கணப் போலி, மரூஉ) தகுதி வழக்கு (இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி) எனப் பகுத்து விளக்குகின்றார்.

நாட்டுப்புற இலக்கியங்கள் வழியாகவே புதுப்புது செய்திகள், சொற்களை எல்லாம் அறிந்து கொள்ள முடியும். நாட்டுப்புற இலக்கியங்கள் வழிப் பல புதியவற்றை அறிந்து கொள்ளலாம். இருப்பினும், அவை பதிவாகாமல் இருந்த பழையவையே.

பழமொழி, விடுகதை போன்றவை 19-20 ஆம் நூற்றாண்டுகளிலேயே அறிஞர்களால் தொகுக்கப்பட்டிருந்தாலும் நாட்டுப்புறவியலின் அனைத்துக் கூறுகளையும் கரிசல் காட்டு இலக்கியங்கள் வழி வெளிக் கொண்டு வந்து, பிறரும் அவ்வாறு எழுத வேண்டும் என்று ஆவலைத் தூண்ட வைத்த பெருமை வட்டார வழக்கின் பிதாமகர் கிரா வையே சாரும்.

பெண் குறியைக் குறிக்கக் 'கருமுகமந்தி' எனவும் ஆண் குறியைக் குறிக்கச் 'செம்பின் ஏற்றை' எனவும் அவையல் கிளவியைக் குறிப்பிட வேண்டும் (நன்.266 கழனியூரன்: மயிலை). கிராவும் கழனியூரனும் சேர்ந்து *நாட்டுப் புறப் பாலியல் கதைகள்* (நீலக்குயில் 1994) என்னும் தொகுப்பை வெளியிட்டுள்ளார்கள். கிரா வட்டார வழக்குக் கூறுகள் அனைத்தையும் விட்டுவிடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டு எழுதியுள்ளார். எல்லாமே தமிழ்மொழிக்கு வளம் சேர்ப்பவை என்பதில் கருத்து வேறுபாடு இல்லை.

*'இப்போது இந்த வசவுகளைத் திரட்டிக் கொண்டிருக்கின்றேன். விஷயம் தெரியாதவன் சொல்வான், இந்தக் கிராவுக்குக் கிறுக்கா? வசவுகளைத் திரட்டிக்கிட்டு அலையுறதான் என்று நையாண்டி செய்வான். நான் கதை எழுதுவதைத் தள்ளி வைத்துவிட்டு, இதைச் செய்ய யாருமில்லாததால் செய்கிறேன் (நாட்டுப்புறப் பாலியல் கதைகள், பின்அட்டை)*

பீக்கதைகள் (2004: 13) என்னும் சிறுகதைத் தொகுப்பிற்குப் பொ.வேலுசாமி எழுதிய முன்னுரையைக் கிராவுக்கும் சேர்த்துக் கொள்ளலாம்.

*'சமூகத்தால் ஒதுக்கப்பட்ட விஷயங்கள் என்று முன் அனுமானம் செய்து கொண்டு சில பகுதிகளைப் பார்க்க விரும்பாத ஒரு பொதுமனம் உள்ளது. உண்மையில் அவை ஒதுக்கப்பட வேண்டியவை தானா, அவை பொருட்படுத்த வேண்டாத விஷயங்கள் தானா என்பது முடிவானதல்ல, விவாதத்திற்குரியது.*

## அக்கினிக் குழந்தைகள்

மனதிற்குள் இளம்வயதில் விழுந்த சில கரு விதைகள் அப்படியே கிடக்கும். படைப்பாளர்களாக இருந்தால் அவை முளைத்து வெளிவரும்; இல்லை என்றால் அப்படியே மக்கி மண்ணாகிப் போய்விடும்.

பொன்னீலனின் *கரிசல்*, சி.ஏ.பாலனின் *தூக்குமர நிழல்* போன்ற பொதுவுடைமை சார்ந்த படைப்புகளைப் படித்தபோது ஐந்து - ஆறுவயதில் மனதிற்குள் விழுந்த ஒரு பொதுவுடைமைப் போராளியின் மரணம் *மாவீரன் வாட்டாக்குடி இரணியன்* (1999) என்னும் வரலாற்றுப் புதினமாக வெளிவந்தது. அதனைத்

தொடர்ந்து சாம்பவான் ஓடைச் சிவராமன் (1999), ஆம்பல் ஆறுமுகம் (2002), பொதுவுடைமைப் போராளி ஏ.எம்.கோபு (2010) போன்ற படைப்புகள் வெளிவந்தன.

கோபல்ல கிராமம் (1976) என்னும் புதினத்தைப் பல்கலைக்கழகத்தில் படிக்கும் போது இன்னொரு கதைக் கருவும் மனதிற்குள் கிடந்தது நினைவிற்கு வந்தது. மன்னன் பெண் கேட்பது, இனக் குழுத் தலைவர், குடிமக்கள் மறுப்பது என்னும் நிகழ்வுகள் தொன்றுதொட்டே நிகழ்ந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் நிறையப் பதிவுகள் உள்ளன. மகட்பாற் காஞ்சி என்றொரு துறையே வகுத்து இலக்கணங்களில் விளக்கப்பட்டுள்ளது. கோபல்லபுரத்து மக்கள் புதினம் விளக்குவது போன்றே சோழ நாட்டில் இடைக்காலச் சோழர்காலத்தில் ஒரு சோகம் நிகழ்ந்துள்ளது. எப்போது இந்தச் சாதிப்பாகுபாடு சமுதாயத்தில் களையாக மண்டி வளர்ந்து தழைத்ததோ அப்போதிருந்தே இப்படிப்பட்ட நிகழ்வுகளும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

இரண்டு கிராமங்கள் புதினத்தில் அக்கினிபுரம், சூரியபுரம்; அவற்றின் பெயர் முறையே கட்டக்குடி, அருமுளை இலக்கியம், கல்வெட்டு என எதிலும் இந்த நிகழ்வு பதிவானதாகத் தெரியவில்லை. ஆனால் இந்த ஊர்களில் மக்கள் வாழ்ந்து அழிந்ததற்கான எச்சங்கள் இன்றும் கிடைக்கின்றன.

ஐந்து-ஆறு கிலோ மீட்டர் இடைவெளியில் இரண்டு ஊர்களும் இருக்கின்றன. இந்த இரண்டு ஊர்களும் அழிந்ததற்கு இரண்டு காரணங்கள் கூறப்படுகின்றன. ஒன்று சாதிக் கலப்பு, மற்றொன்று மன்னன் பெண் கேட்டு வருவது; இரண்டு ஊர்களிலும் வெள்ளாளர்கள் வாழ்ந்தார்கள். இரண்டுமே இனக்குழு மரபின் எச்சங்கள்.

அக்கினிபுரத்தில் உள்ள ஒரு பெண்ணை வெளியூரில் இருந்து வந்தவன் அதே இனம் என்று சொல்ல அவனுக்குத் திருமணம் செய்து வைக்கின்றார்கள். குழந்தையும் பிறந்துவிட்டது. சூரியபுரத்தில் பிறந்த பெண்ணை இளவரசன் பார்த்து விட்டான்; அவள் அழகில் மயங்கி, அவளையே மணப்பேன் என்கின்றான். மன்னர் பெண் கேட்டு ஆள் அனுப்புகின்றார்.

அக்கினிபுரத்தில் சாதிக்கலப்பு நிகழ்ந்துவிட்டது; சூரியபுரத்துக்குப் பெண் கேட்டு மன்னனின் ஆள் வருகின்றார்கள். தங்கள் வெள்ளாளர் இனத்தைவிட எதுவும் உயர்ந்ததில்லை எனக் கருதிய உறவுமுறையில் உள்ள இரண்டு ஊராரும் தீ மூட்டி வீழ்ந்து மடிந்து விடுகின்றார்கள்.

கட்டக்குடியில் தீப்பாய்ந்தான் குளமும், அருமுளையில் சாம்பல் பள்ளமும் இப்போதும் சாட்சியங்களாக உள்ளன. வாய்மொழியாகவே காலங்காலமாக வழக்கில் இருந்த கதை புதினமாக எழுதப்பட்டுள்ளது. (ச.சுபாஷ் சந்திரபோஸ், அக்கினிக் குழந்தைகள், 2000)

எனவே, கிரா வின் கரிசல் இலக்கியப் பணியை ஒரு வட்டாரத்துக்குள் சுருக்கி விட முடியாது. மேலே குறிப்பிட்டது போல அவரின் எழுத்துக்களைப் படிக்கும்போது மங்கிக் கிடந்த நினைவுகள் வெளி வருகின்றன. பலர் எழுதவும் ஆராயவும் உந்து சக்தியாக இருந்துள்ளார்.

## கரிசல்காடு

கிராவுக்கு தம் மண்ணின் மீது இருந்துள்ள பற்றை அவருடைய எழுத்துகளின் மூலை முடுக்குகளில் எல்லாம் அறியலாம். நல்லவர், கெட்டவர் என எல்லோரையும் இனங்கண்டுள்ளார். ஒட்டுமொத்தமாகக் கரிசல் காட்டு மக்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

*என்னுடைய இந்த மக்களிடத்தில் அன்பு இருக்கின்றது. பிரியமிருக்கிறது. பூமி வறண்டிருந்தாலும் மனசில் ஈரம் இருக்கிறது. வேட்டி கருப்பாக இருந்தாலும் மனசு வெள்ளையாக இருக்கின்றது. உடம்பு அழுக்காக இருந்தாலும் நாக்கு சுத்தமாக இருக்கின்றது. (கரிசல் கதைகள், ப.4)*

இக்கரைக்கு அக்கரை பச்சை என்பார்கள். கிராவுக்குத் தம்முடைய பூமியாகிய கரிசல்காடு காவிரி பாயும் புண்ணிய பூமியாக இல்லையே என்னும் வருத்தம் ஆழ் மனதில் இருப்பதைக் கரிசல் கதைகள் முன்னுரை வழி அறிய முடிகின்றது. *இப்படியான ஒரு புனித நதி ஓடும் பாக்கியம் செய்யவில்லை இந்தக் கரிசல் மண்* (ப.5). மேலும் காவிரி பாய்வதால் சோழ நாட்டில் எவ்வளவு செழிப்பாக உள்ளது என்பதை தி.ஜானகிராமனின் எழுத்தை மேற்கோளாகக் காட்டுகின்றார். *'தண்ணீர் குழாயிலும் தான் வருகின்றது, ஆனால் ஒரு ஆற்றில் ஓடும் போது இப்படியா பாட்டாகக் கேட்கும், கோயிலாக உயரும், கூர் அறிவாக வளரும்* (ப.4)

தி.ஜானகிராமன் நாணயத்தின் ஒரு பக்கத்தைக் குறிப்பிடுகின்றார். காவிரி ஆற்றில் நீர் ஓடும் போது பாட்டு முதலிய ஆய கலைகளும் வளர்ந்தன. இருகரைகளிலும் காவிரித் தொடக்கம் முதல் கடைமடை வரை கோயில்கள் உயர்ந்தன, ஒரு குலத்துக்கு ஒரு நீதியும் வளர்ந்தது. எல்லாமே உண்மைதான்.

நிலவுடைமை முழுவதும் யாரிடம் இருந்தது? *கதிரோன் தோன்றினான் / கவலை கொண்டு ஏங்கினோம் / உடையோ கோவணம் / உணவோ நீராரம்.* நிலவுடைமையோடு பண்ணைத் தொழிலாளர்கள் பல நூற்றாண்டுக் காலம் பிணைக்கப்பட்ட சங்கிலியைப் பொதுவுடைமைச் சித்தாந்தம் நொறுக்கித் தள்ளியது. திராவிடச் சித்தாந்தம் விழிப்புணர்வு, கல்வி, வேலை வாய்ப்பைக் கொடுத்தது.

கரிசல் மண்ணில் காவிரி போன்ற வளமான நதி பாய வேண்டும் எனக் கிரா ஏன் விரும்பினார் என்றே தெரியவில்லை. அப்படிப் பாயும் சூழல் ஏற்பட்டிருந்தால் வழக்கமாக எல்லா ஆற்றுக் கரைகளிலும் புற்றுக்களைப் போல வழிபாட்டுத்

தலங்கள் வளர்ந்திருக்கும். காவிரியாற்று மக்கள் போலக் கரிசல் மண் மக்களும் *கதிரோன் தோன்றினான்...* என்று ஒப்பாரி வைத்து இருப்பார்கள்.

***********************************

## செட்டிநாட்டு வட்டாரவழக்குச் சொல்லகராதி

https://www.tamildigitallibrary.in/admin/assets/book/TVA_BOK_0002507_%E0%AE%9A%E0%AF%86%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BF%E0%AE%A8%E0%AE%BE%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AF%81_%E0%AE%B5%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BE%E0%AE%B0_%E0%AE%B5%E0%AE%B4%E0%AE%95%E0%AF%8D%E0%AE%95%E0%AF%81_%E0%AE%9A%E0%AF%8A%E0%AE%B2%E0%AF%8D%E0%AE%B2%E0%AE%95%E0%AE%B0%E0%AE%BE%E0%AE%A4%E0%AE%BF.pdf

[செட்டிநாட்டுவட்டாரவழக்குச் சொல்லகராதி. தொகுப்பாசிரியர் பழனியப்பா சுப்பிரமணியன். தமிழினி வெளியீடு]

தமிழ்மொழி தொன்மையும் தனித்துவமும் உடைய செம்மொழிகளில் ஒன்றாக இருந்தாலும் தன் தனிச்சிறப்பு இன்றும் வாழும் அதன் அழிவின்மையே. ஒவ்வொரு தளத்துக்கும் ஏற்ப மகக்ளால் விரிவுபடுத்தபப்ட்டு பயன்படுத்தபடுவதனுாடாகவே அதன் 'சீரிளமைத்திறம்' வெளியாகிறது என்றால் மிகையல்ல. அவ்வகையில் தமிழின் பல்வேறு வகைபேதங்களை நாம் இன்று காண்கிறோம். அதில் ஒன்று வட்டார வழக்கு

நான் அறிந்தவரை எல்லாமொழிகளுக்கும் வட்டார வேறுபாடுகள் உண்டு என்றாலும் வரைமொழிக்கும் உரைமொழிக்கும் உள்ள வேறுபாடும் வட்டார வேறுபாடுகளும் இத்தனை துலக்கமாக உள்ள இந்தியமொழி வேறு இல்லை. தமிழின் தீராத அழகுகளில் ஒன்று இது. நவீன காலத்துக்கு ஏற்ப தமிழ் மறு ஆக்கம்செய்யப்பட்ட காலத்தில் தமிழின் இந்த நுண்மைகளை களைந்து அதை சீராகத் தரப்படுத்தும் முயற்சிகள் நிகழ்ந்தன. 'கொச்சை வழக்கு' என வட்டார வழக்குகள் தவிர்க்கப்பட்டன. சிறந்த உதாரணம் திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். அது பிரசுரித்த நூல்களில் மட்டுமல்ல, மறுபிரசுரம் செய்த நூல்களில் கூட வட்டார வழக்குகளைக் களைந்தே வெளியிட்டது.

இப்போக்கின் முன்னோடி என மறைமலை அடிகளையே சொல்ல வேண்டும். பொதுவாகவே தனித்தமிழியக்கம் வட்டாரவழக்குக்கு எதிரானது. அந்தச் சீராக்கும்பணி ஒருபக்கம் சாதகமான விளைவுகளை உண்டுபண்ணியது. இன்று தமிழகமெங்கும் நாம் அச்சில் காணும் சராசரித்தமிழ் என்பது அவர்களால்

உருவாக்கபப்ட்டதே. கலைச்சொல்லாக்கம் போன்றவற்றில் தமிழ் அடைந்துள்ள தன்னிறைவும் அவ்வியக்கத்தின் விளைவே. ஆனால் அந்த மொழி இயந்திரத்தன்மை கொண்டதாகவும் சராசரியானதாகவுமே இருக்க இயலும். அதில் புனைகதைகளை உருவாக்குவது முடியாத காரியம். அதில் அன்றாட வாழ்க்கையின் நுட்பங்கள் படிய மறுக்கும். அதற்கு மு.வரதராசனின் தனித்தமிழ் புனைகதைகளே சான்றாகும்.

ஆகவே தமிழின் முன்னோடி படைப்பாளிகள் தமிழின் வட்டாரவழக்குக்கு முக்கியத்துவமளித்து அதிலுள்ள நுட்பங்களையும் அழகுகளையும் புனைகதைக்குள் கொண்டுவந்தார்கள். அ.மாதவையா அதில் முன்னோடி. ஆயினும் அதற்கு பெரும் வீச்சை அளித்தவர் புதுமைப்பித்தன். வட்டாரவழக்கின் அவசியத்திற்காக சலியாது குரல்கொடுத்து வந்தவர் இலக்கிய விமரிசகரான க.நா.சுப்ரமணியம். வட்டாரவழக்கு மக்களின் வாழ்க்கையுடன் நேரடியான தொடர்புடையது, அவர்களின் வாழ்க்கையின் அழகுகளையும் சிக்கல்களையும் உடனடியாக தானும் பிரதிபலிப்பது, வட்டாரப் பண்பாட்டின் மொழிவடிவம் அது என க.நா.சு வாதிட்டார்.

வட்டாரவழக்கு இலக்கியத்தில் மெல்ல அழுத்தமான இடம்பெற ஆரம்பித்தது. இரு படைப்பாளிகளை அதில் முக்கியமானவர்களாகச் சொல்லலாம். நீலபத்மநாபன் முழுக்கமுழுக்க வட்டாரவழக்கிலேயே அமைந்த 'தலைமுறைகள்' என்ற தன் முதல் நாவல்மூலம் ஒரு புதியவழியை திறந்தார். கி.ராஜநாராயணன் வட்டாரவழக்குக்கான தீவிரமான பிரச்சாரகர்.

கல்விப்புலம் நெடுநாள் வட்டாரவழக்கு எழுத்துக்களை தவிர்க்கும் போக்கு கொண்டிருந்தது. அந்நிலையை மாற்ற பணியாற்றியவர்களில் பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி நாட்டாரியல் மையப் பேராசிரியராக இருந்த தெ.லூர்து முக்கியமானவர்.

தமிழின் முதல் வட்டார வழக்கு அகராதி கி.ராஜநாராயணனால் உருவாக்கப்பட்டது. 'கரிசல் வட்டார வழக்கு அகராதி'. [அகரம் வெளியீடு] அதன் பின் பெருமாள்முருகன் கொங்கு வட்டார வழக்கு அகராதியையும், கண்மணி குணசேகரன் கடலூர் வட்டார வழக்கு அகராதியையும் முனைவர் அ.கா.பெருமாள் நாஞ்சில்நாட்டு வட்டாரவழக்கு அகராதியையும் சுபாஷ் சந்திரபோஸ் தஞ்சைமாவட்ட வட்டார வழக்கு அகராதியையும் உருவாக்கியுள்ளனர். [அனைத்துமே தமிழினி வெளியீடு]

செட்டிநாட்டு வட்டார வழக்கு அகராதி பழனியப்பா சுப்ரமணியனின் தொகுப்பில் வெளிவந்துள்ளது. செட்டிநாட்டு உரைமொழிக்கே உரிய தனித்த சொற்கள் பெரும்பாலும் அடையாளம் காணப்பட்டு இதில் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தகைய சொல்லகராதிகள் மிகுந்த ஆர்வமூட்டுவன. உதாரணமாக இதில் இத்தி- சிறிதளவு என்று பொருள் உள்ளது. அதேசொல் அப்படியே மலையாளத்தில் பயன்படுத்தப்படுகிறது. ஒருபழந்தமிழ் சொல்லாக இருக்கலாம். ஆவர்த்தி- சுற்று என்ற சொல்லும் மலையாளத்தில் உள்ளது. ஆவர்த்தனம் என்ற வடமொழிச்சொல்லின் மருவிய வடிவம். ஆனால் அனுவல்-விசேஷம்,சுபநிகழ்ச்சி என்ற சொல்லின் ஊற்று எது? செவிக்கு ஒரு தொல்தமிழ்ச் சொல்லாகவே படுகிறது.

கும்மாயம் என்றால் மலையாளத்தில் சுண்ணாம்புச்சாந்து என்றுபொருள். இங்கே ஒருவகை தின்பண்டம். சத்துமாவுபோன்றது. வேங்கரிசியும் அதுபோன்றதே. சும்மாக்குழம்பு என்றால் அவசரத்துக்குக் காய்கறி இல்லாமல்செய்யப்படும் குழம்பு என்ற சொல்லுக்கு சொல் சார்ந்தல்ல, பண்பாடு சார்ந்துதான் முக்கியத்துவம் வருகிறது.

இந்நூலில் செட்டிநாட்டுச் சடங்குகள் மற்றும் வாழ்க்கைமுறைகள் பற்றிய குறிப்புகள் பின்னிணைப்பாக உள்ளன. அத்துடன் செட்டிநாட்டு மொழிக்கு சிறந்த படைப்பிலக்கிய உதாரணமான ப.சிங்காரத்தின் புயலிலே ஒரு தோணியில் உள்ள சில உரையாடல் பகுதிகளும் எடுத்து அளிக்கப்பட்டுள்ளன.

ஒரு வட்டாரவழக்கு அகராதி பலவகையான கற்பனைகளை தூண்டிவிடுவது. நாம் அதில் நுண்ணிய முறையில் புதைந்துகிடக்கும் பல்வெறு பண்பாட்டு அம்சங்களை வாசித்து எடுக்க முடியும். மேங்கோப்பு என்றால் ஒரு வீட்டின் மேல்மாடி மட்டும். மாளிகைகள் நிறைந்த செட்டிநாட்டில் மட்டுமே இப்படி ஒரு சொலலட்சி உருவாக இயலும். இன்று தொலைக்காட்சி போன்ற பொது ஊடகங்களின் ஆதிக்கத்தால் தமிழின் வட்டார இயல்புகள் அழிந்து பொதுமொழி உருவாகிவரும் காலகட்டம். இத்தகைய பண்பாட்டுக் கூறுகல் விரைவிலேயே அழிந்துவிடக்கூடும். அவற்றை பதிவுசெய்து தொகுக்கும் பணி மிக முக்கியமான கலாச்சாரக் கடமை.

*************************

# கரிசல் வட்டார இலக்கியம்

சிபிச்செல்வன்

https://sibichelvan.wordpress.com/2012/05/10/%E0%AE%95%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AF%81%E0%AE%B0%E0%AF%88-%E0%AE%95%E0%AE%B0%E0%AE%BF%E0%AE%9A%E0%AE%B2%E0%AF%8D-%E0%AE%B5%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BE%E0%AE%B0-%E0%AE%87%E0%AE%B2/

கரிசல் வட்டார இலக்கியம் எழுதுபவராகவே சோ. தர்மன் அறிமுகமானார். அவருடைய எழுத்துகள் 'முன்னத்தி ஏரில்' தொடங்கியவை. அவரது ஆரம்ப கால எழுத்துகளில் கி.ரா., பூமணி ஆகியோரின் தாக்கமும், சாயலும் இருந்திருக்கின்றன. அவரது சிறுகதைகளில் வருகிற கதாபாத்திரங்கள் எளிமையானவை; இயல்பானவை; பாசாங்குளற்றவை. அவரது கதைகளும், கதா பாத்திரங்களும், கதைக்களனும் வாசகர்களின் பொது அனுபவங் களுக்கு மிக நெருக்கமானவை. சோ. தர்மனின் ஆரம்ப காலச் சிறுகதைகள் தாமரை போன்ற இதழ்களில் வெளியானவை. வாசிப்பிற்கு சிரமம் கொடுக்காமல் எளிதில் புரிந்துவிடக் கூடியவை. அதனாலேயே அவை ஒற்றைத் தளத்தில் நின்றுவிட்டதும் நேர்ந்திருக்கின்றன. இருந்தபோதிலும் இந்தக் கதைகளைக்கூட மோசமானவை என நிராகரித்துவிட முடியாது. ஏனெனில் அந்தக் கதைகள் வலிந்து எழுதப்பட்டவையல்ல.

சோ. தர்மனின் பாத்திரங்கள் 'கரிசல்' மண்ணின் அசலான மனிதர்கள். அவர்கள் மேனியில் கரிசல் மண் படிந்திருக்கும் அல்லது கந்தகம் படிந்திருக்கும். தொடக்கத்தில் இந்த வாசனைகள் இல்லாத கதைகளே இல்லை. அதே சமயம், அவரது எந்தக் கதையிலும் கோஷங்கள் உரத்து ஒலிக்கவில்லை. மண் மீதும், மனிதர்கள் மீதும் அவருக்கு இருக்கும் அக்கறையும், பரிவும், ஈரமும் அவரது எழுத்தில் வெளிப்பட்டுள்ளன. அவர் சார்ந்திருந்த எந்த இயக்கத்தின் நிழலும் தம் சிறுகதைகளின் மீது பெரியளவில் படிந்துவிடாமல் ஜாக்கிரதையாக இருந்திருக்கிறார்.

மனிதர்கள்மீது பாசமும் அக்கறையும் உள்ள படைப்பாளியான இவருக்கு விலங்குகள், பறவைகள் மீதும் அதே அளவு அன்பு செலுத்த முடிகிறது. (அ)ஹிம்சை சிறுகதையில் இந்தத் தன்மைகள் வெளிப்பட்டிருக்கிறது. மனிதர்கள், குறிப்பாகக் கிராமத்து மனிதர்கள் விலங்குகளையோ,

பறவைகளையோ வளர்ப்பதில் காட்டும் ஈடுபாடும், அக்கறையும் அபரிமிதமானவை. அவர்கள் தங்கள் குழந்தைகளைப் போலவே இவற்றைப் பாவிக்கிறார்கள். இவற்றை இழந்துவிட்டால் துடித்துப் போகிறார்கள். ‘மாடுகள்’ சிறுகதையில் வருகிற திருக்கோட்டித் தேவரின் மாடுகளோடு ‘தப்பி’ வந்த மாட்டை வளர்த்தற்கான கூலியைக்கூட இதைச் சொல்லியே மறுக்கிறார். தர்மனுக்குச் சுற்றுப்புறச் சூழல் மீது கவனமும், அக்கறையும் இருப்பதற்கான வெளிப்பாடுகளாக ‘சோகவனம், கழிவுகள்’ கதைகள் இருக்கின்றன. ஆலைகளின் கழிவுகள் இயற்கையை நாசம் செய்வதையும், போக்குவரத்து நவீன சாதனங்களின் இரைச்சலால் ‘சோகவனத்து கிளிகள்’ இயந்திர மொழியை உளறுவதும் சமூக அக்கறையுடன் பதிவு செய்துள்ளார்.

‘ம(னி)தம், சார்... போஸ்ட், சிதைவுகள், அப்பாவிகள்’ ஆகிய சிறுகதைகளில் சாதி, மதப் பிரச்சினைகளின் முகங்களையும், அதன் கோரத்தையும் காட்டியுள்ளார். நேரிடையான வாசிப்பிற்குகந்ததாகவே வெளிப்பட்டுவந்த சோ. தர்மனின் சிறுகதைகள் மெல்ல நகர்ந்து பூடகமாகவும், குறியீடு களாகவும் மாற ஆரம்பித்ததை ‘குறளி வித்தைக்காரன்’ சிறுகதை காட்டுகிறது. இந்தக் கதையில் அவர் உருவகிக்கும் பொம்மைகள் எவற்றையெல்லாம் குறிக்கின்றன என்பதை அறிய மண்டையை உடைத்துக் கொள்ளத் தேவையில்லை.

சமூகத்தில் உள்ள எல்லா விதமான அமைப்புகளையும், அவற்றில் உள்ள கோளாறுகளையும் பகடி செய்வதோடு, அவற்றின் விளைவுகள் சமூகத்தை எப்படிப் பாதிக்கிறது என்பதையும் இக்கதையில் காட்டியுள்ளார். இந்தப் பூடக கதையில் எந்த இயக்கத்தின்மீதும் விருப்பு, வெறுப்பின்றி இயல்பாக எழுதி யுள்ளமையே இக்கதையின் வெற்றிக்குக் காரணம். இக்கதைக்குமுன் இவர் எழுதிய சிறுகதை களிலிருந்து ஒரு முக்கியமான நகர்வை ‘குறளி வித்தைக்காரன்’ நிகழ்த்தியிருக்கிறது.

இத்தொகுப்பின் ஆகச் சிறந்த கதை ‘இரவின் மரணம்’. இந்தக் கதை ‘புதிய பார்வை’ இதழில் வந்தபோதே வாசித்தேன். பிறகு இரண்டு, மூன்று முறை படித்திருப்பேன். இப்போது மறுபடியும் இத்தொகுப்பில் சேர்ப்பதற்காகவும் பலமுறை வாசித்த போதும் சலிப்போ, அலுப்போ தரவில்லை. இக்கதை பிரசுரமான போது நானும், சில நண்பர்களும் கூடி இக்கதையைத் தீவிரமாக அலசி விவாதம் செய்தோம். கவிஞர் சி.மணி கூட ‘புதிய பார்வை’ இதழுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அவர் அவ்வளவு சீக்கிரமாக ஒரு கடிதத்தை மனமுவந்து எழுதிவிடக் கூடியவரல்ல.

ஒரு நல்ல கதையின் இயல்பு & அது வேறு பிரதேசங்களில் வாழ்பவர்களின் அனுபவங்களோடும், அக்கதையின் அனுபவங் களோடு பொருந்திப் போகச்

செய்வதுதான். அந்த வேலையை 'இரவின் மரணம்' கதை செய்திருக்கிறது. பாலிசு பேசுகிற தத்துவங்கள் வெகு யதார்த்தமானவை. அவை நூல்களின் பக்கங்களிலிருந்து பெறப்பட்டவையல்ல. மாறாக, அனுபவ அறிவிலிருந்து பெறப் பட்டவை. பாலிசு பேசும் வட்டார மொழியிலேயே அவை வெளிப் பட்டுள்ளன. அவையெல்லாம் தத்துவங்கள் தானா என்பதைக்கூட அவன் அறிவானா என்பதும் நமக்குள் எழுகிற கேள்விகள்.

சோ. தர்மனின் சிறுகதைகளில் 'பன்முறை' வாசிப்பனுபவத்திற்கு உட்படுத்திய முதல் சிறுகதை 'இரவின் மரணம்'. இந்தக் கதைக்குப் பிறகு அவர் எழுதிய கதைகளில் உள்ளடக்கத்திலும், வெளிப் பாடுகளிலும் நிறைய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளதைக் காணலாம்.'ஊழ்' கதையும் குறிப்பிடத் தகுந்த கதைகளில் ஒன்று, இக்கதையில் வரும் 'கூகை' தெய்வத்தின் வழிபாடு, அது கொடுக்கும் அனுபவங்கள் ஆகியவை இக்கதையையும் நல்ல கதைகளின் பட்டியலில் சேர்க்கப் பரிந்துரை செய்கின்றன. இந்த 'ஊழ்' சிறுகதை 'கூகை' நாவலை எழுதவும், அதன் வெற்றியில் பங்கு செலுத்தவும் முடிந்திருக்கிறது.

'அன்பின் சிப்பி' கதையில் தேவதச்சன் என்ற நிஜமனிதரைப் புனைவாக மாற்றி, மருதுவின் சரித்திரத்தையும் இணைத்து புனைகதை வெளியில் பதித்துள்ளமை இவரின் பிறகதைகளிலிருந்து வித்தியாசப் படுத்துகிறது. நம் மண்ணில் உள்ள பாட்டி கதைகளும் மரபு முறைகளும் மரணத்திலிருந்துகூடக் காப்பாற்றும் என்பதைச் சொல்லும் கதை 'மருந்து'. நவீன மருத்துவமும், மருந்துகளும் செய்யாத சாதனைகளை 'கதை சொல்லி' சாதிக்க முடியும் என்பதைக் காட்டுகிறார் சோ. தர்மன்.

சோ. தர்மனின் சிறுகதைகள் எந்த நவீனத்துவ 'இஸங்களிலும்' பாதிக்கப்பட்டு எழுதப்பட்டவை அல்ல. மாறாக, அவர் தன் வாழ் விலிருந்தே தனக்கான கதை கருக்களைத் தேர்ந்து கொள்கிறார். தான் சார்ந்திருந்த எந்த இயக்கங்களின் சாயல்களோ, கோஷங்களோ தன் எழுத்துகளின் மீது விழாமல் பார்த்துக் கொண்டிருப்பதே இவரின் தனித்தன்மை.

1960 & 2010 வரையிலான ஐம்பது வருட சமூக, பொருளாதார, அரசியல் நிகழ்வுகளின் வரலாற்றுப் பதிவுகளின் சுவடுகளை சோ. தர்மனின் இந்த மொத்த சிறுகதைகளின் வழியாக அறிய முடிகின்றன. 1960களில் உருளைகுடி கிராமத்தின் பதிவுகளாகத் தன் இளமைக்கால விவசாய பாரம்பர்யத்தையும், கிராம ஆதி சமூகத்தின் மரபார்ந்த அறத்தையும், நம்பிக்கைகளையும், தொன்மங்களையும் தன் சிறுகதைகளில் எழுதியுள்ளார்.

ஒரு கூத்துக் கலைஞனின் மகனாக சோ. தர்மன் இருப்பதன் பாரம்பர்யத்தையும், அந்த அனுபவ வீச்சாக கதைகளில் மிளிரும்

அனுபவங்களும் வாசகர்களுக்கு நெருக்கத்தைத் தருகின்றன. உருளைக்குடியிலிருந்து கோவில்பட்டிக்கு சோ. தர்மனின் குடும்பம் குடிபெயர்ந்த பிறகு, அவரின் சிறுகதைகளிலும் கதைக்களனிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளமை காணலாம். தீப்பெட்டித் தொழிற் சாலைகள், பட்டாசு தொழிற்சாலைகளில் பணிபுரியும் உதிரித் தொழிலாளிகள், குறிப்பாகக் குழந்தை தொழிலாளிகள், பெண் தொழிலாளிகள் இவர்களின் ஒரு நாள் அல்லது ஒவ்வொரு நாளின் அல்லது ஒரு வேளை சோற்றுக்காகப் படும் அல்லல்கள் கதை களாகியுள்ளன.

விவசாய வருமானத்திலிருந்து தினசரி உதிரிகளின் பொருளாதார தேவைகளை நோக்கி கதைகளும், கதைக்களனும் நகர்வதை ஒட்டுமொத்த சமூகத்தின் போக்குகளுக்கான மாதிரிகளாக அடையாளம் காண சோ. தர்மனின் கதைகள் உதவுகின்றன. உருளைகுடி, கோவில்பட்டி, சிவகாசி அனுபவங்களின் அடுத்த கட்ட நகர்வாகப் புனைவுகளின் சாரத்தையும், சிறுகதைகள் எழுதித் தேர்ந்த தொழில் நுட்ப பயிற்சியும், மனமும் நுகர்வுக் கலாச்சார வீழ்ச்சியையும், விளைவுகளையும், கழிவுகளையும் அதன் பாதிப்பு களையும் பகடி செய்யவும், கவலையோடும், அக்கறையோடும் சோ. தர்மன் அணுகி நகர்ந்துள்ளமை தெரிகிறது.

தாமிரபரணி ஆற்றில் மூழ்கி இறந்தவர்களின் வரலாற்றுப் புனைவுதான் 'நீர்ப்பழி' சிறுகதையாக உருமாற்றுகிறார். 80களின் பிற்பகுதியில் அறிமுகமான தொலைக்காட்சி மூன்று சிறுகதைகளில் போகிற போக்கில் சொல்லிச் சென்றாலும், அது பயன்படுகிற, விதத்தின்மீது அவரின் விமர்சனத்தையும் 'சட்டிலாக' (ஷிUதீtறீமீ) கூறுகிறார். குழந்தைகளின் மீது பாலியல் வன்முறை நிகழ்த்து பவர்கள், நீலப்படங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் காட்சியாக 'வலைகள்' கதையின் வழியே காட்டுகிறார்.

அறம், ஈரம் இவையிரண்டும் கிராம வாழ்வின் இரண்டு ஆதி சமூக அடையாளங்கள். இந்த இரண்டின் அடிப்படைகள்தான் சோ.தர்மனின் கதைகளில் பரவிக் கிடக்கின்றன. பின்னால் எழுதப் பட்டுள்ள கதைகளில் சமூக வளர்ச்சியின் அடையாளங்களாக நுகர்வு கலாச்சாரமும், பொருளாதார வளர்ச்சியின் விளைவுகளாக விவீநீக்ஷீஷீ குடும்பங்களும் உருவானதாலும் அறமும், ஈரமும் நைந்து தான், தனது என்ற குறுகிய மனப்பான்மைகளும் உருவாகி யுள்ளமைக்கான கால, பண்பாட்டு மாற்றங்களின் சுவடுகளை தர்மனின் கதைகளின் வழியாக அறிய முடிகிறது.

மௌனங்களும், இடை வெளிகளும் சிறுகதைகளின் முடிவில் வாசகன் எதிர்கொள்ளும் அழுத்தங்களும், கண்ணில் ஈரம் கசிவதை உணரும் தருணங்களும், மனிதர்களுக்கு இருக்கும்வரை சோ. தர்மனின் கதைகள் உயிர்

வாழும். நமது ஈரத்தை உணர்ந்து கொள்ளவும், தக்க வைத்துக் கொள்ளவும் மீண்டும் மீண்டும் சோ. தர்மனின் கதைகளை வாசிப்பதன் வழியாக மீட்டுக் கொள்ள முடியும். அந்த அனுபவங்கள் உங்களுக்கும் கிட்டும்படியான மொத்த சிறுகதைகளின் தொகுப்புதான் இந்நூல், காங்கீரிட் காடுகளில், கணினி, இயந்திர வாழ்வின் நுகர்வு கலாச்சாரத்திலிருந்தும் உங்களை விடுவிக்கவும், உங்கள் நெஞ்சில் காய்ந்திருக்கும் ஈரத்தைச் சுரக்கச் செய்யும் இச்சிறுகதைகளைப் படிக்க பரிந்துரை செய்கிறேன்.

***********************

**வட்டார வழக்கு சொல் அகராதி தொகுக்கும் பணி தீவிரம்...**

[ https://m.dinamalar.com/detail.php?id=3057497]

******************

**வட்டார வழக்குச் சொற்கள்**

https://www.tamilvu.org/ta/courses-diploma-20052010-bkup-p201-p2013-html-p2013223-74385

https://ta.wikipedia.org/wiki/%E0%AE%A4%E0%AE%AE%E0%AE%BF%E0%AE%B4%E0%AF%8D_%E0%AE%B5%E0%AE%9F%E0%AF%8D%E0%AE%9F%E0%AE%BE%E0%AE%B0_%E0%AE%AE%E0%AF%8A%E0%AE%B4%E0%AE%BF_%E0%AE%B5%E0%AE%B4%E0%AE%95%E0%AF%8D%E0%AE%95%E0%AF%81%E0%AE%95%E0%AE%B3%E0%AF%8D

******************

# நன்றி

சொற்கள் சேகரித்து உதவியும்
விபரங்கள் கூறியும், அகரவரிசைப்படுத்தி உதவியும்
படிஎடுத்து உதவியும் செய்தவர்கள்.

□

திரு S.S.போத்தையா,
தங்கம்மாள்புரம்.

எழுத்தாளர் பூ. மாணிக்கவாசகம்
(''பூமணி'')

திரு S. மாரீஸ்வரன் B.Com.,
(படங்கள் வரைந்தது, போட்டோ, படி எடுத்தது )

திரு R.முருகன் B.A.,
கோவில்பட்டி.

திரு கே. உதயசங்கர் B.Sc.,
கோவில்பட்டி.

திரு போ.குமாரசாமிநாயக்கர்,
தங்கம்மாள்புரம்.

திரு P.பெருமாள், ஆசிரியர்,
தங்கம்மாள்புரம்.

திரு A.மாணிக்கம், ஆசிரியர்
தங்கம்மாள்புரம்.

எழுத்தாளர் அ.முத்தானந்தம். ஆசிரியர்,
சூரங்குடி

திரு P ஐயரப்பன், முன்னாள் ஊராட்சிமன்றத்தலைவர்,
சூரங்குடி

திரு A.கிருஷ்ணபிள்ளை ,,
திரு A.இராமசாமி ,,
திரு வில்லாயுதஆசாரி ,,
திரு L.பேச்சிமுத்தாச்சாரி ,,

திரு P. இராமசாமிப்பாண்டியன். ஆசிரியர்,
மேல்மாந்தை.

திரு மாடசாமி, ஆசிரியர்,
வாதலக்கரை.

# அறிமுகம்

தமிழில் 'அகராதி' என்று ஒருவனைச் சுட்டிக்காட்டிச் சொன்னால் 'அதிகப்பிரசங்கி' அல்லது, மெத்தப் படித்தவன் என்று அர்த்தம்.

'அவனு அவன் பெரிய அகராதியில்லா' என்பது வட்டார வழக்கு. அந்த வட்டார வழக்கிற்கே ஓர் அருமையான அகராதியை உருவாக்கியுள்ளார் இடைசெவல் தந்த இலக்கியச் செல்வர்.

○

மிகப்பெரிய அகராதிகள் எல்லாம் தனி மனிதர்களால் உருவானவை அல்ல. பல்கலைக்கழகமோ அரசாங்கம் நியமித்த அறிஞர் குழுவோ தான் அகராதிகளை உருவாக்கியுள்ளன. பிரெஞ்சு அகராதியை உருவாக்குவதில் ஈடுபட்டது, ஓர் அறிஞர்குழு. அக்குழு 40 அறிஞர்கள் கொண்டது. அந்தப் பணியை முடிக்க அதற்கு 59ஆண்டுகள் (1635-1694) ஆனது; 51,000 சொற்கள் கொண்ட அகராதி உருவானது.

கைம்மாறுகருதாது, தம்மை வருத்திக் கொண்டு, இத்தகைய சாதனையை முதலில் நிகழ்த்திக் காட்டியவர் ஆங்கில மொழிக்கு அகராதி தந்த டாக்டர் சாமுவேல் ஜான்சன். இத்தனைக்கும் அவர் பல்கலைக் கழகத்துப் படிக்கட்டை மிதித்ததோடு சரி, பட்டதாரி ஆனவர் அல்லர். சேக்ஸ்பியருக்கு அறிமுகம், (Preface to Shakespeare) கவிஞர்களின் வாழ்க்கை (Lives of the Poets) முதலிய நூல்களை இயற்றியுள்ள போதிலும் ஆங்கில மொழிக்கு அவர் அளித்த அகராதி என்னும் அருங்கொடைக்காகவே அவர் ஆங்கிலேயர் நினைவில் நிறைந்து நிற்கின்றார்.

அவர் அளவில் அல்லது அவர் அன்றைக்கு வாழ்ந்து கொண்டிருந்த நிலையில் இருக்கக்கூடிய எவரும் அத்தகைய அருஞ்சாதனை புரிய முடியாது. ஒரு புத்தக வியாபாரியின் மைந்தரான அவர் எப்போதும் வறுமை

யில் வாடியவர். வறுமை மட்டுமா, பிணியும் அவரை வாட்டியது. ,பார்வையிலும் பழுது, நரம்புப்பிறழ்ச்சித் தொல்லேவேறு. இவை எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு பல்வேறு குழுக்கள் செய்த பணியைத், தாமே தனி ஒருவராக எட்டுஆண்டு (1747-1755) காலத்தில் செய்துமுடித்துஆங்கிலமொழிக்குப் பெருமை சேர்த்தார். பல்வேறு மொழிகளின் சொற்களேத் தன்னகத்தே கொண்ட அந்த மொழிக்குச் சொற்பிறப்பியல் (Etymology)கண்டு சொல்லி, சொற்பொருள் மாற்றம் (Semantics) நிகழ்ந்தவற்றுக்குச் சரியான பொருள்சுட்டி ஒவ்வொரு சொல்லுக்கும் விளக்கங்களும் மேற்கோள் களும் காட்டி அவ்வகராதியை அமைத்துக்கொடுத்தார்.

அதிலும் குறைகள் இல்லாமல் இல்லே. தம்முடைய சொந்த விருப்பு, வெறுப்புக்களை ஓரிரண்டு இடங்க ளில் அவர் காட்டாமல் இல்லே. அரசியல் என்பதற்கு 'அயோக்கியர்களின் கடைசிப் புகலிடம்' என்பார். அவருக்கு ஸ்காட்லாந்தியரைப் பிடிப்பதில்லே. அதனுல் 'ஓட்ஸ் என்பது இங்கிலாந்தில் குதிரையும், ஸ்காட்லாந் தில் மக்களும் உணவாகக் கொள்ளுவது' என்பார். கோவர் என்பது ஒரு பிரபுவின் பெயர். அச்சொல்லுக்கு ஒன்றிலிருந்து இன்னென்றுக்குத் தாவிச் செல்பவர் (Go-over அடிக்கடி கட்சி மாறுகிறவர்) என்று கேலி செய்திருக்கிருர்.

O

தமிழில் இதுவரை ஏறத்தாழ 200 அகராதிகள் வெளி வந்துள்ளன. அவற்றுள் ஜான்சனேப் போலத் தனி மனித முயற்சியில் வெளி வந்தனவும் அடங்கும்.

வீரமாமுனிவர்,பரபிரிசிரியசு,ராட்லர்,வின்சுலோ, யாழ்ப் பாணம் சந்திரசேகரபண்டிதர், யாழ்ப்பாணம் கதிரை வேற்பிள்ளே, ந சி. கந்தையாபிள்ளே,பன்மொழிப் புலவர் கா.அப்பாதுரையார்போன்ருேரதுஅகராதிகளும் அடங் கும்.விரிவான முதல்அகராதியை உருவாக்கியவர்யாழ்ப் பாணத்துச் சந்திரசேகரபண்டிதர்.இது 58,500 சொற் களேக் கொண்டது.ஆனுல் அகராதிகளுக்கெல்லாம் முன் ளுேடியாய் அமைந்தது சதுரகராதியே. பெயரகராதி. பொருள் அகராதி, தொகையகராதி, தொடையகராதி ஆகியநான்கும் அமைந்திருப்பதால் இப்பெயர் பெற்

றது. இதனை இயற்றிய வீரமாமுனிவரே ''வட்டார வழக்குத்தமிழ் அகராதி'' ஒன்றைத் தனியே வெளியிட்டுள்ளதாகத் தெரிகிறது.

இந்த வட்டார வழக்குச் சொல்லகராதியும் தனி மனித முயற்சியாகவே வெளிவருகிறது. அதாவது அரசாங்கம் நியமித்த எந்தக் குழுவோ பல்கலைக்கழகமோ இதைச்செய்யவில்லை. கி.ராஜநாராயணனும் அவரது நண்பர்கள் போத்தையா போன்றவர்களுமே இந்த அகராதியில் அடங்கியுள்ள சொற்களைத்திரட்டியவர்கள். அவற்றிற்கு அகராதி உருக் கொடுத்தவர் கி.ராஜநாராயணன்.

பெரும்புகழ் பெற்ற பின்னரும் கிராமத்திலேயே வாழ்ந்து கொண்டிருந்தவர் வி.ச. காண்டேகர்; அது போலவே தகழி சிவசங்கரன்பிள்ளை கேரளத்தில் கிராமத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பவர். அவர்களைப்போல் கிராமத்தில் வாழும் ராஜநாராயணனுக்கு நகரத்தின் ஆரவாரங்களில்நாட்டம் இல்லை; 'கிராமியம்'என்பதில் தான்ஆர்வம்அதிகம். அவரது எழுத்தோவியங்கள் எல்லாம் இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றன. வட்டார வழக்குச் சொல்லகராதியோ இதனை முற்ற முழுக்க மெய்ப்பிக்கிறது. இந்த அகராதியை ஒருமுறை படித்த பின்னர் நாமும் ஏன் ''சுத்தப் பட்டிக்காட்டானாக இருந்திருக்கக்கூடாது''என்று ஓர் ஆதங்கம் உண்டாகிறது.

○

எழுதப் படிக்கத் தெரியாத கிராம மக்களுக்கும் விவகார அறிவு(நடைமுறை அறிவு)அதிகம் என்பது இவ்வகராதி மூலம் தெரிகிறது.''இடசந்து''என்பதற்கு இரண்டு வீட்டுக்காரர்களும் ஆளுக்கு ஒன்றரை அடி போட்டுக் கட்டுவது என்றுபொருள் தந்திருக்கிறார் கி.ரா. இப்படிச்செய்ய இருவரில் ஒருவர் மறுக்கும்பொழுது விவகாரம் நீதிமன்றம் போகிறது. ''ஈரங்கி'' (Hearing)என்பதற்கு'' ஆர்கியூமெண்ட் வாய்தா'' என்று அவ்வளவு சரியாகப் பொருள் சொல்லியிருப்பதை நீதிமன்றம் சம்பந்தப்பட்டவர்களே நிச்சயம்மெச்சுவார்கள்.

அந்நிய ஆட்சியின்காரணமாக ஆங்கிலம் இங்கே ஒட்டிக் கொண்டது. படித்தவர்களிடம் ஆங்கிலம் ஆங்கிலமாகப்

புழங்கியது என்றால் கிராமவாசிகளிடம் அது தமிழான உடை பூண்டது. தமிழ்ச் சொல்போலவே ஆனது. Opinion, ஒப்பினியம் என்றும் Blank பிளாங்கி என்றும் Phonograph Box பூனைக்காரப் பெட்டி என்றும் ஓசைப்படாமல் உரு மாறியுள்ளன. இவை போன்றனவே பெண்டு (Bend) எடுத்திட்டான், மேஜர் (Major) ஆயிட்டாள் என்பனவும்.

வரலாற்றிற்கு உதவும் கல்வெட்டுக்களில் காணப்படும் சொற்களும் கிராமங்களிலேயே புழக்கத்தில் உள்ளன. 'எதிரா' என்பதற்கு இங்கு ''வரும் ஆண்டு'' எனும் பொருள் தரப்பட்டுள்ளது. சோழர் கல்வெட்டுக்களில் ''எதிராம் ஆண்டு'' என்ற சொற்றொடர் காணப்படு கிறது. யாழ் மக்களும் எதிராம் என்பதற்கு 'அடுத்து வரும்' என்னும் பொருளில் பயன்படுத்துகின்றனர். (இலங்கை வானொலியில் 'எதிர்வரும்' ஞாயிற்றுக்கிழமை இன்ன நிகழ்ச்சிநடைபெறும் என்று அறிவிக்கிறார்கள்.)

**o**

இந்த வட்டார வழக்குச் சொல்லகராதி நெல்லை—கரிசல் காட்டுப் பகுதியில் புழக்கத்தில் உள்ள சொற்களைக் கொண்டது. பிறபகுதிகளிலும் இத்தகைய சொற்கள் வழக்கில் உள்ளன. நெல்லையில் ''அக்குத் தொக்கு இல்லை'' என்றால் முகவையில் ''பிக்குப்பிடுங்கல் இல்லை'' என்பார்கள். நெல்லையில் அட்டமணியம் என்றால் முகவையில் மொட்டையதிகாரம் என்பார்கள். உசுப்பு என்பது எழுப்பு என்னும் பொருளில் இரண்டு பகுதி களிலும் புழக்கத்தில் உள்ளது. அதுஉயிர்ப்பு என்பதன் மரூஉ வாகலாம். 'உறங்குவதுபோலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும்பிறப்பு' என்ற குறட்கருத்தின் அடிப் படையில் உருவான சொல்லாயிருக்கலாம். ''மிராட்டிப் பய'' என்னும் வசைச் சொல்லுக்கு ஈடாக 'கொங் கணப்பய' என்று திட்டுவது குறிப்பிடப்படுகிறது. கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா—என்ற வரியையும் முகவைப் பகுதியில் ''கொங்காப்பயல்' என்று இன்றுவரை சொல்வதையும் ஒப்பிட்டுச் சுவைக்க லாம். 'காலம் இப்போது எவ்வளவோ மாறிவிட்டது, ஆனாலும் வசவுகள் அப்படியேதான் இருக்கின்றன' என்று ஆச்சரியப்படுகிறார் கி.ரா.

சிலசமயம் ஒருபொருளைச் சொன்னால் மட்டும் முழுமை பெற்றதாகக் கருதாவிடத்து, அதுஇன்ன பொருள்அல்ல

என்பதையும் இந்த அகராதி தெளிவுபடுத்துகிறது. அண்டங்காக்கையின் நிறத்தைக் கருப்பு என்று சொல்லி விட்டுவிடலாம். இன்னும் விளக்கிச் சொல்ல வேண்டு மானால் நனைந்த பனை போன்றது, வெள்ளை சிறிதும் கலவாக் கருப்பு அதன் நிறம் எனலாம். அதுபோல ''பத்தடி பத்தடியா'' என்பதற்கு ''அடுத்தடுத்து'' எனப் பொருள் சொல்வதோடு ''பத்தடி என்பது பத்து அடிகளைக் குறிப்பது அல்ல'' என்று பொருள் சொல்லும் Negative approach பாராட்டுக்குரியது. இந்த எதிர் மறை அணுகல் ஆழ்ந்த பொருள்காண உதவும்.

சில சமயங்களில் சொற்கள் எவ்வாறு சிதைந்து பொருள் கொள்ளப்படுகின்றன என்பதற்குப் பார்ப்பனர்கள்பயன் படுத்தும் நல்ல தமிழ்ச் சொற்களை சான்றாகக் காட்ட லாம்.'இல்' என்பதை 'அகம்' என்று இலக்கியம் குறிப் பிடுகிறது. 'அகத்திற்குப் போகிறேன்' என்று சொல் வதை 'ஆத்துக்குப் போகிறேன்' என்று சொல்லிச் சிதைத்துவிடுகின்றனர். அதுபோல்தான் அம்மாஞ்சி என்பதும். அம்மாஞ்சி என்றால் ஒன்றும் தெரியாதவன் 'சுத்த அம்மாஞ்சி' என வழக்கில் உள்ளதை இந்த அக ராதி சுட்டிக் காட்டுகிறது.

உண்மையில் அது அழகான, அர்த்தமுள்ள தமிழ்ச் சொல். அம்மாவின் உடன்பிறந்தார் அம்மான். ''அம்மான் சேய்'' மாமன் மகன் என்பதன் மரூஉ. (ரா ராகவையங்கார் தம் மாமன் மகன் மு.இராகவை யங்காரை அம்மான் சேய் என்று குறிப்பிடுவார்)

'எவர்ணமான சிறை' என்பதற்கு யௌவனமான பேரழகி என்றுபொருள் காணும்போது இன்பமாக இருக் கிறது. சிறை வைத்துப் பாதுகாக்க வேண்டிய அழகு என்பதற்காகச் சிறை என்று கிராமத்தார் குறிப்பிட்டிருக் கலாம். கர்ப்பிணியைக் குறிப்பிட 'ஈருசுரு' என்பதும் பொருள் பொதிந்த சொல் அல்லவா? சொலவம் என்று பழமொழியையும் நாட்டார் பாடல்என்று 'நாட்டுப் பாடலையும் குறிப்பிடுகிறார் கி.ரா. இது பிறபகுதிகளில் அறியப்படாததாக இருக்கலாம். அகராதியைத் தொடர்ந்து பயிலும்போது புரியும்.

நம் பாட்டியார், தாயார் காலத்து நகைகள் இன்று இல்லை. அவற்றின் பெயர்களை இந்த அகராதிமூலம்

அறிந்து கொள்ள முடிகிறது. கிராமத்து அணிகலன் களையும் வங்கி(குத்துவாள்)தரங்கு (வேல்கம்பு) போன்ற ஆயுதங்களையும் கண்டுகொள்ள முடிகிறது.

கால்நடை பராமரிப்புத் துறையினருக்குக்கூட இந்த அளவு தெரியுமோ என்னவோ ...கி.ராவும் போத்தை யாவும் மாடுகளைப்பற்றி எவ்வளவு தெரிந்து வைத்திருக் கிறார்கள். மாடுகளில் இத்தனை நிறங்களா, இத்தனை நோய்களா, இன்னின்னவை ஆகாதவையா ... ...அறிய அறிய நாம் ஆச்சரியப்படுகிறோம்.

அகராதிகளில் விளக்கமான சொற்றொடர்களில் பொருள் தரப்படுவதில்லை. பொருளை விளக்கும் மேற் கோள்கள் (Illustrative idioms) கொடுக்கப்பெறுவ தில்லை. இக்குறை இதில் இல்லை.

ஒவ்வொரு சொல்லுக்கும் தேவையானபோது விளக் கமோ ஒரு பழமொழியோ கதையோ தரப்படுகிறது. ''அத்தர்பானஸ்கோல்'' என்பதற்குத் தந்திருக்கும் கதைபோல ''அத்திரிபாச்சா கொழுக்கட்டை'' என்று ஒருகதை முகவைப் பகுயில் உண்டு.

கொட்டை நூற்றல் என்பதற்கு 'நூல் நூற்றல்' என்ற பொருள் சொல்லிஅதனோடு''கப்பல்ஓடிக்கெட்ட குடியை கொட்டை நூத்துத்தேத்தப் போறாராக்கும்'' என்ற பழ மொழி இணைத்துக் காட்டப்படுகிறது. கப்பல் விட்ட பண்டை நாட்டவர் வழிவந்தவர் நாம் என்ற வரலாற்று உண்மையைப் பறைசாற்றும் பழமொழி அல்லவா இது? நாடகக்கலைஞன் கலை அரங்கில் மக்கள் தொகையையும் கூலிவேலை செய்பவன் சூரியன் விழும் வேளையையும் கணக்கிடுவதில் கருத்தாயிருப்பதை கிராம மக்கள் கேலி செய்து சொல்வதைப் படம் பிடித்துக்காட்டும் பழமொழி, ''கூத்தாடிக்குக் கீழே கண்; கூலிக்காரனுக்கு மேலே கண்''என்பது. இத்தகைய பழமொழிகள் பல பிற் சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளன. பழமொழிகளைப் போலவே நல்ல பழங்கதைகளை கி. ரா. நடுநடுவே கூறு கிறார். ''வாயுள்ள பிள்ளை பிழைக்கும்'' என்பதற்கு இவர் தந்திருக்கும் தெனாலிராமன் கதை சுவையானது. இன்னும் பெண்களுக்குள் தனியாகப் பேசிக்கொள்ளும் சுவையான பேச்சுக்கள் எல்லாம் இவர் எழுத்தில்

உருவம் பெற்றுள்ளன. ஆக, பொருட்சுவை தர வந்த அகராதியில் அகச்சுவையும் உண்டு.

○

''தனி'' என்பதைத் ''தனீ'' என்று நீட்டும்போது உச்சரிப்பின் மூலம் தனித்தன்மையான பொருள் காண்பவர் கி. ரா. அவருடைய இந்த எழுத்துருப்பெற்ற பேச்சுத் தமிழ் அகராதியும் தனீ அகராதிதான்.

''பெரிய என்பதைப் ''பெரிய்ய'' என்று குறிப்பிட்டு அந்தச் சொல்லுக்குக் காட்சிரூபம் தருபவர் கி.ரா. அவருடைய இந்த அகராதி பெரிய்ய சாதனை தான்.

பல்கலைக்கழகப் பட்டம் பெறாத ஜான்சனுக்கு ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் அளித்தது— அவருடைய அகராதிக்காக; அரிய சாதனைக்காக ... ...

தற்போது தமிழ்நாட்டில் பல்கலைக்கழகங்களின் எண்ணிக்கை உயர்ந்துள்ளது. கி.ரா.வுக்கு எந்தப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் அளிப்பதில் முந்திக் கொள்கிறது என்று பார்ப்போம்.

மீரா
31—12—82

# முன்னுரை

இதைத் ''தமிழ்நாடு வட்டாரவழக்குச் சொல்லகராதி'' என்று சொல்லமுடியாது.

தமிழகம் பூராத்தையும் உள்ளடக்கிய—இன்னும் தமிழ் உலகம் பூராவும் உள்ளடக்கிய—ஒரு பூரண வட்டாரவழக்குச்சொல்லகராதி தமிழில் இனிமேல்த்தான் வரவேணும். அதுக்கு இதை முன்னோடி என்று வேணுமானால்க் கொள்ளலாம். அப்படி ஒரு மாபெரும் காரியம் செய்ய என்ஒருத்தனால்மட்டும் முடியாது.

இந்த அகராதிக்கான சொற்களைச் சேகரம்செய்து முடித்து, ஐந்துவருசங்கள் மூலையிலேயே தூங்கிக்கொண்டிருந்தது. இதை அகரவரிசைப்படுத்தி முடிக்க என்னாலும் முடியலை; எனக்கு வேண்டியவர்களாலும் செய்துகொடுக்கமுடியலை. இந்தச் சள்ளைபிடிச்ச வேலையை, ஒரு ''சிறுபையன்'' நாஞ்சி என்று செய்துதர முன்வந்தார்.

ஒருநாள் மத்தியானம், கோவில்பட்டியில் மூடிய ஒருகடையின் நடைவாசலில் அப்பாட என்று உட்கார்ந்திருந்தேன். தற்செயலாக அந்தப்பக்கம்வந்த ''மாரீஸ்'' என்பக்கம் வந்து பேச்சுத்துணைக்கு உட்கார்ந்தார்.

பலவிஷயங்கள் பேச்சில்வந்த போது, இப்படிக்கஷ்டப்பட்டுசேகரிக்கப்பட்ட இந்தச்சொற்கள்,ஒரு அகரவரிசைப் படுத்தநாதியில்லாமல்க் கிடக்கிறது என்றுசொல்லி வருத்தப்பட்டேன்.''அதுஒண்ணும் கஷ்டமில்லெ; நான்செய்து தாரேன்''என்றார். எத்தனையோ பேர் இப்படிச் சொல்லி, செய்யாமல் இருந்தாலும் இதையும் நம்பினேன்.

நினைக்கவே ஆச்சர்யமாக இருக்கு இப்பவும்; தனது இரு சகாக்களுடன் ஒருநாள்க்காலை இடைசெவலுக்கே வந்துவிட்டார் மாரீஸ். இவர்கள் மூவரும் இப்போதுதான்

படித்து முடித்த, பட்டதாரிகள். S·மாரீஸ்வரன், B.com., R.முருகன்.B.A., கே.உதயசங்கர்.B.Sc.,

ஒரு வாரத்தில் ஒரு தற்காலவேலை கிடைத்ததால் உதயசங்கரும், அதன்பிறகு ஒருவாரம் கழித்து முருகனும் போனபிறகும், இரண்டு மாசங்கள் தொடர்ந்து என்னோடு இந்த வேலையைச்செய்து முடித்துத் தந்தார் அன்பர் மாரீஸ்.

எழுதும் வேலைகள் மட்டுமல்ல, இதற்காகப் படங்களும் வரைந்துதந்தார், போட்டோவும் எடுத்து உதவினார். இவைகளெல்லாம் அவர் காலத்தினால் செய்த உதவிகள். இப்படியெல்லாம் மாரீஸ்மட்டும் எனக்குச் செய்து தந்திராவிட்டால் இப்போது இப்படி ஒரு புத்தகத்தைப் பார்க்கமுடியாது.

ஐந்தாறு வருசங்களுக்கு முன்னால் மதுரை பாத்திமாக் கல்லூரி மாணவிகளுக்கு மத்தியில் நான் பேசிக் கொண்டிருந்த போது அவர்களுடைய கேள்விகள் என்னை, ஒரு ''கரிசல் வட்டார வழக்குச் சொல்லகராதி'' யைத்தயாரிக்க வேண்டும் என்கிற உந்துதலை ஏற்படுத்தியது. அதோடு வெளிநாடுகளில்த் தமிழ் கற்கும் அந்நியமொழி மாணவர்களுக்கும் இது உபயோகப்படுமே என்று முக்கியமாகப் பட்டது.

திரு ப.கங்கைகொண்டான் அவர்கள்தனது,''சாதனை'' பத்திரிகையில் இந்த சேகரிப்பில்க்கொஞ்சம் வெளியிட்ட போது சிலநண்பர்கள், இதிலுள்ள சில வார்த்தைகள் கரிசல் வட்டாரத்தில் மட்டும்புழங்குபவை அல்ல என்று எனக்குச் சுட்டிக்காட்டினார்கள். ''அதுக்குநான் என்னசெய்ய; எங்கள் வட்டாரத்தில் வழக்குச் சொல்லாக அது இருக்கே!'' என்று சொன்னேன்.

தமிழிலுள்ள அனைத்து வட்டாரச் சொற்களும் சேகரிக்கப்பட்டு ஒருநல்ல''வட்டார வழக்குச் சொல்லகராதி'' ஒருகாலத்தில்வெளிவரத்தான் போகிறது. இந்தக்காரியத்தைநமது அண்டை வீட்டாரான மலையாளிகள், கன்னடர், தெலுங்

கர்கள் எப்பவோ செய்து முடித்துவிட்டார்கள் என்று நான் கேள்விப்படுகிறேன்.

'இலக்கியமல்லாத' இந்தக்காரியத்தை நான்முனைந்து செய்ய வேண்டும் என்று இருந்திருக்கும் போலிருக்கிறது. முன் மாதரிக்குக்கூட எனக்குப் பார்க்க ஒன்றும் கிடைக்க வில்லை.

இங்கிலீஷ் மொழிதெரிந்த பலரைஅணுகி, இங்கிலீஷில் வெளி வந்திருக்கும் வட்டார வழக்குச் சொல்லகராதியைப் பார்த்திருக்கிறீர்களா; எப்படி இருக்கும் அது? என்று கேட்டபோது அவர்கள் கையைவிரித்தது ஏமாற்றமாக இருந்தது எனக்கு. ஒருவேளை அப்பேர்ப்பட்டவர்களைப் பார்த்து நான் கேட்கவில்லை போலும்; இந்த குக்கிராமம் அப்படிஒரு வசங்கெட்ட இடத்தில்வந்து அமைந்து கொண்டது. ஆகவே எனக்குத் தெரிந்தவிதத்தில் இதை அமைத்திருக்கிறேன். எனக்குத் தெரிந்தது இவ்வளவு தான்.

சில வார்த்தைகளுக்கு எவ்வளவு விளக்கம் சொன்னாலும் வாசகர்கள் மனசில்ப்பதியாது. இயற்கை நிறத்தில்ப் படம் பிடிக்கும் வண்ணக்கேமரா கொண்டு படம் எடுத்து இந்த அகராதியில்ச் சேர்த்தால் எப்படி இருக்கும் என்று நினைத்துப் பெருமூச்சு விட்டிருக்கிறேன்.

ஆரல் என்கிற வார்த்தைக்கு, வீட்டைச்சுற்றி எழுப்பப்பட்ட மண் காம்பவுண்ட் சுவர் மழைக்கு நனையாமல் இருக்க அந்தச்சுவரின் தலையில்நெடுக ஒரு சின்னக்கூரை வேய்வது. ஆரல் வார்த்தைக்குப் பக்கத்தில் அதன் சிறிய போட்டோப் படத்தையும் பிரசுரித்தால் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்து மகிழ்கிறேன்!

## வட்டார வழக்குச் சொல் என்றால் என்ன?

இருமல் என்கிற வார்த்தையை எல்லாத் தமிழர்களும்

அறிவார்கள். தொறத்தல் என்று சொன்னாலும் இருமல் தான் என்பது பல பகுதித் தமிழ் மக்களுக்குத் தெரியாது. இப்படிக்குறிப்பிட்ட ஒரு வார்த்தை ஒரு குறிப்பிட்ட அர்த்தத்தில் ஒரு குறிப்பிட்டவட்டாரத்தில்ப் புழக்கத்தில் இருக்குமானால் அதைத்தான் வட்டார வழக்குச் சொல் என்று சொல்லுகிறது.

''நெஞ்சுத் தடுமம் பிடிச்சிப் புகைச்சல் அகோரமாயிப் பழுப்பு விழுது''

என்று ஒருத்தர் சொன்னால் புரிகிறவர்களுக்குத்தான் புரியும். புகைச்சல் என்றும் இருமலுக்குச் சொல்லுகிறார்கள். பழுப்பு என்பது சளி; இதை நான் முதலில் நாஞ்சில்நாட்டில்த்தான் கேள்விப்பட்டேன்.

இப்படி கொங்குநாட்டுத் தமிழ், சோழ தேசத்துத் தமிழ், திருநெவேலிச்சீமைத் தமிழ், கரிசல்க் காட்டுத் தமிழ் என்று அனேகம் இருக்கிறது. அவ்வளவு தமிழும், நம் தமிழ் அன்னை அணிந்துள்ள பல்வேறுவகை ஆபரணங்களே.

தூக்குறது என்ற வார்த்தையைக் கேட்டதும் அதிர்ந்து போனார் ஒருத்தர்!

''அதுதானேய்யா பெருக்கிறது, கூட்றது, எல்லாம்'' என்றேன்.

இங்கே சிரட்டை என்பது தஞ்சையிலே கொட்டாங்கச்சி. இங்கே நிறைய்யப்பணம் என்று சொல்லுவதை நாஞ்சில் நாட்டில் பயங்கரப் பணம் என்று சொல்லுகிறார்கள்.

இந்தச் சேகரிப்பில் சொற்களோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் பிரயோகங்களையும் சேர்த்திருக்கிறேன்; சில நேர் சொற்களும் உண்டு. நேர் சொற்களுக்கு உதாரணம் சிட்டம். செங்கல்க்காளவாசலில் அளவுக்கு மீறிய உஷ்ணம் ஏற்படும்போது மண் உருகி செங்கல்கள் பல சேர்ந்து ஒட்டிக்கொண்டுவிடும்; பிரிக்க முடியாத, உருகி இறுகிய உலோகம்போல். இதுக்கு சிட்டம் கட்டிவிட்டது என்று சொல்லுகிறது.

மக்கள்பேச்சில் பிரயோகங்கள் சர்வசாதாரணமாகவந்துவிழும். இதையெல்லாம் கவனித்து அனுபவிப்பவர்களுக்குத்தான் தெரியும். ''ஓம் புளிப்பையும் பாத்துருவோம்'' என்று சொல்லுகிறார் ஒருத்தர். இவரைப் பார்த்து அவன் ஒரு சபதம் போடுகிறான் அல்லது சவால் விடுகிறான்; அதனுடைய தாத்பரியம் ஒனக்கு நான் இந்தக் கெடுதியைச் செய்கிறேனா இல்லையா என்று பார் என்பதே. அதற்கு இவர் சொல்லும் பதில் ஓஹோ அப்பிடியா; ஒனக்குத் திறம் இருந்தால்ச் செய்து பார், அல்லது எங்கே நீ அதை நிறைவேற்றுதல் செய் பார்ப்போம் என்று சவாலை ஏற்றுக்கொண்டு சொல்லுவதே ''ஓம் புளிப்பையும் பாத்துருவோம்'' (அந்த விஷயத்தில் உன்னுடைய 'சாமர்த்தியம்' எப்படி என்றுதான் பார்த்துவிடுவோமே என்பது)

இன்னும் சிலபிரயோகங்கள் அந்தந்தச்சமயத்தில் சொலவடையாகவே அல்லது அதுபோலவே இருக்கும். பாமரர் பேசுகிற மொழியழகு ஏட்டுத் தமிழில்ப் பார்க்கமுடியாது; ஏட்டில் இயல்பு கிடையாது; அது மணமும் இயற்கை அழகுமில்லாத வெறும் காகிதப் பூ.

மக்கள் சொலவடையை சொலவம் என்றே குறிப்பிடுகிறார்கள். ''என்னமோ சொலவம் சொன்னாப்லெ இருக்கே.....'' என்று சொல்லிவிட்டு ஒரு சொலவடையை மேற்கோள் போல்ச் சொல்லுவார்கள்.

ஆகவே நானும் சொலவடைகளை சொலவம் என்றே குறிப்பிடுகிறேன்.

நாட்டார் பாடல் என்பதும் தெரிந்ததே. இதற்கு இங்கே ''காட்டுப்பாடல்'' என்று பேர். இதை ஊருக்குள்ப் பாடக்கூடாது என்றும் ஒரு கொள்கை வைத்திருக்கிறார்கள்!

நான் மட்டும் வட்டார வழக்குச் சொற்கள் சேகரிக்க ஆரம்பித்தபோது அது கிடைக்கும் அளவைப் பார்த்து அடேயப்பா எவ்வளவு சொற்கள் சேகரித்துவிட்டோம் என்று பெருமைப்பட்டுக்கொண்டேன். என்னைப்போல் யாருமே

சேகரிக்க முடியாது என்று பூரித்துப்போனேன். ஆனால் தங்கம்மாள்புரத்திலிருந்து எனது பிரிய நண்பர் போத்தையா அனுப்பியதைப் பார்த்து மலைத்துப்போனேன்.

இந்த இடத்தில் நண்பர் S. S. போத்தையா பற்றி நாலு வார்த்தைகள் சொல்லவேண்டும். தமிழுக்குக் கிடைத்த அரும் தொண்டர் இவர். இவருடைய சேகரிப்புகள் நா. வானமாமலைக்கு எப்படி உபயோகப்பட்டதோ அதைப்போல, அதிகப்படியே எனக்கு உபயோகப்பட்டிருக்கிறது இதில். எவ்வளவு பாராட்டினாலும் தகும் இவரை. கோபுரத்துக்குக் கீழே — தரைக்குக் கீழே — உள்ள அஸ்திவாரக் கற்களை யார் நினைவு கூர்வார்கள்?

நண்பர் பூமணியும் தனது ''அணில் உதவி''யை வார்த்தைகள் சேகரித்துக் கொடுத்ததின் மூலம் நிறைவேற்றியுள்ளார். இவருக்கும் நான் நன்றி சொல்லணும்.

ஐந்து வருஷங்களாக ஊறுகாய்ப்பானையில் கிடந்த இந்த ''வட்டார வழக்குச்சொல்லகராதி''யை 'அன்னம்' புத்தகமாகக் கொண்டுவர சந்தோஷமாக முன்வந்திருக்கிறது. இதுக்கெல்லாம் சூத்ரதாரியான அந்த உண்மைத் தமிழ்ப் பேராசிரியரை எப்படிப் பாராட்டுகிறது என்றுதான் தெரியலை எனக்கு.

இதில் நான் புரிந்துள்ள தவறுகளையெல்லாம் தமிழ்ப் பெரியார்கள் மன்னிப்பார்களாக.

''அறையும் ஆடரங்-
 கும்படப், பிள்ளைகள்
தரையில்க் கீறிடில்த்
 தச்சரும் காய்வரோ...''

''ராஜபவனம்''
இடைசெவல்—627 716

கி. ராஜநாராயணன்

# செட்டிநாட்டு வட்டார வழக்குச் சொல்லகராதி


தொகுப்பாசிரியர்

**பழநியப்பா சுப்பிரமணியன்**




பொருளடக்கம்

## வட்டார வழக்கு அகராதிகள்: பதிவுக்காலம்

*- பெருமாள் முருகன்*

கி. *ராஜநாராயணனின் 'வட்டார வழக்குச் சொல்லகராதி' 1981 இல் வெளியானபோது அதற்கு விற்பனை மதிப்பு அவ்வளவாக இல்லை. கிட்டத்தட்ட பத்தாண்டுகளுக்கும் மேலாக அது விற்பனையில் இருந்தது. அப்போது அவ்வகராதிக்குப் பெருமளவில் ஏற்பு இருந்ததாகவும் சொல்லமுடியாது. மொழியியல், அகராதியியல் பற்றிய கவனம் பரவலாக உண்டாகியிருந்த காலம். அவற்றிற்கான துறைகள் பல்கலைக் கழகங்களில் அமைக்கப் பெற்ற சூழல். ஒரு கொண்டாட்ட நிகழ்வாக கி.ராவின் அகராதி வரவு அமைந்திருக்க வேண்டும். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. 1988 இல் கி.ரா. அகராதியை மையமிட்டுத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கருத்தரங்கு ஒன்று நடைபெற்றதாகவும் அதில் நான்கு கட்டுரைகள் வாசிக்கப்பட்டதாகவும் தெரிகிறது. அக்கருத்தரங்கில் கலந்துகொண்ட கி.ரா. கருத்து எதுவுமே கூறாமல் சென்றுவிட்டார் என்று ஆதங்கத்தோடு சு. ராஜாராம் இப்போது எழுதுகிறார். (நாஞ்சில் வட்டார வழக்குச் சொல்லகராதி, முன்னுரை)*

*வழிகாட்டுதல் இன்றி மிகுந்த சிரமத்தோடு தயாரிக்கப்பட்ட அவ்வகராதி, கருத்தரங்க உரையாளர்களால் எவ்வாறு எதிர்கொள்ளப்பட்டது என்று தெரியவில்லை. கி.ரா. அகராதியை மேம்படுத்த, அவரோடு இணைந்து மொழியியல், அகராதியியல் அறிஞர்கள் செயல்படுவதற்கான திட்டம் எதுவும் முன்வைக்கப்பட்டதா, அப்படி ஒரு திட்டத்தை உருவாக்க ஆலோசனையாவது நடைபெற்றதா என்பதும் தெரியவில்லை. இத்தகைய வேலைகளில் ஈடுபடுவோர்க்கு ஏற்படும் பொருளாதாரச் சுமையைப் பகிர்ந்துகொள்ளவோ உதவியாளர் இல்லாமை, ஆலோசனை வழங்குநர் இன்மை முதலியவற்றை நிவர்த்தி செய்யவோ நம் நிறுவனங்கள், நிறுவனம் சார்ந்தோரிடையே எத்தகைய திட்டங்களும் எப்போதும் இருந்ததில்லை. கிடைக்கும் நிதியுதவிகளைத் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ளப் போட்டி போடுவதைத் தவிர உருப்படியான செயல் திட்டம் இல்லை.*

*நிறுவனங்களின் நிலையில் மாற்றம் எதுவும் வரவில்லை எனினும் காலச்சூழல் மாறியிருக்கிறது. கி. ராவுக்குப் பின் இருபதாண்டுகள் கழித்துக் 'கொங்கு வட்டாரச் சொல்லகராதி'யை நான் வெளியிட்டேன்.*

ஓராண்டுக்குள் படிகள் விற்றுத் தீர்ந்தன. நூலக ஆணைக்கு முழுமையான அளவில் படிகள் வழங்க இயலாத நிலை ஏற்பட்டது. குறிப்பிட்டுச் சொல்லத்தக்க மதிப்புரைகள் இதழ்களில் வெளியாயின. வாசகர்களிடை யேயும் அறிஞர்களிடையேயும் நல்ல வரவேற்பு கிடைத்தது. கொங்கு வட்டாரப் புதினங்களை வாசிப்போர் அகராதியைப் பயன்படுத்திப் பலன்பெற்ற செய்திகள் எனக்கு வந்தன. பார்வை நூலாகவும் தரவு நூலாக வும் அதன் பயன்பாடு மிகுதிப்பட்டது. கி.ரா.அகராதி விற்பனை ஆக வில்லை என்பதால் பதிப்பகங்கள் கைவிரித்துவிட்ட நிலையில் அச்சத் துடன் வெளியிட்ட இந்த அகராதி, எதிர்பாராத வகையில் கவனம் பெற்றது.

இந்தக் கவனத்தின்பின் வட்டார வழக்கு அகராதிகளின் நல்ல காலம் உருவாயிற்று என்று சொல்லலாம். இப்போது நாஞ்சில் வட்டார வழக்குச் சொல்லகராதி (அ.கா.பெருமாள்),நெல்லை வட்டார வழக்குச் சொல்லகராதி(ப.முருகையா) ஆகியவை வெளியாகி உள்ளன. கொங்குப் பகுதிக்கே கொங்கு நாட்டுத் தமிழ் (புலவர் மணியன்), கோவை மாவட்ட வழக்குச் சொல் அகராதி (ச.மகாலட்சுமி) ஆகியவை உருவாகியுள்ளன. வேறு சில பகுதிகளுக்கான அகராதிகளும் தயாராகிவரும் செய்திகள் கிடைக்கின்றன.

இவ்வகை அகராதிகள் அனைத்தும் தனிநபர்களின் ஆர்வத்தையும் உழைப்பையும் அடிப்படையாகக் கொண்டே உருவாகின்றன. ஆகவே இவற்றில் பல குறைபாடுகள் இருப்பது இயல்பு. பெரும் அறிஞர் குழுவைக் கொண்டு பல்லாண்டுகள் உழைத்து மிகுந்த பொருட்செலவில் உருவான தமிழ் லெக்சிகன் போன்றவற்றிலேயே பல குறைபாடுகள் உள்ளன என்னும்போது தனிநபரின் செயல்பாட்டில் வடிவம் பெறும் அகராதிகளில் குறைபாடுகள் இருப்பது இயல்பு.

அகராதி ஆசிரியர் தன் புழங்கு எல்லைக்கு உட்பட்ட சொற் களையே சேகரிக்க முடியும். பிறர் உதவினாலும் அவற்றின் அளவு வெகு குறைவாகவே அமையும். ஆகவே கள ஆய்வின் போதாமை இவ்வகராதி களுக்கு இருக்கும். மக்களின் வாழ்க்கைமுறை முற்றாக மாறிவிட்ட சூழலில் பழைய சொற்களை நினைவுகூறும் நபர்களைக் கண்டடைய முடியாமலே போகலாம். மண்பாண்டங்களே முழுமையாகப் பயன் பாட்டில் இருந்த காலத்தில், இறைச்சி சமைப்பதற்கெனத் தனிப்பாண்டம் கொங்குப் பகுதியில் வைத்திருந்தனர். அதனை வீட்டுக்கு வெளியே பாதுகாப்பான இடத்தில் கவிழ்த்து வைத்துவிடுவர். தேவைப்படும் நாளன்று மட்டும் எடுத்துக் கழுவிப் பயன்படுத்துவர். அதற்குப் 'பெராலச்சட்டி' என்று பெயர். இன்று இந்தப் பழக்கம் இல்லை, மண் பாண்டமும் இல்லை. சொல் வழக்கு வயதான சிலரின் நினைவில் மட்டு மிருக்கிறது. இத்தகையவற்றை பொருளாதாரப் பின்புலம் இல்லாத தனிநபரின் களஆய்வு மூலம் திரட்டுதல் அரிது. வட்டாரப் புதினங்கள்

உள்ளிட்ட எழுத்துச் சான்றுகளை மிகுதியும் மையமிட்டதாக இவ்வக ராதிகள் அமைவதன் காரணம் அதுதான்.

வட்டாரச் சொல்லகராதிகளில் பொதுச்சொற்கள் நிறைய இடம் பெறுகின்றன என்பதும் ஒரு குறை. ஏற்கெனவே பயன்பாட்டில் இருந்து வரும் பொதுஅகராதிகளோடு ஒப்பிட்டுப் பார்த்துத் தம் அகராதியின் சொல்பதிவுகளைத் தேர்வு செய்துகொள்ளும் பயிற்சியும் அதற்கான வழிகாட்டுதல்களும் இல்லாமை முக்கியமான காரணம். பேச்சு வழக்கு, வாட்டார வழக்கு இரண்டுக்கும் உள்ள வேறுபாடுகள் பிடிபடாமையும் காரணம். பொதுச்சொல், உச்சரிப்பில் முற்றிலுமாகத் திரிந்து வேறு சொல் போலத் தோற்றம் கொண்டிருந்தால் மட்டும் அதனை வட்டார வழக்காகக் கொள்ளலாம். மற்றபடி பொதுச்சொல்லின் பேச்சு வடிவம் வட்டார வழக்காகாது. இத்தகைய நுட்பங்கள் இவ்வகை அகராதி ஆசிரியர்களுக்கு இன்னும் வாய்க்கவில்லை.

இந்த அகராதிகள் அனைத்தும் ஒரே வகையான நெறிமுறைகளைப் பின்பற்றி அமைக்கப்பெறவில்லை என்பது முக்கியமான குறைபாடு. தலைச்சொல் வடிவங்களைத் தேர்வு செய்வதிலேயே பல்வேறு குழப் பங்கள். ஒவ்வொரு அகராதி ஆசிரியரும் அவரவர் மனதுக்குட்பட்ட முறையில் தேர்வு செய்து கொண்டுள்ளனர். பொது நெறிமுறை அமைய வில்லை. இது பயன்பாட்டாளருக்குச் சிரமம் தரக்கூடியது. ஒவ்வோர் அகராதியைப் பயன்படுத்துவதற்கும் ஒவ்வொரு நெறிமுறையை அறிந்து கொள்ள வேண்டும் என்பது தேவையற்ற பளுவைச் சுமத்துவதுதான்.

இப்படி இவ்வகை அகராதிகளில் ஏராளமான குறைபாடுகள் உள்ளன. குறைபாடுகள் அகராதிகளின் பெருக்கத்தைத் தடுத்துவிடா. இந்தத் துறையைப் பொறுத்தவரை அகராதிகளின் பெருக்கம் மிகமிகத் தான் குறைபாடுகள் குறைந்துபோகும். ஒப்பீடுகள் உருவாக செம்மைப் படும். வாசகப் பயன்பாடு இவை எப்படி அமைய வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் ஆற்றலாக விளங்கும். ஆகவே குறைபாடுகளுடன் இவ் வகராதிகளின் பெருக்கம் ஏற்படுவது நல்லது.

சொற்கள் பதிவுபெறுகின்றன என்பது முக்கியம். வட்டார வழக்கு அகராதிகளின் இப்போதைய இயல்பைப் 'பதிவுக்காலம்' என்று வரை யறுக்கலாம். சமூக வாழ்கையின் பழைய மாதிரி முடிந்துபோய்க் கொண்டிருக்கிறது. முற்றிலும் வேறான வாழ்க்கை முறை எல்லா மட்டத் திலும் வியாபிக்கிறது. இந்த அந்திமத் தருணத்தை விட்டுவிட்டால் வட்டாரச் சொற்கள் என்னும் பெரும் சொத்தை இழக்க நேரும். எல்லா வகைக் குறைகளோடும் இந்த அகராதிகளின் சொல்பதிவுகளை வரவேற்க வேண்டும். பின்னர் பொறுமையாகத் தூசு துடைத்து மாசகற்றி நாம் வேண்டுமிடத்தில் வைத்துக்கொள்ளலாம்.

இவ்வகை அகராதி வேலைகளில் ஈடுபடுவோர் பெரும்பாலும்

தம் வட்டாரத்தின்மீது ஈர்ப்பு கொண்ட படைப்பாளிகளாகவும் நாட்டுப் புறவியல் ஆய்வுகளில் கவனம் கொண்டவர்களாகவும் உள்ளனர் என்பதையும் நாம் கருதிப் பார்க்கவேண்டும். சுய உந்துதல் காரணமாக இவ்வேலையை அவர்கள் எடுத்துக் கொள்கின்றனர். யாராவது பாடு பட்டு உருவாக்கி வைத்த மூலத்தைப் பற்றிப் பேசியே பொழுதை ஓட்டு வோர், சுயமாக ஒன்றையும் உருவாக்குவதில்லை. கடனுக்காக, ஊதியத் திற்காக, வருமானம் தரும் ஆய்வுத்திட்டத்திற்காக இந்தப் பணியை எடுத்துக்கொள்வோரைவிடவும் ஆத்மார்த்தமாகத் தம்மை ஒப்படைத்துச் செய்வோர் சுய ஆர்வத்தை அடிப்படையாகக் கொண்டவர்கள்தான்.

வட்டார அகராதிகள் உருவானால் மட்டும் போதாது. அவற்றை மக்களின் அன்றாடப் பயன்பாட்டுக்கானதாக மாற்ற வேண்டும். அகராதி கள் 'நோக்கு நூல்கள்' என்னும் கௌரவத்தைப் பெறுபவைதான் எனினும் வட்டார அகராதிகள் சமகால இலக்கியத்தோடு தொடர்பு கொண்டவை என்பது முக்கியம். சமகால இலக்கியத்தில் வாசகர் சங்கடத்திற்குள்ளாகும் இடம், வாசிப்பைத் சற்றே முடக்கும் பகுதி என்று சொன்னால் அது வட்டார வழக்குச் சொற்களாகவே இருக்கும். ஆர்.சண்முகசுந்தரத்தின் கொங்கு வழக்கு நடை, பிற பகுதிக்காரர்களுக்குப் புரிவதில் சிரமம் உண்டு. சிறு உதாரணம்:

நாச்சக்காளுக்கு 'நிறை' மாதம். வழக்கமாகச் சாரதாம்பாளிடம் 'காட்டுக் கொட்டை' வாங்கி விளக்கெண்ணெய் ஊற்றுவா. கடைகண்ணி களில் நல்ல விளக்கெண்ணெயா கிடைக்கிறது. சந்தை சாரியில் கொட்டைமுத்து வாங்கினால் 'தும்பு துசுறு' இருக்கும். (விரிந்த மலர்,ப.78)

மூன்று தொடர்கள் உடைய இப்பகுதியில், நிறைமாதம், காட்டுக் கொட்டை, கடைகண்ணி, சந்தைசாரி,கொட்டைமுத்து, தும்பு துசுறு ஆகிய வட்டார வழக்குகள். பெயர்களும் இணைச்சொற்களும் நிறைந்த இந்த எழுத்து, பிற பகுதி வாசகர்களுக்குத் தடுமாற்றம் ஏற்படுத்தும். கொங்குப் பகுதியிலேயே நகர்ப்புற வாசகர்களுக்கு அவரது தொனியை விளங்கிக்கொள்வது கஷ்டம். இந்தச் சந்தர்ப்பத்தில் வட்டார வழக்கு அகராதி துணைபுரியும். ஆர்.சண்முகசுந்தரம் மட்டுமல்ல, தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளைச் சேர்ந்த எழுத்தாளர்களின் படைப்புகளை முழுமையாக உள்வாங்கிக்கொள்ள அந்தந்த வட்டார அகராதிகள் பயன்படும்.

புதுமைப்பித்தனின் 'பொன்னகரம்' கதை, கணவனுக்குப் பால் கஞ்சி வேண்டும் என்பதற்காகச் சோரம் போகும் பெண்ணைப் பற்றியது. 'பால்கஞ்சி' என்றால் 'பால் கலந்து செய்யப்படும் கஞ்சி' என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். நெல்லை மாவட்ட நண்பர் ஒருவர், அரிசிக்கஞ்சிதான் அது என்று விளக்கம் சொன்னார். சாதாரண அரிசிக் கஞ்சிக்காகச் சோரம் போக வேண்டியிருக்கிறது என்பது, கதை வலுவான

இன்னொரு பரிமாணத்திற்குச் செல்ல வாய்ப்பளிக்கிறது. 'பால்கஞ்சி' என்பதற்கான பொருள் தெரியாதபோது இருந்த வாசிப்புக்கும் பொருள் தெரிந்தபின்னான வாசிப்புக்கும் வேறுபாடு உள்ளது. அகராதி இருந் திருப்பின் இந்தப் பிரச்சினை எளிதாகத் தீர்ந்திருக்கும்.

வட்டார வழக்கு அகராதிகள், தமிழுக்குச் சொல் எண்ணிக்கையை மிகுதிப்படுத்துவதற்காக; மொழியியல், அகராதியியல் அறிஞர்கள் சொல்லாய்வு செய்வதற்காக; நூலகங்களில் 'நோக்கு நூல்கள்' வரிசையில் யார் கண்ணுக்கும் படாமல் வைப்பதற்காக; என்பவற்றை யெல்லாம் தாண்டிச் சமகால இலக்கிய வாசகர்களின் அன்றாடப் பயன்பாட்டுக்காக என்னும் அம்சம் தலைதூக்கி வர வேண்டும். இலக்கிய வாசிப்போடு அகராதிகளை இணைக்கச் சில முயற்சிகளைச் செய்வது அவசியம். நவீன இலக்கிய வாசிப்பு, பொது அரங்கில் ஒரு நிகழ்வாக நடைபெறும் தன்மை இங்கில்லை. நவீன இலக்கியக் கூட்டங் களை வாசிப்பு அரங்கங்களாக ஏற்பாடு செய்யலாம். அப்போது அகராதிகளின் பங்கையும் உணரலாம். இவையெல்லாம் சாத்தியமாகாத கனவுகள் அல்ல. சற்றே முயற்சி வேண்டும். அவ்வளவுதான்.

★★★

சுப. சண்முகம் வெளியிட்ட 'செட்டி நாட்டில் தமிழ் வழக்கு' என்னும் சிறுநூல் 1990 இல் வெளியாயிற்று. இப்போது பழநியப்பா சுப்பிரமணியத்தின் 'செட்டி நாட்டு வட்டார வழக்கு அகராதி' உருவாகி யுள்ளது. சுப. சண்முகத்தின் அறுபதாண்டு நிறைவு விழாவை ஒட்டி வெளியிடப்பெற்ற அவர் அகராதி பழமொழிகள், இணைச்சொற்கள், மரபுத்தொடர்கள் ஆகியவற்றையும் உள்ளடக்கியிருந்தது. பழநியப்பா சுப்பிரமணியத்தின் அகராதி, தற்போது இன்னும் கூடுதலான சொற்களையும் வேறு சில அரிய பதிவுகளையும் கொண்டிருக்கிறது. கீழ்வாய் இலக்கம், வழக்கில் இல்லாத சுபநிகழ்ச்சிகள் போன்றவை அவை. வாசகர் பார்வைக்காகச் சில பின்னிணைப்புகளையும் கொண்டி ருக்கிறது.

அடிக்கட்டை: வங்கிச் சலானின் கவுண்ட்டர் ஃபாயில். ரசீது தருபவர் ரசீதுப் புத்தகத்தில் வைத்துக்கொள்ளும் பகுதி.

சுப்பிரமணியன், அச்சொல் நவீன வழக்கில் ஒரு பொருளைக் கூடுதலாகப் பெற்றிருப்பதைப் பதிவு செய்கிறார். Counterfoil என்பதற்கு 'அடிக்கட்டை' மிகப்பொருத்தமான சொல்லாக இருக்கிறது. ஏற்கனவே வழக்கில் உள்ள ஒருசொல் புதுவாழ்வு பெறுவது மட்டுமல்ல, மொழிக்கு ஒரு கொடையையும் வழங்குகிறது. வட்டார வழக்கின் மகத் துவம் இதுதான். சொற்கள் பதிவு பெறுவதன் வழியாக இப்படிப் பல சொற்களை நவீனமாக்க முடியும். மேலும்,

புட்டாமா - முகத்திற்குப் போடும் பவுடர்

என்று இவ்வகராதி ஒருசொல்லைத் தருகிறது. 'பவுடர்' என்பதற்கு இப்படி ஒருசொல் நம்மிடமே இருக்கிறது என்பதை அறிய இவ்வகராதி பயன்படுகிறது. வட்டார வழக்கு அகராதிகளின் பயன்பாடு மிகவும் விரிவானது.

பழநியப்பா சுப்பிரமணியன், அடுத்த பதிப்புகளில் அகராதிப் பதிவு முறைகளை இன்னும் கூடுதலாகப் பின்பற்றலாம். பொதுச் சொற்கள் இவையெனக் கண்டறிந்து நீக்கக்கூடும். பொருள் விளக்கம் செறிவாகலாம். ஆதாரங்களின் பரப்பு விரிவாகலாம். எல்லாம் சரிவர நடந்தபின்னரே அகராதி வெளியாக வேண்டும் என்றால் எப்போதும் அது சாத்தியமில்லை. ஆகவே இப்போதைய பதிவு போற்றப்பட வேண்டியது என்பதில் ஐயமில்லை. இந்தப் பதிவுகளைப் பார்வையிட்டு அகராதியியல், மொழியியல் வல்லுநர்கள் அடுத்த கட்டத்துக்கு நகர்த்தும் முயற்சிகளைச் செய்யட்டும்.

பழநியப்பா சுப்பிரமணியத்தைச் சிறுகதையாளராகத் 'தினமணி கதிர்' மூலம் முதலில் அறிந்தேன். 'இரண்டு சுந்தரங்களும் வெளியான வினாத்தாளும்' என்னும் சிறுகதை என் நினைவில் பதிந்திருக்கும் ஒன்று. பால்யகால நட்பில் முதுமைக்காலத்தில் உண்டாகும் பிளவைப் பற்றிய அக்கதை, மனித மனோபாவங்கள் பற்றிய பல திறப்புகளைத் தரக்கூடியது. தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்க்கக்கூடிய ஆற்றல் உடையவர் அவர் என்பது நான் தற்போது அறிந்து கொண்ட செய்தி. அவர் மொழிபெயர்த்த 'ஜென் கதைகள் - கவிதைகள்' நூல் சரளமாகப் படிக்கும் நடை கொண்டிருக்கிறது.

பழநியப்பா சுப்பிரமணியன், 'இராவண காவியம்' இயற்றிய புலவர் குழந்தை அவர்களோடு சில மாதங்கள் பணியாற்றியுள்ளார் என்பதும் கொங்குப் பகுதியில் அவர் இருந்தபோது வட்டார வழக்கு தொடர்பான உணர்வை உண்டாக்கிய நிகழ்வுகள் நடந்திருக்கின்றன என்பதும் குறிப்பிட வேண்டியவை. அவருள் ஊறிய எண்ணம், வெகுகாலம் கழித்து அகராதியாகப் பரிணாமம் பெற்றிருப்பது மகிழ்ச்சி தருகிறது.

## முன்னுரையாகச் சில வார்த்தைகள்

*புத்தகத்தின் தலைப்பு பற்றி:* சிவகங்கை மாவட்ட வட்டார வழக்கும் செட்டிநாடு வட்டார வழக்கும் ஏறக்குறைய ஒன்றுதான். வேறுபாடுகள் மிகக் குறைவு. இருந்தாலும் இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள உணவு வகைகள், சமையல் முறை, கோவில் நிர்வாகம் கணக்கு இயல் தொடர்பான சொற்கள், உறவினர்களை அழைக்கும் சொற்கள் செட்டிநாட்டிற்கே உரியவை. செட்டிநாடு என்பது சிவகங்கை மாவட்டத்தின் காரைக்குடி, திருப்பத்தூர், திருவாடானை பகுதிகளையும் புதுக்கோட்டை மாவட்டத்தின் திருமயம், பொன்னமராவதி, அறந்தாங்கி பகுதிகளையும் உள்ளடக்கியது. இப்பகுதிகளில் எல்லா சாதிமத, மக்களும் கையாளும் வட்டாரச் சொற்கள்தான் இந்த அகராதியில் இடம் பெற்றுள்ளன. ஒரு சாதிக்கு என்று பிரத்தியேகச் சொற்கள் மிகக்குறைவே. ஆனால் வட்டார மரபுரீதியிலான தகவல்கள் பெரும்பாலும் நகரத்தார் சமூகத்தைச் சார்ந்தவை.

தொகுப்பில் உள்ள சில சொற்களை பொது அகராதிகளில் காணலாம். மற்ற பகுதியில் எழுத்தில் மட்டுமே கையாளப்படும் பெட்டகம், அசதி, அக்கப்போர், உக்கிராணம் போன்ற சொற்கள் இங்கு தினசரி வாழ்க்கையில் பயன்படுத்தப்படுகின்றன. பாண்டிய நாட்டிற்குப் பொதுவானவை - கண்மாய், ஊருணி. கரிசல் எழுத்தாளர்களில் பூமணியின் கதை மாந்தர்களின் உரையாடலும் கவிஞர் வைரமுத்துவின் 'கருவாச்சியின் காவியம்' பேச்சுநடையும் செட்டிநாடு சொல்வழக்கை ஒத்திருக்கின்றன. ஒரு காலத்தில் பாண்டிய நாடு முழுவதும் ஒத்த பேச்சு வழக்கு இருந்திருக்கக்கூடும்.

தமிழகத்தின் எல்லா வட்டார வழக்குகளும் இன்னும் முப்பது, நாற்பது வருடங்களில் வழக்கிழந்துவிடுமெனத் தோன்றுகிறது. புதிய சொற்கள் உருவாகிக் கொண்டிருக்கின்றன. செட்டிநாடு வட்டார வழக்குச் சொற்களை முப்பது வயதிற்குக் குறைவானவர்கள் உபயோகப்படுத்துவதில்லை. தமிழர்கள் வடநாட்டிற்கும் மேல்நாட்டிற்கும் கீழை நாடுகளுக்கும் பணிநிமித்தம் செல்கிறார்கள். செங்கல்பட்டு மாவட்டக் குடும்பம் காரைக்குடியில் தங்கும்போது அவர்கள் குழந்தைகள் உள்ளூர்க் குழந்தைகளுடன் பழகி தாங்கள் சார்ந்த வட்டாரச் சொற்களைப் பரிமாறிக் கொள்கிறார்கள். மக்கள் நகர்வு, பரந்த கல்வி காரணமாக

தமிழகம் முழுவதும் ஒரேவிதமான பேச்சுவழக்கு உருவாகும் சூழ் நிலை ஏற்பட்டிருக்கிறது. இதனால் சிறிது சிறிதாக வழக்கிழந்து வரும் வட்டார வழக்குச் சொற்களைப் பதிவு செய்ய வேண்டியது அவசிய மாகிறது. இந்த நூல் அப்படியொரு முயற்சியின் பாற்பட்டதே.

மலேசியா, சிங்கப்பூர் தமிழர்கள் பயன்படுத்தும் பிரத்தியேகச் சொற்கள் செட்டிநாட்டில் காதில் விழக் கேட்கலாம். அவற்றில் சில அகராதியில் இடம் பெறுகின்றன.

ஒவ்வொரு வட்டார வழக்கிற்கும் தனிப்பட்ட உச்சரிப்பு தோரணை, ராகம், சொற்களில் அழுத்தம், பேசும் முறை(Accent, Intonation) இருக்கின்றன. அதை எழுத்தில் கொண்டுவர இயலாது. இந்தப் பகுதி மக்கள் 'சாரிச்சுப் பார்க்கணும்' என்பார்கள். வி என்ற முதல் எழுத்து உச்சரிக்கப்படாது. இந்த விசித்திரத்தை நான் திருச்சி சென்றபிறகு தான் தெரிந்துகொண்டேன்.

என் தாய் தேங்காய் எண்ணையை தேங்காநெய் என்றுதான் கூறுவார். பேரன், பேத்திகள் கேலி செய்து அவரையும் தேங்காய் எண்ணை என்று சொல்ல வைத்து விட்டார்கள்.

ஒரு பகுதிப் பேச்சுவழக்கு இன்னொரு பகுதியில் புரிந்து கொள்ளப்படாது சிக்கல்கள் ஏற்படுவது உண்டு. ஐம்பது ஆண்டுகள் முன்பு ஈரோடு மாவட்டம் பவானியில் ஒரு தேநீர்க் கடையில் சாப் பிட்டுக் கொண்டிருந்தேன். கடைக்காரரின் குழந்தை வேகமாகத் தவழ்ந்து போய் வென்னீர் கொதிக்கும் பாத்திரத்தைத் (வேம்பா) தொடமுயன்றது. நான் அவசரத்தில் வட்டார வழக்கைக் கையாண்டேன். அவருக்குப் புரியவில்லை.

'பிள்ளை வேம்பாவைத் தொடப் போகுது, தூக்கு'என்றேன். அவர் புரியாமல் விழிக்கவே நான் விரைந்து வந்து இடதுகையால் குழந்தையைத் தூக்கினேன். வேம்பா அவர் அறியாத சொல். பாய்லர் என்று சொல்லித்தான் பழக்கம். கொங்கு வட்டாரத்தில் பெண்குழந் தையைத்தான் பிள்ளை (பொட்டப் பிள்ளை) என்பார்கள். 'எனக்கு ஒண்ணும் விளங்கலிங்க. பசங்களைப் போய் பிள்ளைங்கிறீங்க! வேம் பான்னா என்ன?' என்று கேட்டார். பிராமணர்கள் ஆண்குழந்தையைப் பிள்ளை என்பார்கள். தென்தமிழ்நாட்டில் பிள்ளை என்பது இரு பாலரை யும் குறிக்கும்.

பெண்ணின் சூதகத்தைத் தொடர்பு படுத்தும் வசைச்சொற்கள் உண்டு. நாகரிகம் கருதி அவற்றை அகராதியில் சேர்க்கவில்லை.

மேல் நாடுகள் போல் இங்கும் கல்லூரி மாணவர்கள் சில சொற் களை உருவாக்கியிருக்கிறார்கள். மச்சி, ட்யூப்லைட், கடலை போடுவது.

தமிழின் முக்கியமான நாவலான ப.சிங்காரத்தின் 'புயலிலே ஒரு தோணி'யை சிவகங்கை மாவட்ட ஜனரஞ்சக பத்திரிகை வாசகர்களில்

பெரும்பாலோர் அறிந்திருக்கவில்லை. சிற்றிதழ் வாசகர்கள் அனைவரும் அவரை அறிவார்கள். அந்தப் படைப்பின் சில பகுதிகள் நூலின் பின் இணைப்பாகத் தரப்பட்டிருக்கின்றன. செட்டிநாட்டவரல்லாத ஒருவர் அறுபது ஆண்டுகள் முன்பு வாழ்ந்த செட்டிநாட்டுமக்களின் பழக்க வழக்கங்கள், குண இயல்புகள் பற்றி விருப்பு வெறுப்பின்றி அதே சமயம் பரிவோடு பதிவு செய்திருக்கிறார்.

செட்டிநாட்டு வட்டார வழக்குச் சொல் அகராதித் தொகுப்பில் முன்னோடிகளான சோமலெ, நாட்டரசன் கோட்டை சுப.சண்முகம் ஆகியோரை இந்த நேரத்தில் நினைவு கூர வேண்டும். வேறு சிலரும் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கலாம். எனக்குத் தெரியவில்லை. அனைத் துத் துறைகளையும் உள்ளடக்கிய வட்டார வழக்கு அகராதி ஒன்றின் அவசியம் கருதி இந்த சொற்களைத் தொகுத்திருக்கிறேன். இது உருவாக உதவிய அன்பர்களுக்கு நன்றி.

**- பழநியப்பா சுப்பிரமணியன்**

29, வ.உ.சி தெரு,
கண்டனூர்.

# சொன்ன சொல்லை மறந்திடலாமா ? : கி.ராவின் “வட்டார வழக்கு அகராதி”

# Can We Forset Our Own Words? Ki. Ravin ‘Vattaravalakku Sol Agarathi’

***முனைவர் ந. கார்த்திகாதேவி***
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
சரஸ்வதி நாராயணன் கல்லூரி
மதுரை

**Dr. N. Karthiga Devi**
*Assistant Professor, Department of Tamil*
*Saraswathi Narayanan College*
*Madurai*

## ஆய்வுச் சுருக்கம்

*தமிழ் அகராதிகள் நம்மிடம் நிறைய புழக்கத்தில் இருந்தாலும், கரிசல் காட்டு மக்களுடைய வட்டார வழக்குச் சொற்களைத் தொகுத்து நமக்கு வழங்கி உள்ளார் கி. ராஜ நாராயணன். வட்டார வழக்குச் சொல் அகராதிகளின் தேவையைப் பேசுகின்ற இந்தக் கட்டுரை கி.ராவின் அகராதியின் சிறப்புகளையும் நமக்குச் சொல்கின்றது.*

***முக்கியச்சொற்கள்:*** *வட்டார மொழி, கரிசல் இலக்கியம், கி. ராஜராஜநாராயணன் வீரமாமுனிவர்*

## Abstract

*The beauty of the tamil language lies in its various dialects. ‘Karisal’ literature speaks about the life in Karisal region was kovilpatti, in Tamilnadu. In order to enjoy the Karisal literature, we have to understand the dialect spoken there. Ki. Rajanarayanan’s regional dialect dictionary of Karisal region, lishten our patu in our journel through Karisal literature.*

***Keywords:*** *Tamil Dialects, Karisal Literature, Ki. Rajanarayanan, Veeramamunivar*

**Citation**

Karthiga Devie, N. “Can We Forset Our Own Words? Ki. Ravin ‘Vattaravalakku Sol Agarathi.” *Journal of Tamil Culture and Literature*, vol. 2, no. 4, 2023, pp. 17–21.

***சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்***
***புல்லும் பரிமளப் புங்கொடியே நின் புதுமலர்த்தாள்***
***அல்லும் பகலும் தொழும் அவர்க்கே அழியா அரசும்***
***செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே - அபிராமி அந்தாதி***

**முன்னுரை**

*ஒரு மொழி உயிர்ப்புடன் இருப்பது யாராலே ? பண்டிதர்களாலா ? அல்லது பாமரர்களாலா ? ஒரு மனிதன் மற்றொரு மனிதனுடன் தொடர்பு கொள்வதற்கு மொழி இன்றியமையாதது. உலகத்திலே மனிதன் விலங்குகளாகத்தோன்றி, விலங்குகளாக அலைந்த போதும் மொழி இருந்தது, பெரும்பாலும் அப்போது உடல் மொழியாகவும், சைகை மொழியாகவும் இருந்தது. மனிதன் நாகரீகம் பெற்றபோது மொழியும் வளர்ந்தது. மொழி வளர்ந்ததால் மனிதனும் வளர்ந்தான். பல்வேறு இனக்குழுக்கள், பல்வேறு இடங்களில் தங்கி அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ற மொழியை உருவாக்கின. சில மொழிகள் வரி வடிவம் பெற்றன. நாகரீகம் வளர வளர இலக்கியமும் இலக்கணமும் தோன்றி மொழியைச் செம்மைப்படுத்தின.*

***மணிமுடியில் தொல்காப்பியம் வீற்றிருக்கும்***
***திருவடியில் சிலம்போசை பாட்டிசைக்கும்***
***அணிமுத்துமாலை எட்டுத்தொகையாகும்***
***ஆட்சி செய்யும் செங்கோலே குறளாகும் - கண்ணதாசன்***

*பண்டிதர்களால் உருவாக்கப்பட்ட இலக்கிய இலக்கணங்கள் ஒரு மொழிக்கு ஆடை அணிகலன்கள் போல, அழகைத் தருகின்றன. பாராட்டைப் பெற்றுத்தருகின்றன, என்றாலும் பாமர மக்கள் தங்கள் அன்றாட வாழ்வுத் தேவைக்கு ஒரு மொழியை பயன்படுத்துவதனால் மட்டுமே அந்த மொழி உயிர்ப்புடன் இருக்கின்றது. ஒரு மொழியானது ஒரு பெரிய நிலபரப்பிலே செயல்படும் போது, அந்த நிலப்பரப்பு வேறுபடுவதைப்போல மொழியும் வேறுபடுகின்றது. மதுரையிலே பேசப்படும் மொழி தஞ்சையிலே பேசப் படுவதில்லை. மண்ணும், தாவரங்களும், விலங்குகளும், செய்யும் தொழிலும் சேர்ந்து பல்வேறு வட்டார மொழிகளைத் தோற்றுவிக்கின்றன.*

*ஒரு வட்டாரத்தில் வழங்கப்படும் அத்தனைத் சொற்களும் மற்ற வட்டாரங்களுக்குத் தேவையும் இல்லை, எனவே தெரியவும் பெரிய வாய்ப்புகள் இல்லை. அதனால் வட்டாரச் சொற்களைத் தொகுத்து வைத்துக் காப்பதற்கான காரணங்கள் இரண்டு உள்ளன.*

*முதலாவது காரணம் என்னவென்றால், சொற்களால் கட்டமைக்கப்படுவது தான் மொழி. சொற்கள் குறையக் குறைய மொழியினுடைய திறனும் குன்றி விடுகின்றது. எனவே மொழியை உயிர்ப்புடன் வைப்பதற்குச் சொற்களையும் உயிர்ப்புடன் வைக்க வேண்டி உள்ளது.*

*இரண்டாவது காரணம் என்னவென்றால், வட்டாரச் சொற்களின் உதவி கொண்டு இயற்றப்படும் இலக்கியங்கள், அந்தக்காலத்தையும், இடத்தையும் கடந்து செல்வன. அந்த இலக்கியங்களைப் புரிந்து கொள்வதற்கு அந்த வட்டாரச் சொற்களின் அறிவு, இன்றைய உலகமயமாக்கல் சூழ்நிலையில் இன்றியமையாதது எனவே வட்டாரச் சொல் அகராதிகள் பண்டிதர்களுக்கும் தேவைப்படுகின்றன, பாமரர்களுக்கும் தேவைப்படுகின்றன.*

ஒரு வயோதிகச் சுமங்கலி எங்கச்சியின் காலில் விழுந்து கும்பிட்டாள். ''சுமங்கலிகளுக்கெல்லாம் கிடைக்காத பாக்யம் ஒனக்குக் கிடைச்சிரும்மா'' என்று உணர்ச்சிவசப்பட்டாள் அந்த வயோதிகி.

ஒவ்வொரு வீட்டின் முன்னாலும் எங்கச்சியை நிறுத்தி சுமங்கலிகள் அவளுடைய பாதங்களை மஞ்சள் நீரால் கழுவி, தங்கள் கூந்தலினால் அவள் பாதங்களைத் துடைத்தார்கள். கண்களில் நீர் பொங்க அனைவரும் இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு வந்தார்கள்.

சேகண்டியும் தப்பும் அடிப்பவர்கள் ஸ்ரீகோவிந்தனின் திரு நாமத்தைப் பாடி, பலமாகத்தட்டி ஒலி எழுப்பிக்கொண்டே முன்னால் வந்து கொண்டிருந்தார்கள்.

அந்த ஆலமரத்துக்குப் பக்கத்தில் இவர்கள் வந்ததும் குழந்தைகள், கர்ப்பிணிகள், நோயாளிகள் இவர்களை மட்டும் கூட்டத்திலிருந்து கொண்டிக்காவல்க்காரர்கள் அங்கேயே நிறுத்தி விட்டார்கள்.

சுடுகாட்டுக்குப் பக்கத்தில் வந்ததும் கொஞ்ச தூரத்திலேயே எல்லோரையும் நிறுத்திவிட்டு, ரண்டே பெண்களை மட்டும் பக்கத்துக்கு ஒருவராக எங்கச்சியின் கூட வர அனுமதித்தார்கள். அப்படிக் கூடவர அனுமதிக்கப்பட்ட இருவரில் ஒருத்திதான் அச்சிந்த்தலுவின் தாயார்.

அச்சிந்த்தலுவின் தாயார் சொன்னாள்:

''எங்கச்சியை எங்களால தாமரிக்க முடியலை. எங்களை இழுத்துக்கிட்டு ஓடினாள்னுதான் சொல்லணும். அவமேலெ ஏதோ ஒரு அருள் வந்து அவளுக்குள்ளெ புகுந்துட்டதுபோலத்தான் தெரிஞ்சது எங்களுக்கு''

மறைப்பைச் சுற்றி வந்து வாசலுக்கு நேராக வந்து நின்றதும் நிலைகொள்ளவில்லை அவளுக்கு. தனது இஷ்டமுள்ள புருஷனின் செல்லப் பெயர்களை உரக்கச் சொல்லிக் கூப்பிட்டாள். அந்தக் குரல் அங்கிருந்தவர்களையெல்லாம் ஒரு பீதியான பரவசத்தை உண்டு பண்ணி உருக வைத்தது.

அவளைப் பிடித்துக் கொண்டிருப்பதே சிரமமாகி விட்டது. தீ உயர்ந்து பற்றி எரியும் சமயத்தில் எங்கச்சி அவர்களை உதறித்தள்ளி

விட்டு, இரண்டு எட்டுகள் பின்வாங்கி ஒரே ஓட்டமாக கைகளை அகலித்துக் கொண்டு ஒரு தீப்பறவை பறப்பதுபோல்ப் பாய்ந்து சென்று தன் புருஷனைத் தழுவிக்கொண்டாள். பெரு நெருப்புக் கிடையே.

அப்போது சேகண்டிகளின் கணகணப்பும் தப்புவாத்தியங்களின் உச்ச ஒலியும் பலக்க ஒலித்தன. அதே சமயம் புல்லரிக்கும் படியான உணர்ச்சி மிகுந்த குலவை ஒலி எழுந்து அடங்கியது.

❖

# 6

அச்சிந்த்தலு புருஷனுடைய பதினாறாம் நாள் விசேஷத்துக்காக ''ஓலை'' எழுத உறவுக்காரர்களையும் முக்கியமானவர்களையும் கூப்பிடும்போது கிட்டப்பனையும் கூப்பிட்டார்கள். அதிலிருந்து ரண்டு குடும்பங்களும் எல்லாத்தையும் மறந்து பழையபடி ஒன்று சேர்ந்தன.

அதோடு இப்போது ஏற்பட்டுள்ள புதிய பகைமை இந்த இரு குடும்பங்களை மேலும் நெருக்கமாக ஐக்கியப்படுத்தியது.

மாமன் குடும்பமும் தன் குடும்பமும் என்னதான் ஐக்கியப் பட்டாலும், கிட்டப்பன் பேரில் அச்சிந்த்தலுவுக்கு மனசில் சமாதானம் உண்டாகவில்லை.

அவளுடைய வீட்டுக்குப் போய் அச்சிந்த்தலுவைப் பார்க்கும் போதெல்லாம் கிட்டப்பன் மனசில் கொந்தளிப்பு உண்டாகத் தொடங்கியது.

அவளுடைய வீட்டுக்குள் நுழைந்த உடனேயே கனிந்த பழத்தின் மீதிருந்து வரும் கவர்ச்சி வாசம் போல் தன்னை அவள் பக்கமே இழுத்தது.

வடுப்படாத கனிபோல் அவள் உடம்பு அவன் பார்வையில் நெகு நெகு என்று பளபளத்தது.

அந்த வீடு பூராவுமே அவள் நடமாட்டத்தால் மணத்தது. சோகமும் துயரமும் கூட மனுஷ உடம்பின் அழகுக்கு ஒரு விருத்தி கொடுக்கமுடியும் போலும்.

சமீபகாலங்களில் அவன் அவளை இவ்வளவு நெருக்கமாகப் பார்த்ததில்லை. சிறியவயசோடு அவர்களுடைய சினேகம் முறிந்து போயிற்று. முறிந்து என்று சொல்வது சரியில்லை; நிறுத்தி வைக்கப் பட்டது என்பதுதான் சரி.

அச்சிந்த்தலுவின் புருஷன் கொலையுண்ட காரியம் துயாரம் நாயக்கரை ரொம்பவும் பாதித்துவிட்டது. கொஞ்சநாள் படுத்த படுக்கையாகிவிட்டார். விவசாய வேலைகளை வந்து கிட்டப்பன் தான் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவன் முன்புபோல திரும்பவும் அந்த வீட்டுக்கு அடிக்கடி வருவது, நெருக்கமாக இருப்பது இதெல்லாம் அச்சிந்த்தலுவையும் பாதித்தது.

முதல்நாள்ப் பொலியை வீடு கொண்டுவந்து சேர்ப்பதற்குள் அகாலமாகி விட்டதால் அவனை அங்கேயே குளித்துவிட்டுச் சாப்பிடச் சொன்னார்கள்.

வெந்நீர் விளாவி எடுத்து வைத்தார்கள். வெங்கடபதி கோமணத்துணியைக் கொண்டுவந்து தந்தான். கிட்டப்பன் அதை வாங்கி, அரைஞாண் கயிற்றை இழுத்து அதற்குள் கொடுத்து உருவி வேட்டியை அவிழ்த்து மறைத்து, காலிடுக்கு வழியாகக் கொண்டுவந்து பின்பக்க அரைஞாண் கயிற்றில் சொருகிக்கொண்டு, வேட்டியை உதறிக் கொடியில்ப் போட்டுவிட்டுக் குளிக்க ஆரம்பித்தான்.

தீப வெளிச்சத்தில் அவன் குளிப்பதை, அடுப்பங்கூடத்தில் சுவர்நிழலில் மறைந்துகொண்டு கவனித்துக்கொண்டிருந்தாள்.

'எவ்வளவு சின்ன உடம்பாய் இருந்தது, எப்படி இது விஸ்வரூபம் எடுத்ததுபோல இவ்வளவு வரிந்து அகண்டு பெரிசானது!' வாய்கொப்பளித்து அவன் பீச்சித் துப்பும்போது விசிறுபடாமல் ஒழுங்குபடத் தூரத்தில்ப் போய் விழும் ஆண்மையை வியப்புடன் பார்த்தாள்.

'சீத்தக்குஞ்சு' போலிருந்த, காலஞ்சென்ற தனது புருஷனுடைய உடம்போடு இதை ஒப்பிட்டுப் பார்த்தாள். ரோமப் பிறப்பே இல்லாத அந்தச் சுரக்காய் மார்பையும், அடர்ந்த ரோமமுள்ள இந்தக் கம்பளி மார்பையும் நினைத்துப் பார்த்தாள்.

குளித்து முடிந்ததும் கிட்டப்பனுக்கு அவளுடைய அம்மா சோறுவைத்துக் கொடுத்தாள்.

எதையுமே கவனிக்காமல் தலையைக் கவிழ்ந்துகொண்டு பெரிதுபெரிதான கவளங்களாக எடுத்து உண்டான்.

'ஆரோக்யமான ஒரு வயிற்றுக்குச் சோறு வட்டிப்பதைப் போல ஒரு இன்பம் வேறு உண்டா'

ருசித்து உண்ணுவதைப் பார்த்தாலே சமையலடி அலுப்பு பறந்து போய்விடுமெ.

கிட்டப்பன் சோற்றை மறுதரம் மூன்றாந்தரம் என்று வாங்கி வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருந்தான்.

நிழல் இருட்டின் மறைவிலிருந்து கொண்டு தன்னையே கூர்ந்து ரண்டு கண்கள் கவனித்துக்கொண்டிருப்பதை அவன் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை!

அங்கணத்தில் வந்து கையைக் கழுவிவிட்டு, வாயைக் கொப் பளித்து அதேபோல் பீச்சித் துப்பினான். மேல் வேட்டியில் வாயைத் துடைத்துக்கொண்டான். நிறை ஏப்பம் விட்டுக் கொண்டே துயாரம் நாயக்கர் படுத்துக்கிடந்த கட்டிலுக்குப் பக்கத்தில் வந்து கொஞ்சம் உட்கார்ந்து இன்று நடந்த வேலைகள், நாளை செய்யவேண்டிய வேலைகள் பற்றிப் பேசிவிட்டு தன்னுடைய மாடுகளைக் கவனிக்க வேண்டும் என்று சொல்லிவிட்டு திரும்பிப் பார்க்காமல் வேகமாய் நடந்து போனான். அச்சிந்த் தலுவின் கண்கள் அவன் பின்னாலேயே போய் அவன் உருவம் மறைந்ததும் 'மிருகம் மிருகம்' என்று மனசு முணுமுணுத்தது.

❖

கிட்டப்பன் களத்தில் பொலியை வாளித்துக் கொண்டிருந்தான். அச்சிந்த்தலுவின் அம்மா அவனைத் தேடி வந்தாள். குத்திப் போட குலுக்கையிலிருந்து கம்மம்புல் எடுக்க வேண்டுமென்று, ''வீட்டு வரை வந்துட்டுப்போ'' என்று கிட்டப்பனைக் கூப்பிட்டாள். வெங்கடபதி இல்லியா? என்று விசாரித்தான். ''கொத்த பல்லவுக்குத் துட்டிக்குப் போயிருக்கான்'' என்றாள்.

''சரி; நீங்க போயிக்கிட்டிருங்க; வகுத்துவாயை மட்டும் பகடைட்டெ சொல்லி, எடுத்துவிடச் சொல்லிவிட்டு இந்தா வந்திருதென்''

கிட்டப்பன் வந்து குலுக்கைக்குள் கம்மல்புல் எடுக்க உள்ளே இறங்கினான். பதினோரு உறைகள் கொண்ட உயரமான பெரிய்ய குலுக்கை அது.

வெளிச்சத்திலிருந்து வந்து அதனுள் இறங்கியதால் ஒரே இருட்டாக இருந்தது. கண் பழகுகிற வரை ஒன்றுமே தெரியாது!

சிரிப்பு வந்தது, ராமுநாயக்கர் பட்ட பாட்டை நினைத்ததும்.

இதே குலுக்கைக்குள்தான் அவரும் இறங்கினாராம். இறங்கியதுமே கண் தெரியாமலாகிவிட்டதாம்! கம்மல்புல் இவ்வளவு ஆழத்தில் கீழே கிடக்கும் என்று அவர் எதிர் பார்க்கவில்லை. உள்ளே விழுந்தபிறகுதான் தெரிந்தது இது மார்கழி மாசம் என்று! புதுக்குலுக்கையாகையால் உறைகள் பொருந்திய இடத்தில் கால்வைத்து இறங்க வாக்கில்லை.

'பார்வை போய்' விட்டதால் ராமுநாயக்கருக்கு, வெளியிலிருந்து கடகம் எந்தப் பக்கத்திலிருந்து நீட்டுகிறார்கள் என்று கண்டுபிடிக்க முடியவில்லை! அவர்கள் ஒரு பக்கத்திலிருந்து நீட்டினால் இவர் இன்னொரு பக்கத்தில் கைகளை நீட்டுகிறார்!

அச்சிந்தலுவின் தாயார் நுங்கம்மா, ராமுநாயக்கருக்கு மதினியார் முறை. அவர் இவனைக் கேலிதான் பண்ணுகிறாரோ இப்படி என்று நினைத்து ''என்னெ; கண்ணெளவு தெரியலையா. பட்டப்பகலிலேயே மாலைக் கண்ணு வந்துட்டதா?'' என்று கேட்டாளாம். சுருக்கென்றது அவருக்கு! ஏற்கெனவே அவருக்குச் சரியான மாலைக்கண்ணு உண்டு. பகல்தான் என்றாலும் வெளிச்சத்திலிருந்து வீட்டுக்குள்ளே 'இருட்டுக்கு' வந்தால், நல்லகண்ணு உள்ளவர்களுக்குத் தெரிவதுபோல சிறிதே நேரத்தில் இருட்டை அந்தக் கண்கள் பழகிக் கொள்ளாது என்பதை அன்றுதான் அவர் கண்டுகொண்டாராம்.

கடேசியில் எப்படியோ தத்திப் பித்தி, அவரே சொன்னதுபோல ரொம்ப நொம்பலப்பட்டு ஒருவழியா மேலே ஏறி கம்மம் புல்லையும் எடுத்துக் கொடுத்துவிட்டு வர்றதுக்குள்ளே ஆச்சி போச்சி என்று ஆகிவிட்டதாம். செத்தாலும் இனி கம்மம்புல் எடுக்க குலுக்கைக்குள் இறங்குவதில்லை என்று அன்றையிலிருந்து தீர்மானித்துவிட்டாராம்.

அவரைக் கேலிசெய்ய வேண்டும் என்று நினைக்கிறவர்கள் ''கொஞ்சம் கம்மம்புல் எடுத்துத் தரணுமே குலுக்கையிலிருந்து?'' என்பார்கள்!

கிட்டப்பன் கம்மம்புல் எடுத்துக் கொடுத்துவிட்டுப் புறப்பட்டபோது நுங்கம்மா அவனை ''கண்ணுக்குட்டிய அவுத்து விட்டுப்போ'' என்று கேட்டுக்கொண்டாள்.

அவிழ்த்து விடப்பட்ட கன்றுக்குட்டி பாய்ச்சலில் குதியாளம் போட்டுக் கொண்டு தாயிடம் ஓடியது. காம்பில் வாயை வைத்ததும் வாலை உயர்த்தி கோமியம் விட்டுக் கொண்டே கன்றின் 'அரை' யைப் பிரியத்தோடு நக்கியது. அந்த நக்கலின் சொகத்தில் கன்று விட்ட கோமியத்தை சொட்டு கீழே சிந்தாமல் சுவைத்து உண்டது. இதைக் கிட்டப்பன் பார்த்துக்கொண்டே இருக்கும் போது அச்சிந்தலு பால்பீச்சும் பாத்திரத்தோடு வந்து நின்றாள்.

பசு காம்பில் பால் இறக்கிவிட்டது. கன்று சப்தம் எழ வாயின் இருபுறமும் பால்நுரை வழிய சப்பிக் குடித்துக் கொண்டே இருந்தது!

கன்றை இழுத்துப்பிடி என்று அவள் சொல்லட்டும் என்று இவன் காத்திருந்தான். அவள் சொல்வதாக இல்லை. ஆனால், ''என்ன இது, என்ன இது கன்றை இன்னும் இழுத்துக்கட்டாமல்!'' என்கிற பாவம் அவள் கண்களில் விட்டுவிட்டு மின்னுவது தெரிந்தது.

சொல்ல மாட்டாள் அவள் என்று தெரிந்து விட்டது. 'பாதகத்தி' என்று மனசுக்குள் சொல்லிக்கொண்டு கன்றை இழுத்துப் பிடித்துக் கொண்டு காடிக்குள் உட்கார்ந்து கொண்டான்.

அச்சிந்தலு உட்கார்ந்து பாத்திரத்திலுள்ள தண்ணீரைக் கையில்விட்டு மடியில் இறைத்துக் கழுவி விறைப்பான காம்புகளை நீவிவிட்டு பீச்சத் தயாரானாள். கிட்டப்பனுக்கு அவளுடைய முகம் தெரியவில்லை; பசுமாட்டின் வயிறு மறைத்தது.

அவள் தரையில் முட்டுகள் ஊன்றாதபடி மண்டியிட்டு துடையிடுக்கில் பாத்திரத்தை இடுக்கிக்கொண்டு பால்கறக்க ஆரம்பித்தாள். பால் பீச்சும்போது அவளுடைய ''பயத்தங்காய்'' விரல்கள் வேகமாய் இயங்குவதைக் கிட்டப்பன் பார்த்தான். அவளுடைய பாதநுனிகளில், பல்லியின் வயிற்றுக்குள் முட்டை யிருப்பது தெரிவதுபோல மனித ரத்தத்தின் சிகப்பு நிறம் தெரிந்தது.

பாத்திரத்தில் பால் பீச்சும் ஓசை, பால்மீது பால்விழும் ஓசை, பால்நுரையின்மீது பால்விழும் ஓசை இப்படிக் கேட்டுக்கொண்டி ருந்தது. மத்தியில் நுரையைத் தொட்டு காம்புகளில் தேய்த்து பால்கறக்கும் லாவகம்.

சொரு சொரு சொரு என்று பாத்திரம் நிறைந்துகொண்டு வருவதை ஓசையிலிருந்து நிதானிக்க முடிந்தது.

மாடு கன்றை நக்கிக்கொடுத்துக்கொண்டேயிருந்தது.

அப்படி நக்கும்போது அதைப் பிடித்துக்கொண்டிருக்கும் இவனுடைய விரல் மீதும் அதன் நாக்கு படும். கன்றின்முகம் இவனது முகத்துக்குப் பக்கத்தில் இருந்ததால், நக்கும்போது பசுவின் சூடான சுவாசம் காய்ச்சல் வந்தவர்களின் சுவாசம்போல் வாடை இருந்தது.

மத்தியில் பசு ஒன்றிரண்டுதரம் இவனையும் முகர்ந்து பார்த்துக் கொள்ளும். அப்போது அதன் சூடான மூச்சு உடம்பில் படும்போது உடம்பு சிலிர்க்கும்.

பால் பீச்சி முடிந்ததும், அச்சிந்த்தலு எப்படி மௌனமாக வந்தாளோ அப்படியே - ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் திரும்பிப் போய்விட்டாள். அது கிட்டப்பனின் மனசில் ஒரு அறை விழுந்த மாதரி இருந்தது.

அவனும் மௌனமாகக் கன்றுக்குட்டியை, பால் குடித்து முடிந்ததும் இழுத்துக் கட்டிவிட்டு களத்தைப் பார்க்க நடந்தான்.

❖

வழக்கம்போல அந்த ஆண்டும் மாநோம்பு ஊர்வலம் வன்னிமரம் நட்டிய இடத்தில் வந்து நின்றது.

அறிவுக்கடலான காலதேவிக்கும் அஞ்ஞான இருளனான வன்னிராஜனுக்கும் போர் நடந்தது. தோற்று விழுந்த வன்னி ராஜனை அந்த இடத்திலிருந்து பெயர்த்து அப்புறப்படுத்த வேண்டுமே. ஒவ்வொருத்தரும் தங்கள் தங்கள் பங்குக்கு அந்த வன்னிமரத்தை ஆட்டிஆட்டிப் பிடுங்கிப் பார்த்தார்கள்.

கேலிக்காரர்கள் ''நீ பிடுங்குன போ'' என்றார்கள்!

ஊர்க்காரர்கள் அனைவருமே இதில் பங்குகொண்டு, முதலில் பிடுங்கிய மாணாக்கர்களை ரொம்ப உத்ஸாகப்படுத்தினார்கள். ரண்டு மூன்றுபேர் என்று கூடப் பிடுங்கிப் பார்த்தார்கள். அவர்கள் 'போராடு'வதைப் பார்த்த குழந்தைகளும் பெண்களும் சிரித்துக் கூக்குரலிட்டு ஊக்குவித்தார்கள்.

கூட்டத்தோடு நின்றுகொண்டு கிட்டப்பனும் சிரித்தபடி வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான்.

தற்செயலாக அவன் பெண்கள் கூட்டத்தில் அச்சிந்த்தலுவும் நின்றுகொண்டு அவர்களைப் பார்த்துக்கொண்டிருப்பதைக் கவனித்தான்.

அதற்குள் இவள் - புருஷன் இறந்து கொஞ்ச நாளே ஆகியிருக்கும் போது - எப்படி இங்கே வந்தாள், வரலாம் என்று நினைத்துக் கொண்டான். சங்கடமாகவும் எரிச்சலாகவும்கூட இருந்தது அவனுக்கு.

வழக்கமாகக் கொஞ்சம் அசைந்து கொடுக்கும் வன்னிமரம் இந்தத் தடவை வேர்போட்டு விட்டதோ எனும்படியாக அசைக்கமுடியாமல் இருந்தது. கிட்டப்பனுக்கு வைத்துவிடாமல் இந்தத் தடவை தாங்களே ஒரு கை பார்த்துவிட வேண்டும் என்று சில இளவட்டங்கள் முயன்று தோற்றார்கள்.

எல்லோரும் வன்னிமரத்தோடு 'போராடி' முடித்து விட்டார்கள்; ஒருவர் பாக்கியில்லை.

எல்லோருடைய கண்களும் கிட்டப்பனைத் தேடியது. பெரியவர்கள் கூடியிருக்கும் அந்த 'சபை'யின் முன்னால் கிட்டப்பன் அடக்கத்தோடு நடந்து வந்தான்.

கூட்டத்தில் அவனுடைய வரத்து, கலகலப்பை உண்டு பண்ணியது.

நடந்துவரும்போதே கிட்டப்பனுடைய மனசு ஒருநிலைப்பட வில்லை. ஏதோ ஒரு மாதியாக இருந்தது. ஏன் இங்கே வந்தாள் ஏன் இங்கே வந்தாள் என்று கேட்டு எரிச்சல்ப்பட்டுக்கொண்டே வந்தான். குனிந்து வன்னிமரத்தைப் பிடித்தான்.

மரம் துளிக்கூட அசைவதாகத் தெரியவில்லை! ஆட்டிப் பார்த்து தரைக்குள் எந்தெந்த திசையிலிருந்து கற்கள் மரத்தைக் கடித்துக் கொண்டிருக்கின்றன என்று யூகித்து அதற்குக் தக்கபடி கால்களை மாற்றி ஊன்றி நின்றுகொண்டு மூச்சைப்பிடித்து இழுத்தான். அவனுடைய காது மடல்களும் முகமும் ரத்தமாகச் சிவந்தன.

கூட்டம் ஆரவாரித்தது. வினாடிகளும் வினாடிகளின் பகுதிகளும் நகருவதே நிமிஷமாகத் தோன்றியது. தன்னுடைய பலாட்டியத்துக்கு இன்று ஒரு மூக்கறுப்பு நிகழும் போலிருக்கிறது என்று தோன்றிவிட்டது. 'என்ன வந்தது இன்று எனக்கு? கடவுளே, என்ன இது! அடங்கிய மூச்சினால் உடம்பில் நரம்புகள் புடைப்பது தெரிந்தது. நெடு நெடு என்று உள்ளமுங்கிய சத்தம் மார்புக்கு உள்ளே என்னமோ உடைகிற மாதிரி! இதோ... இதோ முடிந்து விட்டது; கொஞ்சம், இன்னும் கொஞ்...சம் இந்தோ...வ்...கூட்டம் ஆரவாரத்தை நிறுத்திவிட்டு இப்போது அவனையே பார்த்தது, அவனோடு சேர்ந்து அவர்களும் அவர்களையறியாமல் தம்பிடித்து மூச்சை நிறுத்தினார்கள்.

வன்னிமரத்தின் அடியில் பூமி பொங்கி மேலே மேலே வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அதைப் பார்த்ததும் கூட்டமும் பொங்கி ஆரவாரிக்கத் தொடங்கியது. அந்த ஆரவாரமும் கூச்சலும் வெகுதூரத்துக்குக் கேட்டது. ஆனால் அவனுக்குக் கேட்கவில்லை; ஏதோ கனவில்க் கேட்பதுபோல இருந்தது. பிடுங்கிய மரத்தோடு அவனும் மரம்போல் தள்ளாடித் தரையில் சாயப்போனான். சாமிக்கண்ணாசாரி ஓடிவந்து தாங்கிக்கொண்டார் அவனை.

❖

## 7

அன்று வன்னிமரத்தைப் பிடுங்கிய நாளிலிருந்து கிட்டப்பன் படுக்கையாகி விட்டான். அவனுடைய மார்புக்குள் தாங்கமுடியாத ஏதோ ஒரு வலி ஏற்பட்டுவிட்டது அன்றிலிருந்து. தகை பிடித்து, எப்போது பார்த்தாலும் தண்ணீர் தண்ணீர் என்று கேட்டு வாங்கிக் குடித்துக் கொண்டிருந்தான். சுனைத் தண்ணீரைப் போல குளிர்ந்...த தண்ணீர் வேண்டும் குடிப்பதற்கு என்று கேட்டுக்கொண்டிருந்தான்.

உணவு குறைந்து மெலியத் தொடங்கினான்.

கண் திருஷ்டிதான் என்று எல்லோரும் அபிப்பிராயப்பட்டார்கள். முச்சந்திகளில் காலடிமண் எடுத்துக் கொண்டுவந்து எரிகிற நெருப்பில் போட்டு காறித் துப்பினார்கள்.

அன்று கூட்டத்திலிருந்த பெரியவர்கள். ''யாரு இப்படி அடிக்கிளையோடு வன்னிமரத்தைக் கொண்டுவந்து நட்டினது?'' என்று கேட்டு விசாரித்தார்கள். ''யார் வேலை இது?'' என்று கேட்டார்கள். கூட்டத்தில் துயாரம் நாயக்கரும் இருந்தார்.

மரம் வெட்டிக்கொண்டு வரப்போன வெங்கிடபதியையும் அவனுடைய சகாக்களையும் கூட்டிக்கொண்டு வந்தார் கொண்டிக் காவல்காரர். கூட்டத்தில் தன்னுடைய தகப்பனாரைப் பார்த்ததும் வெங்கிடபதி சொல்ல முடியாமல் மௌனம் சாதித்தான். அதைக் கண்டுகொண்ட துயாரம் அவனைத் தனியாகக் கூட்டிக் கொண்டு போய் கேட்டதில் நடந்ததைத் தெரிந்து கொண்டார். பிறகு கூட்டத்திற்கு வந்து, தனது பையனுக்காகத் தான் மன்னிப்புக் கேட்டுக்கொள்வதாகச் சொன்னார். எல்லாம் அறிவு வளராத சிறிசுகளின் காரியம்; இந்த ஒரு தரம் 'தம்மாட்டை' என்று அத்தோடு நின்றது. துயாரம் வீட்டுக்குள் வந்ததும் முதல் காரியமாக மகளைக் கூப்பிட்டு சண்டை பிடித்தார். இப்படிச் செஞ்சிட்டயே அம்மா என்று ரொம்ப வருத்தப்பட்டார். அச்சிந்தலுவும் தனது பின் புத்தியை நினைத்து நொந்துகொண்டாள்.

❖

கிட்டப்பனுடைய வீட்டுக்கு அவனைப் பார்க்க சாமிக் கண்ணாசாரி வந்தார். கட்டிலில் அவனுடைய கிடப்பைப் பார்த்ததும் அவர் துணுக்குற்றார்.

''கிட்டப்பா, என்னாச்சி உனக்கு; ஏன் இப்படி ஆயிட்டெ?'' என்று கேட்டு ஆதரவோடு அவனின் நெஞ்சுக்கூட்டைத் தடவி விட்டார். ''ஒண்ணுமில்லெ; கொஞ்சம் வர்மப்பிடி. தடவிவிட்டா சரியாயிரும்'' என்று சொல்லி எண்ணெய் தேய்த்துத் தடவி நீவிவிட்டார். 'அடடா எப்பேர்ப்பட்ட உடம்பு இது; இப்படி ஆகிவிட்டதே' என்று மனசுக்குள் சொல்லிக்கொண்டார்.

கிட்டப்பனுடைய உடம்பு பலத்தையும் மனத் தைரியத்தையும் அவர் மட்டுமல்ல அந்தக் கிராமமும் சுற்றுவட்டாரமுமே அறியும். அடங்காமல் திமிரிய எருதுகளையெல்லாம் அடக்கி மூக்கணாங் கயிறு பூரியவன் அவன். சம்சாரிகளின் தொழுவில் லட்சண சுத்த முள்ள காளைக் கன்றுகள் பிறந்தால் அதை அவர்கள் கோவிலுக்கு விட்டுவிடுவதாக நேர்ந்து கொள்வார்கள்.

மனிதர்களில் சர்வாங்க அழகுப் பிறப்பு எப்படி அபூர்வமோ அப்படியேதான் மாடுகளிலும். எப்பவாவதுதான் இந்தப் பிறப்பு நிகழும். அப்படிப் பிறந்த காளைக் கன்றை வளர்த்துப் பெரிதாக ஆக்கி வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைப்பதில்லை. அந்தக் கன்று பால் மறந்ததும் கூளம் கடிக்க ஆரம்பித்துவிட்டது என்றால் ஒரு நல்ல நாள்ப் பார்த்து பெருமாள் கோவிலுக்குக் கொண்டுவந்து ஊர்கூட்டிப் பொங்கல் வைத்து, அந்தக் காளைக்கன்றின் முதுகில் திருநாமம் போன்று சூட்டுக்கோலால் ''சூலம்சாத்தி'' அவிழ்த்து விட்டுவிடுவார்கள். அந்த அடையாளம் எப்போதும் அழியாமல், பார்க்கிறவர்களுக்கு இது கோயில் மாடு என்று தெரியும்படி இருக்கும். இதனால் அந்த மாட்டுக்கு ஒரு தனிசுதந்திரம் உண்டு.

யாரும் அதை அடிக்கவோ துன்புறுத்தவோ மாட்டார்கள். இஷ்டப்படி அது சம்சாரிகளின் விளைச்சலைத் தின்று வளரும், காடுகளில்.

இப்படித் தன்னிச்சையாக மேய்ந்து அந்தக் கன்று வளர்ந்து காளையாகி, ஊர்க்கால் மாட்டு மந்தைகளில் வந்து முடையடித்த பசுக்களை வாடைபிடித்து அதை விரட்டிப் 'பயிரா'கும். இந்த முக்கிய உபயோகத்துக்குத்தான் சம்சாரிகள் அந்த அழகான கோயில் பொலிகாளையின் அழிமானத்தைத் தாங்கிக்கொள்கிறார்கள். அதோடு தங்கள் பசுமாடுகள் இதனால் ஜாதிக்கன்றுகள் ஈனுகின்றன.

பகலெல்லாம் அது இப்படி மேய்ந்து அலைந்து திரிந்துவிட்டு அந்தியானதும் கோயிலுக்கு முன்னால் வந்து ''நந்திவாகனம் போல'' படுத்து அசைபோட்டுக்கொண்டிருக்கும்.

இப்படியான கோயில்காளைகளின் தலைமுறை வரிசைகளைப் பற்றிக் கிராமத்தில் பல கதைகள் நிலைத்து நிற்கின்றன.

ஒரு கோவில்கன்று காளைப்பருவத்தை அடைந்து, மூன்று அல்லது நான்கு வருசங்களுக்குத்தான் அது கிராமத்தோடு ஒட்டுதலாக இருக்கும். பிறகு அதுக்கு மூர்க்கம் அதிகமாகி மனித சிநேகத்தை முறித்துக்கொண்டுவிடும். அதன் பிறகு அதைப்பார்த்து மனுசர் பயப்படுகிறதும் மனுசரைப் பார்த்து அது கால்மண் வாரி அடிப்பதும் கொம்பை தீட்டிக்கொண்டு ''செருக்குப் போடுகிறது'' மாகிவிடும். இந்த செருக்குப் போடுகிறது என்பது, கிட்டத்தட்ட அது மனுசனைச் சண்டைக்குக் கூப்பிடுகிறது போலவே இருக்கும்! இந்த நிலைக்கு வந்து விடுகிற ஒரு கோயில்காளையைக் கொண்ட கிராமம் சதா 'எலைகொலையாத்' தவித்துக் கொண்டிருக்கும்.

நந்தகோபநாயக்கருடைய தொழுவில் ஒருநாள், சகல லட்சணங்கள் கொண்ட ஒரு காரரிக்காளைக்கன்று பிறந்தது. அதனுடைய வடிவழகை நாள்பூராவும் பார்த்து அனுபவித்துக் கொண்டேயிருப்பார்கள் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்ட முகத்தோடு.

அவருடைய பசுத்தொழுவில் எப்பவுமே தெரித்த மாடுகளாகத்தானிருக்கும். அவைகளில் அவருக்குப் பிடித்தமான ஒரு காராம் பசு இருந்தது. அதனுடைய பாலின் மணம் அவருக்கு ரொம்பப் பிடித்தம்.

அதோடு அது ஒரு நெட்டீத்துக் கறவை கொண்ட மாடு. பாலுக்கு ஆசைப்பட்டதால் ஈத்துகள் சோம்பிப்போயின.

மற்ற மாடுகளெல்லாம் மேய்ச்சலிலிருந்து திரும்பி, குளத்தில் தண்ணீர் விளிப்பருகே நின்றுகொண்டு தண்ணீர் குடிக்கும்போது இந்தக் காராம்பசு மட்டும் தண்ணீருக்குள் இறங்கி முழங்கால் முங்கும் அளவுக்குத் தண்ணீரில் நின்றுகொண்டு குடிக்கும்.

''இது என்னய்யா இந்த மாடு மாத்தரம் இப்பிடிக் குடிக்கி!'' என்று கேட்பவர்களுக்கு அவர் சொல்லும் பதில் ''உடம்புல கோரோஜனை இருக்கிற மாடுக இப்பிடித்தான் குடிக்கும்'' என்பார்.

ஒருநாள் அவர் குருமலையின் அடர்ந்த சிறைக்காட்டில் மலைக்கீரை பறிக்கப் போயிருந்தார். காட்டின் நடுவே ஒரு தாவில் ஒரு அழகான முதிர்ந்த காரி நிறத்தில் ஒரு பொலிகாளையைப் பார்க்க நேர்ந்தவுடன் சந்தோஷமும் பயமும் பின்ன அப்படியே நின்றுவிட்டார்.

இது எங்கேயோ ஒரு கிராமத்தை முறித்துக்கொண்டு இப்போது இங்கே வந்து இந்தக் காட்டில் வாசம் பண்ணுகிறது என்று நினைத்தார்.

உடம்புத் திமிரின், தாங்க முடியாத கொம்புத்தினவின் காரணமாக அது பூமியை முட்டி முட்டித் தென்னியதால் தேய்ந்த கொம்புகளும், அதில் மண் உறைந்து காணப்படுவதையும் கவனித்தார்.

நந்தகோபநாயக்கர் வைத்தகண் வாங்காமல் அதைப் பார்த்துக்கொண்டிருந்தார். ஒரு தீர்மானத்துக்கு வந்தார் உடனே. அன்றிலிருந்து அவருடைய பசுமாட்டு மந்தையை அவர் அந்தக் குருமலைக் காட்டுக்கே மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டுவரத் தொடங்கிவிட்டார்.

கொஞ்சம் தூரம் அதிகம்தான். என்றாலும் தன்னுடைய தொழுவில் இப்படி ஒரு காரியக்கன்று நிற்கவேண்டும் என்று ''குளிர் ஆட்டியது'' அவருக்கு.

வழக்கமான மேய்ச்சல்த் தரையிலிருந்து இந்த மலங்காட்டுக்கு மந்தைகளை ஓட்டிக்கொண்டு வர சிரமப்பட்டது. மாடுகள் புதிய இடத்தை விரும்புவதில்லை. ''மாடு மேய்ந்த இடம்; மழை மேய்ந்த இடம்'' என்று பெரியவர்கள் தெரியாமலா சொன்னார்கள் என்று எண்ணிக்கொண்டார்.

மற்ற மாட்டுக்காரப் பையன்களையும் தன்னோடு சேர்த்துக் கொண்டார். அவர்களும் ஒரு மாறுதலுக்காக குருமலைக் காட்டுக்கு தங்கள் மாட்டுமந்தைகளையும் இவரோடு சேர்ந்து பத்திக்கொண்டு வர ஆரம்பித்தார்கள்.

எதிர்பார்த்தபடி நந்தகோபருடைய காராம்பசு முடையடித்த நாளில் - மந்தையோடு அது மேய்ந்து கொண்டிருந்தபோது - அந்தக் காரி எங்கிருந்தோ வாடை பிடித்து வந்து சேர்ந்துவிட்டது.

தூரத்தில் அதன் வரத்தைக் கண்டதுமே மாடு மேய்க்கும் சிறுவர்கள் அவரவர் அருகிலுள்ள மரங்களில் ஏறிக்கொண்டார்கள். நந்தகோபன் ஒரு உயர்ந்த பாறை மேல் ஏறிக் கொண்டார். அது, அடர்ந்த கொடி செடிகளை நெடுநெடு என்று முறித்துக்கொண்டு காராம் பசு இருக்கும் இடத்தை நோக்கி வந்தது.

காளையைக் கண்டதும் பசு, போக்குக் காட்டி வாலைத் தூக்கி சுருக்கு மூத்திரம் விட்டது.

தும்முவதற்குச் சூரிய வெளிச்சத்தைத் தேடுவது போல காளை தனது முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டே பசுவை நெருங்கியது. பக்கத்தில் மேய்ந்துகொண்டிருக்கும் பசு மாடுகள் இதைப்பற்றி எந்தவிதச் சலனமும் இல்லாமல் அததுபாட்டுக்கு மேய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தார் நந்தகோபன். 'மனுசப் பயலுக்குத் தான் வேற வேலை இல்லை!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார்.

அன்று பகல் பூராவும் அது இவருடைய பசுவோடு சுற்றி வந்துகொண்டிருந்தது. மேற்கே கருமலையில் பொழுது இறங்கப் போகும் வேளைக்கு அவருக்கு ஒரு புதிய பயம் வந்துவிட்டது; தன்னுடைய காராம் பசுவை இந்தக் காரிக்காளை எங்கே அதனோடு மலைக்குள்ளே கூட்டிக்கொண்டு போய் விடுமோ என்று!

இதைச் சொல்லிச் சொல்லி மாடுமேய்க்கும் பிள்ளைகள் அவரைக் கேலிசெய்து சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஊரைப் பார்த்து பசுமாட்டு மந்தைகளை பத்தப்போகும் வேளைக்கு காராம்பசு மந்தையோடு சேர்ந்துவர ஆரம்பித்தது. அந்தக் காளையும் அவருடைய மந்தையோடு கொஞ்சதூரம் வந்து பிறகு நின்று கொண்டது.

❖

# 8

காளை வந்து பயிராகிய அந்த அமாவாசையிலிருந்து எண்ணிக் கொண்டே வந்தார் நந்தகோபன்; பத்தாவது அமாவாசை முடிந்து சிலநாளில், அந்தத் தகப்பனைக்கொண்டு அப்படியே காரிக் கன்றாகப் பிறந்தது.

ஜொன்னுவுக்கு ஆசைப்பட்டுக்கூட சீம்பால் பீய்ச்சாமல் முதல் மூன்றுநாளும் கன்றுக்கே பாலை விட்டுவிட்டார். நாப்பது நாட்களுக்குக் கன்று இஷ்டத்துக்கு குடித்ததுபோக மீதிப் பாலையே கறந்தார். அதன்பிறகு ரண்டுகாம்பு கன்றுக் குட்டிக்கு, ரண்டுகாம்பு அவருக்கு என்று வைத்துக்கொண்டார்.

கட்டுத்தரைக்கு கன்றுக்குட்டியை இழுத்துக்கொண்டுபோக முடியாமல் அதோடு மல்லுக்கட்ட வேண்டியதிருந்தது, அதன் உடல்முறுக்கு.

அதனுடைய அங்க லட்சணங்களையும் சுழிசுத்தத்தையும் வாகையும் பார்த்துப் பார்த்து நந்தகோபன் வியந்து ஆனந்தப்பட்டார்.

சம்சாரி வீட்டில் நிற்கவேண்டிய காளைக்கன்று இல்லை இது; பெருமாளுக்கே உரியது என்று கோயிலுக்கு நேர்ந்துகொண்டார்.

வீட்டில் மனைவியிடமும் குழந்தையிடமும் இதைத் தெரிவித்து, ஊர்ப்பெரியவர்களிடமும் தெரிவித்தபோது, பெரியவர்கள் அவரை வாழ்த்தி, ''கோபன்ன, நாங்களே ஓங்கிட்டச் சொல்லணும்ன்னு இருந்ததை நீயே செஞ்சீட்டெ, பெருமாள் கிருபை'' என்றார்கள்.

பெருமாளுக்குக் காளை வாகனம் இல்லை; என்றாலும் அவன் பசுக்களையும் கன்றுகாலிகளையும் மேய்த்துப் பராமரித்தவன் அல்லவா? சம்சாரிகள் அவைகளை அப்படியே பார்க்கிறார்கள். இன்றும் பசுமந்தைகள் மேய்ச்சலுக்குப் போகும்போது புல்லாங் குழலோடு அவைகளின் கூடவே அவன் வருவதாக மேய்ப்பவர்கள் நம்புகிறார்கள் என்று நினைத்தார்.

❖

வீரியமாக வளர்ந்த காரிக்கன்று பால் மறந்து கூளம் கடிக்க ஆரம்பித்ததும், புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமை அன்று பெருமாள் கோயிலுக்குப் பொங்கல் வைத்து காரிக்கும் கொஞ்சம் தந்து, ஊரோடு அவர்களும் உண்டு மகிழ்ந்து, காரியின் பின் முதுகில் சூட்டுக் கோலினால் சூலம் எழுதி அவிழ்த்து விட்டுவிட்டார்கள். சூட்டுக்கோலின் அனல்ப்பொசுக்கல் வலியால் துடிதுடித்து ஓடிய காரியைத் தன் போக்கில் விட்டுவிட்டார்கள்.

மறுநாள், அதுக்கு எப்படித்தான் தெரிந்ததோ; வீடு தேடி வந்துவிட்டது! அதன் பின்னால் ஊர்க் குழந்தைகளின் ஆரவாரம்!

நந்தகோபனுக்கும் அவருடைய குழந்தைகளுக்கும் ஆனந்தம் பிடிபடவில்லை. கம்மஞ்சோற்றில் தவிடு பிண்ணாக்கு பருத்திக் கொட்டை என்று கலந்து எடுத்துக்கொண்டு வந்து அதற்கு வைத்தார்கள்.

''வீட்டெக் கண்டுபிடிச்சி வந்துட்டதே; பாத்தியளா. வீட்டெக் கண்டுபிடிச்சி வந்துட்டதே'' என்று பார்க்கிறவர்களிடமெல்லாம் சொல்லி மகிழ்ந்தார்கள்.

சாய்ந்தரம் வரை அது அவர்களுடைய தொழுவுக்குள் அங்கு மிங்குமாக அலைவதும், குடிதாழியில் கழுநீரைக் குடிப்பதும், கூளத்தைக் கடிப்பதும், நினைத்த இடத்தில்ப் படுத்து, அசை போடுவதுமாக இருந்தது. விளக்கு வைத்த கொஞ்ச நேரத்துக் கெல்லாம் காரியை தெருவில்ப் பத்தி தொழுக் கதவை அடைத்து விட்டார்கள்! பாவம், அதுக்கு என்ன செய்ய என்று தெரியவில்லை. தயங்கி நின்று மூடிய கதவை நோக்கி ''அம்மா...'' என்று குரல் கொடுத்தது.

வீட்டுக் குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் மனசு ரொம்பச் சங்கடப்பட்டது. நந்தகோபன் கல்லாக்கிக்கொண்டார் மனசை.

ராத்திரி பூராவும் அது தொழுவின் வாசப்படி அருகேயே படுப்பதும் எழுந்து நிற்பதுமாக இருந்தது. பிறகு என்ன நினைத்துக் கொண்டதோ ஊரை ஒரு சுற்று வந்தது.

மறுநாள், அதுக்கு வீட்டிலிருந்த ஒன்றும் தரக் கூடாது என்று நந்தகோபன் சொல்லிவிட்டார். இங்கேயே அதுக்கு எல்லாம் தந்து போஷித்துக் கொண்டிருந்தால் எப்படி அது கோயில்காளை ஆகமுடியும்?

ஆனாலும் அவருடைய குழந்தைகள், வீட்டுக்குத் தெரியாமல் ஏதாவது கொடுக்கத்தான் செய்தார்கள்.

மறுநாளும் அது தொழு வாசலின் முன்னால் தெருவில் படுத்துக் கொண்டிருந்தது. அதனால் பசி தாங்க முடியவில்லை. ஊரடித் தோட்டமான லெட்ச்மண்ணாவின் தோட்டத்தில் செழிப்பாக வளர்ந்திருந்த கதிர்தள்ளும் பருவத்திலுள்ள கேப்பைப் பயிரை வயிறுமுட்ட மேய்ந்துவிட்டு, ஊரை ஒரு சுற்றிச் சுற்றிவிட்டு, எங்கேயும் வசதிப்படாததால் பெருமாள் கோயிலுக்கு முன்னால் உள்ள வசதியான இடத்தில் படுத்து அசை போட ஆரம்பித்து விட்டது.

லெட்ச்மண்ணா வீட்டு வேலைக்காரன் காலையில் வந்து தகவல் சொன்னான், ''மொதலாளி, நம்ம தோட்டத்தில் யார் மாடோ வந்து பயிரெல்லாம் மேஞ்சி ஒழப்பிக்கெடக்கு!'' கோபத்தோடு புறப்பட்டுப் போன லெட்ச்மண்ணா சிரித்துக்கொண்டே வந்தார். ''அட கோடிக்காரப் பயலே, இதுகூடத் தெரியலையா, கோயில் மாடு மேஞ்சிருக்குடா; அது மேஞ்சது போகத்தாண்டா நமக்கு'' என்று சொன்னார். வேலையாள் கழுவனுக்கு இதை ஏற்றுக்கொள்ள முடியலை. தோட்ட மகசூலில் அவன் பங்குக்காரனாகச் சேர்ந்திருக் கிறான். வருகிற மாசூலில் எட்டில் ஒரு பங்கு அவனுக்கு. உழுது - நாலு உழவு போட்டு - பாத்திகட்டி, நாற்றுப் பாவி நடுவை வெட்டி, ஒண்ணாங்களை ரண்டாங்களை என்று மூணு களை வெட்டி, 'ரத்தத்தைப் பாய்ச்சினது போல' கமலைத் தண்ணீர் ராவா பகலாப் பாய்த்து அரும் பாடுபட்டவன் அவன்.

'இன்னொரு தபா வரட்டும்; நல்...ல அடி சதப்பிருதன் அந்தக் கோயில்க் காளையெ' என்று மனசுக்குள் கறுவிக்கொண்டான்.

அப்புறந்தான் காரிக்கு தெரிந்தது; - இப்படி ரகசியமாய், அடிவாங்கிய இடத்துக்கு இனிமேல் மேயப் போகக்கூடாது என்று!

ஆனாலும் காரிக்கு செல்வாக்கு 'கொடிகட்டித்தான் பறந்தது!' செழிக்கச் செழிக்க பெரிய சம்சாரிகளின் தோட்டங்களிலும் விளைந்த புஞ்சைகளிலும் ஆள் இல்லாத நேரமாகப் பார்த்துத்தான் மேய வேண்டும் என்று கழுவன் கொடுத்த அடிகளிலிருந்து கற்றுக் கொண்டது.

காரி இப்படி மேய்ந்துவிட்டு, அதிகாலையில் கோபன்னாவின் தொழுவாசலிலும் வந்து நின்றுவிடும், தவிடு கலந்த பருத்திக் கொட்டை ஊறலைத் தின்பதற்கு.

இந்த வழக்கம், காளையாகி அது பசுமாடுகளை 'விரட்டு'கிற வரைக்கும் இருந்தது. பிறகு அது தொழுவைத் தேடி வருவதற்குப் பதில் பசுமாட்டு மந்தையைத் தேடிப் போக ஆரம்பித்துவிட்டது.

காரியின் அந்த நிறமும் திமிர்ந்த உடல்க்கட்டும் உயரமான திமிலும் ஊசிக் கொம்புகளும் பார்ப்பவர்களைப் பயந்து விலகிச் செல்லும்படி செய்தது.

மனுசர்கள் தன்னைப் பார்த்து ஏன் இப்படிப் பயந்து ஒதுங்குகிறார்கள் என்று முதலில் அது தயங்கினாலும் பிறகு அதுக்கு அதுவே ஒரு திருப்தியாக இருக்கும்போல்த் தெரிந்தது.

சிறுவர்கள் பயந்து ''ஓ காரி வந்துவிட்டது...'' என்று கூவிக் கொண்டு ஓட்டம் பிடிப்பது சாதாரணமாகிவிட்டது. இதே வழக்கமான பிறகு, தன்னைக் கண்டும் ஒதுங்காத சிறுவர்களைப் பார்த்து அது கொம்பை ஆட்டி ஆட்சேபம் தெரிவித்தது! முதலில் அதை இப்படிப் பாயப் பழக்கப்படுத்தியவர்கள் சிறுவர்கள்தான்.

அந்த மக்கள் மனசில் காரி தனக்கென்று ஒரு இடம் பிடித்துக்கொண்டது. அதைப்பார்த்துப் பரவசப் பட்டார்கள் பலர். அதன் உடல்வாகை புச்சன்னா வர்ணிப்பார்:

''பார்ரா, என்ன நீளம் கீரிப்பிள்ளை கெணக்க. திமிலைப் பாத்தாயா தேர் மாதிரி எம்புட்டு உசரம். வாலைப் பாரு சுண்டெலி வால் போல அம்புட்டுச் சிறிசு; சன்னம்.

சரியான கல்க் காட்டுப் பிறவி; ஈக்கி நுழையுமா பாரு குளம்புக நடுவில!

அதும் முதுகுல ரண்டாள் படுத்துப் புரலாம்டா!'' என்பார்.

மாட்டுக்காரச் சிறுவர்கள் அவருடைய மோகத்தைப் பார்த்து ''ஒரு பசுமாடாப் பிறக்கலையேண்ணு இருக்கு உமக்கு இப்பொ!'' என்பார்கள் கேலியாக.

காரியைத் தொட்டுப் பாக்கணும், அதைத் தட்டித் தடவி விடணும் என்றெல்லாம் புச்சன்னாவுக்கு ஆசை. ஒருநாள் அதை அவர் நெருங்கியபோது, எதிர்பாராமல் அவரைக் கோதி தூர எறிந்தது. கீழே விழுந்து புரண்டு எழுந்த புச்சன்னா எழுந்து காலை நொண்டிக்கொண்டே சிரித்து ''ஒங்நாத்தாளைக் களுத கெடக்க; என்னன் கோவம் பார்ரா இதுக்கு!'' என்றார்.

அப்பவும் அதும் பேரில் அவருக்கு கொஞ்சமும் வருத்தமில்லை.

என்றாலும், இந்த சம்வத்திற்குப் பிறகு ஊர் கொஞ்சம் பரபரப்புக் கொண்டது.

பெரியவர்களும் காரியைக் கண்டு பயந்து ஒதுங்க ஆரம்பித் தார்கள்.

கோபல்ல கிராமத்தின் பசுக்கள் ஆரோக்கியமான கன்றுகள் ஈன்றன. காரியைப் போலவே அவைகள் அழகாக நிறமாக இருந்தன.

நாட்கள் ஆக ஆகக் காரியின் போக்கு சகிக்க முடியாத அளவுக்கு ஆகிவிட்டது.

''ஊர்ல இம்புட்டுப் பசுமாடுக இருந்தும் அதுக்கு மப்பு அமுங்கலையே!'' என்றார்கள்.

ஒரு நாள், வேற்று ஊர் கோயில்க் காளை ஒன்று கிராமத்தின் பசுமாட்டு மந்தைக்குள் நுழைந்ததைப் பார்த்த மாட்டுக்காரச் சிறுவர்கள் ஒரே சந்தோஷ ஆரவாரம் செய்து வரவேற்றார்கள்.

''ஏ... நொப்ப நீ எங்கருந்து வாடை பிடிச்சி வந்தெ?'' என்றார் புச்சன்னா.

''ஏ... இது மலங்காட்டு ராஜா மாதரித் தெரியுதப்போவ்'' அதன் புல்லை நிறத்தின் மேல் மலைக்காட்டின் செம்மண்ணினால் ஏற்பட்ட செங்களிப்பு நிறம் தோன்ற இருந்தது அது.

உளிக்கொம்புகளும் கல்க் குளம்புகளும், மேலில் காணப்பட்ட கள்ளிப்பால்ச் சொட்டுகள் விழுந்ததினால் ஏற்பட்ட கறைத் தழும்புகளும் அப்படி அவர்களை எண்ண வைத்தது. புல்லையைப் பார்த்துவிட்ட காரி, மேற்கேயிருந்து வேகமாக அதைப் பார்த்து வந்தது.

ரண்டும் ஒன்றையொன்றும் பார்த்துக்கொண்டதும் செறுக்குப் போட்டு, கால் மண்வாரிக் கொண்டது. ‘நெமைதட்டும்’ நேரத்துக்குள் அவை சண்டைக்குத் தயாராகிவிட்டன.

ரண்டும் பயங்கரமாக மோதிக்கொண்டன.

காரிக்குச் சரியானபடி வேண்டும் என்று நினைத்த மாட்டுக்காரச் சிறுவர்கள் புல்லையின் பக்கம் சேர்ந்துகொண்டு, ''விடாதெ எடுத்து எறி அதெ; விடாதெ'' என்று கத்தினார்கள், தூரத்தில் இருந்து கொண்டே. புச்சன்னா ஒருத்தர்தான் காரியின் பக்கம்!

வெகுநேரம் அவைகள் சண்டையிட்டன; எது தோற்கும் என்று சொல்ல முடியாதபடி. வைரம் பாய்ந்த சொறசொறப்பான மரங்களிலும் பாறைகளிலும் தினவெடுத்த கொம்புகளை உரசி உரசி கதிமை அடைந்த புல்லையின் கொம்புகள் காரியின் முகத்திலும் உடம்பிலும் குத்திக் கிழித்து ரத்தம் பெருக்கெடுத்தது.

எவ்வளவு ரணங்கள் ஆனாலும் சரி புல்லையைத் தனது மந்தைக்குள் புகவிடுவதாக இல்லை காரி.

நேரம் ஆக ஆக, மாட்டுக்காரச் சிறுவர்களும், சத்தம்கேட்டு ஓடிவந்த மந்தைக் காவல்க்காரர்களும் இன்னது செய்ய என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தார்கள். மந்தையிலிருந்து கேட்ட இந்த ஆரவாரங்களையும் கூக்குரல்களையும் கேட்டு கிராம வாசிகள் என்னமோ ஏதோ என்று கம்புகளையும் கத்திகளையும் எடுத்துக்கொண்டு ஓடிவந்தார்கள்.

அவர்களும் முதலில் இந்தக் காளைச் சண்டையைக் கண்டு கொஞ்சம் ரசித்தாலும், எப்படி இவைகளை விடுவிப்பது என்று யோசித்தார்கள்.

தூரத்திலிருந்து நந்தகோப நாயக்கர் கூப்பாடு போட்டுக் கொண்டே ஓடிவந்தார். ஓடிவந்த வெருச்சில் அவருக்கு மேல் மூச்சு வாங்கியது. கூட்டத்தினரைப் பார்த்து அவர் கத்தினார். ''ஏ கோட்டிக்காரப்பயகளா, விருதா கோட்டிக்காரப் பயகளா; வேடிக்க என்ன பாத்துக்கிட்டிருப்பீகடா. அடிச்சிப் பத்துங்கடா வேத்து ஊருக் காளையெ.'' பிறகுதான் இவர்களுக்கும் மண்டையில் பொறி தட்டியது; ‘ஆமாம், வேற்றுக்காரனுக்கு இடங்கொடுக்கக் கூடாது’ என்று!

❖

# 9

தூரத்தில் இருந்துகொண்டே கல்லுகளாலும் கட்டிகளாலும் புல்லையை எறிந்தார்கள்.

தனக்கு விரோதமாக மக்களின் கூக்குரலையும் அதட்டுகளையும் பயங்கரமான கல்லெறிகளையும் கண்ட புல்லை பின்வாங்கி ஓடியது.

காரி இவர்களை மருண்ட பார்வை பார்த்து மூச்சு இளைத்துக் கொண்டே அப்படியே நின்றது. அதன் கருத்த நிற உடம்பில் புல்லையின் கொம்புகள் குத்திக் கிழித்த இடங்களி லெல்லாம் செவச்செவேலென்று பரும் செம்பூக்களைப் போல் ரத்தக் காயங்கள் தெரிந்தன. காரி மீண்டும் மீண்டும் கொம்புகளைத் தரையை நோக்கி அசைத்துக்கொண்டு நின்றது.

புச்சன்னா ஆதாளை இலைகளைப் பிடுங்கி, வடியும் ரத்தத்தைத் துடைக்க அதன் அருகே போனார். கிட்டே நெருங்காதே என்பது போல அது இவரை நோக்கிக் கோபத்தோடு 'சீத்' அடித்தது.

வயசாளியான அப்பிநாயுண்டு கூவிச் சொன்னார்; ''அடே, அது பக்கத்தில போகாதெ; கோவமாயிருக்கு. ஏற்கனவே ஒன்னெ ஒரு தபா எடுத்து எறிஞ்சிருக்கு, கிட்டப் போனாலே ஒன்வாடை அதுக்குப் பிடிக்கலை; போ அந்தாலெ''

புஞ்சை வரப்போர ஒதுக்கத்தில கம்பை ஊன்றி நின்றுகொண்டு புருவக்கட்டில் இடதுகையைப் பொருத்தி, பொழுதின் ஒளி கண் கூசாமலிருக்க வைத்துக்கொண்டு கவனித்துக்கொண்டிருந்த அப்பிநாயுண்டுவை நெருங்கி நந்த கோபன் கேட்டார்:

''ஏன் தாத்தா இந்த மிருகங்களுக்கு ஒருத்தர் வாடை பிடிக்கி. ஒருத்தர் வாடை பிடிக்கமாட்டேங்கு?''

அப்பிநாயுண்டு தனது பெரிய்ய வெள்ளை மீசைக்குள்ளாக சிரித்துக்கொள்வது தெரிந்தது நந்தகோபனுக்கு. அவர் சொன்னார்;

''மிருகங்க மட்டுந்தானா; மனுஷ விஷயம் எப்பிடி? இங்கயும் ஒரு பெண்ணுக்கு ஒரு ஆணின் வாடை பிடிக்க மாட்டேங்கு; ஒரு ஆணுக்கு ஒரு பெண்ணின் நாத்தம் பிடிச்சிப் போயிருக்கு''

நந்த கோபருக்குக் கொஞ்சம் நாணமாக இருந்தது இதைக் கேட்க. ஆனாலும் ஒரு அந்தரங்கம் அவிழ்கிறது போலப் புரிந்தது; தான் ஏன் அதிமோகத்தோடு அவளுடைய கக்கத்தில் முகம் புதைத்து முகர்கிறோம் என்று.

கும்பலில் இருந்த பெரியவர்கள் எல்லாம் அப்பிநாயுண்டு பக்கம் வந்தார்கள். ''நீங்க எப்பிடி இங்கே வந்திட்டீங்க'' என்று உபசாரத்துக்குக் கேட்டார்.

குளுந்த நேரத்தில மந்தையிலெ போடுறசத்தந்தான் மூணு ஊருக்குக் கேக்கும் போலிருக்கெ'' என்றார் அவர் புச்சன்னா வந்து கேட்டார்:

இந்தக் காயங்களுக்கெல்லாம் என்ன செய்ய? என்று. ''என்ன செய்ய முடியும். மூர்க்கமுள்ள மிருகத்துக்கிட்டப் போயி பச்சலை தேய்க்க முடியுமா; கூப்பிட்டு ஒத்தடம் கொடுக்க முடியுமா!'' என்று கேட்டுவிட்டு, அதுக்கு இதெல்லாம் ஒண்ணுஞ் செய்யாதுடா; தானாக் குணமாயிரும். கடவுள் அததுக்கு எப்பிடிப் பண்ணணுமோ அப்பிடி வேண்டிய ஏற்பாடுகள் பண்ணிவச்சிருக்கார்'' என்றார் அப்பிநாயுண்டு.

தூரத்தில் இருந்துகொண்டே அங்கிருந்தவர்கள் காரியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கொஞ்ச நேரம் அது செருக்குப் போட்டுக் கொண்டிருந்துவிட்டு, பிறகு பசுக்களின் மந்தைக்குள்ளே புகுந்தது.

செந்தவிட்டு நிறத்திலுள்ள ஒரு பசு வந்து காரியை நக்கிக் கொடுத்தது. அது நக்கநக்க காரி கொஞ்சம் கொஞ்சமாக சாந்தம் அடைந்து தன்னிலைக்கு வந்து தன் காயங்களிலுள்ள ரத்தத்தை நக்கி சுத்தப்படுத்த ஆரம்பித்தது.

இளவட்டங்களின் கூட்டத்திலிருந்து கிட்டப்பன் மாட்டுக்காரப் பையன்களைக் கூப்பிட்டுச் சொன்னான்: ''புல்லைய வெரட்டீட் டோம்ன்னு நெனைச்சிக்கிட்டிருக்காதிக. அது திரும்ப வந்தாலும் வரும்'' என்று ஜாக்கிரதைப்படுத்தினான்.

ஆனால் அந்தப் புல்லை அதுக்குப் பிறகு கோபல்ல கிராமத்தின் பசுமந்தையை நோக்கி வரவே இல்லை.

இந்தக் காளைச் சண்டைக்குப் பிறகு காரியின் மூர்க்கம் மிகவும் அதிமாகிக்கொண்டே வந்தது. நாளாசரியாக அது பூரண மனுஷ எதிரியாகிவிட்டது.

இப்போதெல்லாம் பகலில் அது ஊர்ப்பக்கமே வருவதில்லை. தன்னிச்சையாக காடுகளிலேயே திரிந்து அலைந்து, சரியான ஒரு காட்டுப்பிறவியாக உருவாகிக்கொண்டு வந்தது.

தூரத்துப் புஞ்சைக்காட்டில் நடமாட வேண்டிய மனுசர்கள் காரியை எந்த நேரத்திலும் எந்த இடத்தில் எதிர் கொள்ள வேண்டியது நேருமோ என்று 'பயந்து செத்தார்'கள். கம்மங்கதிர் காவலுக்கு பரண்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டிருந்த எர்ய்யா, மத்தியானக் கஞ்சிக் குடிக்க வீட்டுக்குப் போவோம் என்று இறங்கக் கால் வைத்தார் பரணின் ஏணிப் பளுதில்... கீழே - பரணுக்குக் கீழே - பார்த்தால் காரி சாவகாசமாப் படுத்து அசை போட்டுக் கொண்டிருக் கிறது!

நேரம் ஆக ஆக அவருக்கு இன்னொரு பயம் வந்துவிட்டது. தகப்பனார் வீட்டுக்கு வரத் தாமதமானால் அவருடைய பையன் காட்டுக்குத் தோண்டியில் கஞ்சி கொண்டுவந்து விடுகிறது வழக்கம். இப்பொ இந்த சமயத்தில் அவன் வந்துவிடக்கூடாதே என்கிற ரண்டாவது பயம்.

பரண்மேலே நின்றுகொண்டே பையன் எங்காவது தூரத்தில்த் தட்டுப்படுகிறானா என்று கவனித்துக்கொண்டே இருந்தார்.

என்ன காரணத்தாலோ அன்று அவன் வரவில்லை:

பிறகொரு நாள் மத்தியானக் கஞ்சிக்காக பரணிலிருந்து இறங்கிப் பாதை வழியாக நடந்து வந்தார். ஒண்ணுக்கு இருப்பதுக்காக ஒரு புஞ்சைக்குள் விலகினார். இருந்துவிட்டு எழுந்தபோது, ஒரு கம்மங்கதிர் அப்போதுதான் பால் கூட்டி முத்துக்கோர்த்திருந்தது. பகையாளியின் புஞ்சையாக இருந்தாலும் அப்படி ஒரு கதிரைக் கண்டுவிட்டால் ஒடித்துத் திங்காமல் எப்படி நகர முடியும். கதிரின் மேல்க் கையை வைத்தார்; முதுகுக்குப் பின்னால் கம்மம் பயிர்கள் சலசலத்ததுபோல அருக்கு. திரும்பிப் பார்த்தார். காதுகளை வெடைத்துக்கொண்டு காரி இவரையே பார்த்துக்கொண்டு நின்றது!

அங்கிருந்து பிடித்த ஓட்டம், ஊருக்குள் வந்துதான் நிறுத்தினார்.

அதுக்குப் பிறகு எர்ரய்யாவின் தூக்கம் கெட்டது, படுக்கையில் படுத்து கண்ணை மூடினால் காரிதான் வந்து காதை வெடைத்துக் கொண்டு நிற்கும்!

அன்று சாய்ந்திரமே சிந்த்தம நாயக்கரை அதே காட்டில் காரி முட்டி குடலைச் சரித்துவிட்டது.

ஊர்மடத்தில் இளவட்டங்களும் பெரியவர்களும் கூடி இனிக் காரியை என்ன செய்கிறது என்று யோசித்தார்கள்.

நாள்ப் பார்த்து அதைப் பிடித்து மூக்கணங்கயிறு பூரிக் காயடித்து விட வேண்டியதுதான் என்று முடிவாகிவிட்டது.

எப்பேர்ப்பட்ட காளை, அடடா! இந்தக் கிராமத்துக்கே ஒரு பேர் அதனால்.

அது வந்து நிற்கிறதையும் நடந்து போகிற அழகையும் பார்த்து விட்டால் அதிலிருந்து கண்ணை எடுக்க மனசு வருமா.

ஊரெல்லாம், மந்தை பூராவுமே காளையும் கிடாரியுமாக அதன் வாரீசாகத்தானே.

இப்படி இனி ஒரு கோயில்காளை கிடைக்குமா என்கிறது சந்தேகந்தான்.

இப்படியெல்லாம் பேசிக்கொண்டார்கள்.

❖

## *10*

காரியைப் 'பிடிக்க'ப் போகிறார்கள் என்கிற செய்தி ஊருக்குள் பரவியது.

அதைப் பார்க்கவேண்டுமே என்ற ஆசை அச்சிந்தலுவுக்கும் உண்டானது.

அதைப் பற்றிய பலவிதமான கற்பனைகள் அவரவர் மனசுக்குத் தக்கபடி எழுந்தன.

காரியைப் பார்க்கும் போதெல்லாம், அதன் உடம்புத் தினுக்கும் கம்பீரமான நடையும் அவளுக்குக் கிட்டப்பனை ஞாபகப்படுத்தும்.

ஒரு பௌர்ணமி நிலவு.

அச்சிந்தலு அசந்து தூங்கிக்கொண்டிருந்தாள். தொழுவில் அமைதியில்லாத தவிப்பு நிறைந்த பசுவின் 'கனைப்பு'க் கேட்டு விழித்தாள்.

அவளுடைய பிரியமான பசு குரல் கொடுத்தது.

வீட்டில் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். அய்யாவை மட்டும் படுக்கையில்க் காணவில்லை. ''தெக்குத் தெரு''வுக்குப் போயிருப்பார்!

அப்படி ஒரு வதந்தி, அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தாள். தன் சோட்டுப் பெண்பிள்ளைகளுடன் குளத்தில் நீந்தி விளையாடிக் கேலி பேசிச் சிரித்தபோது ராமக்காதான் அதைச் சொன்னது.

கேலிக்குத்தான் சொல்லுதாளோ என்றே நினைத்தாள் முதலில்; பிறகு தெரிந்தது, அது வதந்தியில்லை என்று. பௌர்ணமியின் ஒளிவெள்ளம் வீட்டினுள்ளும் பாய்ந்திருந்தது. அந்த ஒளிப்பிர வாகம் அவளை வா வா என்று வெளியே அழைத்தது. நெடுமூச் செறிந்து, துப்பட்டியை விலக்கி எழுந்து படுக்கையில் அப்படியே சிறிது உட்கார்ந்திருந்தாள். திரும்பவும் ஒரு நெடுமூச்செறிந்தாள்.

அந்த அத்தராத்திரியின் உரத்த மௌனமும் ஒலி விழாத செவிப் பறையின் இரைச்சலும் என்னவோ செய்தது.

தூரத்தில் எங்கோ ஒரு மாடு செருமும் சத்தம் கேட்டது.

தொழுவத்தில் திரும்பவும் பசுவின் தவிப்பு நிறைந்த 'கனைப்பு.'

துப்பட்டியை உதறிவிட்டு, எழுந்திருந்து தொழுவைப் பார்க்க நடந்தாள்.

மற்ற மாடுகள் எல்லாம் அமைதியாக அசைபோட்டுக் கொண்டி ருக்க தனது செல்லப் பசு மாத்திரம் நின்றுகொண்டு சுருக்கு மூத்திரம் விட்டுக்கொண்டு அமைதி இழந்து வாலால் உடம்பில் விசிறிக் கொண்டிருந்தது.

பசுவின் மேல் நிலவு பட்டாய் மினுங்கிக் கொண்டிருந்தது.

அண்ணாந்து நிலவைப் பார்த்துக்கொண்டே அடி எடுத்து வைத்து நடந்தாள். தரையில்த் தேங்கியிருந்த சில்லிட்ட நீரில் அவள் பாதங்கள் பதிந்ததும் ஒண்ணுக்கு நெருக்குவதுபோல உணர்வு குத்தியது.

இப்படிக் குளிர்ந்த நீரில் கால் வைக்கும் போதெல்லாம் இந்த அனுபவம் தனக்கு வரும். இது தனக்கு மட்டும்தானா எல்லாப் பெண்களுக்குமா என்று ராமக்காவைக் கேட்க வேண்டும் என்று நினைக்கிறதுதான். ஆனால் மறந்து போய்விடும்!

வேகமாய்ப் போய் படல் மறைவுக்குள் உட்கார்ந்தாள். அமைதியைக் கீய்ச்சுக்கொண்டு சீள்வண்டிரைச்சல் போல அவளிலிருந்து சீறி எழுந்த சத்தம் சற்றே அவளை நாணுறச்செய்தது.

'கால்' சுத்தி செய்துகொண்டு எழுந்திருந்தபோது மீண்டும் பசு குரல் கொடுத்தது.

'என்னம்மா; என்ன வேணும் ஒனக்கு?' என்று கேட்டுக் கொண்டே அவள் பசுவின் கிட்டே நெருங்கிச் சென்றாள்.

அவளுடைய வழக்கமான தொடுதலை அது ஏற்கவில்லை. அப்போதுதான் கவனித்தாள் அச்சிந்த்தலு. கண்ணாடி உருகி வழிந்து மினுங்குவது போல பசுவின ''அரை''யிலிருந்து முடை தொங்கிக் கொண்டிருப்பது நிலா ஒளியில்த் தெரிந்தது.

''ஓ ஹொ ஹோ? அப்பிடியா சங்கதி!'' என்று அச்சிந்த்தலு உல்லாசமாய் முணுமுணுத்து முறுவலித்தாள்.

பசுவோடு இவள் இப்படி வேடிக்கை பண்ணிக்கொண்டிருந்த நேரத்தில் காரி எங்கிருந்தோ வேகுவேகு என்று தலை போகிற காரியமாக அங்கேதான் வந்துகொண்டிருந்த சங்கதி அவளுக்குத் தெரியாது!

எங்கோ ஊருக்குள் ஒரு பசு தன்னை அழைக்கிறது என்று தெரிந்ததே தவிர லெக்கு எது என்கிற விவரம் காரிக்குத் தெரிய வில்லை. தலையை உயர்த்தியபடியே காற்றில் மோப்பம் பிடித்துக் கொண்டே அப்படியே வந்து கொண்டிருந்தது.

காரி அச்சிந்த்தலுவின் வீட்டைச் சுற்றிப் பார்த்தது. தொழுவி லிருந்து தெருவுக்கு வரும் ஜலதாரையை மோப்பம் பிடித்தது. முகர்ந்த மாயத்தில் அதுக்கு நிலைகொள்ளலை. அதே வினாடியில் பசுவும் எதையோ உணர்ந்துகொண்ட மாதிரி குரல் கொடுத்தது.

அடுத்த வினாடிகளில் தொழுவின் கோட்டை மண்சுவர் மழைக்குக் கரைந்த கம்மியான இடைவழியாக குபுக்கென்று தவ்வி விழுந்து காரி தொழுவுக்குள்ப் புகுந்துவிட்டது!

அச்சிந்த்தலு பதறிப்போனாள்.

ஓடுவதற்கோ ஒளிவதற்கோ வசதி இல்லை. அதே சமயம் பசு, கட்டுக் கயிற்றை அத்துக்கொண்டு காரியை எதிர்கொள்ளப் போன தால் தொழுவின் முக்கில்ப்போய் அவள் பதுங்கிக் கொண்டாள்.

அச்சிந்த்தலுவுக்குத் தைரியம்தான்; பக்கத்தில் தனது பசு இருப்பதால் காரி தன்னைப் பாயாது என்று! என்றாலும், மெதுவாக நகர்ந்துபோய் வெளிவாசல்க் கதவின் தாட்பாளை நீக்கிக் கதவைத் திறந்து தயாராக இருந்துகொண்டாள் ஓடுவதற்காக.

ஆனால் காரியோ பசுவோ இவளைக் கவனித்ததாகவே தெரியவில்லை.

அவள் அப்படியே நின்றுகொண்டு அந்தப் பின்னிரவின் நிலா ஒளியில் நிகழும் அந்த இன்ப இணைவிழைச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அச்சிந்த்தலுவின் அப்போதய மனநிலையை விவரிப்பது என்பது கஷ்டம்.

ஒரு திகில், அசுயை, ஒரு சிலிர்ப்பு இவைகளால் பாதிக்கப்பட்ட ஒரு படபடப்பு. காரியின் முரட்டுத்தனமான, ஆவேசமிருதுவான, துல்லியமான ஆளுமை அவளைக் கவர்ந்தது. அந்த வினாடியில் அவள்தானே பசுவாகவும் காரியைக் கிட்டப்பனாகவும் கற்பனை யில் நினைத்துக்கொண்டாள்.

இவ்வளவு தைரியமாக எப்படி, தன் உயிரை மதிக்காமல் ஒரு உயிரை மதித்து மதில்சுவரையே தாவிவிழுந்து விரகத்தில் அலைபாயும் ஒரு பெண்பாலை வந்து சாந்தி செய்கிறதே என வியந்தாள் அச்சிந்த்தலு.

நிலவில் காரியின் அந்தக் கரும்பட்டு நிறம் அவளை வசீகரித்தது. ராதை நினைத்தவுடன் அதேவினாடியில் கண்ணன் அங்கே வந்து விடுவானாமே; அந்த மாதிரியாக அல்லவா இது இங்கே வந்திருக்கிறது. இதுகளுக்குள் இவ்வளவுக்கு ஒரு ஒட்டுதல் இருந்திருக்கிறதே!

பால் வற்றியவுடன் மந்தைகளோடு பசுவை ஓட்டி அனுப்பிய போது இதுகளுக்குள் அங்கே இந்த நேசம் ஏற்பட்டிருக்குமோ; அடடா, மிருகங்களுக்கு என்னவெல்லாம் தெரிகிறது; மனுசர் களுக்குத் தவிர.

அச்சிந்த்தலுவின் எண்ணங்கள் இப்படி மனசுக்குள் ஓடிக் கொண்டிருக்கும்போது.

காடியில் கொட்டிக் குவித்திருந்த பசும்புல்லை காரி தின்ன ஆரம்பித்தது. ஒரு பசி முடிந்து இன்னொரு பசி.

புல்லைத் தின்றுகொண்டிருக்கும்போது காரியின் உயரமான திமிலைப் பிரியத்தோடு பசு நக்கிக்கொடுத்தது.

அச்சிந்த்தலுவினால் மேலும் அங்கே நிற்கமுடியவில்லை. அவள் உடம்பிலிருந்து ஜுவாலை கிளம்பி எரிவதுபோல் இருந்தது, அந்த எரிதலுக்கு நிலவு எண்ணெய் ஊற்றிக்கொண்டிருந்தது.

மொள்ள அடியெடுத்து வைத்து வீட்டினுள்ப்போய் படுக்கையில் விழுந்தாள்.

தூக்கத்தில் அம்மா புரண்டு படுத்து யாரையோ விரசமாக வைதாள்.

அய்யா இன்னும் வீடு திரும்பியிருக்கவில்லை.

இன்னது செய்வதென்று தெரியாமல் அப்படியே படுக்கையில் கொஞ்சம் கிடந்தாள்.

ஏதாவது செய்யவேண்டும் போலிருந்தது. உடம்பு இன்னொரு உடம்பைத்தேடி நெருங்குவதற்குப் பதிலாக தன்னிலேயே உடம்பு இன்னொரு உடம்பைத் தேடியது; பசி பொறுக்காத பாம்பு தன்வாலையே பற்றி விழுங்குகிறமாதிரி.

கொஞ்சநேரத்துக்கெல்லாம் அவள் வயிறு நிறைந்த பச்சைக்குழந்தையைப் போல அப்படியே அசந்து தூங்கிவிட்டாள்; தான் திறந்துவைத்திருந்த வெளிவாசல்க்கதவு வழியாக காரி போனதோ பூனைபோல்வந்து தகப்பனார் படுத்துக்கொண்டதோ அவளுக்குத் தெரியாது.

❖

# 11

பொங்கலுக்கு மறுநாள் காரியைப் ''பிடிக்கிறது'' என்று ஏற்பாடு.

கரிசல்காட்டில் 'எருதுகட்டு' என்கிற வீரவிளையாட்டு ஏற்பட முன்னோடியான, அந்த நிகழ்ச்சியைப் பார்க்க ஊரிலிருந்தும் சுற்றுப்புறங்களிலிருந்தும் கூட்டம் கூடியிருந்தது. பல இடங்களி லிருந்து, மாட்டைப் பிடித்து அடக்குகிற இள வட்டங்களும் திறமைசாலிகளும் வந்திருந்தார்கள்.

கோபல்ல கிராமத்தின் பக்கத்திலுள்ள கொத்தூரு கிராமத்தி லிருந்து சிம்மம் ரங்கசாமிநாயக்கர் வந்திருந்தார். அவரைப் பார்த்தும் கிராமத்தார்கள் மரியாதை செய்து வரவேற்றார்கள்.

இவர், மாட்டுச் சந்தை கூடுகிற கழுகுமலைத் ''தாவணி''யில் போய் பயங்கரமான பாய்ச்சல்க் காளைகளை விரும்பிப் பிடித்துக்கொண்டுவருவார், முன்பு.

பாய்ச்சல்க் காளைகள் வேலைக்கு எப்போதும் வேகமாக இருக்கும் என்பதைத் தெரிந்து வைத்திருந்தார். அதோடு அவைகள் விலையும் மலிவாகக் கிடைக்கும்.

பாய்ச்சல்க் காளைகளை வீட்டில் வைத்துக்கொண்டு, அதைக் கட்டி யார் சேவகம் பண்ணுகிறது. அதுக்கென்றே ஒரு சிம்மம் ரங்கசாமிநாயக்கர் இருந்தார்.

மாட்டுத்தாவணிகளில் பாய்ச்சல்க் காளைகளை ரெட்டைக் கயிறுகளில் கட்டிப் போட்டிருப்பார்கள். இவர் அந்தக் காளைக்குப் பக்கத்தில் போய், இடுக்கில் ரண்டு கைகளையும் ஊன்றி நின்று கொண்டு அமுத்தலான ஒரு பார்வையோடு அந்தக் காளையைப் பார்த்துக் கொண்டிருப்பார். அவர் அப்படிப் பார்ப்பதை மற்றவர்கள் ஒரு வேடிக்கையாகப் பார்ப்பார்கள்!

'கள்ளப் பாய்ச்சல்' மாடுகள், 'சதைக்கண்' மாடுகள் இவைகளுக்கு எதிரே போய் நின்றால், அதுகளுக்கென்று உள்ள 'கிருத்திரியத்தை' அவைகள் காண்பிக்கத் தொடங்கும். அவைகளின் சினப்புகளையும் தரையைக் குளம்பால்த் தேய்ப்பதையும் அவர் மீசைக்குள்த் தெரியாத ஒரு புன்னகையோடு அமைதியாய்ப் பார்த்துக்கொண்டிருப்பார்.

குழந்தைகள் பெரியவர்களைப் பார்த்து நாக்கைத் துருத்தி பயமுறுத்துவது போலிருக்கும் அவருக்கு அது! அந்த அனுபவத்தை லச்மண்ணா ஒருநாள் ஊர்மடத்தில் விவரித்துக்கொண்டிருந்தார்.

இவரும் அந்தத் தாவணிக்குப் போயிருந்தாராம். அப்பொசிம்ம நாயக்கருக்கு நல்ல பிராயம். பேருக்கு ஏற்றதுபோலவே ஆள் இருப்பாராம்.

''காளைய வாங்கின ஒடனெ, ரெட்டைக் கயித்துலெ பிடிச்ச மானைக்கெ, மாட்டுக்காரனையும் ஒரு கயித்தைப் பிடிச்சிக்கிடச் சொல்லி பெரியோடை மணலுக்குக் கொண்டு போனாரு. என்ன நடக்குண்ணு பாக்க நாணும் பெறத்தாலயே போனன்.

''திடீர்ன்னு பயங்கரமா ஒரு சத்தம்;இடியிடிச்ச மாதரி; நெசமாவே நா பயந்துட்டேன். அப்பிடி ஒரு சத்தங்கொடுத்துகிட்டே பாஞ்சி மூக்கணாங் கயித்தப் பிடிச்சி காளையோட முகத்தெ மடக்கி நடு முதுகுல முழங்கையாலெ ஒரு 'இறுக்கு' வச்சாரு! இப்படியே ஒரு நாலைஞ்சி தபா; சத்தங் கொடுத்துக்கிட்டே ''இறுக்கு''களும் கொடுத்து அதைப் புரட்டிப் புரட்டி எடுத்தாரு மணல்லெ. அவ்வளவுதான்; மார் மார்ண்ணு கத்தி, சத சதண்ணு சாணி போட்டுட்டது ஒரு கூடைக்கு, அந்தப் பாச்சக்காளை!''

லச்மண்ணா சொன்னதைக் கேட்டு எல்லாரும் சிரித்தார்கள். அப்பிநாயுண்டும் அவர்களோடு சேர்ந்து சிரித்துக்கொண்டே, ''அது நெனைச்சிருக்கும்; இது நம்மை விடப் பெரியமாடு; நம்மை ஒரே முட்டா முட்டிக் கீழே தள்ளி பெறட்டி எடுத்துட்டதுண்ணு நெனைச்சி பயந்து போயிருக்கும்!'' என்று சொல்லி மேலும் சிரித்தார். அவர் இப்படிச் சொன்னதை எல்லாரும் அனுபவித் தார்கள். லச்மண்ணா தொடர்ந்தார்: ''பெரியோடை மணல்லயிருந்து திரும்புறப்போ, காளை ஒத்தைக் கயிறுலதான் வந்தது. இன்னொரு கயிறை அவுத்து மாட்டுக்கார்ன் மேலெ வீசி எறிஞ்சிட்டாரு''

''தொழுவுக்குள்ளெ அவரு நுழையும் போதே ஒரு சத்தங்கொடுப்பாரு... அதக் கேட்டதுமெ அதுக்குப் பெரியோட மணலு ஞாபகம் வந்துரும்! பெறகென்ன; அட்டஞ்சுளிக்குமா அவரிட்ட?''

சிம்மநாயக்கருடைய குரல் மாத்திரமல்ல உருவமும் அப்படித் தான். ஒரு தடவை அவர் கூடார வண்டியில் வந்தபோது, கழற்றி வைத்திருந்த செருப்பில் ஒன்று எப்படியோ நழுவி கீழே விழுந்து விட்டது. பக்கத்து ஊர்ப்பகடை ''இழவு சொல்ல'' அந்த வழியாகப் போனவன் அதைக் கண்டெடுத்தான். 'இம்புட்டுப் பெரிய்ய மிதியடி போட்டுக்கொள்கிற பாதங்கள் நம்ம சிம்மா நாயுண்டுகாருவா கத்தானிருக்கும்' என்று யோசித்து, கொண்டுவந்து அவரிடம் சேர்ப்பித்துவிட்டுப் போனான். அப்படி ஒரு ராட்சதத்தனமான உடம்பு அது.

ஆனால்;

இப்போதோ அவர், தவங்கிப் போய் கம்பை ஊன்றி நடக்கும் படியான வயோதிகம் வந்துவிட்டது.

கூடார வண்டியிலிருந்து மெள்ள, நிதானமாக இறங்கிக் கம்பை ஊன்றி ஊன்றி நடந்து கொண்டுவந்த அவருடைய புஜங்களைப்

பார்த்த அப்பிநாயுண்டு நினைத்தார்; 'அடடா எப்பேர்ப்பட்ட கைகள்! சால் பிடித்து உழுதால் அதுக்குள்ளார ஒரு ஆள் படுத்திருந் தால் வெளியே தெரியாது. யாரால் இப்பொ அப்படி உழவு பிடிக்க முடியும்?'

அவர்கள் சிம்மநாயக்கருக்குக் குடிக்க பானக்கரம் தந்து உபசரித்தார்கள்.

அவருடைய உடம்பு ஆரோக்கியத்தைப்பற்றிக் கேட்டு விசாரித் தார்கள். அதற்கு அவர், சிரித்துக்கொண்டே ''என்னா ஒடம்பு; அதெல்லாம் அந்தக் காலத்தோட சரி'' என்று சொல்லி விட்டு, அங்கேயுள்ள - தன்னையே பார்த்துக்கொண்டிருக்கிற - இளவட்டங் களைப் பார்த்து, ''ஒரு நாளைக்கிப் பத்துப் பொம்பிளைகளைப் பெண்டாள 'தெகிரியம்' இருந்தது. அடங்காத பொம்பளையை யெல்லாம், சரணம் சரணம்ண்ணு சொல்ல வச்சோம். முடியுமாடா பயகளா, ஒங்களாலெ இப்பொ?'' என்று கேட்டு கண்ணைச் சிமிட்டிக் கூட்டத்தைக் கலகலப்பாக்கினார்!

அவருக்குப் பக்கத்தில் வந்து மரியாதைக்காக நின்று கொண்டிருந்த கிட்டப்பன் ராஞ்சனையுடன் அடக்கமாகச் சிரித்தான்.

கலகலப்பு அடங்கியதும் அவனைப் பார்த்து, ''ம், சரீ; பயலே எப்பிடி இருக்கே?'' என்று வாஞ்சையுடன் விசாரித்தார். ''இருக்கந் தாத்தா; ஒங்க ஆசீர்வாதத்திலெ''

''ம்'' என்று சொல்லி, தலையை ஆட்டி, அவனை நன்றாக மேலும் கீழும் பார்த்துவிட்டு, ''இண்ணைக்கி, நீதாம் இந்தக் காரியைப் பிடிக்கணும்'' என்றார். கிட்டப்பன் அதற்குப் ப்தில் ஏதும் பேசவில்லை. பவ்யத்துடன் தரையையே பார்த்துக் கொண்டி ருந்தான். அவர் கவனம் வேறு இடத்துக்குத் திரும்பியதும், வளர்ந்து காய்ந்துபோன கோரைப் புற்கள்போல் இருந்த அவருடைய நீண்ட வெண்மையான புருவங்களையே பார்த்துக்கொண்டிருந்தான்.

❖

## 12

கரிசல்க் காட்டில் இப்போது நடக்கும் ''எருது கட்டு'' போல அல்ல அது; ஜனக் கூட்டத்துக்கு மத்தியில், மாட்டை வடத்தில் பிணைத்துவிட்டு, பிறகு மடக்கிப் பிடிப்பதற்கு.

இங்கே, குறிப்பிட்ட இடத்துக்குத் தந்திரமாகப் போக்குக் காட்டி காளையைக் கொண்டுவந்து அமைக்கவேண்டும். அல்லது காளை நிற்கும் இடத்துக்குப் போய் அதை மடக்கிப் பிடிக்க வேண்டும். இடம், வச பிசகாக அமைந்துவிட்டால் அதுபோல அபாயம் வேறில்லை.

மனுசன் தந்திரக்காரனாக இருந்தாலும், உயிருக்குப் பயப்படாத மூர்க்கம் கொண்ட காளையோடு நிராயுதமாக வெறும் கைகளா லேயே அதைப் பிடிப்பது என்பது லேசான காரியமில்லை. மனுசன், பல விஷயங்களுக்குக் கட்டுப்படுத்தி வளர்க்கப்பட்டவன். மிருகங்கள் அப்படியல்ல.

காளைக்கு ஆயுதங்கள் கொம்புகளும் குளம்புகளும்; குளம்பி னால் வசமாக ஒரு உதை வாங்கினால் அதிகபட்சம் மனித எலும்பு கள் உடையும். கொம்பு அப்படியில்லை; குத்தி உயிரை வாங்கி விடும்.

ஊருக்குக் கிழக்கே உள்ள மந்தைப் புஞ்சையில் பசுமாடுகளின் மந்தை - கிடை - அமர்த்தப்பட்டிருந்தது. அந்தக் காலை வேளையில் பசுக்கூட்டம் படுத்துக்கொண்டும் நின்றுகொண்டும், வாய் நுரைக்க சொகமாய் அசை போட்டுக்கொண்டிருந்தன. காரி சுறுசுறுப்பாக அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்தது; தனக்கு நேர இருக்கும் அபாக்யத்தைத் தெரிந்து கொள்ளாமல் பருவத்துக்கு வந்த பசுக்களை 'விரட்டி'க் கொண்டிருந்தது. அதைப் பார்த்து புச்சன்னா, தூரத்தில் இருந்துகொண்டே சத்தம் போட்டுச் சொன்னார் ''காரீ, முடிச்சிக்கோ; ஆசை தீர. இண்ணைக்குத்தான் கடேசி!''

இளவட்டங்களும் மற்றவர்களும் அதைக் கேட்டு சிரித்தார்கள்.

❖

காரியை அமைப்பது சிரமமாக இருந்தது.

நிலைமை ஆரம்பத்திலேயே சரியில்லை. காளை அமைப்பதில் 'வல்லாள கண்டான்' என்று பேரெடுத்த மேலூரானை காரி ஒரே வீச்சில் கொம்பால் வீசிக் குடலைச் சரித்துவிட்டது. 'ஆஹா பாவி மோசம் போனானே!'' என்று அங்கலாய்த்தார் சிம்மம்.

பார்வை மங்கலினால், என்ன ஏது என்று முதலில் அவருக்கு நிதானம் பிடிபடவில்லை. தூரத்தில் இருந்துகொண்டு வயசாளித

ளோடு சேர்ந்து பார்த்துக் கொண்டிருந்தா. அவருக்குப் பக்கத்தில் இடதுபுறம் அப்பிநாயுண்டு. வலது பக்கம், காலம் சென்ற கோட்டையார் கோவிந்தப்ப நாயக்கரின் மகனார் கோட்டை திரவத்திநாயக்கர்.

தூரத்தில் அங்கே நடந்துகொண்டிருக்கும் நிகழ்ச்சிகளை அவர்களுக்குப் பக்கத்தில் இருந்துகொண்டு பய்யனாசாரி சொல்லிக்கொண்டே வந்தார்.

காரி இருந்த இடத்திலிருந்து சுற்றிலும் தூரத்தில் வட்டமாக மனிதக்கூட்டம் ஆணும் பெண்ணும் சிறுவர்களுமாக.

கீழே விழுந்த மேலூரானைக் காரி அதுக்குமேல் ஒன்றும் செய்யவில்லை, மனித ஆரவாரத்தை மட்டும் காதுகளை முன்பக்கம் குவித்துத் தலையைத் தூக்கிக் கவனித்தது. பிறகு அது கால் மண்வாரி ''செருக்குப் போட'' ஆரம்பித்தது. 'வாங்கடா; ஒவ்வொருத்தனா வாரீளா, சேர்ந்து வரப்போரீளா'ண்ணு கேக்குறது மாதரி இருக்கு, என்று பையனாசாரி அதுக்கு வியாக்யானம் சொல்லிக் கொண்டிருந்தார் அவர்களுக்கு.

''கீழே விழுந்துகிடக்கிற மேலூரானை மொதல்ல காப்பாத்தணு மேடா பய்யன்னா'' என்று பதட்டப்பட்டார் கோட்டை வீட்டு திரவத்திநாயக்கர். அந்த வயசாளிகள் தங்கள் புருவக்கட்டின் மேல் கைகளை வைத்துக்கொண்டு என்ன நடக்குமோ என்று பார்த்துக் கொண்டிருந்தார்கள், பய்யனாசாரி சொல்லுவதையும் கேட்டுக் கொண்டு.

''இப்பொ யாரோ ஒருத்தன் ஒரு பசுமாட்டெ மூக்கணாங் கயித்தைப் பிடிச்சிகிட்டு காரி இருக்கிற இடத்துக்குக் கொண்டுக் கிட்டுப் போறான்'' என்றார் பய்யனாசாரி. ''ஓஹோ. அது சரிதான்; அது ஒரு தந்திரந்தான்!'' என்று சொல்லிச் சிரித்தார் சிம்மநாயக்கர்.

அவர் நினைத்தது, பசுமாட்டைக் கேடயமாக வைத்துக்கொண்டு காரியை நெருங்கப் போகிறார்கள் பிடிக்க, என்று. போனவன் அதைச் செய்யவில்லை.

இப்போது மற்றொருவன் அந்தப் பசுவோடு ஒண்டிக்கொண்டே போய் மேலூரான் விழுந்துகிடக்கும் இடத்துக்குப் போனான். பசுவைக் காரிக்குப் பக்கமாக நிறுத்திவிட்டு, காரியின் கவனம் பசுவின்மேல் திரும்பியதும் இருவரும் சேர்ந்து மேலூரானைத் தூக்கிக்கொண்டு ஓடினார்கள்.

அப்பாட, என்று பெருமூச்சு விட்டது கூட்டம்.

''பய்யன்னா, யாருடா அந்த ரண்டு பேரும்?'' என்று கேட்டார் கோட்டையார்.

''அது அந்த மேலூரானுக்குப் பெண்டாட்டியின் உடம்பிறந்த மச்சுனங்கள்தான் ரண்டு பேருமே.

''ஆங்... அப்பிடிச் சொல்லு. சம்மந்தகாரங்க வந்துதான் ஒதவணும்'' என்றார் கோட்டை.

''கடல்ல முத்துக் குளிக்கிறப்பொ, மேலே கயிறு பிடிக்கிறது எப்பவுமே சம்மந்தகாரனாகத்தான் இருப்பானாம்!'' என்றார் சிம்மம்.

''ஆமா; பின்ன. தாயாதிக்காரன் பிடிச்சா அம்புட்டுத்தான். கயித்தை எங்க இழுப்பான்; சாகட்டும் பயண்ணு விட்டு வச்சிருவான்!'' என்று சொல்லிச் சிரித்தார் பய்யனாசாரி.

தூரத்தில் சுற்றிலும் வட்டமாக இருந்த மனிதக்கூட்டம் இப்போது காரியை நெருங்கி நெருங்கி வந்து வளையம்போல் சுருங்கிக் கொண்டே வந்தது.

கொஞ்ச நேரம் மனிதச் சந்தடியின் குழப்படியாலும் கிடையில்க் கிடந்த பசுமாட்டுக் கூட்டம் கலைந்ததாலும் புழுதிப் புகையில் என்ன நடக்கிறது என்றே இவர்களுக்குத் தெரியவில்லை. பய்யனாசாரி ஒரே ஓட்டமாக ஓடி, ஒரு காடிவண்டியை இழுத்துக்கொண்டு வந்து நிறுத்தினார். அதன்மேல் இவர்கள் ஏறி நின்றுகொண்டு பார்த்தார்கள்.

காரி இப்போது கிடையைவிட்டுத் துண்டுபட்டுப் போயிருப்பது தெரிந்தது. விடலைப் பிள்ளைகளின் கூட்டம் காரியை கொஞ்சங் கொஞ்சமாக நெருங்கிக்கொண்டு வந்தது.

கிட்டப்பன் வேட்டியை வரிந்து கட்டியிருந்தான். மேல் வேட்டியையும் எடுத்து இடுப்பில் கச்சைபோல் இறுக்கிக் கட்டினான்.

அவர்கள் எதோ ஒன்றுக்காகக் காத்துக்கொண்டிருப்பதுபோல் தெரிந்தது. கிட்டப்பன் காரியின் இடதுபாரிசத்தில் சற்று தள்ளி மண்ணில் வசமாக கால்பதித்து நின்றுகொண்டு துரு துருக்கும் தனது துதிக்கைபோன்ற கைகளைக் காரியை நோக்கி முன் நீட்டத் தயாராகி அதன் கண்களையே கவனித்துக்கொண்டிருந்தான்.

காரியின்முன் வலது பக்கத்தலிருந்தவன் திடீரென்று சொல்லிவச்சதுபோல ஒரு கருப்புத்துணியை எடுத்து விரித்தான். காரி மருண்டு அவனை நோக்கிப் பாய ஆரம்பிப்பதற்கும் கிட்டப்பன் காரிமேல்ப் பாய்வதற்கும் சரியாக இருந்தது.

❖

# 13

தரையிலிருந்து ஒரே தவ்வலில் காரியின்மேல் விழுந்த கிட்டப்பனின் வலதுகை இடுக்குக்குள் காரியின் உயரமான திமிலும் இடதுகையின் பிடிக்குள் அதன் இடது அடிக்கொம்பும் பிடிப் பட்டது.

உடனே காரி எகிறிக் குதித்துக் கிட்டப்பனை உதறித்தள்ள முயன்றது. அட்டைபோல் ஒட்டிக்கொண்டு அவன் காரியின் முன்னத்தங்காலோடு தனது வலதுகாலைப் பின்னிக்கொண்டான்.

காரி தலையை முன்கவிந்து தரைமண் தூசு கிளம்பும்படியாக ''சீத்'' அடித்தது; அதோடு வாலையும் பின்னத்தங்கால்களையும் தூக்கிக்கொண்டு வெட்டவெளிக்காற்றை உதைத்தது.

கிறுகிறு என்று சுழல ஆரம்பித்தது.

கிட்டப்பன் பிடியை விடவில்லை.

திமிலைச் சுற்றிப் போட்டிருந்த கையின் 'பிடி'யை அவன் இறுக்க சந்தர்ப்பம் பார்த்திருந்தான். அதுக்குத் தோதாய் இடதுகையால் கொம்பை அடைகொடுத்துக் கொள்ள வேணும்.

காரி திடீரென்று ஓட ஆரம்பித்தது. அதன் காலைச் சுற்றியிருந்த 'பிடி' நழுவிவிடுமோ என்று யோசித்தான். 'சரி; இதை இப்படி விடக்கூடாது, என்று நினைத்து, கொம்பை தள்ளிக்கொண்டே திமிலை இறுக்கினான். ஓட ஆரம்பித்ததை நிறுத்தி அது அவனைத் தன் உடம்போடு சேர்த்து நைத்துவிட நினைத்தோ என்னவோ இடதுபக்கமாக பலங்கொடுத்து அவனை நெருக்கியது. கிட்டப்பன் எதிர்பார்த்தது இதைத்தான்! அவன் நினைத்ததுபோல் இப்போது இடது கைக்கு நல்ல அடை கிடைத்துவிட்டது. அந்த அடையின் பலத்தில் வலது குடங்கைக்குள் அகப்பட்டிருந்த திமிலை

இறுக்கினான். திமில் இறுக இறுகக் காரி முன்னத்தங்கால்களை மடித்துத் தரையில் மண்டியிட ஆரம்பித்தது. இந்தச் சமயத்தில் தூரத்திலிருந்து சிம்மநாயக்கரின் குரல் பலமாகக் கேட்டது; ''அடேய்... சாணியைத் தோண்டு, சாணியைத் தோண்டு''. கூட்டத்திலிருந்த வெங்கடபதி பாய்ந்து ஓடிவந்தான். காரியின் அடிவாலை ஒரு கையால் ஏந்திப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையைப் பூராவும் காரியின் அபானத்துக்குள் நுழைத்தான்.

அவ்வளவுதான்; மண்டியிட்ட காரி, தரையில்ப் படுத்துவிட்டது.

பய்யனாசாரி ஒரே ஓட்டமாய் ஓடிவந்தார், தயாராக வைத்திருந்த லாடம் கட்டும்போது சுற்றிக்கட்டும் கயிற்றை எடுத்துக்கொண்டு, 'நெமை தட்டுவதற்குள்' நாலுகால்களையும் கயிற்றினால் இறுகக்கட்டி, வாலை இழுத்துப் பின்னத்தங்கால் தொடை இடுக்கில் சொருகி இழுத்துப் பிடித்துக்கொண்டார்.

பலத்த ஆரவாரத்துக்கும் கூச்சலுக்கும் இடையே கிட்டப்பன் காரிக்கு மூக்கணாங்கயிறு பூரி இழுத்துக் கட்டி முடிச்சுப்போட்டான். உடனே காய் அடிக்கப்பட்டது.

''ம்க்கும், பொட்டியாரு ஏறுவாரு இனி!'' என்று கூட்டத்தில் ஒரு இளக்காரமான குரலைத் தொடர்ந்து சிரித்தார்கள் சிலர்.

தரையில் பலமாக முளைகள் அறைந்து, ரண்டு வடங்களால் மூக்கணாங்கயிற்றில் வலதும் இடதும் பிணைத்து கட்டிப் போட்டார்கள்.

காயடிக்கப்பட்டதால் இடுப்பைக் குன்ன வைத்துக்கொண்டு மூக்கிலிருந்து ரத்தம் சொட்ட நின்ற காரியைப் பார்த்தவர்களுக்கு அய்யோ என்றிருந்தது.

❖

இப்படிக் காரியை அடக்கிய வயணத்தையெல்லாம் வாத்தியார் சாமிக்கண்ணாசாரி கேள்விப்பட்டிருந்தார். இப்போது கட்டிலில் உலர்ந்து போய்க் கிடக்கும் இந்தக் கிட்டப்பன்தான் அது என்று நினைக்க வேண்டியதிருந்தது.

கிட்டப்பனின் சம்மந்தகாரர்களின் ஊரிலிருந்து, இவனுடைய உடம்பு அசௌகரியத்தைக் கேள்விப்பட்டு பார்க்க வந்திருந்தார்கள். கிட்டப்பனின் மனைவி கருவுற்ற வேளைதான் தகப்பனை இப்படிப் படுத்துகிறது என்று சொன்னார்கள்.

கிட்டப்பனின் கிடப்பு அச்சிந்தலுவைத் துன்பமுறச் செய்தது. அவள் வீட்டு வேலைக்காரர்களும் வீட்டுக்கு வருகிற விருந்தாடிகளும் ஒவ்வொன்றைச் சொன்னார்கள் கிட்டப்பனின் உடல் நிலை பற்றி. சிலர் - பார்த்தவர்கள் - சொன்னது: ''இனி அவரு அவ்வளவு தான்'' என்றார்கள். அவனைப் போய் அச்சிந்தலு பார்க்க முடியாது. என்ன செய்கிறது என்றும் தெரியவில்லை. இந்த உலகமும் இந்த மனுச உறவுகளும் அவளுக்குப் பிடிபடவில்லை. 'கிட்டா; அடே என் பிரியமானவனே' என்று தனிமையில் சொல்லி அழுவாள்.

❖

சின்னவயதில் கிட்டன் ரொம்ப நோஞ்சானாக இருப்பான்; இவள் உடம்பு தாட்டியமாக இருப்பாள். விளையாட்டில் ஒருவரை ஒருவர் உப்புக்கட்டி சுமக்கும்போது அவனை ரொம்பச் சுலபமாக முதுகிலேற்றிக்கொண்டு அச்சிந்தலுவால் ஓட முடியும். கிட்டன் அவளைச் சுமந்துகொண்டு போகத் திணறுவான். 'எல்லை'க்குப் போவதற்குள் திக்குமுக்காடிப் போய்விடும்!

வீட்டில் அச்சிந்தலுவின் அம்மா தயிர்கடையும்போது ரண்டு பேருக்கும் தின்பதற்கு வெண்ணெய் தருவாள். அச்சிந்தலுவின் அளவுக்கு இவனால் வெண்ணெய் திங்க முடியாது முழிப்பான்.

''இவளைவிட நீதான் நிறைய்யத் திங்கணும்; அப்பதான் இந்தச் சிறுக்கியை வச்சிப் பெண்டாள முடியும் நீ'' என்று சொல்லி அம்மா இடது கையினால் அச்சிந்தலுவின் கன்னத்தைப் பிடித்துச் செல்லமாக நிமிட்டுவாள். அப்படி அம்மா சொன்னதின் தாத்பரியத்தை அச்சிந்தலு புரிந்துகொண்ட அளவுக்கு கிட்டனுக்கு அப்போது புரியாது. இதில் அவனுக்கு ஆண்குழந்தைகளுக்கே உண்டான ஒருவித மக்குத்தனம், இனம் புரியாத வெட்கம் தயக்கம் இதெல்லாம் இருந்தது.

பால் உணர்வுச் சிந்தனையில் சின்ன வயதில் பெண்ணுக்குரிய சுதாரிப்பும் துருதுருப்பும் ஆண்பிள்ளைகளுக்கு இருப்பதில்லை. பெண் வேப்பமரம்; சீக்கிரம் வளர்ந்து விடுகிறாள். ஆண் அரசமரம்; நின்று, நிதானித்து வளர்ந்து நிலைத்து நிற்கிறான்.

வளர வளர அச்சிந்தலுவின் பெருந்தீனி சுருங்கி, சதை பூரிப்பும் இறுகி உடம்பில் 'அரும்புகட்ட' ஆரம்பித்தது.

பார்த்துக்கொண்டிருக்கும் போதே இப்பருவத்தில் பால்ச்சோளப் பயிர்வளர்ச்சிபோல பெண் ஆச்சரிய மூட்டுகிறாள்; வேளைக்கொரு தினுசாய் நாளைக்கொரு தோற்றமுமாய்.

தூங்கி அவள் எழுந்ததும் அவளைப் பார்த்தால், அப்போதுதான் கடைந்து திரட்டிய பச்சைவெண்ணையின் மின்னாப்பும் ஆரோக்ய சௌந்தரியமும் தெரியத் துலங்குவாள்; அவளுடைய அருகாமையே சூழ்நிலைக்கு ஒரு புத்துணர்ச்சி தருவதாக இருக்கும்.

அப்போதய அவளுடைய நடமாட்டங்களையும் மௌனமான அசைவுகளையும் நாளெல்லாம் பார்த்துக்கொண்டே இருக்கலாம் பிரியத்துடன்.

அவர்களுடைய பருவங்கள் உயர உயர, உடம்புகள் வேற்றுமைப் படப்பட மனங்கள் மனத்தோடு ஒருமைப்பட்டது.

❖

## 14

விளையாட்டுப் பருவம் மறைந்து காரியப் பருவம் தொடங்கியது. அப்போது கிட்டப்பன் முழு மூச்சோடு விவசாய வேலைகளில் இணைத்துவிடப் பட்டான். மாட்டோடு மாடாய் உழைத்தான். கடின உழைப்பு அந்த உடம்பைப் பக்குவப்படுத்தியது; இரும் பாக்கியது.

தலைக்கோழி கூப்பிட எழுந்தால் பொழுது அடையும் வரை சரிய்யாக இருக்கும் வேலை. உட்காருவது என்பது மதியம் கஞ்சிகுடிக்கத்தான்; ஒரு தோண்டிக் கஞ்சி போன மூலைதெரியாது.

மாலையில் கிணற்றில் நீச்சல் விளையாட்டு. அதுபோதாதென்று முன்னிலாக் காலங்களில் கிளித்தட்டு விளையாட்டு. ''ஏம் பிள்ளெ சோறே திங்கமாட்டேங்கானே'' என்று அவன் வீட்டில் கவலைப்பட்டது போய், பிறகு ''இதென்ன இப்படிப் பேத்தீனி திங்கானே!'' என்ற அதிசயம். ''ஏலேய் ஒம் வயித்துக்குள்ளெ அய்யாருதாம் நுளைஞ்சிருக்காருலேய்!'' என்று சொல்ல வேண்டிய தாகிவிட்டது.

கிட்டப்பன் நெடுநெடு என்று உயரத்திலும் பக்கவாட்டிலும் வளர்ந்து விரிய ஆரம்பித்தான். செங்கமங்கலான இருட்டில்

பார்த்தவர்களுக்கு அடையாளம் தெரியாமல்த் திகைத்து, கிட்டெ நெருங்கிப் பார்த்த பிறகுதான் ''ஏ, நீ கிட்டப்பனா. யாரோ பெரிய்ய மனுசன்ல்ல வாரார்ண்ணு நினைச்சுப்போட்டென்'' என்று சிரிப்பார்கள்.

எல்லாரும் 'விரதம்' இருக்கிறார்களே என்று கிட்டப்பனும் ஒருநாள் 'விரதம்' இருந்தான்.

விதைப்பெட்டிக்கு ஒரு பெட்டி பச்சரிசி எடுத்து இடித்து மாவுருண்டை செய்திருந்தார்கள். அவ்வளத்தையும் அவன் ஒருத்தனே ''உண்டும் இல்லை'' என்று பார்த்துவிட்டான்; தின்று முடித்துவிட்டு ''ரொம்ப நல்லா இருந்ததும்மா; இன்னுமிருக்கா?'' என்று கேட்டானாம். சாய்ந்திரம் 'விரதம்' விடும்போது ஒரு மடாச் சோற்றையும் அவன் ஒருத்தனே தின்று தீர்த்துவிட்டான். ''எப்பா, நீ வெரதம் இருந்த அளகு போதும்'' என்று பெற்றவளே சொல்லி விட்டாள்! அதிலிருந்து அந்த வீட்டில் விரதம் கிடையாது.

பண்டிகை நாட்களில் இவனுக்குக் காலை ஆகாரம் ஒரு பிளாப்பெட்டி நிறைய்ய உளுந்த வடைகள் - உள்ளங்கை அகலத்தில் கனமும் உள்ள அறுபது எழுபது வடைகள் தின்று முடித்து 'பெரிய செம்புக்கு ஒரு செம்பு மோர் குடித்து முடித்துவிட்டு, வெளியே கொஞ்சநேரம் போய்விட்டு வந்து, ''அம்மா, சாப்பிட ஏதாச்சும் இருக்கா, வகுரு பசிக்கி'' என்பான். ''அரங்கு வீட்டுக்குள்ளெ வாழைப்பழத்தார்கள் இருக்கு; போய் பழுத்த பழமாப் பாத்து சாப்பிடு''

உடனே கிட்டனுக்கு ஆனந்தம் பிறந்து விடும். மதியச் சாப்பாடு வரை கவலையில்லை. அரங்கு வீட்டுக்குள்ளேயிருந்து அவன் வெளியே வரும்போது செம்பு நிறைய்ய பால் வைத்துக்கொண்டு நிற்பாள் அம்மா.

கம்மஞ்சோத்தையே தின்று தின்று 'சவக்களித்துப்' போன வாய், நெல்லுச் சோத்தைக் கொண்டா கொண்டா என்று வாங்கி வாங்கிச் சாப்பிடும், ''கரிசக் காட்டுக்காரங்களுக்கு நெல்லுப் பருக்கையைக் கண்டா குலதெய்வத்தைக் கண்டது மாதரி!'' என்று தீரவாசத்துக் காரர்கள் இவர்களைக் கேலி செய்தார்கள்.

பர்மாவிலிருந்து ''மூடை அரிசி'' வந்து கப்பல் கப்பலாக இறங்கும். விலையும் கொள்ளை மலிவு; ரூபாய்க்கு எட்டுப் பக்கா - பட்டணம் படி - கிடைக்கும். அதே பர்மா நொய் - அரிசி ரூபாய்க்கு பதினாறு பக்கா வாங்கலாம். பர்மா அரிசி வருவதற்கு முன்னால் ''விசேஷ'' வீடுகளில் கம்மஞ்சோறும் ஆட்டுக்கறியும்தான்.

''நெல்லுப் பருக்கையும் பருப்புச் சாம்பாரும் வந்தம் பெறகுதான் பயபுள்ளைகளுக்கு நல்...ல கொழுப்பேறிப் போச்சி'' என்று பெரியவர்கள் செல்லமாக வைவார்கள்.

ரொம்பப் பேர் நெல்லுச் சோற்றுக்காகவே 'விரதம்' இருந்தார்கள்!

பர்மா அரிசி வந்த புதுசில், கரிசல்க்காட்டையே அது ஒரு பேயாகப் பிடித்து அலைக்கழிக்கத் தொடங்கியது. வராத விருந்தாட்கள் வந்துவிட்டால் எப்பாடுபட்டாகிலும் அவர்களுக்கு நெல்லுச்சோறு பொங்கி, கோழியடித்து சாப்பாடு போடணும் என்று ஆகிவிட்டது.

வேலைக்குப் போனால் கம்மம்புல்லோ கேப்பையோ சோளமோதான் கூலியாகக் கிடைக்கும். பணத்தைக் கண்ணால் பார்ப்பதே அரிதாக இருந்தது. அப்படியிருக்கும்போது அரிசியை எப்படி வாங்கி எப்படிச் சமைக்க.

பருத்தி எடுக்கும் காலத்தில் கூலிப்பருத்தி எடுத்து பகிர்ந்து கொண்டுவரும் பருத்தியை - கடைச் செலவுக்குக் கொண்டுபோனது போக - சேர்த்து வைத்து அதை நிறுத்தால் பணம் கிடைக்கும். அல்லது கூலிப்பருத்தியைக் கடையில் துட்டுக்குப் போட்டு அதுக்கு அரிசி வாங்கலாம்.

சம்சாரிகள் மட்டும் பொதிக்கணக்கில் பருத்தியை வியாபாரிக்குப் போட்டு பணமாக்குவார்கள். அவர்கள் மட்டும்தான் ''மூடை அரிசி'' வாங்கிச் சமைக்க முடியும். அவர்கள் வீட்டு நல்லது பொல்லதுகளில்த்தான் மற்றவர்களுக்கு அரிசிச் சோறு கிடைக்கும். இந்தச் சோற்றைச் சாப்பிட மைல்கணக்காக நடந்துபோய் வரவும் செய்தார்கள்.

நெல்லுச்சோறு என்பது இந்த மக்களின் கனவாக இருந்தது. சாமிக்கண்ணாசாரி இதைக் கண்டு, நினைத்து நினைத்து அதிசயப்பட்டார். இந்த அதிசயத்திலிருந்து அவர் விடுபட ரொம்பநாள்ப் பிடித்தது. கலியாண வீட்டுப் பந்திகளில் ஒரே நபர் மாறி மாறி - திரும்பவும் திரும்பவும் - உட்கார்ந்து சாப்பிட்டதை இங்கேதான் பார்த்தேன் என்று சொல்லுவார்.

நெல்லுச் சோத்தைப்பற்றி மக்கள் பாடுகிற நாடோடிப் பாடல்களைக் கேட்டுயோசித்தார்.

''நித்தம் நித்தம் நெல்லுச் சோறு நெய்மணக்கும் கத்திரிக்காய்...''

❖

கல்யாண வீடுகளில் பல்லாக்கு சுமப்பவர்கள் சாப்பிடும்போது ஒருதரம் தற்செயலாக அவர் பார்க்க நேர்ந்தது. கடகம் கடகமாக அய்யனார் சிலைக்கு முன்னால் சோற்றைத் தட்டிப் படப்புப் போடுவது போலிருந்த அந்தக் காட்சியைப்பற்றிச் சொல்லிச் சிரிப்பதா அதிசயப்படுவதா என்று தோன்றாமல் வாயடைத்துப் போனார் பாவம்.

கம்மந்தோசையை விட நெல்லரிசித்தோசை இந்த மக்களை ரொம்பவும் கவர்ந்தது. கிராமத்தில் செட்டிப் பிள்ளைமார் வந்து, இட்லி, தோசை செய்து விற்று பணம் சம்பாதிக்க ஆரம்பித்தார்கள். நிரந்தரமாக வீடுகட்டிக் குடியேறி வியாபாராம் செய்யத் தொடங்கினார்கள் அவர்கள்.

❖

## 15

கிட்டப்பனின் நெஞ்சில் பட்டது உடம்பிலும் மனசிலும் விழுந்த 'இடி'

பாதிக்கப்பட்டது மனசா மார்பா என்று தெரியவில்லை அவனுக்கு. படுக்கையிலிருந்து எழுந்து நின்றபோது உடல் தள்ளாடியது; ஒரு தாகம் நாக்கைப் பிடுங்கியது; இன்னொரு தாகம் மனசைப் பிடுங்கியது.

மனசில்த் துளிர்த்துப் படர உயர்ந்த கொடி பற்றுக் கோலைப் பற்ற நீண்டு ஆடி அலைக்கழிந்தது.

சிறுநெருஞ்சியாக உறுத்திய படுக்கையை உதறியெறிந்தான். தூங்கும் நேரம்தவிர மற்றநேரங்களில் படுக்கையையே அறியாத உடம்பு அது.

கம்பை ஊன்றிக்கொண்டு நடமாட அவமானமாக இருந்தது. வாழ்வை வெறுத்தான். மரணம் தேவலை என்று பட்டது. இப்போது அவன் மனசை நிறைத்து நின்றது அச்சிந்த்தலு ஒன்றுதான். அவளைப் பார்க்கவேண்டும்; அவளோடு பேசவேண்டும். எவ்வளவோ இருக்கிறது பேச.

எத்தனைநாள், எத்தனைதபா பேசியிருக்கிறோம்! என்ன பேசினோம்? எதையோ பேசாமல் என்னவோ பேசியிருக்கிறோம்.

நினைத்தவுடன் அவள் இங்கே வந்து தோன்றுவதற்கு ஒருவழி இருக்கக்கூடாதா. அப்படி ஒரு மாயம் இருந்தால் எவ்வளவு நல்லா இருக்கும்.

வாழ்நாளில் தான் செய்த மிகப்பெரிய்ய தவறு அவளை இழந்ததுதான். புத்தி ஏன் நமக்கு இப்படிப் போச்சி.

கிட்டனுக்குத் தன்பேரில் வெறுப்பும் அவள்பேரில்க் கோவமும் வந்தது.

கலியாணம் நிச்சயமாவதற்கு முன்னால் அவளைச் சந்தித்துப் பேச முயற்சி செய்ததென்னவோ வாஸ்தவம். அன்றைய அந்த ரண்டு மூணுநாள் ராவும் பகலும் அதே முயற்சியாகவே இருந்தான்.

அப்போது அவளுடைய வீட்டில் ஒரு பயங்கரக் கடிநாய் ஒன்று இருந்தது. அதையும் மீறி அந்தத் தெருவுக்குப் போகிறது எப்படி? திருடர்கள் நாயை வசியம் செய்யக் கையாளும் உபாயங்கள் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் ஞாபகத்துக்கு வந்தது.

எருமைத் தோலினால் முறுக்கி செய்யப்பட்ட உழவு வடங்கள் அவனிடம் இருந்தது. அவைகளைப் பொடீயாக வெட்டி நறுக்கி அதில் கருப்பட்டி போட்டுக் கொதிக்கவைத்து காற்று வீசும் திசையில்க் கொண்டுபோய்க் கொட்டிவிட்டால், அந்த மணத்துக்கு ஊருக்குள் இருக்கும் நாய்களெல்லாம் அங்கே போய்விடுமாமே.

இது புரட்டாசி மாசமாக இருந்தால், சவுலுக்காக நாய்கள் பெண்நாய் இருக்குமிடம் தேடிப்போய் அங்கேயே காத்துக் கிடக்கும், வீட்டையும் மறந்து.

காரணமில்லாமல் அவனுக்கு கெப்பணக்கவுண்டரின் ஞாபகம் வந்துவிட்டது. இதெல்லாம் தெரிந்தேதான் அவர் பெண் நாயை வளர்த்தார்.

அச்சிந்தலு வீட்டுக் கடிநாய் மாத்திரமல்ல, கிட்டப்பனுக்குப் பகையைப் பற்றியும் யோசிக்க வேண்டியதிருந்தது.

கொண்டாடி கசிந்ததையெல்லாம் மறந்து, ஒரு சிறு பொறி தீயாகப் பற்றி எரிவதுபோல அற்ப விஷயங்கள்கூட பகையைப் பெரிதாக்கி விட்டுவிடலாம்.

இவர்கள் இரு குடும்பத்தாரின் உறவும் நெருக்கமும் ஊராரின் கண்களை உறுத்தியது என்பது உண்மைதான். 'கடும் உறவு கண்ணை மறைக்கும்' என்பது சொலவம். ''கருப்பட்டி கசிஞ்ச மாதிரி இருந்தா எத்தனை நாளைக்கு அந்த உறவு நிலைக்கும்?'' என்ற ஊராரின் பேச்சு உண்மை என்று ஆகிவிட்டதே.

மத்தியிலிருப்பவர்கள் ஒன்றைப் பத்தாக்கிச் சங்கை ஊதிப் பற்றவைத்தது போல ஆக்கிவிட்டார்களே.

'மல்லினியார்✝ வூட்டு ஆட்களைப் பற்றித் தெரியாதா?'' என்பதுதான் முதல் ஆரம்பம்.

இப்படிச் சொன்னது வேறுயாருமில்லை. துயாரம் நாயக்கரின் உடம்பிறந்தாள் மூக்கம்மாதான். கிட்டப்பனின் இந்த வீட்டுப் பெயரைக் குறிப்பிட்டு அவள் வேடிக்கைக்காகத்தான் அதைச் சொன்னாள். அங்கே இருந்த, கிட்டப்பனின் வீட்டுப் பெயரை யுடைய ஒரு பெண் அங்கேயே ஆட்சேபித்து சத்தம் கிளப்பியிருந் தாலும் பரவாயில்லை; சமாதானம் சொல்லி சமாளித்திருக்கலாம். அருவமில்லாமல் வந்து, கிட்டப்பனுடைய தாயாதிகள் வீட்டிலும் கிட்டப்பனுடைய வீட்டிலும் அந்த வார்த்தைக்குக் காது மூக்கு கண் எல்லாம் ஒட்டவைத்து, சிங்காரித்து றக்கை உண்டுபண்ணி பறக்க விட்டுவிட்டாள்.

''துயாரம் வீட்டுப் பொளைப்பு தெரியாதா நமக்கு?'' என்று இந்தப் பக்கத்திலிருந்து பதிலுக்கு ஆங்காரமாக ஒரு குரல் கிளம்பியது.

பிறகென்ன; கேக்கணுமா. யாராலும் அவர்களை ரண்டு பக்கமுமே சமாதானம் செய்து வைக்கவே முடியலை.

பலர், இதுதான் சமயம் என்று, யாரும் அழைக்காமல் தாங்களே வலியவந்து சமாதானம் செய்துவைக்க வந்தார்கள்; அதாவது பொய்ச் சமாதானம். வேற யாரும் ஊடாடி நிஜமாகவே சமாதானம் செய்துவைத்து விடாமல்ப் பார்த்துக்கொண்டார்கள் இவர்கள்!

இந்த இரண்டு குடும்பங்களுக்குள்ளேயும் ஏற்பட்ட இந்த வெடிப்பு ஊரிலுள்ள ரொம்பப் பேருக்கு ஆனந்தத்தையும் திருப்தியையும் கொடுத்தது.

அச்சிந்தலுவின் பிறவி அழகு அந்தக் கிராமத்தின் ஆண்களை விடப் பெண்களின் மனசைத்தான் ரொம்பவும் அலைக்கழித் திருந்தது. அவர்களுக்கெல்லாம் இப்போது பரமநிம்மதி.

---

✝ **மல்லினியார் - பந்தியில் பரிமாறப்பட்ட ருசியான பதார்த்தங்களைத் தின்பதற்கு மீண்டும் மீண்டும் கொண்டுவரச்சொல்லி கோஷமிட்டதினால் அவர்களுக்கு மல்லினியார் என்று பெயர் ஏற்பட்டதாக ஒரு சொல்.**

**மல்லினி எனும் தெலுங்குச் சொல்லுக்கு இன்னும், திரும்பவும், மீண்டும் என்ற அர்த்தம் உண்டு.**

கிட்டப்பன் அவளுக்குக் கிடைப்பதை எந்தப் பெண்தான் விரும்புவாள். அவன் தனக்குக் கிடைக்காவிட்டாலும் பரவா யில்லை; அச்சிந்த்தலுவுக்குக் கிடைக்கக்கூடாது. பொருந்திய ஜோடி சேருவது கடவுளுக்கே பொறுக்காதாமே! ஆகவேதான் ஜோடிகளுள் யாராவது ஒண்ணு குறைவுபட்டு இருக்கிறதுக்குக் காரணமாம்.

❖

## 16

ஊரிலுள்ள அத்தனை பெண்களும் அந்த வினாடியில் கிட்டப்பனுக்குக் ''கூனி''யாகத் தெரிந்தார்கள். இப்படியே இதை விடப்படாது; என்ன ஆனாலும் சரிதான்; அவர்கள் வீட்டுக்கு நேராகவே போய் நடந்ததைச் சொல்லி சரிசெய்துவிடனும் என்று புறப்பட்டான்.

இதை அறிந்துகொண்ட அவனுடைய அம்மா ''நீ இனி அங்கே போனே, நா ஒம்மொகத்துலயே முளிக்கமாட்டென்'' என்று சொல்லிவிட்டாள். சரி, அவர்கள் வீட்டுக்குத்தானே போக வேண்டாம்; போகலை, அவளைத் தனியாகக் கண்டு பேசி நிலைமையை எடுத்துச் சொல்லிவிடுவது என்று தீர்மானித்தான்.

ஆனால் இதே கெடுபிடி அச்சிந்த்தலுவுக்கும் அவர்கள் வீட்டில் இதைவிடப் பலமாக இருந்தது.

இதுதான் நல்ல சமயம் என்று கிட்டப்பனுக்கு வசதியான பல இடங்களிலிருந்து, வெளியூரிலிருந்து, பெண்தர முன்வந்தார்கள்.

'கல்யாணம் நிச்சயமான !மாதிரிதான்; கிட்டப்பன் கலி யாணத்துக்குச் சம்மதித்துவிட்டான்' என்கிற ஒரு பொய்த்தகவல் அச்சிந்த்தலுவின் வீட்டுக்குப் பறந்தது.

முன்பின் யோசிக்காமல் அவள் மனம் தளர்ந்தாள். கிட்டன் இப்படித் தன்னை 'மோசம்' செய்ய சமயம் பார்த்திருந்திருக்கிறான் என்று நினைத்தாள். அவனை நேரில்ப் பார்த்து ஒருவார்த்தை - ஒரே ஒருவார்த்தை - நாக்கைப் பிடுங்கிக்கொள்ளும்படியாக ஒரு கேள்வி கேட்டு விடவேணும் என்று துடித்தாள்.

நடு ராத்திரியில் நாய் குலைக்கும் போதெல்லாம் தெருவில் கிட்டப்பன் இப்படித் தன்னை 'மோசம்' செய்ய சமயம் பார்த்திருந் திருக்கிறான் என்று நினைத்தாள். அவனை நேரில்ப் பார்த்து ஒரு வார்த்தை-ஒரே ஒரு வார்த்தை- நாக்கைப் பிடுங்கிக் கொள்ளும் படியாக ஒரு கேள்வி கேட்டு விட வேணும் என்று துடித்தாள்.

அனைவரும் வீட்டில் தூங்கியவுடன், மெள்ள எழுந்திருந்து நாயைக் கூப்பிட்டு கட்டிப் போட்டாள். பகலெல்லாம் கட்டிப்போடப்பட்டு, ராத்திரியில் அவிழ்த்துவிடும் பழக்கமுள்ள நாய் அது. திரும்பவும் ராத்திரியிலும் கட்டில் கிடக்க அதுக்குச் சம்மதமில்லை. ரொம்ப அநியாயம் இது என்று நினைத்தது.

அச்சிந்த்தலு கூப்பிட்டால் கிட்டெ வரும். மடியிலிருந்து சங்கிலியை எடுக்கும் அலுக்கம் கேட்டாலே போதும், ஒரே ஓட்டமாக ஓடிவிடும்.

திரும்பவும் அதை ஏமாற்றி, அதுக்கு ஏதோ ஒரு நல்லது, பிரியமானது செய்யப்போவதாக நடித்து ஏமாற்றிப் பிடிக்க வேண்டும். அதற்குள் அது கள்ளப்பட்டுவிட்டால், என்ன 'வித்தை' காட்டினாலும் பிறகு அது கிட்டெ வராது. அது அவளை ஏமாற்ற ஆரம்பித்துவிடும்.

கருப்பட்டியைக் காட்டி அதைத் தன்பக்கம் கூப்பிட்டாள். 'முடியாது அங்கிருந்தே அதை எனக்கு வீசிப்போடு' என்பதுபோல் தூரத்தில் இருந்துகொண்டே அவளைச் சுற்றிச்சுற்றி வந்தது.

''கள்ளக் களுதெ'' என்று மனசுக்குள் பல்லைக்கடித்துச் சொல்லிச் சிரித்து, கருப்பட்டியில் ஒரு பகுதியைப் பிய்த்து வீசினாள்.

ஆவலோடு தின்றுவிட்டு வேகமாக வாலை ஆட்டியது. பின்னும் கொஞ்சம் வீசினாள்.

அதையும் தின்றுவிட்டு 'இன்னும் தா' என்பதுபோல் அவளை நெருங்கி வந்தது. அதன் கழுத்திலுள்ள பட்டைவாரை எட்டிப் பிடித்துக்கொண்டாள்! 'என்னமும் செய்; இன்னும் கொஞ்சம் கருப்பட்டி இருக்கா' என்பதுபோல் அவள் மடியை முகர்ந்து பார்த்தது.

அதை, அதின் கட்டும் இடத்துக்கு இழுத்துக்கொண்டு போனாள்.

மீதிக் கருப்பட்டியையும் போட்டு, கட்டிப் போட்டாள். தின்றுவிட்டு, அவள் முகத்தையே பார்த்தது, ''என்ன விஷயம்?'' என்பதுபோல்.

இவள் இந்தப் பக்கம் கொஞ்சம் நகர்ந்ததும், அதுக்கு என்ன ஏது என்று ஒன்றும் விளங்கவில்லை! வேளை கெட்ட வேளையில் இப்படி ஒரு கருப்பட்டி கிடைத்தது என்றாலும், எதற்கு ஏன் என்று புரியவில்லையோ என்னமோ, அது இவளைப் பார்த்து முன்னத் தங்கால்களை உயர்த்திப் பொய்த்தொண்டையில் சத்தம் கொடுத்து முனக ஆரம்பித்தது.

கொஞ்சம் நேரத்தில் அதன் தவிப்பான குரல் கேட்டது. பிறகு ஆட்சேபமான சிறிய குலைப்பு கேட்டது.

கட்டுச் சங்கிலியை வெட்டி வெட்டி இழுத்து விடுத்துக்கொள்ள முயன்று தோற்றது.

கொஞ்சம் கழித்து-

'என்ன அநியாயம். ராத்திரி நேரத்திலும்கூட இப்படிக் கட்டிப் போட்டால் எப்பிடி, என்பதுபோல சிறிய, செல்ல ஊளையிட்டது, புகார் செய்வது போல். நேரம் ஆக ஆக அதனால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. தன்னுடைய அநாதரவான நிலையையும் தனக்கு இழைக்கப்பட்ட கொடுமையையும் நினைத்து ஓ என்று பெருங்குரலெடுத்து அழுவதுபோல் பலமாக ஊளையிட ஆரம்பித்து விட்டது.

இந்தக் 'களுதை'யின் ஊளைச் சத்தத்தைக் கேட்டு வீட்டில் யாரும் முழித்துக்கொள்வார்களோ என்று அச்சிந்த்தலுவுக்குப் பயம் வந்து விட்டது. நாயின் அந்த ஊளை மனசை ரொம்ப சங்கடப்படுத்தியது. அதன் அருகே போய் அதை என்ன சமாதானப்படுத்தினாலும் கேட்பதாக இல்லை.

கழுத்தில் பிணைத்த சங்கிலியோடு அவளை நோக்கி முன்னத் தங்கால்களை உயர்த்தி, பலவித குரல்களை எழுப்பி, 'அவிழ்த்துவிடு என்னை; நீ செய்யிறது கொஞ்சம்கூட நல்லா இல்லை' என்று கேட்பது போலிருந்தது அதன் செய்கை. பக்கத்தில் நின்றால் ஆர்ப்பாட்டம்; தலை மறைந்தால் ஊளை.

இந்தச் சனியனை என்ன செய்ய, ''இரு உன்னை; கிட்டனிடம் சொல்லி ''செடியில்'' கட்டச் சொல்றென்'' என்று சொல்லி முணுக்கென்று சிரித்துக்கொண்டாள்.

கொஞ்சம் நேரம் கழித்து, மனசை அறுக்கும் அதன் ஊளையைப் பொறுத்துக்கொள்ள முடியாமல், ''சனியனே, நீயும் அவனைப் போல எங்கையாவது பரதேசம் போய்ச் சேர்'' என்று அவிழ்த்து விட்டு விட்டாள்.

அச்சிந்த்தலுவுக்குத் தெரியாமல் இதையெல்லாம் அவளுடைய அம்மா கவனித்துக்கொண்டிருப்பது அவளுக்குத் தெரியாது! நுங்கம்மாவுக்குத் தெரியும். பெண் மனசைப் பெண் அறிய முடியும். இந்த ஆண்கள் எவ்வளவு வஞ்சகமானவர்கள் என்பதை அவள் அறிவாள்.

எந்தப் பெண்ணுடைய வாழ்க்கையில்த்தான் இது நடக்கலை?

❖

# 17

அச்சிந்த்தலு என்கிற அந்தப் பொக்கிஷப் பெட்டியைத் திறந்து பார்க்க ஒரு 'சாவி' வேண்டியதிருந்தது போலும். அந்தச் 'சாவி'யாகக் கிட்டப்பனுக்கு வாய்த்தாள் அவனுடைய மனைவி ரேணம்மா.

இவளின் ஒவ்வொரு அணுகலும், அசைவும்கூட வினாடிக்கு வினாடி அச்சிந்த்தலுவை வேறு வகையில் நினைவூட்டின.

காரணமில்லாமல் எரிந்துவிழும் புருசன், இருட்டில் முயங்கும் போதுமட்டும் பேராதரவு காட்டுவது விளங்கிக்கொள்ள முடிய வில்லை இவளால்.

மனசு என்கிற குழந்தைக்குப் பராக்குக்காட்டி அப்படி ஏமாற்றுவதும் கிட்டப்பனுக்குக் கஷ்டமாகத்தானிருந்தது. அதனால் திடீர் திடீர் என்று 'சுருதி' கலைந்துபோகும்.

தனது பிறந்த வீட்டில் கன்னி காக்கும்போது இவள் செய்து கொண்டிருந்த வேலைகளில் பலதை இங்கேயும் செய்ய வேண்டிய திருந்தது. முக்கியமாகப் பெரிய வீடுகளில் செய்து வருவதுபோல அணைந்துவிடாமல் நெருப்பைப் பாதுகாத்து வைப்பதும், இல்லாத வர்கள் வந்து நெருப்புக் கேட்கும்போது கொஞ்சம் கொடுப்பதுவும்; இது ஒரு முக்கிய வேலை.

பாட்டி சொல்லியிருக்கிறாள். ரேணம்மா, தானங்களில் சிறந்த ஒன்று இந்த நெருப்புதானம் என்று.

மழைக்காலங்களில் நெருப்பைக் காப்பாற்றுவதும் கொடுப் பதுவும் பாடுதான். என்றாலும் முடியாது என்று சொல்ல முடியுமா.

பிழைப்புக்காகக் காட்டில்ப் போய் குடும்பத்தோடு காலையிலிருந்து மாலைவரை உழைத்துவிட்டு வீட்டுக்கு வந்தவுடன் அடுப்பைப் பற்ற வைக்க நெருப்பு வேண்டுமே.

கிட்டப்பன் வீட்டில் இல்லாத சமயம் பக்கத்துத்தெரு பக்கத்துவீடு என்று பெண்கள் நெருப்புவாங்க வருவார்கள், நெருப்பு மாத்திரம் அவர்கள் வாங்கிக்கொண்டு போய்விடுவதில்லை. நெருப்புக் கொடுத்தவர்களுக்கு மறுஉபகாரமாக, ஊருக்குள் நடந்த ரண்டு செய்திகளைச் சொல்லிவிட்டுப் போவார்கள்.

ஏற்கெனவே செய்தி சொல்லுவதற்கென்று (!) காலையிலும் மாலையிலும் ரண்டுபேர் - ஏகாலிச்சியும் குடிமகளும் - சோறு வாங்க வருகிறார்கள். கிராமத்தில் உள்ள பெரிய வீட்டுப் பெண்டுகளுக்கு இவர்கள்தான் செய்தி அறிவிப்பாளர்கள். அப்போது நடக்கும் செய்திகளைச் சூடு ஆறுவதற்குள் கிராமத்துக்குத் தெரிவிப்பவர்கள் இவர்கள்தான். எந்த எந்தப் பொம்பளை ''குளியாமல்'' இருக் கிறாள், அவர்களுக்கெல்லாம் எதெது ''மாசம்'', என்ன குழந்தை பிறந்திருக்கு, யார் ''சேனை'' வைத்தது, பிறந்த குழந்தை ''மாலை சுற்றி''ப் பிறந்ததா, மாலை சுற்றிப் பிறந்ததினால் மாமன்களுக்கு என்ன நேரும், எந்தப் பெண் சடங்காகியிருக்கிறாள்; எப்போ தலைக்குத் தண்ணீர் விடுகிறார்கள். சடங்குக்குத் தாய் மாமன்மார் சேலை கொண்டுவந்து தந்தார்களா, கோபித்துக்கொண்டு தாய்வீடு போனவர்கள் யார் யார், ரொம்பவும் ''முடியாமல் சட்டடியாகக்'' கிடக்கும் கிழங்கள் யார்யார், அதில் ரொம்பவும் ''அத்தா புத்தியாக''க் கிடக்கும் கிழம் எது, அவர்களுக்குப் ''பஞ்சுப்பால்'' விட்டாச்சா, யார்யார் வீட்டில் புருசம் பெஞ்சாதிச் சண்டை, மாமியார் மருமகள் சண்டையின் தொடர்ச்சியில் அன்றைய நிலவரம், அத்தராத்திரியில் வந்து கதவைத் தட்டியது, ஆண் பெண் ரகசியத் தொடர்புகள், அதனால் ஏற்பட்ட காரியங்கள் இப்படி இப்படி அவர்களுக்குச் செய்திகள் சொல்லவும் இவர்களுக்குக் கேட்கவும் தேனாமிர்தமாக இருக்கும்!

இதெல்லாம் போக, செய்தி தருகிறவர்களில் வேறு ரகமான தகவல் தருபவர்களும் இருந்தார்கள்.

அப்படித் தந்து மகிழ்வித்துவிட்டு 'ஏதாவது பெற்றுக்கொண்டு போகிறவர்களும் உண்டு. இதில் சிலருக்கு நெருப்பு வாங்க வருவது முக்கியமில்லை; வீட்டில் நெருப்பு இருந்தாலுமே பேருக்குக்

கொஞ்சம் கழனித் தண்ணீர் கொண்டு வந்து குடிதாழியில் ஊற்றி விட்டு, போகும்போது ஒரு புதூச்செய்தியைப் ''பறக்க'' விட்டு விட்டுப் போகிறவர்களும், நெருப்பை வாங்கிக்கொண்டு இன்னொரு 'நெருப்பை' விசிறி விட்டுப் போகிறவர்களும் உண்டு.

அதன் அந்த ஆரம்பமே ரொம்ப ''ஒப்பரவாக'' இருக்கும்! ஒருநாள் ரேணம்மாவிடம் அந்தப்பெண் வந்து சொன்னது:

''ஹிம்... போகட்டும். என்னமொ; அப்பிடியெல்லாம்... இருந்த ஆள், இப்பொ அடங்கி இருக்காரெ. அதே பெரிய காரியந்தான்''

''எப்பிடியெல்லாம் இருந்த ஆள்?'' மனசின் கேள்வி ரேணம்மா விடம் கண்வழியாகத் தெரியும்.

உடனே நல்லபடியாக முகத்தை வைத்துக்கொண்டு...

''அதெல்லாம் எதுக்கு இப்பொ, எப்பிடியோ, சந்தோசமா இருந்தாச் சரி'' என்று சொல்லிவிட்டு...,

''எனக்கு அங்க கொள்ள வேலையிருக்கம்மா. நின்னு பேச நேரமில்ல; வரேம்மா'' என்று சொல்லிவிட்டு விசுக்கென்று போய் விடுவார்கள்.

''மெம்மறந்து'' போய் விடுவாள் ரேணம்மா கொஞ்ச நேரத்துக்கு.

புதையல் கிடைத்த லோபிக்கு, அவ்வளவும் துருப்பிடித்த இரும்பாகத் தெரிவது போலிருக்கும் இவளுக்கு.

எல்லாப் பெண்டுகளையும் போலத்தான் இவளும் புருசனைப் பார்த்துப் பார்த்து பூரித்தாள் முதலில்

''ஒலகம்'' கிட்டப்பனையும் அச்சிந்தலுவையும் பிரித்து வைத்ததோடு திருப்தி அடைந்துவிடும் என்று தோன்றவில்லை. இப்பொ, ரேணம்மாவும் கிட்டப்பனோடு வாழ்ந்துவர அவர் களுக்குச் சம்மதமில்லை. சலனமில்லாமல் ஆரம்பித்த ஒரு குடும்ப தாம்பத்யத்துக்குள்ளே சிறுபுகைச்சல் தோன்றி, அது பெரிசாக வளர்ந்து, பற்றி எரிய ஆரம்பித்துவிட்டது.

தீயான தீ இல்லை அது.

ஒருநாள், முடிவாகக் கிட்டப்பன் சொல்லிவிட்டான் ரேணம்மா விடம். ''...அதப்பத்தியெல்லாம் நீ கேட்டு, இனி தெரிஞ்சி ஒண்ணும் ஆகப்போறதில்லை... நா ஒனக்கு ஒரு கொறையுமில்லாம

பிரியத்தோட வச்சிக்கிடறென்'' (இப்படிச் சொல்லும்போது அவன் கண்கள் நிறைந்து உணர்ச்சி வசப்பட்டது போல்த் தெரிந்தது) பிறகு கொஞ்சம் இடைவெளி விட்டு, ''ரேணம்மா, ஒனக்கு இஷ்டமிருந்தா, என்னோட இரு. இல்லே... மகராசியாப் பொ''

ரண்டுநாள் ரேணம்மா பேசாமல் - மௌனமாய் - இருந்தாள். ''மூணாநாள்'' நா எங்க ஊருக்குப் போறென்'' என்று முடிவாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

கொஞ்சநாள் கழித்து வழக்கம்போல கிராமத்தில் பெரியவர்கள் ரண்டு ஊர்க்காரர்களுமே சேர்ந்துதான் - ரேணம்மாவையும் கிட்டப்பனையும் சேர்த்துவைக்கக் கடும் முயற்சி செய்தார்கள். அந்த முயற்சிகளெல்லாம் காலவிரயமாகத்தான் முடிந்தன.

ஆடைக்காலத்தின்போது முழுமூச்சாக சம்சாரிவேலைகளில் மூழ்கிவிடுவார்கள். கோடைக்காலம் வந்ததும் திரும்பி பேச்சு வார்த்தை தொடங்குவார்கள்.

அந்த ஊருக்கும் இந்த ஊருக்கும் மாறிமாறி நடந்து திரிந்தும், 'விருந்து' சாப்பிட்டதும்தான் மிச்சம் கடேசியில்.

நாயக்கர் வீட்டுப்பெண்களிடமுள்ள முரண்டும் பிடிவாதமும் வேற பெண்களிடம் இருக்குமா என்பது சந்தேகம்தான். ஒரு சின்ன விஷயத்துக்காகச் சாகும்வரை மூஞ்சியில் முழிக்காமல் காலம் கடத்திவிடுவார்கள். செத்த பிறகும்கூட அவர்களுடைய திரேகம் மூட்டத்தில் வெந்து சாம்பலானாலும் ''நெஞ்சு'' மட்டும் வேகாமல் இருக்கும். காலையில் தீ ஆத்தப் போனவர்கள், காத்துக் கொண்டிருப்பார்கள்; அந்த 'நெஞ்சை'த் திரும்பவும் குச்சியால் புரட்டிப் புரட்டி, குத்திக் குத்தித் தனியாக ஆமணக்கும் முத்தும் விறகும் போட்டு எரித்து சாம்பலாக்குவான் குடிமகன்.

❖

## *18*

படுக்கையில், முடியாமல்க் கிடந்த கிட்டப்பனைப் பார்க்க வந்த அப்பிநாயுண்டு அவனிடம் பேச்சினூடாகச் சொன்னார்: ''பொட்டச்

சிக்குள்ள பிடிசாதகம் இந்த ஆம்பிளைக் களுதைகளுக்கு இராது. இவனுக்கு முன்கோவம், பின்குணம், அதுக அப்பிடியில்லெ. பரசு நாயக்கர் கதெஒனக்குத் தெரியுந்தானெ?''

அவன் படுத்திருந்த கட்டிலின் ஓரத்தில் அவர் ரட்ணக்கால் போட்டு உட்கார்ந்துகொண்டு, டானாக் கம்பின் தலையில் ரண்டுகைகளையும் ஒன்றின்மேல் ஒன்றை வைத்துக்கொண்டு அப்பிநாயுண்டு தொடர்ந்தார்;

''பரசு நாயக்கர் கலியாணம் முடிஞ்சி, மாமனார் வீட்ல மூணுமாச விருந்தெ முடிச்சிக்கிட்டு, பெண்டாட்டியெக் கூட்டிக்கிட்டு ஊருக்கு வாரார் நடந்தே. வளியில மளை பிடிச்சிக்கிட்டது. புதூச் செருப்பு; மாமனார் புதுமாப்பிள்ளைக்குத் தச்சிக் கொடுத்தது. உளவுக்குப் போட்டுக்கிட நல்...ல கனமா இருக்கணும்ண்ணு பகடையிட்டச் சொல்லித் தச்சித் தந்தது.

''ஒடங்காட்ல பிடிச்சமளை, சதப்பித் தள்ளீட்டது. பெறகெங்க, பொட்டியாரு செருப்பைப் போட்டுக்கிட்டு நடக்க! மளை வெரிச்சதும், பொண்டாட்டி கிட்டெ செருப்ப குடுத்து, தூக்கீட்டு வாண்ணாரு.

'நா முடியாது; ஒம்ம செருப்ப நீரு செமக்கணும்' ண்ணா. 'இப்ப செருப்ப தூக்கிட்டு வரமுடியுமா முடியாதா?'ண்ணு எரிச்சலாக் கேட்டாரு.

'முடியாது'ண்ணா,

'முடியாதுண்ணா நீ எங்கூட வராதெ; ஓம் அப்பம் வீட்டப் பாத்துப் பொ'ண்ணாரு.

இப்பிடி ஒரு வார்த்தெ அவர் வாயிலிருந்து வரும்ண்ணு அவ எதிர்பார்க்கலை.

''கொஞ்சம் தெகச்சி நிண்ணு தலெஎடுத்து அவரு மொகத்தெப் பாத்தா. அவளவுதான்; விரு விருண்டு வந்த தெசையப் பாத்து நடக்க ஆரம்பிச்சிட்டா!''

''திக்கெண்ணது பரசு நாயக்கருக்கு''

''ஏய் ஏய், வாறாயா இல்லையா இப்பொ?'' ண்ணு கேட்டாரு.

'நீரு ஆம்பிளையானா என்னெக் கூப்பிடக்கூடாது'ண்ணு நடந்துட்டா!

''ஆக; விருந்து சாப்பிடப்போன பரசு நாய்க்கரு ஒத்தையிலதான் திரும்பிவந்தாரு.

என்ன ஏதுண்ணு எல்லாரும் அவரிட்டெக் கேட்டாங்க. நடந்ததெ அப்பிடியே சொன்னாரு.

'ஒரு பொம்பளெ; அப்பவும் புருசஞ் செருப்பக் கொஞ்சம் தூக்கிட்டு வந்தா தேஞ்சி போவாளாமோ?'ண்ணு கேட்டாங்க.

'அவளெ அந்த எடத்திலேயே அந்த நனைஞ்ச செருப்பாலயே நாலு போட்டு இழுத்துட்டு வராம சும்மா வந்து இப்படி நிக்கானே இந்த ரகுராமநாய்க்கரு பேரன்!'ண்ணு சில பேரு சொன்னாங்க. 'அம்புட்டு செருக்கு அப்பவும் ஒரு பொம்பளைக்கு இருக் கணுமா?'ண்ணு கேட்டாங்க கொஞ்சப் பேரு.

'சர்த்தாங்கெ; அப்பிடித்தான் இருக்கும் அதெல்லாம். பெறவு சரியாப் போவும்' இப்பிடியுஞ் சொன்னாங்க.

''ஆனா, கடேசி வரைக்கும் சரியாப் போகலை.

நாங்க நடையா நடந்தும், உள்ளங்காலு வெள்ளெலும்பானதுதான் மிச்சம்.

'ஏந் தலை ஒசரம் பவுனாக் குவிச்சாலும் நா வந்து அவனோட வாளமுடியாது'ண்ணு தலையெக் குலுக்கிட்டா!

இப்படிச் சொல்லிவிட்டு அப்பிநாயுண்டு அப்படியே கொஞ்ச நேரம் தலையை மட்டும் ஆட்டிக் கொண்டேயிருந்துவிட்டு, ''கடசி வரைக்கும் பரசுநாய்க்கரு கலியாணம் பண்ணியும் பிரம்மச்சாரி யாத்தான் இருந்தாரு. வேற கலியாணமும் பண்ணிக்கிடலெ. என்று சொல்லி நிறுத்தினார்.

''ஏந் தாத்தா; அவரு அப்பிடி வேற கலியாணமும் பண்ணிக்கிடாம இருந்தாரு?'' என்று கேட்டான் கிட்டப்பன்.

டக்கென்று நாயுண்டு கிட்டப்பனை ஒரு பார்வை பார்த்தார். பிறகு வாசல் வழியாக தெருவை ஒரு பார்வை பார்த்தார். டானாக் கம்பின் மேலுள்ள தன்னுடைய கைகளையே கொஞ்ச நேரம் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, ''பேரப்பிள்ளை, மனுசம் மனசுக் குள்ளார இருக்கதெ யாராலும் - படச்ச அந்த பெரமதேவனாலகூடக் - கண்டுபிடிக்க முடியாது பாத்துக்கொ. அக்கையாவுக்குப் பிறகு நம்ம வூர்லெ 'பொம்பளை ஆவி'யே ஆகாதுண்ணு இருந்தவங் கள்ளெ நாய்க்கரையும் சேர்த்துக்கிடணும்'' என்றார்.

'ஒரு ஆம்பளையாலெ அப்பிடியும், இருக்கமுடியுமா தாத்தா?'' என்று வேடிக்கைபோல ஒரு நிசத்தைக் கேட்டான் கிட்டப்பன்.

பெரியவரான அப்பிநாயுண்டுவிடம் எல்லா வயதினரும் சமமாகவும் சகஜமாகவும் பேசிப் பழகுவதற்கு, அவர் எந்த இடத்திலேயும் பால் சம்மந்தமான விஷயங்களை ஒளிவு மறைவு இல்லாமல் விரசமில்லாத நகைச்சுவையோடு பேசுவதும் ஒரு காரணமாக இருக்கலாம்.

முகத்தைக் கொஞ்சம் சுருக்கி வைத்துக்கொண்டு அவர் ''இதுலெ ஆம்பிளையென்ன பொம்பிளையென்ன; 'கடி கண்டா'த்தான் எல்லாம்! அதிலும், சில உடம்புக்குத்தான் சில உடம்பு திறக்கும்'' என்று ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி நிறுத்திக்கொண்டார் நாயுண்டு.

❖

''உடம்பு திறக்கிறது'' என்கிற அப்பிநாயுண்டுவின் வார்த்தை கிட்டப்பனை எங்கோ கொண்டு சென்றுவிட்டது. உடம்பின் திறப்பு என்பது உண்மைதான் என்று யோசித்தான்.

அப்பிநாயுண்டு எழுந்து போன பிறகும்கூட அதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான்ன.

அவன் அகக்கண்முன் அந்தக் காட்சி விரிந்தது.

❖

## 19

கொட்டக் கொட்ட நட்ட நடு மத்தியானம். பங்குனி வெயில் கரிசல்க்காட்டையே முள்ளில்க் குத்தி நெருப்பில் வாட்டுவதுபோல் வாட்டியெடுத்துக் கொண்டிருந்தது. கொஞ்ச தூரத்துக்கு அப்பால் இருக்கிற அனைத்தும் நடுங்கி உருத்தெரியாமல் ஆக்கிக்கொண்டிருந்தது வெள் நெருப்புக்கானல்.

கிட்டப்பனுக்கு ''தகை நோய்'' ஆரம்பித்த நேரம்; காலைக் கஞ்சியைக் குடித்துவிட்டு பருத்திக்காட்டுக்குப் போய்விட்டு வெயிலுக்கு முன்னே வீடு திரும்பிவிடலாம் என்று புறப்பட்டுப் போனான். அது கொஞ்சம் தொலைக்காடு. பருத்தி களவு போகிறது போல்த் தெரிகிறது என்று அம்மா சொல்லிக் கொண்டிருந்தாள். அந்த ஆண்டு உப்பன் பருத்தி அமோகமாய்க் காய்த்து வெடித்துக் கொண்டிருந்தது. நடந்து போகும் ஒத்தையடிப் பாதையின் இருப்பக்கமும் பருத்திச் செடிகளின் அரணிப்பு பார்த்துப்பார்த்து சந்தோஷப் படும்படியாக இருந்தது.

ஏறுவெயில்; நடந்து போகும்போதே அவனுக்குக் கண்ணெதிரே பூச்சிக் கூட்டம் பறந்து மயக்கம் வரும்போல்த்தெரிந்தது.

ஈரம் உலர்ந்த நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டது. பிறகுதான் தோன்றியது, பிஞ்சை பூராவையும் சுற்றி வந்து பார்த்திருக்க வேண்டாம் என்று. அப்படிச் செய்தது தப்பு என்று தெரிந்தது. ஆனால் எப்படிப் பார்க்காமல் இருப்பது. பக்கத்துப் புஞ்சை அவளுடையது.

ஒருவேளை அவள் வந்திருக்கலாமில்லையா. யாருடைய புஞ்சையில் என்று தீர்மானிக்க முடியாதபடி நடுப்பொளியில் நிற்கும் அந்தக் கன்னி வேப்பமரத்தடியை மறக்க முடியுமா. அதைப் பார்க்காமல் எப்படித் திரும்புவது?

ரண்டு குடும்பங்களுக்கும்பேச்சுவார்த்தை இல்லாமல்ப் போன திலிருந்து, ரண்டு குடும்பத்தைச் சேர்ந்தவர்களுமே அந்த மரநிழலடி யில் ஒதுங்குவதுமில்லை, தங்குவதுமில்லை; அங்கே உட்கார்ந்து பருத்தி பகிர்வதும் இல்லை.

தலைதூக்கி அவன் அந்த மரத்தைப் பார்த்ததும், வா வா என்று சொன்னது. நெருங்கிப் போனான். அதனுடைய அடி உடம்பின் சில இடங்களில் வேனத்தழைவு அவளுடைய உதட்டின் செம்மின் னாப்பு நிறத்தில் இருந்தது.

பட்டை வெடிப்பு ஏற்படாத அந்தப் பருவமரத்தன் சில இடங்களில் கொழுந்துப் பிசின் காய்ந்து வைரம் ஜொலித்தது.

நெருங்கிச் சென்று மரத்தை அணைத்துக் கொண்டான். துக்கம் அடைத்தது. கண்ணில் நீர் கட்டியது.

''நாம் இப்படியும் ஆச்சே அடி...'' என்று சொல்லிக்கொண்டான்.

மிகவும் உணர்ச்சி வசப்பட்டதாலோ என்னவோ, அந்த மரத்தைச் சேர்த்துப் பிடித்தபடியே மயங்கித் தரையை அடைந்தது அவனுக்குத் தெரியாது.

அச்சிந்த்தலு வன்னி மரத்துக்கு அடியில் இருந்து பருத்தி பகிர்ந்து வண்டியில் அனுப்பி வைத்துவிட்டு, செம்பில் இருந்த தண்ணீரைக் குடித்ததுபோக மீதியைப் பக்கத்தில் நின்ற வாகைச் செடிக்கு வார்த்து விட்டு 'தப்புச்சுளை'களைப் பெறக்கிக்கொண்டே வந்தாள்.

வீட்டுக்குப் புறப்பட வேண்டியதுதான் என்று நினைத்து நடந்த அவளுக்குக் குறுக்கே ஏதோ ஒரு எண்ணம் தோன்றியது.

சுற்றிலும் உள்ள புஞ்சைகளைப் பார்த்தாள் ஒரு சுடு குஞ்சைக் கூடக் காணவில்லை. கொஞ்ச தூரத்தில் நின்ற அந்தக் கன்னி வேப்பமரம் மட்டும் அவளையே பார்த்துக்கொண்டு அசையாமல் நின்றது. அந்த மரத்தின் பார்வை அவளையும் பாதித்தது.

திடீரென்று அடித்த காற்றினால் அதன் கிளைகள் நிமிர்ந்து வளைந்தது நீயும் வா என்று தலைஆட்டிக்கூப்பிடுவதுபோல் இருந்தது. ஒரு திகைப்பு!

எத்தனை நாட்கள் இருக்கும் அந்த மரத்தின் நிழல் மடியில் அவர்கள் உட்கார்ந்து.

மரம் திரும்பவும் அதேபோல அழைத்தது அவளை.

அந்தத் திசையில் அவளையும் அறியாமல் அவளுடைய கால்கள் எட்டெடுத்து வைத்தன.

அருகே போய், மரத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்; மரமும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தது. பங்குனியின் அக்கினி வெக்கையும், இலை அசையாச் சுடு காற்றும் அவளை அதன் நிழலை நோக்கித் தள்ளிக்கொண்டு வந்தது. மரத்தின் வளர்ச்சியில் பளிச் சென்று மாற்றம் தெரிந்தது. மனுசரைப் போல் மரமும் மாறுமோ. முன்பைவிட மேலும் உரம் அடைந்திருந்தது மரம்.

மருந்துக்குக்கூட யாரும் அதில் ஒரு தளிரையோ பல்லுக்கு ஒரு குச்சியையோ ஒடித்திருக்க மாட்டார்கள். ஊரைவிட்டு நெடுந் தொலைவ இருப்பது ஒரு காரணம். ஆட்டுக்காரர்கள்கூட அதில் ஒரு தழை ஒடிக்க மாட்டார்கள். கிட்டப்பனை நினைத்தாலே அவர்களுக்கு 'அர்ச்சுனன்பேர் பத்து'தான்! அதனால் அந்தத் திசைக்கே அவர்கள் 'தலை வைத்துப்படுக்க' மாட்டார்கள். இப்படி யாக அந்த மரம் எந்தவித வின்னமோ, வடுவோ படாமல் தன்னிச்சை யாக செழித்துக் கொழுத்துக் கிளைவீசி அரணித்து நின்றது.

அந்த வெக்கைக்கு அடைக்கலமாக, பெயர் தெரியாத ரண்டு வரத்துப் பட்சிகள் தங்கப் பச்சை நிறத்தில் பச்சையோடு பச்சையாக இலைமறை கிளைமறைவாக, இருப்பது அச்சிந்த்தலுவின் கண்ணில் ஒரு ஓரை தெரிந்தது. இவள் அதற்கு முன்னால் இப்படி ஒரு நிறங்கொண்ட ஜோடிப்பட்சிகளைப் பார்த்ததில்லை. இவளுக்கு வினோதமாகவும் புதுமையாகவும் இருந்தது.

தம்மை இவள் பார்த்துவிடாமலிருக்க அவை ஜாக்கிரதையோடு முழுவுருவம் கண்ணில்ப் படாத சாமர்த்தியமாய் ஒவ்வொரு கிளையாய்த் தாவி மறைந்துகொண்டேயிருந்தன!

அச்சிந்த்தலுவின் முழுக்கவனமும், கவனிக்கக் கவனிக்க மறைந்து கொள்ளும் அந்தத் தங்கப்பச்சை நிறப் பட்சிகளின்மீது இருந்ததால் மரத்தின் கீழே அனாதரவாக மயங்கிக்கிடக்கும் கிட்டப்பனை அவள் கவனிக்கவில்லை.

தற்செயலாக, திடுக்குற்றுப் பார்த்த பிறகுதான் தெரிந்தது, இவன் என்று.

முதல்ப் பார்வையில் வேற்று உருவமாக, யாரோ என்றிருந்தது. பிறகு அயர்ந்து தூங்கிக்கொண்டு கிடப்பது போலவும், இது தூக்கமில்லை வேற என்னமோதான் என்று நினைத்து நெருங்கிக் கிட்டே போய் கவனித்தபோது, தன்னிலையில் அவன் கிடக்க வில்லை என்று தெரிந்தது. துணுக்குற்றாள்.

பாய்ந்து சென்று அவனைத் தூக்க முயன்றாள்.

தலை கழுத்தில் நில்லாமல் சரிந்தது. அதே சமயம் உடம்பில் சூடு தெரிந்தது. சொருகிய கண்களைப் பார்த்ததும் பயமும் அழுகையும் முட்டியது. அவனின் பெயர் சொல்லி பிரியத்தோடு அழைக்கும் போது தொண்டை அவளுக்கு ஒத்துழைக்கவில்லை.

❖

## 20

அவள் கண்ணீரால் அவன்முகம் நனைந்ததாலோ என்னமோ அவன் முனகும் மிக மெல்லிய சத்தம் கேட்டது.

திரும்பத்திரும்ப அவனை உலுக்கிப் பெயர் சொல்லிக் கூப்பிட்டுக் கொண்டேயிருந்தாள்.

தன் நிதானம் இல்லாமலேயே அவன் ''தண்ணீ... தண்ணீ...'' என்று முனகுவது கேட்டது.

''தண்ணீரா?'' என்றுகேட்டு, சற்றே அவனைத் தன்னிலிருந்து பிரித்துப் பின் நகர்ந்து ''அய்யோ, தண்ணீருக்கு எங்கே போவேன் இந்த அத்துவானக் காட்லெ; இருந்த தண்ணியக் கூட இப்பந்தானெ கீழே கொட்டுனேன்.

இந்தச் சமயத்தில் அவளுடைய கண்ணீரின் துளி ஒன்று அவன் வாயினுள் பட்டது. அதை அவன் ஆவலோடு சப்பியது போலி ருந்தது. ஈரப்பசையே இல்லாத அவனுடைய நாக்கும் உலர்ந்த வாய் உதடுகளும் ஒரு சிறிய்ய, குளிர்ந்த ஈரத்துக்காகத் துடிக்குத் தவிப்பது தெரிந்தது.

காய்ந்து வறண்டுபோன அந்த உதடுகளை அவள் தனது குளிர்ந்த ஈரநாக்கினால்த் தடவி ஈரப்படுத்தினாள். அது, பாசம் மிகுந்த மிருகங்கள் ஒன்றை ஒன்று நாவினால் நக்குவது போலிருந்தது.

அவனது உலர்ந்த உதடுகளிலும் பற்களிலும் அவள் இடதும் வலதும் நாவினால்த் தடவித்தடவி ஈரமாக்கினாள்.

இந்தச் செய்கையின் போது அவளது திறந்த வாயிலிருந்து அமுத தாரையாய் உமிழ் நீர் சொட்டியதையும் குளிர் ஈரம் உதடுகளில் பட்டுக் கொண்டிருந்ததையும் அரைப் பிரக்ஞையில்க் கிடந்த அவனது வாய், பசியினால் முலைதேடும் குழந்தையாய்ப் பற்றிச் சுவைக்கத் துவங்கியதும் சுறுசுறு என்று அவள்வாய் உமிழ் நீர் நாவின் வழி வந்துகொண்டேயிருந்தது.

அவனது வாயும் உலர்ந்த நாக்கும் குளிர்ந்து, தொண்டைக்குள் ஈரப்பதம் இறங்க இறங்க...,

அது, ஈரத்துக்காகத் தவித்துப் பாளம் பாளமாய் வெடித்துக் கிடக்கும் கானக் கரிசலில் இறங்கிய ஆகாச கங்கையை ஏற்றுப் பூரிப்பது போலிருந்தது. அந்தப் பெயர் தெரியாத தங்கப் பச்சைநிற ஜோடிப் பறவைகளுக்கு இந்த மானிட அவஸ்தையின்பங்களைப் பற்றி அக்கறை இருந்ததாகத் தெரியவில்லை. தங்களின் மெல்லிய ரகசிய மொழியில் அவைகள் தங்களுக்குள் மொழிந்துகொண்டும் மறைந்துகொண்டும் அந்த மரத்தின் குளிர்தரும் கிளைகளுக்கு ஊடாகயிருந்துகொண்டு இவர்களைக் கவனிப்பதுமாக இருந்தன. பொழுது நகர்ந்தது.

அமிர்தம் உண்டு புத்துயிர்ப்பு அடைந்த தேவனைப்போல் இப்போது கிட்டன் அவள்மீது சாய்ந்துகொண்டிருந்தான்.

ஒருவருக்கொருவர் வாய் திறந்து வார்த்தை பேசிக்கொள்ளா விட்டாலும் மௌனத்தால் பேசிக்கொண்டதுதான் ரொம்ப. ஒருவரை ஒருவர் தடவிப்பார்த்துப் பார்த்துக் கண்ணீர் விட்டார்கள். 'ஒருவினாடியில்' இவ்வளவும் எப்படிநேர்ந்தது, எப்படி ஒன்றானோம் என்று அவர்களுக்கே தெரியவில்லை! இப்படி ஒன்றாகாமல் இருக்கமுடியாது என்று மட்டும் தெரிந்தது. ஒருவருக்கொருவர் ஆத்மார்த்தமாக சமர்ப்பித்துக் கொண்டேயி ருந்தனர். பிறந்தத லிருந்து வளர்ந்து வந்ததுவரை அவர்களுள் ஊடாடிச்செழித்த எண்ணமே தீர்மானமாக மேலோங்கி நிலைத்தது இப்போது. ஆவி பிரியும்வரை இனிப் பிரிவதில்லை என்று மனச்சத்தியம் செய்து கொண்டனர். அவர்களுக்குள் அங்கே வார்த்தைகள் செத்துப் போயின.

❖

# 1

''காலந்தான் எவ்வளவு வேகமாப் போகுது; எவ்வளவு வேகமாகப் போகுது!''

எல்லாரையும் போல அந்த கிராமத்துக்காரன்களும் சொன்னார்கள், கரைமரத்து நிழலில்க் கூடியிருந்தபோதும் முக்கியமாக ஊர்மடத்தில்க் கூடியிருந்தபோதும்.

அங்கேதான் அவர்களுக்குக் கொஞ்சம் ஓய்வும் பழையதுகளையெல்லாம் நினைத்துப்பார்க்கக் கொஞ்சம் நேரமும் கிடைக்கும்.

'ஊர் பேசுகின்றது' என்று ஒரு பிரயோகம் உண்டெ, அது அங்கதான்!

''த்ராயும் படியும் தெருவில இருக்கு'' என்று ஒரு 'சொலவம்' உண்டு. த்ராயு என்பது திராசு (தராசு), படி என்பது மனிதர்களைப் பற்றி மனிதர்களே நிர்ணயிக்கும் எடையின் அளவு. தெரு என்பது 'பொது'வைக் குறிக்கும்.

''மேலே'' சித்ரபுத்தன் மனுசர்களைப் பற்றி அவனுடைய எழுத்தாணியால் எழுதுவதற்கு முன்னால், மனிதர்களைப்பற்றி மனிதர்களே நாக்கினால் காற்றில் எழுதும் 'குறிப்பு'கள் இவை.

அந்த எழுத்தாணிக் குறிப்புகளுக்கும் இந்த நாக்குகளின் குறிப்புகளுக்கும் அப்படி ஒன்றும் பெருத்த வித்தியாசம் இருப்பதில்லை.

சித்ரபுத்த நயினாரைப் போலவே இவர்களும், விஷயங்களைத் திராயுவுவில்ப் போட்டுத்தான் ஒருவித துல்லியத்தோடு நிறுத்துப் பார்க்கிறார்கள். ஒவ்வொரு மனித மரணத்துக்குப் பிறகும் அது வாசிக்கப்படுகிறது.

கிட்டப்பனுடைய மரணத்துக்குப் பிறகும் அதைத் தொடர்ந்து சில நாட்களிலேயே மரணமுற்ற அச்சிந்த்தலு பற்றியும் அங்கே அந்தக் ''குறிப்பு''களை - அவர்கள் ''வாசித்தார்கள்''.

'அப்பேர்க்கொத்த' பலசாலியைக் கிராமம் அதுவரை கண்டதில்லை என்றார்கள்.

'அப்பேர்க்கொத்த' ''சிறை''[†] யை இந்தக் கிராமம் மட்டுமென்ன இந்தச் சுத்துவட்டாரத்திலேயே கண்டதில்லை என்று குறிப்பிட்டார்கள் அச்சிந்த்தலு பற்றி.

அதோடவா; 'ஊர்உலகம்' பற்றிக் கொஞ்சமும் கவலைப் படாமல் யாரு என்ன சொன்ன போதிலும் சட்டையே செய்யாமல் சாகும் பரியந்தம் அவர்கள் சேர்ந்து வாழ்ந்தே களித்தார்கள்.

அப்படிக் கிட்டப்பனும் அச்சிந்த்தலுவும் கூடி வாழ்ந்தது பற்றி ''உலகத்தில்'' தீர்க்கமுடியாத ரண்டு கட்சிகள் இருந்தன. 'அதான் சரி; அப்பிடித்தான் இருக்கணும்' என்று ஒரு கட்சி.

'அது மொறையில்லை; தப்பிதம் என்று ஒரு கட்சி'

ஆனால்...

நாட்கள் ஆக ஆக, அந்தச் 'சேர்ந்த வாழ்க்கை' பற்றி இதே மக்கள் வியப்போடு சிலாகிக்கவும் ஆரம்பித்தார்கள்! மன்னார் நாயக்கர் போன்ற ஒருசிலர் எதிர்க் குரலும் கொடுத்தார்கள்; அவர் சொன்ன அபிப்ராயம்;

''எச்சவன் எளைச்சவன் அப்பிடி இருந்திருந்தா ஊரு பாத்துக்கிட்டிருந்திருக்குமா? பெரிய குடும்பங்களுக்குள்ள நடந்த காரியம்; தடுத்து நிறுத்த முடியலெ''

''தடுக்கலேங்கிற வார்த்த யெச் சொல்லாதிரும்; எல்லாஞ் செஞ்சி பாத்ததுதான். அவங்ககிட்ட நடக்கலெ!''

''எச்சது எளைச்சதுகண்ணா என்ன ஆயிருக்கும்; ஒண்ணா ஓடிப் போயிருக்கும் கண்காணாத எடத்துக்கு.

''அப்பிடி நடக்கலையா, நம்ம ஊரிலயே;''

எல்லாரும் இந்த இடத்தில் சொல்லிவச்சதுபோல சில வினாடிகள் மௌனமாக இருந்ததோடு வேகமாக ஒருத்தருக்கொருத்தர்

---

[†] சிறை எடுத்துக்கொண்டு போகும் அளவுக்கான பேரழகி.

கடைக்கண் ஓட்டியும் சுற்றிலும் ஒரு பார்வை அவசரமாகப் பார்த்துக் கொண்டார்கள்.

அந்த நெசத்தைக் கலாவலியாக சபையில் வைத்துப் பேச முடியாது. மனசுக்குள் ஓட்டிப் பார்த்துக் கொள்ளலாம்.

அது, ஒசந்த சாதிக்காரனின் மகளும் தாழ்ந்த சாதிக்காரனின் மகனும் சேர்ந்து ''ஓடிப்போன'' விஷயம்!

நீண்டநாள்க் கழித்து, மிக நீண்ட நாள்க் கழித்துத்தான் உரத்த குரலில்ப் பேசி அலச கிராமத்தில் குரல்கள் பிற்பாடு வந்தன.

❖

கோபல்ல கிராமத்தின் தோற்றம், உள்ளும் புறமும் இப்போது ரொம்ப மாறியிருந்தது. புதுப்புது வீடுகள் உண்டாகியிருந்தன.

நிறையப் பேர் புதுமனிதர்கள் வெளியிலிருந்து வந்து குடியேறியிருந்தார்கள். அவற்றில் பல ஜாதிக்காரர்களும் இருந்தார்கள். கன்னட தேசத்திலிருந்து வந்த கவுண்டர்கள் கன்னட மொழியில்ப் பேசினார்கள். இங்கே வந்த பிறகும், அவர்கள் வீட்டுக் கல்யாண நிச்சய தாம்பூலத்தின்போது பெண்ணின் தாய்மாமன் ஒரு உலக்கையை எடுத்துக் கொண்டுபோய் தலைவாசலில் நின்று கொள்கிறதும் பிறகு அவர் சத்தம் போட்டு 'துலுக்கன் வாரான் துலுக்கன் வாரான்'' என்று மூன்றுதரம் சொன்னதும் சம்மந்திகள் வெற்றிலை மாற்றிக்கொள்கிறதும் இருந்தது!

தமிழ் பேசும் சைவச் செட்டிமார்கள், வெள்ளாளர் எனப்படும் பிள்ளைமார்கள் இவர்களுடைய வீடுகள் நாலைந்து. தெலுகுப் பத்தர்களோடு தமிழ்ப் பத்தர்களும் ஒன்றிரண்டு குடும்பங்களும் வந்து தொழில் நடத்த ஆரம்பித்திருந்தன.

ஆதி திராவிடக் குடும்பங்கள், தெலுகுப் பகடைகள், ஏகாலிகள், குடிமகங்கள், கொல்லாசாரி, தச்சாசாரி, கூடைகள் வண்டித் தடுக்குகள் பெருக்குமார் முதலிய செய்யும் குறவர்கள், ''கம்புச் சேவகம்'' என்று சொல்லப்படும் காவல்த்தொழில் புரியும் தேவமார் வீடுகள், ஆடு மேய்ப்புத் தொழில் புரியும் கோங்கிமார் வீடுகள், இப்படியாக அந்தக் கிராமம் சகல மக்களாலும் பல்கிப் பெருகிவிட்டது. இதோடு ஒரு பஞ்சாங்க ஐயரும் வந்து குடும்பத்

தோடு குடியேறினார். மன்னார் நாயக்கர் சொன்னதுபோல 'சட்டிபானை செய்யிற குயவரும் நெசவுத் தொழில் நடத்தும் சேணியரும் வந்துவிட்டால் மொத்தம் பதினெட்டு ஜாதிக்குக் கணக்கு வந்துவிடும்!

தெலுகுக் கம்மநாயக்கர்களும் கன்னடக் கவுண்டர்களும் தவிர மற்ற அனைவருமே தமிழ் பேசுகிறவர்கள்.

சற்றும் துவேஷமில்லாமல் மனம் நிறைந்த ஆனந்தத்தோடு ஒருவர் மொழியை ஒருவர் கேலி பேசிச் சிரித்தார்கள்.

ஊர் மடத்தில் மன்னார்நாயக்கர் ஒருநாள் வேடிக்கைக்காகச் சொன்னார் ''டே கோவாலு, நல்லாக் கேட்டுக்கோ. கீகாட்டு ஊர்ல, ஒத்த வீடுதான் கவுண்டமாரு வீடு. நடுச்சாமத்துல 'கிச்சுச் கிச்சு; கிச்சுக்கிச்சு'ண்ணு சத்தங்கேட்டுதாம்! என்னடாது, நட்ட நடுச்சாமத்துலகூட இந்தக் கவுண்டமாரு ஒருத்தருக்கொருத்தரு கிச்சங்காட்டி வெளையாடுதாங்களே வேற வேலை இல்லை யோண்ணு நினைச்சி தூங்கீட்டாங்களாம்.''

''காலையில எந்திரிச்சிப் பாத்தா... அவங்க வீடு பூராவும் தீப்பிடிச்சி எரிஞ்சிபோயிக்கிடக்காம்! பாவிமட்டகெ, தீ யோ தீ''ண்ணு கத்தித் தொலைச்சிருந்தா ஊருகூடி தீயெ அமத்திருக்கலாமில்லெ? பாத்துக்கொ, ஒங்க ஆட்களோட கூறெ'' என்று சிரித்தார்.

''போங்க மாமா; எப்பப் பாத்தாலும் கேலிதான் ஒங்களுக்கு'' என்று சொல்லி, மற்றவர்களின் சிரிப்பில் அவனும் சேர்ந்து கொண்டான்.

''யோவ் கோவலுக் கவுண்டரே, விடாதீரும் நாயக்கரை; மடக்கும் பதிலுக்கு'', என்று உத்சாகப்படுத்தினார் படுத்துக் கொண்டிருந்த முத்தய்யக் கோனார்.

''போருமய்யா; அவரு பெரியாளு; வேடிக்கைக்காக ஏதாவது சொன்னா நாமளும் பதிலுக்குச் சொன்னா மருவாதியா? ஒம்ப பேச்சக்கேட்டா லெச்சணந்தாம்'' என்றார் கோபால்க் கவுண்டர்.

முத்தையக் கோனாருக்கு 'சப்'பென்று ஆகிவிட்டது. ''நீரு இப்படித்தான், இப்பொ பெத்தணக் கவுண்டர் மட்டும் இங்கயிருந்தா விடுவாரா. 'யோசன மஞ்ச்சியோசதா; பண்டி சாட

சப்பட்டெ' கதையெ பதிலுக்குச் சொல்லி நாயக்கரோட மூக்கெ உரிச்சிருப்பாரில்லெ;

இப்படி ஒருத்தரை ஒருத்தர் மனம் நோகாமல் கேலி பேசிச் சிரிக்கும் பழக்கம் இருந்தது.

❖

## 2

கிராமத்தின் பெரிய குடும்பத்தைச் சேர்ந்த ரண்டு பையன்கள் முதல் முதலில் ஊரைவிட்டு வெளியூர் போய்ப் படிக்க ஆரம்பித் தார்கள். எந்த ஏட்டுப் பள்ளிக்கூடத்தைக் கொண்டு வந்து கிராமத்தில் நிலை நிறுத்தப் பாடுபட்டார்களோ அந்தக் கோட்டை யார் குடும்பத்தி லிருந்து நரசிம்மனும், நுன்னகொண்ட வேங்கடப் பய்யா குடும்பத்திலிருந்து கஸ்தூரி ரங்கய்யனும் எட்டைய புரத்துக்குப் படிக்க அனுப்பப்பட்டார்கள். அந்தப் பக்கத்திலேயே அந்த ஊரில்தான் அப்போது அந்தப் ''புதுப்படிப்பு'' ஆரம்பிக்கப் பட்டிருந்தது. அங்கே இங்கிலீஷும் இங்கிலீஷ் கணக்கு முறைகளும் சொல்லிக் கொடுப்பதாகத் தெரிந்து பையன்களைப் படிக்க அனுப்பிவைத்தார்கள்.

இந்தப் பையன்கள் அங்கே போய் என்னத்தைப் புதுசாகப் படித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்று ஊர்க்காரர்களுக்குத் தெரியாவிட்டாலும் ஒன்று மட்டும் பளிச்சென்று தெரிந்தது அவர்களிடம். இங்கிருந்து போகும்போது தலையில் குடுமி இருந்தது; இப்பொ ''சேக்கு'' வெட்டிக்கொண்டு வந்திருக்கி றார்கள். லீவில் வந்த பையன்களின் ''தலையளகை''ப் பார்த்து ஊர் சலசலத்தது!

''என்ன இது அசிங்கம்?'' முகம் சுளித்துக் கேட்டார்கள்.

''அசிங்கமில்ல; ஒண்ணுமில்ல ஒங்க சோலியப் பாத்துப் போங்க'' என்று எடுத்தெறிந்து பேசினான் கஸ்தூரி.

''அரே நய்னா, இவனுக்கென்ன இப்பிடிக் கோவம் வருது'' என்று கேட்டுக்கொண்டார்கள். நரசிம்மன் மட்டும் கொஞ்சம் பொறுமை யுடன் அவர்களுக்கு விளக்கினான்.

''ஒங்களுக்கென்ன, இங்கிருந்து செல்கிறவங்களுக்கு, அங்கெ எங்க குடுமியப் பாத்து பையங்க எங்களைச் சர்வ கேலி செய்ராங்க''

நம்பூரார் வீட்டு சென்னையநாயக்கர் இந்தப் பையன்களோடு தனது பேரனையும் எட்டையபுரத்துக்கு அனுப்பி வைக்கவேண்டும் என்று இருந்தவர், இந்தப் பையன்கள் இப்படி அநியாயமாகக் குடுமியை எடுத்துவிட்டு என்னவோபோல் ''சேக்கு'' வெட்டிக் கொண்டு வந்து நிற்பதைப் பார்த்து, தனது பேரன் இவன்களோடு போனால் வம்பாய்க் கெட்டுப்போவான் என்று நிறுத்திக் கொண்டார்.

கோட்டையார் வீட்டில் நரசிம்மனுக்கும், நுன்னகொண்டார் வீட்டில் கஸ்தூரிக்கும் இவர்கள் சேக்கு வைத்துக்கொண்டு வந்தது பற்றி அவ்வளவு எதிர்ப்பில்லை என்றாலும் அவர்கள் வீட்டுப் பாட்டிமார்கள் மட்டும் 'குய்யோமுறையோ' என்று புலம்பினார்கள்.

''ஏமிரா கஸ்தூரீ, இட்ட சேஸேத்திவே...'' என்று கண்ணீர்விடாத குறையாகத் துக்கப்பட்டாள் ரெங்குப் பாட்டி. அந்தக் குடுமியில் அவள் அவனுடைய பெயரனாரைப் பார்த்து வந்தாள்.

எட்டையபுரத்திலிருந்து வந்த அன்று அவர்களை வீட்டுக்கு வெளியே நிறுத்தி, உடுத்தி வந்த ஆடைகளைக் களையச் சொல்லி, நேரே கிணத்தடிக்குப் போய் குளிக்கச் சொல்லி அவர்கள்மீதும் அவர்கள் கொண்டுவந்த பெட்டிகள்மீதும் கோமியம் தெளித்து, பிறகுதான் அவர்களை வீட்டுக்குள் அனுமதித்தார்கள் பாட்டி மார்கள்.

பிள்ளைகளை அங்கே படிக்க அனுப்பவேண்டாம் என்று எவ்வளவு முட்டிக்கொண்டாலும் தங்கள் மகன்கள் கேட்க மாட்டார்கள் என்று அவர்களுக்குத் தெரியும், வெள்ளைக்காரனை ரெங்குப்பாட்டி குறிப்பிடும்போதெல்லாம் ''நீசப் பினாண்டு'' (நீசப் பயல்) என்றே சொல்லுவாள். முதலில் அவன், ஜாதியில் ஒசந்தவன் இல்லை. ரெண்டாவது, அவனுக்குச் சமையலாள் இங்கேயுள்ள கீழ்ச்சாதிக்காரன்தானாம்.

மூணாவது, அய்யோ அதை எப்படிச் சொல்றது... நாராயண நாராயண... பசுமாட்டின் மாமிசத்தைத் தின்பானாமே, நாராயண நாராயண.

கலிமுத்தித் தான் போச்சி. பகவானே, ராஜரீகம் செய்யிறவனே இப்படி இருந்தா குடிஜனங்களப் பத்தி சொல்லணுமா என்று புலம்புவாள்.

இது என்ன படிப்பு என்று இந்தப் பிள்ளைகளைப் படிக்கப் போட்டிருக்கிறார்கள் என்று ஊருக்குள்ளேயும் ஒரேகுறைபாடு. ஊர் மடத்தில் இதைப் பற்றிப் பலமாக விவாதம் நடக்கும். ஏட்டுப் பள்ளிக் கூடத்தை ஏற்பாடு செய்த கோட்டையாரே அதை மீறுவது நல்லா இல்லை என்று ஒரு அபிப்பிராயம். இந்தக் கட்சியில் மன்னார் நாயக்கர்தான் பலமாகக் கால் ஊன்றி நின்றார். என்ன படிப்பு இது; செத்தபடிப்பு என்று சத்தம் போட்டுச் சொன்னார்.

ரகுராமக் கவுண்டர் ஒரு நாள் கரை மரத்தடியில் இருந்தபோது இந்த கஸ்தூரிப் பயலும் நரசிம்மன் பயலும் வந்தார்களாம். அவர்களுடைய படிப்பை சோதித்துப் பார்க்க ஒரு மனக்கணக்கு போட்டாராம். ஒரு பயலுக்கும் கணக்குக்குச் சரியான விடை தெரியலையாம். அவர்கள் ரகுராமக் கவுண்டரின் முன்னால் எப்படி முளித்தார்கள் என்று தனது முகத்தால் முளித்துக்காட்டினார் மன்னார் நாயக்கர்.

''அட கணக்கெ விட்டுத் தள்ளும்; ஒரு குழிப்பெருக்கம் தெரிய வேண்டாமா? ''என்று கேட்டார் முத்தய்யக் கோனார். அவர் பங்குக்கு அவரும் ஒரு தகவலைச் சொன்னார்.

இந்த லீவில் கஸ்தூரிப் பையன் விருந்தாட அவர்களுடைய சொந்தக்காரர்கள் இருக்கும் தெக்கூர் போயிருந்தானாம். அங்கே அவனுடைய அம்மாப்பாட்டி இருக்காள்.

பையனுக்கு வரவேற்பு ரொம்பத் தடபுடல்.

வெளியூர்ச் சீமையில்ப் போய் இங்கிலீசுப் படிப்பெல்லாம் படிச்சிட்டு வந்திருக்கானெ! வீட்டுக்கு வீடு கூப்பிட்டு விருந்து வச்சாங்களாம். மறுநா சித்ரபுத்ர நைனார் நோம்பு. ஊருக்கு நடுத்தெருவுலெ பந்தல் போட்டு நையினார் கதைய ராகம் போட்டுப் படிப்பாங்க. இப்பதாம் பொஸ்தகம் வந்துட்டதெ. முந்தி மாதரிண்ணா பனை ஓலை ஏட்டை உத்து உத்துப் பாத்துப் படிக்கணும்.

நல்ல கூட்டம் கூடியிருந்தது; பந்தல் பிடிக்காம வீடு தவறாம சொளகு நிறைய்ய பருத்தி, மல்லி தவசம்ண்ணு கொண்டுவந்து வச்சிக்கிட்டே இருந்தாங்க. வந்தவங்களுக்கெல்லாம் பானக்கரம் தந்தாங்க.

பொத்தய நாயக்கர் ராகம்போட்டு நைநாரு கதையெப் படிக்காரு. கஸ்தூரிப் பையனும் அம்மாபாட்டியும் வந்தாங்க. அவனுக்கு இதெல்லாம் ஒரு வேடிக்கையா இருந்தது.

பொத்தய நாய்க்கரு கொஞ்சம் தைப்பாற நினைத்து மாத்தாளு யாரும் வந்திருக்காகளா என்று கவனிச்சாரு. வளக்கமா வர்ர பெத்தணக்கவுண்டரு வர, கொஞ்சம் நேரமாகும்போல. கஸ்தூரி யோட பாட்டிதாஞ் சொன்னா, பொத்தய நாயக்கரைப் பாத்து. 'பொஸ்தகத்தெ ஏம் பேரங்கிட்டக் கொடு'' அவரும் இவங்கையில தந்தாரு. இவம் பொஸ்தகத்தெ வாங்கி பாத்துக்கிட்டே இருந்தான்!

எல்லாரும் நெனைச்சது, இங்கிலீசுப் படிப்பு படிச்ச பிள்ளெ அதும் சீமையை விட்டு சீமை போயி என்னாமாப், படிக்கப்போறானோ ராகம் போட்டுன்னுட்டு எதிர்பாக்காங்க. பொத்தய நாய்க்கரு அவம் மொகத்தெ மொகத்தெ உத்துப் பாக்காராம். அவம் பொஸ்தகத்தெப் பாத்து ரொம்ப நேரங்களிச்சி, பேசற மாதரி வாசிச்சானாம்! ''ராகம் போட்டு படி; ராகம் போட்டு''ண்ணெல்லாம் பொத்தய நாய்க்கரு சொல்லிப் பாத்தாராம். ம்ஹுூம்! அவம் படிச்ச படிப்பு அம்புட்டுத்தான்னு விட்டுட்டாராம். கஸ்தூரியோட அம்மாப் பாட்டிக்கு வருத்தமான வருத்தமில்லை. பாவம் குங்கிப் பொய்ட்டாளாம்.

வீட்டுக்கு வந்து 'நீயோ ஓம்படிப்புப் படிச்ச லெச்சணமோ'ன் னாளாம். அன்னையிலிருந்து பயலுக்கு மேப்பானைச் சோறு' கிடையாது, கம்மஞ்சோறுதான்னுட்டாளாம்! என்றார். எல்லாரும் சிரித்தார்கள்.

கோட்டையார் வீட்ல நடந்த கதெயக்கேளும் என்று ராமக் கோனார் ஆரம்பித்தார்.

வட்டிக்குக் கொடுத்த தொகை திரும்பிவந்திருக்கு; அப்படி ஒண்ணும் பெரிசில்லை, சின்னத் தொகைத்தான். நரசிம்மனைக் கூப்பிட்டு கணக்குப் பாக்கச் சொல்லியிருக்காங்க, ஒரு தாளை எடுத்து எழுதி எழுதிப்பாக்கானாம்! ஒரு நோட்டுப் பொஸ்தகம் பூரா எழுதியும் எவ்வளவாச்சிண்ணு சொல்லத் தெரியலையாம். வாய்க் கணக்காப் பாத்துச் சொல்ற ஒரு கணக்கெ இந்தப் புள்ளெயாண்டான் தாள் தாளா எளுதிப் பாளாக்குனதுதாம் மிச்சமாம்! என்றார்.

''ம்... தமிழ்ப்படிப்புக்கு ஈடாகுமா'' என்றார்கள் அங்குள்ள வர்கள்.

❖

# 3

அவர்கள் மூன்று வருடங்கள் அல்லது நான்கு வருடங்கள்தான் எட்டையபுரத்தில் படித்தார்கள். அப்போது ஒட்டப்பிடாரம், தாலுகா தலைநகராக இருந்தது. ஒருநாள் அது திடீரென்று கோவில் பட்டிக்கு மாற்றப்பட்டது

ஒட்டப்பிடாரத்தில் அன்று ஜமாபந்தி.

காலையில் சரியாக ஆபீஸ் நேரத்துக்குத் தூத்துக்குடியிலிருந்து வெள்ளைக்கார கலைக்டர் வந்து சேர்ந்துவிட்டார் தாலுகாபீஸுக்கு. ஆனால் ஒட்டப்பிடாரம் தாசில்தார் இன்னும் வரக் காணோம். எங்கே தாசில்தார்? என்று ரெவின்யூ இன்ஸ்பெட்டரிடம் அதிகாரமாகக் கேட்டார் கலைக்டர்.

தாசில்தார் அந்தச் சமயத்தில்தான் புதியம் புத்தூரிலிருந்து மாட்டுவண்டியில் வந்து அவசரம் அவசரமாக இறங்கினார். வேகமாக வந்து கலைக்டருக்கு ஒரு சலாம் போட்டார். தாமதமாக நேரம் தவறி வந்த தாசில்தாரை கலைக்டர் இங்லீஷில் விளாசித்தள்ளினார்.

நீர் இங்கே வந்து இருந்து எனக்கு முன்னால் எல்லாக் காரியங்களையும் கவனித்து எனக்காகக் காத்திருப்பது போக நான் வந்து உமக்காகக் காத்திருக்க வேண்டியதிருக்கிறது. ஒரு கலைக்டர் வந்து தாசில்தாருக்காகக் காத்திருந்தது எங்கேனும் நடந்திருக்கிறதா?

தாசிலுக்கு சர்வ நாடியும் ஒடுங்கிவிட்டது.

''எசமானனே மன்னிக்கவேண்டும். நான் வெளியூரிலிருந்து வந்ததால் காலதாமதமாகிவிட்டது.''

''இன்றைக்கு ஜமாபந்தி என்று தெரிவித்திருந்தும் ஏன் வெளியூர் போனீர்?''

''துரைகளே, அடியேன் வெளியூர் போகவில்லை; வெளியூரிலிருந்தே வருகிறேன்.''

''என்னது! வெளியூரிலிருந்தே வருகிறீரா? இதைவிட அது ரொம்ப மோசம்.

''எசமான் அவர்களே, நான் குடியிருப்பதே வெளியூரில்தான்.'

''மிகப்பெரிய தப்பிதம்; நீர் மேலும் ஒரு அதிகக் குற்றமிழைத்த வராகிறீர். கஸ்பாவில் குடியிருக்காமல் ஏன் வெளியூரில் போய் குடியிருக்கவேண்டும்; அதற்கு என்ன அவசியம் நேரிட்டது?''

வெள்ளைக் கலைக்டர் துரைக்கும் முகம் குங்குமமாகச் சிவந்து விட்டது. தாசில்தார் தனது நிலையை சங்கடத்துடனும் பணிவுடனும் விளக்கினார். ''துரைகளே, நான் தாழ்ந்த சாதிக்காரன். எனக்கு இங்கே இந்த ஊரில் குடியிருக்க யாரும் வீடுதர முன்வரவில்லை. நானும் மிகவும் முயன்று பார்த்தேன். இங்கே வெள்ளாளர் சாதி மக்களுக்குத்தான் மதிப்பு. தாழ்ந்த சாதிக்காரன் பெரிய அதிகாரியாகவே இருந்தாலும் வசிக்க வீடு தரமாட்டார்கள்.''

கலைக்டர் துரைக்கு மூக்கு நுனி சிவந்துவிட்டது.

இது உண்மைதானா என்று கேட்பதுபோல் அங்கே இருந்த மற்ற அதிகாரிகளைத் தனது பார்வையால்க் கேட்டார். எல்லோரும் தலையைத் தாழ்த்தி மௌனமாக இருந்தார்கள். கஸ்பா கணக்கப் பிள்ளைக்குக் கொஞ்சம் அரைகுறை இங்கிலீஷ் வரும். அவர் கலைக்டர் துரையிடம் தன்னுடைய இங்கிலீஷ் பேச ஏற்பட்ட சந்தர்ப்பத்தை நினைத்து மகிழ்ந்து, 'மெய்தான் துரைகளே; தாசில்தார் சொல்வதெல்லாம். இங்கே தாழ்ந்த சாதிக்காரன் எவ்வளவு பெரிய அதிகாரியாக வந்தாலும் குடியிருக்க வீடு தர மாட்டார்கள்'' என்று பெருமையோடு சொன்னார் அந்தக் கணக்கப்பிள்ளை.

இதைக்கேட்டதும் கலைக்டர் கோபமடைந்து, ''ஒரு தாசில்தாருக்குக் குடியிருக்க வீடு தராத இந்த ஒட்டப்பிடாரத்துக்கு தாலுகாத் தலைநகர் என்ன 'வாளுது?' மாத்து ஒடனே இங்கிருந்து. நாளையிலிருந்து இந்தத் தாலுகாவுக்குக் கோயில்பட்டிதாம் தலைநகர்; போ. இனிமே அங்கெதான் ஜமாபந்தி'' என்று உத்தரவு போட்டுவிட்டுக் கிளம்பிப் போய்விட்டாராம். அதுல இருந்து, இந்தப் பட்டிக்காடா இருந்தக் கோயிலுப்பட்டிக்கு மவுசு வந்துவிட்டது!

❖

கோவில்பட்டி அப்போது தனது பெயருக்குப் பொருத்தமாக ஒரு சிறிய்ய பட்டியாகவே இருந்தது.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு வர ரொம்பத்தூரம் மங்கம்மா சாலை வழியாக நடந்துவந்து, பிறகு அதிலிருந்து பிரியும் ஒத்தையடிப்பாதை வழியாக வந்து மேடு ஏறி வந்து அடைய வேண்டும். ஒரே கள்ளிக்காடு. எவனும் எதை அத்துக்கொண்டு போனாலும் போனதுதான்.

கோவிலும் அதைச் சுற்றிப் பத்து இருவது வீடுகளும்தான் இருந்தன.

இந்தக் கோவில்பட்டியைத் தெலுங்கில் ''குடிபல்ல'' என்பார்கள். கோவில்பட்டி வளர்ந்த கதையை மன்னார் நாயக்கர் சொல்லிக்கேட்கணும். அதை அவர் - யாரும் கேட்காமலே - அடிக்கடிச் சொல்லிவந்தார். ஏதோ அவர் வாங்கிவிட்ட ஊர் பெருகி வளர்ந்தமாதரி பெருமையோடு சொல்லுவார்! சத்திரமும் கிருஷ்ணங் கோயிலும் இருந்தது, வண்டிப்பேட்டைகள் ஏற்பட்டன, கரு வாட்டுப் பேட்டை உண்டானது. வெள்ளைக்காரனே வந்து அங்கே ஒரு துணிமில் கட்டினது, தாலுகா ஆபீஸ் வந்தது, போலீஸ் கச்சேரி, ஜெயில் எல்லாம் கட்டி முடிச்சது, சந்தைப் பேட்டை ஏற்பட்டது, முசாவரி பங்களா கட்டினது, பஜார் ஏற்பட்டது, அய்ஸ்கூலு வந்தது இப்படி வரிசையாகச் சொல்லிக்கொண்டே போவார்.

எட்டைய புரத்திலிருந்து கோவில்பட்டிக்குப் படிக்க கஸ்தூரியும் நரசிம்மனும் வந்தபோது, மேலும் ரண்டு பையன்கள் அவர்களோடு படிக்கப் போனார்கள். அதில் அப்பிநாயுண்டு வீட்டு அவர் பேரனான அன்னமய்யாவும் ஒருவன். அவனுக்கு இங்கே ஏட்டுப்பள்ளியிலும் படிப்பு ஏறவில்லை.

சரியான வெடுவாச் சட்டிப்பயல். அவனுடைய கவனமெல்லாம் வேறு எதிலோ லயித்திருந்தது. அது என்னது என்று அவனுடைய பெற்றோர்களுக்கும் பிடிபடவில்லை; வாத்தியார்களுக்கும் தெரியவில்லை.

அன்னமய்யாவின் பெற்றோர்கள் அவனைப்பற்றி மற்றவர் களிடம் குறிப்பிடும்பொழுது அவன், ''இண்டிஹி இப்பீண்டி; ஊரிஹி ஊர்வீண்டி'' (ருசியில் அவன் வீட்டுக்குக் கசப்பானவன் அரப்புப் போல; ஊருக்கு அவன் ருசியானவன் துவையல்போல)

❖

# 4

நுன்னகொண்ட நாயக்கரின் மகன் மூத்தவனுக்கு மதுரைக்கு வடக்கேயுள்ள ஒரு பணக்கார நிலப்பிரபுவின் வீட்டில் சம்மந்தம் ஏற்பட்டது. அங்கேயிருந்து அவர் பெண்மாத்திரம் கொண்டுவர வில்லை; ரொம்ப விஷயங்களைக் கொண்டுவந்தார் கிராமத்துக்கு. சட்டைபோட்டு அறியாத இந்த ஊரில் முதல் முதலாக ''கமுசு'' போட்டவரே அவர்தான். மணிபார்க்கும் கடிகாரம் மதுரையி லிருந்து வாங்கிக்கொண்டுவந்து சுவரில் ஆணி அடித்துத் தொங்க விட்டபோது கோட்டையார் வீடு தவிர ஊரோடு வந்து பார்த்து அதிசயப்பட்டார்கள்.

நேரத்தைக் காட்டவும், அதைப் பார்க்காதபோது மணி அடித்து நேரத்தைத் தெரியப்படுத்தவும் செய்தது.

மணி அடித்து நேரத்தைத் தெரியப்படுத்துவதால், மணி என்ன என்று கேட்டார்கள். ரண்டு மணி அடிக்க இன்னும் கால்மணி நேரம் இருக்கு; நாலடிச்சி பத்துநிமிஷமாச்சி என்றார்கள்.

ஊரில் குழந்தை பிறந்தாலும் பெண்பிள்ளை பூத்தாலும் எந்த நேரமானாலும் ஓடிவந்து கதவைத்தட்டி மணி என்ன என்று கேட்டுத் தெரிந்துகொண்டு போனார்கள்.

நுன்னகொண்ட நாயக்கர் ஒரு ஏற்பாடு செய்தார். ஒரு ஜன்னலைத் திறந்து வைத்து, தெருவிலிருந்தே ஜன்னல் வழியாகப் பார்த்தாலே தெரியும்படியாகச் சுவரில் தொங்கவிட்டு வைத்தார் அந்தக் கடியாரத்தை. குழந்தைகளோடு பெரியவர்களும் கூட்டம் கூட்ட மாக வந்து ஜன்னல் வழியாக மணி பார்த்தவண்ணமாக இருந் தார்கள் கொஞ்சக்காலத்துக்கு.

அதில் எப்படி மணி பார்க்கிறது என்று ரொம்பப்பேர்களுக்குத் தெரியவே இல்லை. பெரிய முள்ளு இத்தனாவதுல இருக்கு; சின்ன முள்ளு இத்தனாவதுல இருக்கு என்று மட்டுமே சொல்லத் தெரிந்தது.

''பொம்பள பாத்துச் சரிய்யாச் சொல்லிப் போடுதா; நீரொண்ணு. ஒரு எளவும் தெரியல!'' என்று கேலிசெய்து கொண்டார்கள்.

ஒருநாள், கடைக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கிட்ணக் கோனாரைப் பார்த்து கெப்பணக் கவுண்டர், ''யோவ் சுண்டக்கறி,

கேட்டீரா சங்கதிய! ஒரு தீப்பெட்டி, அஞ்சி பல்லிமுட்டைப் பப்பர்மெண்டு, சேலை தைக்க ஒரு ஊசி, நூல்க்கண்டு இம்புட்டும் கொடுக்கான்'' என்றார்.

''போடு சக்கெ;அது வேறயா!''

''அந்தத் தீப்பெட்டியிலெ ஒரு குச்சிய எடுத்து எதுல ரோசுனாலும் குபீர்ன்னு தீப்பிடிக்கி! வெளங்குமா; வெளங்கு மாங்கெ!'' என்றார் கண்டனக் குரலில்.

''சே, அது ஆபத்தில்லா; எண்ணைக்கிருந்தாலும். காலங்கெட்டுப் போச்சி'' என்றார் சுண்டக்கறி கிட்ணக்கோனார். கொஞ்சங் கழித்து யோசித்து, ''வெள்ளக்காரன் வந்தாலும் வந்தான் நாடு குட்டிச்செவராப் போச்சி'' என்றார். முக்கியமாக வெள்ளைக்காரன் கொண்டுவந்த ரயில்பேரில் அவருக்குத் தீராப்பகை ஏற்பட்டிருந்தது. அது வரும்போதெல்லாம் அவருடைய 'செம்பிலி' ஆடுகள் கந்து கந்தாய்க் கலைந்து ஓடும். அதுகளைத் திருப்பிக்கொண்டு வந்து ஒருமுகப்படுத்துவதற்கு முன்னால் அவர்பாடு 'தவுடு தாங்கி'ப் போகும். அப்போது அவர், அந்த வெள்ளைக்காரனுடைய ஆத்தா அக்கா பெண்டாட்டி பிள்ளைகளுக்கு சுண்டக்கறியின் வாயிலிருந்து வரும் ''அர்ச்சனைகள்'' சொல்லும்தரம் இல்லை! ரயில் கண்டு பிடித்த அந்த வெள்ளைக்காரனுக்கு ஏழு ஜென்மத்துக்கும் போதும்!

''நல்லவேளை; இந்த நாறக்கூ... ரயிலு ஊரை ஒட்டி வரத் திரிஞ்சது. ஊர் 'புண்ணியவாங்களெல்லாம் சேந்து அந்த வெளங்காமப் போவானுக்கு பால்ப்பசுமாட்டைக் கொண்டு போயி கட்டி, ஊரெ விட்டுத் தூரெ வெலகி ஓடும்படியா செஞ்சாங்க. இல்லையானா இந்த செம்பிலிகளோட நாள்ப்பூரா மல்லுக்கட்டி தெல்லுத் தெறிக்க ஏலுமா நம்மளால?'' என்பார்.

ஊரை ஒட்டி வந்த ரயில்வே லயனை, தூர விலகி ஓடும்படிச் செய்துவிட்டாலும், அது முதல் முதலில் - அந்த ரயில் - வருகிற அன்றைக்குப் போய் பார்க்காமல் இருக்க முடிந்ததா.

அதைப் பார்க்க ''ஊரு ஒலகமெல்லாம்'' திரண்டு வந்ததாம். ''அந்தக் கூத்தெ ஏங் கேக்க பொ'' என்று சொல்லி கொஞ்சம் சிரித்துக்கொள்வார் மன்னார் நாயக்கர்.

''எப்ப!... என்னமா வந்ததுங்கெ...!'' என்று சொல்லிக் கொஞ்சம் இடைவெளிவிட்டு, ''ரெயிலையே... பாக்காத சனங்க அது எப்பிடி இருக்கும்ன்னுட்டும் தெரியலெ. ரோசிச்சி ரோசிச்சிப் பார்த்தாலும் புரியலெ.''

பின்னும் கொஞ்சம் இடைவெளிவிட்டு நிறுத்தி, திடீரென்று ஆரம்பித்தார்; ''வந்தது பாரு...'' என்று கைகள் ரண்டையும் மேலே ஒசத்தினார். ''தேவலோகத்திலயிருந்து யானைக்கூட்டம் எறங்கி வரீசயா வந்த மாதிரி...'' உடம்பைக் கொஞ்சம் பின்வாங்கி சாய்ந்து காட்டினார்.

''ஜிகு ஜிகு ஜிகு ஜிகு ஜிகுண்ணு ஓசையுமொலியுமா நெருப்பும் பொகையும் கக்கிக்கிட்டு பொசல்க்காத்து எறைஞ்சி வாரமாதரி வருது! பாத்துக்கிட்டிருந்தவங்களுக்கெல்லாம் என்ன செய்யிற துண்ணுட்டுத் தெரியலெ! விழுந்தாம் பாரு... (தலையைக் கவிழ்ந்து கொஞ்சம் சிரித்து விட்டு) அப்பிடியே... நெடுஞ்சாங்கெடயா! விழுந்து கும்பிட்டதைப் பாக்கணுமெ கூட்டமெல்லாம்...!

மன்னார் நாயக்கரின் கெந்தளிப்பான குரலையும் நடிப்பையும் பார்த்து எல்லாரும் ஓ என்று சிரித்துக் கைதட்டினார்கள்.

சிரித்து முடிந்ததும் குருசாமித் தேவர் சொன்னார்:

''நிஹாத் தெரியலைண்ணா அப்பிடித்தான்''.

❖

# 5

ஊர்மடத்தில் நடக்கும் இந்தக் ''கெச்சட்ட''த்தில் துளிக்கூட பங்கு கொள்ளாமல் தனியே உட்கார்ந்துகொண்டு இவர்களையே பார்த்துக் கொண்டிருப்பதுபோல்த் தோன்றும் செம்பகக் கோனார், இவர்களுடைய உரத்த சிரிப்பைக் கேட்டதும் கொஞ்சம் கண் அகட்டிப் பார்த்தார். தாடிக்குள் அவரும் கொஞ்சம் சிரிப்பைக் காட்டுவது போலிருந்தது.

யாரும் அவரோடு பேசமாட்டார்கள்; அவரும் யாரோடும் பேச மாட்டார். ஏன் அவர் அப்படி ஆகிவிட்டார் என்று அந்த ஊரில் யாரிடம் கேட்டாலும் -

''விராலி வட்டம்ன்னு ஒரு ஏடு இருக்காம். யாரும் அதைப் படிக்கக்கூடாதாம். படிச்சான்; தொலைஞ்சான்! (செம்பகக் கோனாரைக் காட்டி) இப்படித்தான்; கோட்டி பிடிச்சிரும்.''

''அந்த ஏட்லெ அப்பிடி என்னதாம் இருக்கு?''

''என்ன எளவு இருக்கோ யாரு கண்டா. படிச்சிமுடிச்சதும் அம்மன் நேரெவந்து பிரத்யட்சம் ஆகி, காட்சி கொடுப்பாளாம்.''

''அப்பிடியா!''

''எப்பிடிக் காட்சி கொடுப்பாளாம்; அப்பிடியே... நிறை அம்மணம்! அதப் பார்த்ததும் இவங்களுக்கு இப்பிடி ஆயிருதாம்''

''அதப் போயி அப்படி என்ன மயித்துக்குப் படிக்கணும்?''

''படிக்கவே வேண்டாம்; ஏட்டைப் பாத்தாலே போதும்; படி படின்னுட்டு அது இவங்களைப் பாத்துச் சொல்றமாதரி இருக்குமாம். படிக்கவேபடாதுண்ணுட்டு நெனைக்க நெனைக்க கூடக்கொஞ்சந் தான் படிக்கணும்ண்ணு தோணுமாம். கடசீலெ படிக்காம இருக்கவே முடியாதாம், படிச்சதும், இப்படி ஆயிருதாங்க.''

செம்பகக் கோனாருக்குக் கொஞ்ச வயசுதான். ரொம்பப் போனால் இருவத்தாறு இருவத்தேழு வயசுக்கு மேலிராது. அவருடைய மனைவி ரொம்ப அழகான பொண்ணு. ரூபவதிண்ணே பேரு. அப்பேர்ப்பட்ட அழகியைத் துறந்து இந்தப் பயித்தியார செம்பகக் கோனார் எப்படி சாமியாரா இருக்கார் என்பது இளவட்டங் களுக்கு ஆச்சரியம்.

செம்பகக் கோனாருக்குக் கிட்டே போனால் கஞ்சாநெடி வீசும். பார்வை எந்தப் பொருள்மேலும் நிற்பதாகத் தெரியாது. அதே சமயம் எல்லாத்தையும் பார்ப்பதுபோலவும் தோணும். திடீரென விலாவெடிக்கச்சிரிப்பார். சில சமயம் மாலைமாலையாய்க் கண்ணீர் வழியும்.

அந்த வேத்துப் பார்வையும் முகத்தில்த் தறைந்த புன்னகையும் தங்கநிற முகத்தில்ப் படிந்த இளந்தாடியும் காவியுடையும் பார்ப்பவர் மனசை என்னவோ செய்யும்.

கிராமத்தின் காடுகளில், நடுத் தெருவில், ஊர்மடத்தில் இப்படி ஏதாவது ஓரிடத்தில் தட்டுப்பட்டுக்கொண்டே இருப்பார். திடீ ரென்று பல நாட்கள் காணாமலே போய்விடுவார். எங்கெ போவார் என்று யாருக்கும் தெரியாது. எப்பவாவது, குருமலைக் காடுகளில் செம்பகக் கோனார் தட்டுப்பட்டார் இண்ணைக்கி என்று சொல்லுவார்கள், மாடு மேய்க்கும் பையன்க்ள்.

முதல் முதலில் ரயில் வந்தபோது வேடிக்கை பார்க்கப் போன கூட்டத்துக்கு மத்தியில் செம்பகக் கோனாரும் இருந்தாராம்! பேரிரைச்சலோடு ரயில் வந்தபோது எல்லாரும் விழுந்து

கும்பிட்டபோது செம்பகக் கோனார் மட்டும் நின்றுகொண்டு பலமாகச் சிரித்தாராம். பின்பக்கம் கை சேர்த்துவைத்துக்கொண்டு தலையை மேலும் கீழும் ஆட்டிக்கொண்டே உடம்பை முறுக்கித் திறுக்கிக்கொண்டே விழுந்து கும்பிட்டவர்களையும் ரயிலையும் பார்த்து அப்படிச் சிரித்தாராம் அவர்.

❖

''டவுணு''க்குப் படிக்கப் போன பையன்கள், லீவில் ஊருக்கு வரும்போதெல்லாம் என்னென்னமோ புதுப்புது சாமான்களாக வாங்கிக்கொண்டு வந்து காட்டி கிராமத்து மக்களை - குழந்தைகளையும் பெண்டுகளையும் - பிரமிக்க வைப்பார்கள். ''மௌத் ஆர்கன்'' என்கிற ஜெர்மன் வாய்வாத்தியத்தின் ஓசை, தூரத்திலிருந்து கேட்பவர்களின் மனசைத் தொடும். அப்படி ஒரு இனிமையான ஓசையை கிராமம் முதல் முதலில்க் கேட்டது. மிகச் சிறிய பேனாக் கத்திகளை வாங்கிக்கொண்டு வந்து காட்டினார்கள். அழகழகான பூட்டுகள்; இப்படி இவ்வளவு வடிவில் அவர்கள் பார்த்ததே இல்லை. அழகிய மிகச் சிறிய ஒரு ஜெர்மன் பூட்டைக் கையிலெடுத்துக்கொண்டு வேலுக் கோனார் சொன்னார்; ''ஒரு கண்ணுல போட்டு இன்னொரு கண்ணுவழியா எடுத்திறலாம் போலிருக்கே!''

விளையாட்டுச் சாமான்களுக்கோ அளவில்லை. அவர்களுக்கு 'வாய்க்கு ருசியாக எதாவது வாங்கித்திண்ணு' என்று கொடுக்கிற பணத்தையெல்லாம் ''தட்டிப் பிடுங்கியதுபோல'' இந்தச் சமான்களை விற்பவர்கள் பறித்துக்கொண்டதாக பெரியவர்கள் ஆவலாதி சொன்னார்கள்.

அன்னமய்யா வாங்கிக்கொண்டு வந்து காட்டிய மைக்கூடு கண்ணாடியில் செய்யப்பட்டது. அதைத் தலைகீழாகக் கவிழ்த்தினாலும் மை சிந்தாது! ''அட, இது நல்ல ரோசனைதாம்'' என்று சந்தோஷப்பட்டார்கள். இங்கே உள்ள மைக்கூடுகள் 'வம்புக்காவது' கால் கை தடுக்கிச் சிந்தி ஆடைகளில் கறைப்படுத்தும்.

அதற்கு அடுத்த வருசம் அன்னமய்யா லீவுக்கு வந்திருந்தபோது சொன்னான்; ''இப்பொ மைக்கூடும் வேண்டாம்; தொட்டெழுதுற பேனாவும் வேண்டாம். பேனாவுக்குள்ளேயே மையை விட்டு வச்சிக்கிடலாம். கொண்டு போகவும் சிரமமில்லெ. சட்டை

பையிலெ சொருகி வைச்சிக்கிடலாம்'' என்று பவுண்டன் பேனாவை எடுத்துக்காடடினான்.

''அட! இப்பிடி ஒண்ணைக் கண்டுபிடிச்சிருக்கானோ''

இதுக்குப் பிறகு, கொஞ்ச காலத்துக்கெல்லாம் எல்லோரும் சட்டை போட்டுக்கொள்வதோடு அதில் ஒரு பவுண்டன் பேனாவையும் சொருகிக் கொள்வது நாகரிகமானது.

''நீ என்ன பெரிய படிப்பாளிபோல சோப்புல பேனாவைச் சொருகிக்கிட்டு அலையுதெ?'' என்று கேட்டு நக்கல் செய்வார்கள் கேலிக்காரர்களைப் பார்த்து.

அப்போது ஜப்பானிலிருந்து இறக்குமதியான ஒரு பவுண்டன் பேனாவின் மூடியின் உச்சியில் ஒரு சிறிய்ய திசை காட்டும் கருவி பொருத்தப்பட்டிருந்தது அனைவரின் கவனத்தையும் கவர்ந்தது. ஒரு சல்லியின் -பைசா- அளவே உள்ள அந்தத் திசைகாட்டும் கருவியில் ஒரு முள் எப்பவும் வடக்கு தெற்காவே காட்டிக் கொண்டிருக்கும்; அதை இவர்கள் எப்படி வேகமாகச் சுற்றினாலும் திருப்பினாலும் அது வடக்கு, தெற்கு திசையைக் காட்டிக்கொண்டே இருப்பது ஒரு அதியமாகப்பட்டது.

''ஒண்ணரை அணாப் பேனாவிலெ, தாயோளிது இந்த ஜப்பான் காரன் எப்பிடியெல்லாம் வச்சிருக்கான் பாத்தியா!'' என்றார் மன்னார் நாயக்கர்.

''வெள்ளக்காரனைவிட இந்தப் பயல் கெட்டிக்காரனா இருப்பாம் போலிருக்கெ!''

''ஆளு, இம்புட்டு ஒசரந்தான் இருப்பான்'' என்று கையை இடுப்பு உயரத்தில் காண்பித்தார் அவர்; ஏதோ இப்பதான் ஜப்பான்காரனை நேரிலே பார்த்துவிட்டு வந்ததுபோல!

நெட்டையான ஆள் வெள்ளந்தி என்றும் குட்டையான ஆள் விளையமானவன் என்றும் ஒரு நம்பிக்கை.

'நெட்டைய நம்பினாலும் குட்டையை நம்பிறப்பிடாது டோய்'' என்பார்கள்.

குட்டையாக இருந்த் குறக்குடிப்பீச்சானை ''லேய் சப்பான்'' என்றுதான் கூப்பிட்டார்கள். குட்டையாகவும் ரொம்பக் கெட்டிக் காரனாகவும் பீச்சான் இருந்ததால் அவனுக்கு சப்பான் என்ற பெயரே நிலைத்துவிட்டது.

பாம்புகளை - நாகப்பாம்பைக்கூட சர்வசாதாரணமாகப் பிடித்து வேடிக்கை காட்டும் பெருமாள் நாயக்கரை எம்ட்ட நாயக்கர் என்று பட்டப்பெயர் வைத்து அழைத்தார்கள். (வெள்ளைக்காரர் ஆளுகையில் மெட்ராஸில் வந்து ''எம்ட்டன்'' எனும் கப்பலில் வந்து குண்டு போட்ட ஜெர்மன் பெயர்)

''வல்லவனுக்கு வல்லவன் வையத்தில் உண்டு'' என்று சொன்னார்கள்; வெள்ளைக்காரனைக் காட்டிலும் ஜப்பான் காரனுடைய கெட்டிக்காரத்தனத்தையும் ஜெர்மன்காரன் செய்து காட்டிய சூரத்தனத்தையும் நினைத்து.

❖

## 6

ஊர் மடத்துக்கு ராத்தரி படுக்கும்நேரத்துக்குக் கொஞ்சம் தாமதமாக வந்து சேர்ந்தார் மன்னார் நாயக்கர். கண்டாங்கிச் சேலையை நாலாக மடித்துப் போர்த்திக்கொண்டு வந்து சேர்ந்தார்.

''எரான்ல வர்ர ஆளு இண்ணைக்கு ஏராங் கடசில வருது'' என்று சொன்னது ஒரு குரல் மடத்துக்குள்ளிருந்து.

வீட்டில் படுக்க வசதியில்லாதவர்கள், வந்த ஆண்விருந்தினர் களைப் படுத்துத் தூங்க ஊர்மடத்துக்குக் கூட்டிக்கொண்டு வந்த வர்கள், இளவட்டங்கள், வீட்டில் இடமிருந்தாலும் மடத்தில்வந்து பேசியும் படுத்துத் தூங்கியும் சொகம் கண்டவர்கள், நடந்தே ஊர் சுற்றும் தேசாந்திரிகள் இப்படியாக மடம் நிறைந்துவிடும் ராத்திரிகளில்.

ஆடி, தை, மாசி மாதங்களில் செவ்வாய்க் கிழமை ராத்திரிகளில் மட்டும் மடத்தில் படுத்துக்கொள்ள நெருக்கடி அதிகமிருக்கும். அதிலும் இளவட்டங்களின் கூட்டம்தான் நெரிபடும்!

சாதாரண நாட்களிலேயே இளவட்டங்களின் கூட்டத்தில் சிலது நடுச் சாமத்துக்குமேல் காணாமல்ப் போய்விடும் என்றாலும் இந்தச் செவ்வாய்க்கிழமை அத்தராத்திரிகளில் எல்லாரும் தூங்கிய பிறகு பலது காணாமல் போய்விடும்!

இந்த மாதங்களின் செவ்வாய்க்கிழமைகளின் ராத்திரிகளில் பெண்கள் ''விரதம்'' இருப்பார்கள். இந்த செவ்வாய்க் கிழமை விரதத்தைப் பற்றி ஆண்கள் பெண்களிடம் என்ன, ஏது என்று

இந்த விரதத்தைப் பற்றி ஆண் கூட்டத்தில்ப் பேச்சுகள் யூகமாகவும் கற்பனையாகவும்தான் இருந்தது. விரதம் நடக்கும் இடங்கள் என்று ஊருக்குள் நாலைந்து இடங்கள் - வீடுகளுக்குள் - இருக்கும் அப்படி நடக்கும் அந்த வீடுகளிலுள்ள ஆண்கள் அன்று இரவு அங்கே இருக்கக்கூடாது. படுப்பதற்கு மடத்துக்குப் போய்விட வேண்டும் அல்லது விரதம் நடக்காத சொந்தக்காரர்களின் வீடுகளில்ப் போய் முடக்கிக்கொள்ள வேண்டியது.

''நல்லா வந்ததுப்பா இந்த செவ்வாக்கிளமெ வெரதம்; சய்'' என்று அலுத்துக்கொண்டே வந்தார் வேலுக்கோனார்.

''ஒமக்கு ஒருநாக்கூட ''அது'' தவறக் கூடாதெ; இண்ணைக்கு ஒரு நா இல்லைண்ணத்தான் என்ன?'' என்று மடத்தில் படுத்திருந்த கூட்டத்தில் கலகலப்பை மூட்டினார் மன்னார் நாயக்கர்.

''இந்தப் பொட்டெக் களுதெக என்னதாம் செய்யும்ண்ணு தெரியல இந்தச் செவ்வாக் கிளமெ வெரதத்துல''. தனது திகைப்பை வெளியிட்டது இருட்டில் ஒரு குரல்.

''சாமி கும்பிடும்போது ஆம்பிளைக பாத்தா என்னவாம்''

''நீரு ஒரு வெவரங்கெட்ட ஆளு; நெறை அம்மணமா அவங்கள்ளாம் சாமி கும்பிடுறப்பொ ஆம்பிளெக பாத்தா லெச்சண மாத்தானிருக்கும்!''

''என்னது என்னது; இன்னொருக்க சொல்லும்!!''

இருட்டுக்குள்ளிலிருந்து ஒரு குரல் அம்புபோல் மன்னார் நாயக்கர் பேரில் பாய்ந்தது; ''ஒமக்கெப்படித் தெரியும், நீரு கண்டீரா, கண்ணாரப் பாத்தீரா?'' அந்தக் குரலோடு பல குரல்கள் சேர்ந்து கொண்டு மன்னார் நாயக்கரை மடக்கின.

'இதுக்கெல்லாம் அவர் மசிஞ்ச ஆளா; அது ஆயிரங்கோழி திண்ண வெருகில்லா'

''பாத்தாத்தாம் பேசணும்ண்ணு ஆயிட்டா ஒலகத்துல வாயே திறக்க முடியுமா?'' என்று அவர் சொல்லிக்கொண்டிருக்கும்போது இளவட்டங்கள் நிறைந்த பகுதியிலிருந்து, ''அய்யோ அப்பிடீண்ணா கட்டாயம் பாக்கணுமே!'' என்ற குரலைத் தொடர்ந்து அடங்கி ஒலிக்கும் சத்தமில்லாத சிரிப்புகளும் கேட்டது.

ஏற்கெனவே எத்தனையோ முறை இந்த மடத்தில் பேசப்பட்ட விஷயங்கள்தான் இவை. என்றாலும், எத்தனை முறை பேசினாலும்

நித்தப் புதுமையாக இருக்கும் விஷயங்களில் இதுவும் ஒன்றாக இருக்கிறது.

நிறை அம்மணமாகப் பெண்டுகள் சாமி கும்பிடுகிறார்கள் என்றும் அங்கே செய்து விநியோகிக்கப்படும் பச்சரிசிக்கொழுக்கட்டையின் உருவ அமைப்புகள் ஆண், பெண் உறுப்புக்களைப் போல இருக்கும் என்றும் மடத்தில் ரகசியமாகப் பேசிக்கொள்ளப்பட்டது. பெண்டுகள் இப்படி சாமி கும்பிடும்போது ஆண்கள் பார்த்தாலோ அல்லது அந்தக் கொழுக்கட்டைகளைத் தின்றாலோ கண் அவிந்து வாழ்நாளெல்லாம் குருடனாக இருக்க வேண்டியதுதான் என்றும் பலமான அபிப்ராயம் இருந்தது. முத்தக்கோனாருக்கு சாகும் பரியந்தம் கண் தெரியாமல்ப் போனதுக்குக் காரணம் அவருடைய பெண்டாட்டி ஒளித்து வைத்திருந்த அந்தக் கொழுக்கட்டைகளை எடுத்துத் தின்றதுதான் காரணம் என்று பேசிக்கொண்டார்கள்.

''அதெப்பிடி; அந்தக் கொளுக்கட்டையப் பார்த்தாலே அவருக்கு வித்தியாசம் தெரிஞ்சிருக்கணுமே''

''அவரு கெடைக்காவலுக்குப் போய்விட்டு மம்மலோட வந்திருக்காரு. அரங்கு வூட்டுக்குள்ளே இருந்ததெ எடுத்துத் திண்ணுபோட்டார்; இருட்ல என்ன எளவு தெரியும்!''

''அந்தப் பொட்டக் களுதெயாவது சொல்லியிருக்கலாம்லெ''
''அதுக்கும் வெவரம் அவ்வளவுதாம்''

செவ்வாக்கிழமை விரதம்பற்றி எத்தனை பயமுறுத்தல்கள் இருந்தாலும் ''மற்ற''க் காரியங்கள் மட்டும் ஒழுங்காக நடந்து கொண்டுதான் இருந்தன! சந்திக்கவே முடியாத நேசங்கள் அன்று தான் சந்தித்துக்கொள்ள முடிந்தது.

அந்தத் தினத்துக்காக அவர்கள் தவமிருந்தது போலிருக்கும் அந்தச் சந்திப்பு.

இளம் ரத்தங்களுக்கு எப்போதுமெ மீறலில் ஒரு தனி ஆர்வம் உண்டு. என்ன ஆனாலும் சரிதான் என்று மீறப்படும் அபூர்வ காரியங்கள் மிகுதியாக இல்லாவிட்டாலும் அவை நடக்கவே செய்கின்றன.

இந்தா, சும்மா சாப்பிடு என்று கொடுப்பதுவும் உண்டு. எவ்வளவுதான் மறுத்தாலும் பறித்துத் தின்பதுவும் உண்டு. தயங்கித் தயங்கிச் சாப்பிடுவதும் உண்டு.

அந்த இனிய சந்திப்புகளையெல்லாம் கலைக்கும்படி ஏற்பட்டது ஒரு காரியம்.

ஒரு தூண்டில்க்காரனுடைய பொறுமையோடு காத்துக் கொண்டிருப்பதையும் அதன் பிறகு கிடைத்தது கிடைத்தது என்று வெறியோடு அனுபவித்த சந்திப்புகளை எல்லாம் கலைத்தது அப்போது வந்த பேட்ரி லைட்'' என்ற டார்ச் லைட்களின் வரத்து.

❖

## 7

டார்ச் லைட்டின் வரத்து கிராமத்து மக்களின் மூட எண்ணங் களிலும் பெருத்த மாறுதலை உண்டு பண்ணியது. தலைமுறை தலைமுறையாக கட்டிக்காத்துவந்த கற்பனை 'இருட்டுக் கதைகள்' பொடி சூரணமாய்த் தகர்ந்து போயின. ஹாஸ்டலில் அன்னமய்யா தங்கிப் படித்தபோது முதலில் ஒரு சிறிய பேட்ரி லைட் வாங்கினான். அதை இங்கே கொண்டு வந்து காட்டியபோது எல்லோரும் அதிசயப் பட்டார்கள்.

இதுக்கு எண்ணெய் ஊத்த வேண்டாமோ என்று ரெங்கம்மாப் பாட்டி கேட்டபோது அவன் உட்பட எல்லோருமே சிரித்தார்கள்.

அதன் பிறகு நுன்னகொண்ட நாயக்கர் மதுரையிலிருந்து ரண்டு பேட்ரிலைட்டுகள் வாங்கிக்கொண்டுவந்தார்; அய்ந்து கட்டி பேட்ரிலைட் , ஏழுகட்டி பேட்ரிலைட் என்று எல்லோருமே அதை வாங்கிக்கொண்டு போய் இருட்டுக் காலங்களில் தெருக்களின் முக்கு முடங்கிகளில் அடித்து அடித்துப் பார்த்தார்கள். எதிரே வருகிற நபரின் முகத்தில் அடித்து வருகிறது யார் என்று கவனித்தார்கள்.

இந்த லைட்டுகளின் எண்ணிக்கை பெருகியபோது, எந்த வினாடியும் தங்கள் பேரில் ஒளிவந்து விழுந்து காட்டிக்கொடுத்து விடும் என்று இருளில் ரகசியமாய்ச் சந்திக்கிறவர்கள் பயந்தார்கள்.

இந்த லைட் கம்மங்காட்டுக்குக் காவலுக்கும் பருத்திக் காடு காவல் போகிறவர்களுக்கும் ரொம்பப் பயன்பட்டது. இதெல்லாத் தைவிடச் செவ்வாய்கிழமை வெள்ளிக் கிழமைகளில் திரியும் பேய்கள் காணாமலே போய்விட்டன!

முன்பொரு நாள், வேலுக்கோனார் ஒரு அமாவாசை ராத்திரி அன்று ஊர்மடத்தில் வைத்து ஒரு ஜடாமுனிக் கதையை விவரித்துக் கொண்டிருந்தார்.

நடுச் சாமத்தில் அவருடைய எருமைமாடு அத்துக்கொண்டு ஓடிவிட்டது. அன்று அமாவாசையாதலால் அது கிடாய்க்காகக் கத்திக்கொண்டே இருந்தது.

''ஞா...'' என்று சத்தம் இழுத்தால் சாமான்யமாக நிறுத்தாதாம்; அது ஒரு விரக வலி தாளாத பெண்ணழுகை போலிருக்குமாம்!

கட்டுச் சங்கிலியை படக் படக் என்று வெட்டி வெட்டி இழுக்குமாம். இப்படியே செய்து, கட்டு முளைக் கம்பையும் உருவிக் கொண்டு ஓடிவிடும். ''எருமெக் களுதயோட சனியன் மாரடிக்க முடியுமா. கிடா மேலெ அதுக்கு நெனப்பு வந்துட்ட துண்ணா தாமரிக்கவே முடியாது.''

''ஏய்; கிடாயிலெ கொண்டு போயி போட்ற வேண்டியதுதானெ''

''எந்தக் காலத்துல அதெ நாங் கிடாயில கொண்டு போயிப் போட்டிருக்கேன்? சவம் அதாப் போயி சவள பருத்திமார்ப் படப்புல ரோசித்தான் இதுனாவரையும் செனை ஆயிருக்கு. இதுவரெ மூணு ஈத்து ஆயிருக்கே; ஒரு தடவைகூட நா கிடாயிட்டக்கொண்டு போட்டது கெடையாதே''.

''ஒம்ம மாடுமட்டும் என்ன அதிசயம்; மொட்டையக்கவுண்டரு எருமெ மாடுந்தான் படப்புல ரோசி கண்ணுக்குட்டிபோடுது''

''ம், சொல்லும்; பெறவு என்ன ஆச்சி?'' என்று அவசரப் படுத்தினார்கள் ஜடாமுனி பற்றிய செய்தி கேட்க.

கட்டுத்தரையிலிருந்து சத்தம் வந்துகொண்டே இருந்தது. கோனார் எப்பக் கண் அசந்தாரோ தெரியாது. பட்டென்று மத்தியில் ஒரு முழிப்பு வந்ததும் மாட்டுச் சத்தத்தைக் காங்கலை. கவனிச்சிக் கேட்டார் தூ... ரத்துல எங்கோ இவரு மாடு'' ஞா...'' சத்தம் கேட்டது. செனைக்குச் செனை இந்த அழிம்புதானெ பண்ணுது என்று நினைத்து, பொடிப்பட்டையையும் எடுக்க மறந்து அவசரமாய்ப் புறப்பட்டுப் போனார்.

சம்முகக் குடும்பன் மாடு இப்படித்தான் சங்கிலி அத்துக்கொண்டு போன மாடு பிறகு காணாமலே போயிட்டது.

இருட்லெ ஒரு எளவும் தெரியல. தூரத்தல் சத்தங்கேக்கும்; நெருங்கிப் போனா அங்கே ஒரு அரவமும் காங்காது. திரும்ப

இன்னொரு தெசையிலெ தூரத்தில் சத்தங்கேக்கும்; நெருங்கிப் போனா ஒண்ணும் இருக்காது. எனக்கும் நிஹாப் பிடிபடலை. ''அப்பிடீ செகிட்டய்யனார் கோயிலுக்கிக்கிட்டெ வந்துட்டென். அப்தாம் பாருங்க... ஒரு நாய் ஒண்ணு என்னெப்பாத்து வந்தது.

வந்த நாயி அப்படியே நிக்கி. நாயிண்ணா, ஒண்ணு கொலைக்கணும்; இல்லெ வாலாட்டணும். ரண்டுமில்லெ. கெவுனிச்சிப் பாத்தா... அது நாயி மாதிரியுமில்லை; அதென்ன, ஏம் இடுப்பொசரத்துக்கு மேலே இருக்கு! ரெண்டு கண்ணும் அந்த அம்மாசை இருட்லெயும் அப்படியே தகதகண்ணு ஜொலிக்கி! அப்ப தான் இண்ணைக்கி செவ்வாக்கிளமெண்ணு யாவகம் வந்தது. சே; இண்ணைக்கு வகையா வந்து மாட்டிக்கிட்டம், தொலைஞ்சம்ண்ணு தோணிட்டது. அய்யன் இண்ணைக்கு வேட்டைக்குப் புறப் பட்டிருப்பார்ண்ணு மனசுல பட்டது.

செரி, பாதையெ விட்டு வெலகி நிண்ணுக்கிடுவம் ண்ணு வெலகி மனசில அந்த அய்யனரே கதிண்ணு நெனைச்சி கண்ணெ மூடிக்கிட்டு உட்காந்திட்டன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் தூரத்துல வீரமணி ஓசையும் குதிரைக்கு குளம்பு வார சத்தமும் கேக்கு.

செரீ... அய்ய்ன் வேட்டைக்குத்தான் கிளம்பீட்டாரு; அப்ப வந்தது அவரோட நாயிதான்ண்ணு தீர்மானம் பண்ணிக்கிட்டென்.

சத்தம் தூரத்துல தூரத்துல போயிக்கிட்டிருக்கு. ஒடங்காட்டைப் பாத்துத்தான் போறாருபோலுக்குண்ணு நெனைச்சிக்கிட்டென். இதுக்குள்ள எனக்கு வயத்தைக் கலக்கி 'வெளிக்கு' வந்துட்டது!'' என்று சொன்னதும் அங்கே சிறு சிரிப்பு எழுந்து அடங்கியது.

எளுந்திரிச்சி, தள்ளிப்போயி 'இருக்கவும்' பயம். அங்கனயெ தான் 'இருந்தென்' மூடுன கண்ணைத் தெறக்கலெ.

உறுட்உறுட்ண்ணு சத்தம் கேக்கு! திரும்பிப் பாத்தா ஒரு பன்னி. ஒரு பாகம் நீளத்துலெ கன்னங் கரேருண்ணுட்டு. இது என்ன பாராத்தியம்டாண்ணு எந்திரிக்கவும் பயமா இருக்கு! அங்கனயெ இருக்கவும் பயமா இருக்கு.

திடீர்ண்ணு வந்த பன்னியக் காணோம்! எங்கடா போச்சிண்ணு கவனிச்சிப் பாத்தா, முன்பக்கம் தொலவட்லெ தெரியுது. பன்னியா இருந்தது எரும மாடாத் தெரியுது. எனக்கு அரிச்சலு நம்ம

மாடுதானானுட்டு! கெவுனிச்சிப் பாத்தா; அது எரும மாடுயில்லே, யானை! ஆனா, யானைன்னா உடம்பு பூரா ரோமம், சடைவிழுந்த ரோமம் ஆலம் விளுது தொங்குகிறது கெணக்க!''

''ம்...'' என்று ஒரு குரல் நீட்டி ஆமோதிப்பதுபோல கூட்டத்தி லிருந்து கேட்டது. 'நா நெனைச்சதுதான்' என்பது போலிருந்தது அந்த ''ம்...''

கோனார் கதையைத் தொடர்ந்தார்;

''எக் காரணங் கொண்டும் யானை இங்கன வரக் காரண மில்லையே...; இது யானையுமில்லெண்ணு நெனைச்சிக் கிட்டிருக்கிறப்பவே அது ரண்டு பின்னத்தங்கால்லெ எந்திரிச்சி நிக்க ஆரம்பிச்சி மானத்தைப் பாத்து வளந்துக்கிட்டே போகுது!

மடத்தில், அவர் சொல்லுவதைக் கேட்பவர்களின் வியப்பும் அதோடு வளர்ந்துகொண்டே போனது.

''பூமிக்கும் மானத்துக்குமா நிக்கிது. உடம்பு பூரா சடைச்சடையா தொங்குது; என்ன செய்யமுடியும் சொல்லுங்க?'' என்று நிறுத்தினார். தன் இடுப்பிலுள்ள பொடிப்பட்டையை அவர் தடவித் தேடுகிறார் என்ற அந்த இருட்டில் அங்கிருந்தவர்களால் யூகிக்க முடிந்தது. நெருக்கமாக அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்ததினால் பயம் தோன்றவுமில்லை அவர்களுக்கு.

இதன் பிறகு அவர் சொன்னது அவர்களுக்குக் கொஞ்சம் கேலியாவும் உல்லாசமாகவும்கூட இருந்தது.

அந்த ஜடாமுனி காலைத்தூக்கி ஒரு எட்டு எடுத்து வச்சதாம். 'குரங்கடிச்சான்' காட்டுல அதன் ஒரு கால் இருந்ததாம்; மறுகால் ராமனூரணியிலெ இருந்ததாம். ரண்டுக்கும் இடையில் மூணு மைல்த் தூரம்!!

கோனாருக்குப் பின் வந்த அடுத்த தலைமுறையினரை, இந்த மாதிரிக் கதைகளை நம்ப முடியாமல் அடித்துவிட்டது இந்த டார்ச்லைட்களின் வரத்து. அவைகளின் துல்லியமான ஒளிநீளம் அந்த ஜடாமுனிகளை எங்கே எங்கே என்று தேடினாலும் அவை இப்போது தட்டுப்படுவதாக இல்லை. ஒளியின்முன் இருட்டைப் போல் அவை மறைந்தொழிந்து போயின.

❖

# 8

மறுநாள் ராத்திரி ஊர் மடத்தில் கூடியிருந்தவர்களுக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருந்தார் மன்னார்நாயக்கர். அவருக்கே உரிய தோரணையில் அவர் அதைச் சொல்லத் துவங்கினார். ''இனிமெ, தீவட்டிக் கொள்ளைக்காரனில்லெ வேற எவனுக்குமே பயப்பட வேண்டியதில்லெ!'' என்று மட்டும் சொல்லி நிறுத்தினார்.

யாராவது ஒருத்தர் அவரிடம் ஆவலோடு, என்ன விஷயம் என்று கேட்க வேண்டும். அதேபடி கேட்டார் வேலுக்கோனார்.

''நம்மூரு முதலாளி திரவத்தி நாய்க்கரு ஒரு சரியான துப்பாக்கி வாங்கிட்டு வந்துட்டாரு!''

''அட்; ஆங்!'' என்று வியந்து சந்தோஷம் கொண்டார் வேலுக்கோனார்.

''ஒரு மைல் தூரத்துல எவம் வந்தாலும் சரி (கையை நீட்டிக் காண்பித்து) அப்பிடி நீட்டினாப் போதும்; செத்தான்'' என்றார்.

அது பறவைகள் வேட்டையாட என்றுள்ள ''ரவைத் துப்பாக்கி''. 'ரவை'களையும் கரிமருந்தையும் போட்டுக்கிட்டிக்க வேண்டும். கிட்டிப்புத் துப்பாக்கி என்றும் ஒரு பேர் உண்டு அதுக்கு. வந்த புதிசில் அதுக்கு ஏகப்பட்ட மவுசும், அதைப்பற்றிய அதீதக் கற்பனையும் அதிகமிருந்தது.

நெட்டைக் கொக்கு சம்முகம்தான் மன்னார் நாயக்கரின் துப்பாக்கி வர்ணனையை ரொம்ப ஆவலோடு கேட்டான். அதுக்கு ஒரு காரணமும் இருந்தது. உள்ளூர அவனுக்குப் பட்டாளத்தில் சேர்ந்து துப்பாக்கி பிடிக்க வேண்டும் என்று ஆசை இருந்தது. ஒரே பையன் என்பதால் அவன் தாயார் அதை நடக்கவிடாமல் செய்துவிட்டாள்.

முதல் உலகமகாயுத்தம் ஆரம்பித்த பல நாட்கள் கழித்து கிராமங்களுக்கும் பட்டாளத்துக்கு 'ஆள்பிடிக்க' வந்தார்கள். 'நல்...ல வளந்த ஆளாக இருக்கணும்' என்று தேடினார்கள். அதனால் அவர்கள் வந்தபோதெல்லாம் உயரமான ஆட்கள் ஓடி ஒளிந்தார்கள்.

சம்முகத்தின் அம்மாவிடம் யாரோ சொன்னார்கள், உங்க சம்முகத்தைத் தேடித்தான் ஆட்கள் வந்திருக்கிறார்கள் என்று!

சிலர் மச்சின்மேல் போய்ப் படுத்துக்கொண்டார்கள். சிலர் மாட்டுக் காடியில் போய் படுத்துக்கொண்டு தங்கள்மேல் கூளத்தை அள்ளிப் போட்டுக்கொண்டார்கள். சம்முகத்தின் தாயார் அழுது கொண்டே அவனை இழுத்துக்கொண்டு ஓடினாள். எங்கே, எப்படி அவனை ஒளித்து வைப்பது என்று அவளுக்குத் தெரியவில்லை. விருவிரு என்று அவனை இழுத்துக்கொண்டுபோய் வீட்டின் இடைசந்தில் உட்காரவைத்து அவன்மேலே பருத்தி மார்க் கட்டுகளைப் போட்டு அடுக்கி மறைத்துவிட்டாள்.

என்றாலும் அவளுக்கு அமைதியில்லை.

ஊரே நிம்மதி இழந்து தவித்தது. குட்டையாக இருந்தவர்கள் மட்டும் ரொம்பத் தைரியமாகக் கைவீசிக் கொண்டு அலைந்தார்கள்!

''ஆள் பிடிக்க'' வந்தவர்கள் போயாச்சி என்று தெரிந்துகொண்ட பிறகுதான் மேல்ப்படி ஆட்கள் வெளியவே வந்தார்கள்.

யுத்தத்தில்க் கொண்டுபோய் நம்மவர்களை முதலில் நிறுத்துவ தாகவும், நமக்குப் பின்னால்த்தான் வெள்ளைக்காரப்பட்டாளம் வருவதாகவும் சொன்னார்கள். ''கொல்றதுக்கெண்ணே ஆட்களைக் கொண்டு போரான்'' என்று சொன்னார்கள்.

''அவனுக்கும் ஜெர்மன்காரனுக்கும் சண்டைண்ணா அதுக்கு நாமா பழி?'' என்று கேட்டார்கள்.

இதேபோல் உருக்குத்தி* குத்துகிறவன் வந்தாலும் ஜனங்கள் ஓடி ஒளிந்தார்கள்.

உருக்குத்தி குத்திய குழந்தைகள் படும் பாதரவைப் பார்த்து மிகவும் எரிச்சலடைந்தார்கள். ''உருக்குத்தி குத்துனயோ உருக் குலைஞ்சி போனயோ'' என்று சொலவஞ் சொன்னார்கள்;குழந் தையின் அழகு உருக்குலைந்து போகும் என்ற அர்த்தத்தில்.

❖

துப்பாக்கி வாங்கிக்கொண்டு வந்த முதலாளிநாயக்கர் குயில் வேட்டைக்குக் கிளம்பினார். குயில்க்கறி என்றால் அவருக்கு உயிர். அவர் துப்பாக்கி வாங்கியது அதுக்காகவே. அது வேனல்க் காலத்தின் தொடக்கம். குயில்களின் வரத்து நிறைய இருந்தது.

---

* உருக்குத்தி - அம்மை குத்திக்கொள்வது.

கரைமரங்களின் நிழல் அடர்ந்த தரையில் நின்றுகொண்டு மதிய வெயிலில் மேலே பார்க்கும்போது அசையும் இலை மறைவுகளில் பறவைகளை துல்லியமாக அடையாளம் கண்டுகொள்வது கஷ்டம். அவரோ தேர்ந்த வேட்டைக்காரரில்லை. அவர் குயில் என்று நினைத்துச் சுட்டது, கீழே விழுந்த பிறகுதான் தெரிந்தது அது கருடப்பட்சி என்று! பார்த்ததும் பதறிப் போனார். அவர் வணங்கும் மகாவிஷ்ணுவின் வாகனம் அது.

அவர் அடைந்த துக்கத்துக்கு அளவில்லை. தலையைச் சுற்றித் தூரவீசி எறிந்தார் துப்பாக்கியை.

அந்தப் பட்சிராஜனை எடுத்துக்கொண்டுபோய் அடக்கம் செய்து பால் ஊற்றினார். பிராயச்சித்தமாக, பலநாட்கள் துளசிதீர்த்தம் மட்டும் அருந்திக்கொண்டு பட்டினி கிடந்து தன்னையே வதைத்துக் கொண்டார். அதன் பிறகு அவர் எந்த மாமிசத்தையும் தொடுவ தில்லை. ஒருநாள் ஒருபொழுதுதான் உண்டார். அதும் கருட தரிசனம் செய்து சேவித்த பிறகே. கருடன் தட்டுப்படாத நாட்களில் பட்டினி கிடந்தார். அவர் பட்டினி கிடக்கும் நாட்களிலெல்லாம் - அவர் சாப்பிடாததால் - அவருடைய மனைவியும் பட்டினி கிடந்தாள்.

அவருடைய காலத்தில் பழுத்த வயோதிகம் அடைந்தபோது ஒரு கையினால் கம்பை ஊன்றிக்கொண்டு மறுகையை நெற்றியின் புருவக் கட்டின்மேல் வைத்து, கூசும் வெளிச்சத்தை மறைத்துக் கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டே தள்ளாடி நடப்பது பார்க்கப் பாவமாக இருக்கும். அந்த வழியாகப் போகிறவர் களைப் பார்த்து ''அடேய், அது கிட்ணசாமியா?'' என்று கேட்பார்; மேலே பறவையாடும் பட்சி கிருஷ்ணப்பருந்துவா என்று தெரிந்து கொள்ள. சிலர் உண்மையை சொல்லுவார்கள்; அது கருடனில்லை பருந்து என்று. அவர்மீது மதிப்பும் பற்றும் கொண்டவர்கள் மனம் இரங்கி, அது பருந்துவாகவே இருந்தாலும் கருடன்தான் என்றே சொல்லுவார்கள்!

மரத்தில் அமர்ந்துகொண்டிருக்கும் கருடனை சேவிப்பதில்லை அது பறக்கும்போதுதான் சேவிக்கவேண்டும் என்பது. அமர்ந் திருக்கும் பறவை எப்போது பறக்கும் என்று சொல்ல முடியாது. நின்று, காத்துக்கொண்டே பார்த்துக்கொண்டிருக்க வேண்டும்; கண் பூத்துப்போகும்.

கடைசியில் இது அவருக்கு ஒரு நாள் வேலை என்றிருந்து ஆயுள் பரியந்தம் என்று ஆகிவிட்டது.

ஒருநாள், மேலே பார்த்துக்கொண்டே நடந்ததால் மரத்தின் வேர் தடுக்கி குப்புற அடித்து விழுந்து கிடந்தார். பேச்சு மூச்சில்லாமல்க் கிடந்தார். பேச்சு மூச்சில்லாமல்க் கிடந்தவரை வீட்டுக்குத் தூக்கிக் கொண்டு போனார்கள். நீண்டநாள் மயங்கிய நிலையிலேயே கிடந்தார். பிறகொருநாள் பிரக்ஞை வந்தது. துளசி தீர்த்தமும சாப்பிட மறுத்தார். கட்டிலோடு வெளியே தூக்கிக்கொண்டு போகும்படி சொன்னார். வானத்தையே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர் மயங்கிக் கிடந்த நாட்களில் அவருடைய மனைவி இறந்துபோனாள் என்கிற விஷயம் அவருக்குத் தெரியாது. அவருக்கும், அத்தனை நாள் கழித்துப் பிரக்ஞை வந்தும் அவள் எங்கே என்று கேட்கவில்லை, பிள்ளைகள் எங்கே என்றும் கேட்கவில்லை. கருடனைத்தான் கேட்டார்.

அதன்பிறகு அவர் நேரில் சேவிக்க முடியாத கருடனை வேறு யாராவது போய் சேவித்துவிட்டு வந்து சொன்னபிறகுதான், வாயில் சொட்டு துளசி தீர்த்தம் விடச் சம்மதிப்பார். பார்க்கப் போனவர் களுக்கும் சில நாட்களில் கருடதரிசனம் கிடைக்காது. பார்த்தேன் என்று பொய்தான் சொல்லுவார்கள்.

கருடதரிசனம் பார்க்கப் போனவர்கள் வந்து சொல்லும்வரை அமைதியில்லாமல்த் தவிப்பார். பார்த்தேன் என்று காதுக்குப் பக்கத்தில் பலமாகச் சொன்னதும் கண்களை மூடி சிறிதுநேரம் அசையாமல்க் கிடப்பார். மூடிய ரண்டு கண்களிலிருந்தும் சொட்டுக் கண்ணீர் பிதுங்கும். சில சமயம் குழந்தை போல் தேம்பி அழுவதும் உண்டு.

அவர் இறந்து, அன்று காரியங்களெல்லாம் முடிந்த பிறகு, ஊர் மடத்தில் இருந்தவர்களிடம் மன்னார்நாயக்கர் சொன்னார்:

''பாவம்; அவரு கடைசி வரையும் திருப்பதிக்குப் போகவே இல்லை!'' தன்னுடைய கனவில் சீனிவாசகப் பெருமாள் தோன்றி அழைத்தால்தான் திருப்பதி போய் நேமுகத்தைச் செலுத்துவேன், அவனையும் தரிசனம் செய்வேன் என்றிருந்தார். ''சாமி கனவுல வரவும்யில்ல; அவர் திருப்பதி போகவுமில்லை'' என்றார்.

''இப்பேர்ப்பட்ட ஒரு வைஷ்ணவ பக்தரோட கனவுல வந்தாவது அந்தச்சாமி தோணியிருக்கலாமே?'' என்று யாரோ கேட்டார்கள் அவரிடம். ரண்டு கைகளையும் மேலே உயர்த்தி ''அது அவரோட சித்தம்'' என்று மன்னார்நாயக்கர் பேச்சை முடித்தார்.

❖

# 9

ஒட்டப்பிடாரம தாலுகா கோவில் பட்டித் தாலுகாவாக ஆன பிறகு, ''தாலுகாபோர்டு''கள் என்று அமைக்கப்பட்டு அதனிடம் கல்வி, சுகாதாரம், சாலைகள் பராமரிப்பு என்று ஒப்படைக்கப் பட்டபோது, கோபல்லகிராமத்துக்கு ஒரு தாலுகாபோர்டு பள்ளிக் கூடம் என்று புதிதாக வந்தது. ஏட்டுப் பள்ளிக்கூடத்தில் படித்த பிள்ளைகள் இனிமேல் இந்தப் புதுப்படிப்புப் பள்ளிக்கூடத்தில்தான் படிக்கவேணும் என்று பேசிக்கொண்டார்கள்.

பெரும்பாலான பிள்ளைகள் புதுப்பள்ளிக்கூடத்துக்கே வந்து விட்டார்கள். ஒன்றிரண்டு பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளே ஏட்டுப்பள்ளிக்கூடமே சிறந்தது என்று அங்கேயே அனுப்பிக் கொண்டிருந்தார்கள். சில பிள்ளைகள் அதிகாலை நேரத்தில் ஏட்டுப் பள்ளிக்கூடமும் போய்விட்டு புதுப்பள்ளிக் கூடத்திலும் வந்து ஆஜர் கொடுத்தார்கள்!

மக்களுக்கு ஏற்பட்ட இந்தப் புதுப்பள்ளிக்கூட மோகத்தினால் ஏட்டுப் பள்ளிக்கூட வாத்தியார் சாமிக்கண்ணாசாரி வறுமையில் வாட ஆரம்பித்தார். அதோடு அவருக்குக் கண்கள் பார்வை வெகுவாகக் குறைந்துவிட்டது.

தன்னை ஆதரித்த மக்களே தன்னைப் புறக்கணிப்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. விசுவாசம் கெட்டவர்கள் என்று ஏசினார். அவருடைய கோபத்தையும் துக்கத்தையும் யாரும் அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை. அவருடைய உதாசீனமான வார்த்தைகள் பல கிராமத்துப் பெரியவர்களின் மனசைப் புண்படுத்தின. வாத்தியார் சாமிக்கண்ணாசாரியின் கடைசிக்காலம் அவருடைய அந்தத் தள்ளாத வயசில் பிச்சை எடுத்துப் பிழைக்கும் படியாக ஆகிவிட்டது.

கிராமத்தில் நடக்கும் விசேஷங்கள் எதாவதற்கு வரும் வெளியூர்க் காரர்கள் அவரைப் பார்க்க நேர்ந்தால் ''ஆ, இது சாமிக்கண்ணா சாரியில்லே?'' என்று கேட்பார்கள், அப்பேர்ப்பட்ட மனிதரா இந்த நிலைக்கு வந்துவிட்டார் என்று. ''அவரேதாம்; இப்பொ அவருக்குக் கண்ணுந்தெரியலே ஒரு மண்ணுந்தெரியலே'' என்றார்கள்.

ஒரு நாள்,

''என்ன, இந்த வாத்தியாரைய்யா ஊரிலெ இல்லையா தட்டுப்படவே காணமெ'' என்று பேசிக்கொண்டார்கள். காலயில சூரியோதயம் ஆகிக் கொஞ்சம் இளவெயிலாக இருக்கும்போது அவர் வெளியில் வந்து வீட்டுமுற்றத்தில் சிறிது வெயில் காய்வார். காடுகளுக்கு வேலைக்கு அவரசமாகப் போகிறவர்களுக்கு அன்றாடம் பார்க்கக்கூடிய காட்சியாக அது இருந்தது.

சில நாட்கள் கழித்து ''பாவம், சடட்டியாகக் கிடக்காராமே?'' என்று ஒருவரை ஒருவர் வேலைத்தலங்களில் கேட்டுக் கொண்டார்கள்

சாமிநாயக்கர், பால்பீச்ச பசுவின் மடியின்கீழ் உட்கார்ந்தபோது அவரது பசு ஒரு உதைவிட்டது வசமாய். ஆச்சரியம் அவருக்கு! ''என்ன கொள்ளெ வந்திச்சி ஒனக்கு புதுசா?'' என்று கேட்டார் அதைப் பார்த்து. தூரப்போய் விழுந்த பால்ப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வந்து, அதைத் தடவிவிட்டார். காதை வெடைத்துக் கொண்டு பார்த்தது அவரை.

மறுநாள் காலையிலும் இதே 'கூத்து' நடந்தது.

''ஏ பயபிள்ளெ மாடெ, பிள்ளைக்காச்சும் கொஞ்சம் பாலு கொடுத்துத் தொலையென்?'' என்று கத்தினார். பசு மாடு கட்டில் நிற்காமல் காதை வெடைத்துக்கொண்டு வெறண்டு கொண்டே இருந்தது. கண்ணேறல் விழுந்திருக்குமோ என்று நினைத்து குருசாமிக் கோனாரைக் கூட்டிக்கொண்டுவந்து பச்சிலை பூசிப் பார்த்தார். லகுவுக்கு வருவதாகத் தெரியலை. கவலையோடு குடும்பத்துடன் பசுமாட்டையே பார்த்துக்கொண்டிருந்தபோதுதான் அந்த 'வாடை' இப்படி இருக்குமோ என்று நினைத்து, பக்கத்து வீட்டைத் திறந்து பார்த்த போதுதான் தெரிந்தது சாமிக் கண்ணாசாரி இறந்து விறைத்து நாறிப் போய்க் கிடந்தது!

ஊர்ப் பெரியவர்களெல்லாம் வந்து கூடினார்கள். சொல்ல முடியாத துக்கம் ஏற்பட்டது. யாருக்குச் சொல்லியனுப்ப என்று யோசித்தார்கள்.

அவர் அந்தக் கிராமத்துக்கு வந்து அத்தனை ஆண்டுக்காலம் வாழ்ந்த காலத்திலும் அவருக்குச் சொந்தபந்தம் என்று யாரும் அவரைப் பார்க்க வந்த ஞாபகமில்லை. அவரும், தனது சொந்தக் காரர்களைப் பார்க்கப்போறேன் என்று ஒரு நாள்க்கூட எங்கயும் போனதாகவும் தெரியலை. பிறகு யாருக்கு எங்கே சொல்லி அனுப்புறது.

யாருமே இல்லாத 'அனாதையாக' வந்து, வித்தை கற்றுக் கொடுத்து, ஒரு காலத்தில் சிறப்பும் சீருமாக வாழ்ந்த தங்கள் குருநாதரை நினைத்துச் சிலர் கண் கலங்கினார்கள்.

சிறப்பாக எடுத்து அவரை நல்லடக்கம் செய்யவேண்டும் என்று கிராமம் தீர்மானித்தது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சாமிக்கண்ணாசாரி வாழ்ந்த அந்த வீட்டின் முன்னால் பிடாங்கு வேட்டுச் சத்தமும், கொட்டும் முழங்கின.

பெண்டுகள் உருக்கமாக ஒப்புசொல்லி அழுதார்கள். புன்னரசி மரக் கொப்புகளை வெட்டிக்கொண்டு வந்து 'தேர்' ஜோடனை செய்தார்கள்.

சுடுகாட்டில் அவருக்கு ஊர்ப்பெரியவர்கள் வந்து வாய்க்கரிசி போட்டார்கள். கொள்ளி வைக்க யாரும் வாரீசு இல்லாதவர்களுக்கு வைக்கப்படுவது போல ஊர்க் குடிமகனே கொள்ளி போட்டான். சாமிக்கண்ணாசாரியின் பாடு முடிந்தது.

❖

## 10

கோட்டையார் வீட்டு நரசிம்மனும் நுன்னகொண்டார் வீட்டு கஸ்தூரி ரங்கய்யனும் பத்தாம் வகுப்பில் தோற்று ஊர்வந்து சேர்ந்தார்கள். கோவில்பட்டியில் அவர்கள் படித்துக்கொண்டிருந்த போது பள்ளிக்கூடத்தில் படித்துத் தெரிந்துகொண்டதைவிட வெளி உலக விஷயங்கள் அவர்களுடைய மனசில்ப் பதிந்தது அதிகம் என்று சொல்ல வேண்டும்.

அந்தக் காலத்தில் கல்விக்கூடங்களிலும் பொதுவாழ்க்கையிலும் வீசிய ''பெரும்புயல்'' அவர்களையும் வெகுவாகப் பாதித்தது. ஊருக்கு வந்ததும் முதல்க் காரியமாக கிராம வாலிபர் சங்கம் ஒன்றை ஆரம்பிக்கத் தீர்மானித்தார்கள். அதில் கஸ்தூரியைவிட நரசிம்மனுக்கே அதிக உற்சாகமிருந்தது.

கோடைநாட்களில் காட்டில் அருகுதோண்டும் இடங்களுக்குப் போய் அந்த வாலிபர்களோடு இருந்து, அவர்களோடு நெருக்கமாகப்

பழகினான். ஒத்தாசனையாக - அவர்களுக்கு உதவுவதுபோல் - கம்பி பிடித்து மண்வெட்டி பிடித்து, வேண்டாம் வேண்டாம் என்று சொன்னாலும் கேட்காமல் வேலை செய்தான். அதன் அழுத்தம் தாங்காமல் அவனுடைய உள்ளங்கைகள் பொத்துப் போயின; அவர்கள் தோண்டியில் கொண்டுவந்திருக்கும் உருண்டைக் கஞ்சியை அவர்களைப் போலவே உள்ளங்கையில் ஏந்தி உண்டான். அவர்கள் செய்ததுபோலவே ஒரு பாதத்தின் மேல்ப்படத்தில் துவையலை வைத்துக்கொண்டு கஞ்சிக்கு வெஞ்சனமாக நாக்கில் தொட்டுக்கொண்டான்.

'முதலாளி வீட்டுப்பிள்ளை' தங்களோடு இப்படி வந்து சமமாக உட்கார்ந்து கஞ்சி சாப்பிடுவது அவர்களுக்கு ஆச்சரியமாகவும் பெருமையாகவும்கூட இருந்தது. அந்தப் பிள்ளையின் மீது அந்த மக்களுக்கு மதிப்பு கூடியது. நரசிம்மன் அவர்களோடு அப்படி வேலை செய்துகொண்டே பல விஷயங்கள் அவர்களோடு பேசினான்.

கிராம மக்களிடமுள்ள மூடநம்பிக்கைகள் பற்றி, அறியாமையும் சுத்தமின்மையும் பற்றி, தேசம் அன்னியனிடம் அடிமைப்பட்டிருப்பது பற்றி எல்லாம் பேசினான்.

நரசிம்மனுடைய வார்த்தைகளைக் கேட்கக்கேட்க அந்த வாலிபர்களுக்கு, அவன் சொல்வதெல்லாம் ஞாயந்தானே என்று தோன்றியது.

அவர்களுக்கு ஒரு வேகம் பிறந்தது.

அவர்களில், சிலர் உணர்ச்சி மிகுந்த வாலிபர் சிலருக்கு உடனே, இப்போதே ஏதாவது செய்யவேண்டும் என்று துடிப்பு ஏற்பட்டது. அதை நரசிம்மனிடம் சொன்னார்கள். நரசிம்மன் அர்களிடம் சொன்ன முதல் காரியம், ''முதல்லெ நம் ஊர் கள்ளுக்கடைய ஒழிக்கணும்''

'நடக்கிற சங்கதியா!' என்றுபட்டது. ஒருவன் சொன்னான்; ''ராத்திரியே போயி மொதக்காரியமா தீயை வச்சிருவோம்!'' ரொம்பக் குஷியோடு ஆதரித்தார்கள் சிலர்.

அந்தக் கள்ளுக்கடை கிராமத்தைவிட்டுத் துண்டாக ஓரிடத்தில் இருந்தது. யாரும் இதை ரொம்பச் சுலபமாகச் செய்துவிடலாம். ஆனால் நரசிம்மனுக்கு, இதனால் கள்ளுக்கடை ஒழியாது, புதுசாக ஓரிடத்தில் திரும்பவும் வரும் என்று தோன்றியது.

அதோடு, அதில் மதிப்புள்ள பொருள்கள் எதுவும் கிடையாது; முழங்கால் உயரமுள்ள மண் சுவரில் அமைக்கப்பட்டுள்ள பனை ஓலைக் கூரை மட்டுமே. ராத்திரியில் அங்கே ஒன்றும் இருக்காது; ஆள்கூடப் படுத்திருப்பானா என்பது சந்தேகமே. குடிக்கவேண்டும் என்கிற மனவேட்கையை மக்களிடமிருந்து ஒழிப்பது எப்படி; இதுதான் கேள்வி.

எவ்வளவு, எப்படி எடுத்துச்சொன்னாலும் குடிகாரமட்டைகள் கேட்கப் போவதில்லை, நிச்சயம். அதோடு குடிப்பதினால் ஏற்படும் கேடுகளெல்லாம், உபதேசிப்பவர்களைவிட அதிகம் அறிந்தவர்கள் அவர்களே!

அந்த வாலிபர்கள் கொஞ்சநாள் இதைப்பற்றி பேசினார்கள். யோசித்தார்கள், விவாதித்தார்கள். கரை மரத்தடிகளிலும் ஊர் மட்டத்திலும் பொது இடங்களிலும் நாலுபேர் கூடுமிடமெல்லாம் இதே பேச்சாக இருந்தது.

கஸ்தூரி சொன்னான்: மக்களுக்குப் போதைப் பழக்கத்தைப் பரப்பிவிட்டால் அரசாங்கத்துக்கு வருமானம் மட்டுமில்லை; எதிர்த்துப் போராடவும் மாட்டார்கள். கஷ்டம் ஏற்படும் போதெல் லாம் ஜனங்களுக்குக் கோபம் ஏற்படுவதற்குப் பதில் போதையை ஏற்படுத்தி விடுவது ஒரு தந்திரமான உபாயம். வெள்ளைக்காரன் மட்டுமில்லை உலகத்திலுள்ள அனைத்து ஆட்சியாளர்களும் செய்கிற ராஜதந்திரங்களில் இதுவும் ஒன்று.

சீனாவில் அபின் பழக்கத்தை அந்தக் காலத்தில் ஏற்படுத்தி மக்களை விழுத்தட்டினார்கள் என்று கஸ்தூரி விளக்கிச் சொன்னான். சுதந்திரப்போராட்டத்தின் முதல்ப் படி நமது மக்களைப் போதையி லிருந்து விடுவித்தாக வேண்டும் என்று சொன்னான். ஊருக்குள் பல இடங்களிலும் கருத்து மோதல்கள் ஏற்பட்டது. . பலர், பல அபிப்பி ராயங்களைச் சொன்னார்கள்; ''கள்ளு ஒடம்புக்கு நல்லதில்லா அது கடவுளே பாத்து மனுசனுக்குக் கொடுத்தாச்சே, அதெ நீக்கணும்ங் கிறது நடக்கிற சங்கதியில்லெ''

''கள்ளுக்களுதெ நல்லதில்லெ; யாருசொன்னா நல்லதுன்னுட்டு? பனம்பாலு குடிக்கலாம். ரொம்ப நல்லது ஒடம்புக்கு. பனையி லிருந்து சீக்கிரமே எறக்கி அது புளிக்கிறதுக்கு முன்னாடி அந்தத் துவப்பும் லேசான இனிப்பும் கலந்த ருசியோட குடிக்கணும். நாப்பது நாளு சாப்பிட்டுப் பாரு. அப்பிடியே ஆள் மளமளன்னு உண்டாகி மேலெல்லாம் மினுமினுன்னு ஆயிரும்''

''எவண்டா சொன்னான் கள்ளு சாப்பிடப் படாதுன்னுட்டு; ஆறாத சூட்டையெல்லாம் ஆத்தும்டா அது''

''பயக கொளுத்துப் போயி குடிச்சிட்டு ஆடுதான். சும்மா நிதானமெல்லாம் தவறுமோ. ஆத்தாளுக்கும் பெண்டாட்டிக்கும் வித்தியாசம் தெரியாமலா இருக்கான்; தாயோளிது மப்புங்நெ''

''கள்ளு, மேலு வலியெல்லாங் கேக்கும். நம்ம சம்முகநாடார் இந்த வய்சுலேயும் எத்தனெ பனை ஏறி எறங்குதார். அந்தத் தொளிலுக்கு அது இல்லேண்ணா முடியுமா?''

ஊர்மட்டத்திலும் இது பற்றிப் பேச்சு வந்தது.

''ஒரு பனைக்கு மூணுபொழுது ஏறி இறங்கணும்; ஒரு தோப்புல நூறு பனையிருந்தா அவம் ஒரு நாளைக்கு எத்தனை 'உக்கி' போடுவாம் சொல்லு!'' என்று கணக்குப் போடுவதுபோல் ஒரு செய்தி சொன்னார் ஒருத்தர்.

மடத்தின் இன்னொரு மூலையில் ரண்டுபேர் இதே விஷயம் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்:

''பதினி இருக்கிறப்பொ கள்ளு என்ன மயித்துக்கு?''

''அ, பதனி! அது அமிர்தமில்லா!''

''சவம் கொளுத்துப்போயி அலையுதுங்நெ''

இவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டே பனைநாரில் வாக்கூடுகள் பின்னிக்கொண்டிருந்த மன்னார் நாயக்கர் அவர்களின் பேச்சினூடே ஒரு ''ஊடுசால்'' அடித்தார்:

''ஆம்பிள்ளைக்குக் கள்ளு; பொம்பளைக்குப் பதனி!''

அதைக் கேட்ட எல்லாரும் சிரித்தார்கள்.

முள்வாங்கியால் காலில் முள்ளெடுத்துக்கொண்டிருந்த வேலுக்கோனார் அங்கேயிருந்தவர்களுக்கு ஒரு தகவல் சொன்னார்.

''பகடைக, பிறந்த ஒடனெ பிள்ளெகளுக்கு சேனை வைக்கிறதே கள்ளுதாம்; தெரியுமா?''

கேட்டவர்களில் ஒருத்தர் தனது ஆச்சரியத்தை ஒரு கெட்ட வார்த்தை வசவினால் தெரிவித்தார்.

இத்தனை நாளாகியும் ஒமக்கு இது தெரியாதா என்று அவரைப் பார்த்தார் வேலுக்கோனார்.

தற்செயலாக அந்நேரத்தில் அந்த வழியாகப் போன ராக்குப் பகடையை சத்தங் கொடுத்துக் கூப்பிட்டார்கள் அவனிடம் இது பற்றிக்கேட்டுத் தெரிந்து கொள்ள. அவன் தள்ளாடிக்கொண்டே வந்து எல்லோரையும் கும்பிட்டான்.

❖

# 11

வேலுக்கோனார் சொன்ன விஷயத்தை வாஸ்தவம்தானா என்று ராக்குப் பகடையிடம் கேட்டபோது, நெசந்தான் என்று ஒப்புக் கொண்டதோடு கள்ளைப்பற்றிப் பல விஷயங்கள் சொல்ல ஆரம்பித்தான்.

அவன் சொன்ன சுவாரஸ்யமான விஷயம், கூடுதலாகக் கள்ளைச் சாப்பிடச் சாப்பிட சத்தியம் வெளிப்படும்; ஓர வஞ்சகம் இருக்காது என்பது!

அவர்களுக்குள் தீராத விவகாரம் என்று வந்துவிட்டால் எப்படி அவர்கள் தீர்த்துக்கொள்கிறார்கள் என்பதை ராக்குப் பகடை சுவாரஸ்யமாய் விவரித்தான்.

மற்றவர்களைப்போல் பகடைகள் ஊருக்குள் - ஒரு வீட்டுக்குள் வைத்து பஞ்சாயத்து பேசுவதில்லை. காட்டுக்குப் போய்விடு வார்கள். எட்டாக் கைத் தொலைக்காடாக இருக்கும் அது. ஒரு நல்...ல வேம்படி நிழலில்க் கூடுவார்கள்.

வேலுக்கோனார் கேட்டார். ''ஏண்டா; ஊருக்குள்ளாரப் பேசினா என்ன?''

''சாமீ அதுலெ பல குத்தம் வந்து சேந்துரும். பாகம் பகரும்போது ஊர்க்குடிகள வாய்தவறிப் பேசிப்போடுவோம்!''

அவன் சொன்னதுக்கு மன்னார் நாயக்கர் விளக்கம் தந்தார்: ''நாமெல்லாம் நிலத்தைப் பகுந்துக்கிறொம்; அவங்க நம்மளைப் பகுந்துக்கிறாங்க!''

இது வேடிக்கையாகப் பட்டாலும் அதை ரசித்தார்கள். ''ஒரு வீட்டுக்காரன் ''களத்துப் பிச்சை''யைப் பகடைக்கு ஒளுங்காக் கொடுத்துருவான்; எனக்குத் தொணைக்குப் போன கோட்டிக் காரங்கள் அவம் வயித்துல மண்ணடிப்பான். அப்பிடிபட்டவனெ ஒரு பங்குல போட்டுப் பகுந்தா பங்காளி ஏத்துக்கிடுவானா? அந்த பிசிநாறிப் பய எனக்கு வேணாம் பொ'ண்ணு சொல்ரப்பொ அவம் பேரைச் சொல்லித்தான் ஆகணும்! அப்பொ அது யாரு காதுலயும் பட்டா இவங் கதி என்ன ஆகும்?'' என்று கேட்டார் மன்னார் நாயக்கர்.

அது வாஸ்தவம் என்பது போல் ராக்குப் பகடை தன் காவிப் பல்லைக் காட்டினான்.

''ஏலெ; தாயோ... இளிக்கதைப் பாரென்!'' என்று பொய் கோவத்துடன் ஏசினார் வேலுக்கோனார்.

மரத்தடி நிழலில் அப்படிக் கூடிய பகடைகள் தங்கள் தங்கள் விவகாரங்களை தங்கள் ஜாதியைச் சேர்ந்த விவகாரிகளிடம் எடுத்துச் சொல்லுவார்கள்.

விவகாரம் சொல்லுகிற வாதி, பிரதிவாதிகள் அந்த வேளையில் குடித்திருக்கக்கூடாது. ஆனால் விவகாரத்தைக் கேட்கும் விவகாரி களுக்கு முன்னால் மடா நிறைய்யக் கள் இருக்கும். அவர்கள் குடித்துக்கொண்டே விவகாரத்தைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். விவ்காரம் நீடித்துக்கொண்டே போனால் மடா நிரப்பப்பட்டுக் கொண்டேயிருக்கும்.

விவகாரிகள் குடிக்கும் இந்தச் செலவை வாதியும் பிரதிவாதியும் சமமாக ஏற்றுக்கொள்வார்கள்.

விவகாரம் சொல்லி முடிப்பதுக்கும் மடாக்கள் காலியாவதற்கும் சரிய்யாக இருக்கும். இப்போது அந்த நீதிபதிகளான விவகாரிகள் முழுப்போதையிலிருப்பார்கள். அந்தப் போதை, அவர்களுடைய மனசில் என்னப் பட்டதோ அதைச் சொல்ல வைக்கும்; ஓரவஞ்சக மாகவோ மறைத்துப் பேசவோ முடியாது அவர்களால்.

அவர்கள் சொல்லுகிற தீர்ப்பை ஒரு சத்தியமாக ஏற்றுக்கொள்வார் களாம் பகடைகள்.

கள் அவர்கள் ரத்தத்தோடு கலந்திருந்தது. கள்ளைப் புனிதமாக நினைத்து அதை பூஜையில் வைத்து அவர்கள் வணங்கினார்கள். அதனால்தான் அவர்கள் குழந்தை பிறந்தவுடனே அந்தக் குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுப்பதற்குமுன் கள்ளையே சேனையாக வைத்தார்கள்.

கள் இல்லாத வாழ்க்கையை அவர்களால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

கள்ளுக்கடைவேண்டாம் என்கிற சொல் எல்லோரையும்விட அவர்களைத்தான் அதிகம் திடுக்கிட வைத்தது.

கள்ளுக்கடையை வேண்டாம் என்று சொல்லுபவர்கள் பெரிய வீட்டுப் பிள்ளைகள்; படித்தவர்கள், கிராமத்தில் பெருஞ் செல்வாக்

குடையவர்கள். இது, குடிப்பவர்களுக்கு ஒரு சங்கடமாக அமைந்தது.

ராக்குப் பகடைக்கு நிஜமாகவே ஒன்றும் விளங்கவில்லை. தலைமுறைத் தத்துவமாக நடந்துவருகிற ஒரு காரியத்தை எப்படி நிறுத்த முடியும்? அந்தக் கிராமத்தில் அவர்களில் ஆணும் பெண்ணும் அடங்கக் கள் அருந்தினார்கள் அப்போது. கள் அவர்களை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. உலகத்தின் சிறுமைகளையெல்லாம் மறந்து ஆனந்தக் கூத்தாட முடிந்தது. மனம்விட்டுப் பேச முடிந்தது. மனம்விட்டு அழ முடிந்தது. அதேபோல் மனம்விட்டு சண்டை போடவும் முடிந்தது. ராக்குப் பகடை நினைத்தான்.

'என்ன சந்தோசமிருக்கு இந்த ஒலகத்துல. பாவிக இதையும் பறிக்கணும்ண்ணு நெனைச்சிட்டாங்களெ'

❖

கள்ளுக் கடையை நடக்கவிடாமல் ''மறியல்'' செய்யப் போகிறார்களாம் என்று கேள்விப்பட்டதுமே கள்ளுக்கடை ஏலம் எடுத்திருந்த கவுலூர் நாயக்கருக்குக் கோவம் அண்டகடாரம் முட்டியது.

அவர் தினந்தவறாமல் காலை மாலை 'பனம்பால்' சாப்பிடாமல் இருக்க முடியாது. தனது ஆரோக்யத்துக்கு அதுவே காரணம் என்று நினைப்பவர். ஒரு மரத்தின் 'பாலை'யே ஒருத்தன் ஒரு மண்டலம் சாப்பிட்டு வந்தால் எப்பேர்ப்பட்ட நோயும் எடுபட்டுப் போயிரும் என்று சொல்லிக்கொண்டிருப்பவர். இப்போது உடலாரோக்யம், பண ஆரோக்யம் ரண்டும் கெட்டுப் போக சம்மதிப்பாரா?

கிராமத்தில் நுன்னகொண்ட நாயக்கருக்குக் கள்ளுக் கடையினால் கணிசமான அளவு தரை வாடகை கிடைத்துக்கொண்டிருந்தது. கடை அவர் நிலத்தில்தான் இருந்தது. இப்போது இந்தப் பயல்கள் அதை ஒக்கிட்டு விடுவார்களோ என்கிற பயம் வந்துவிட்டது. பேரன் கஸ்தூரியைக் கூப்பிட்டனுப்பினார்.

''என்ன தாத்தா?''

''என்னடா பயலே, என்னமோ சொல்லிக்கிடுராங்களே நெசமா?'' என்று கேட்டார்.

''ஆமாந் தாத்தா''

''ஏண்டா அவ அவம் பணத்தில அவ அவங் குடிக்கிறான்; மத்தவங்களுக்கு என்ன போச்சிடா?''

பெரியவருக்கு எப்படி விளக்கிச் சொல்றது; மதுவிலக்கின் தத்துவம் முதலியன அனைத்தையும் விளக்கிச் சொன்னாலும் அவர் ஏற்றுக்கொள்ளப் போறதில்லை என்று பட்டது. எவனெவன் எப்படிப் போனால் நமக்கென்ன, நாம வேணுமானால் பரிசுத்தமாக இருந்துகொள்ளலாம். அதுக்காக, வருகிற வருமானத்தைக் கெடுத்துக்கொள்ளலாமோ, அடுத்தவனுடைய சங்கடம் கஷ்டம் இதெல்லாம் பாக்க ஆரம்பித்தால் ஒலகத்துல யாரும் சம்பாரிக்க முடியுமா. விருதாக் கோட்டிக்காரங்களா, பொளைக்கத் தெரியாத பயல்களா இருக்காங்களே என்று நினைத்தார் அவர்.

''ஏண்டா, கள்ளுக்கடைய இளுத்து மூடீட்டா காந்திகையில சுயராஜ்யத்தெ கொடுத்துவானாமா வெள்ளைக்காரன்? போங்கடா பொசகெட்டபயல்களா'' அந்த ஊரில் நுன்னகொண்ட நாயக் கருக்கும் சிலருக்கும் மட்டும் வெள்ளைக்கார ஆட்சியின் பேரில் ரொம்பப் பிரியம். ரொம்ப ரொம்பப் பிரியம்.

''அவம் வந்தம் பெறகுதான் நாடே உருப்பட்டது'' என்பார்கள்.

எங்கன கண்டாலும் தீவட்டிக் கொள்ளைகளும் வழிப்பறிகளும் நண்டழிஞ்ச காடா இருந்த நாட்டை அவம் வந்து ஒடிக்கி அடக்கி ஒழுங்குபடுத்தியிருக்கான். அவம் வந்த பெறகுதானே ரயிலு வந்தது, காரு வந்தது, தபாலு, தந்தி இதெல்லாம் வந்தது. நாட்டுக்கு அவம் என்னமெல்லாஞ் செஞ்சிருக்கான். அவம் மாத்திரம் இல்லெண் ணாத் தெரியும் கதே? இவங்க கையில சுயராஜ்யத்தைக் கொடுத்துட்டா அம்புட்டுத்தான்; வேற வெனை வேண்டாம். திரும்பவும் நாடு நண்டழிஞ்ச காடா ஆயிரும்.

களுதப் பயல்களைப் போகச் சொல்லு, களுதைப்பயல்களை.

❖

## 12

ஊர்ப் பெரியவர்கள் கூடி அந்த வருசம் ஊர்சாத்திரை நடத்தத் திட்டமிட்டார்கள்.

ஊர் சாட்டப்பட்டது. வீட்டுக்கொரு ஆள் என்று ஊர்மடத்தில் வந்து கூடினார்கள். பிள்ளைகள் குழந்தைகள் என்று கூட்டம் நெரிபட்டது. எல்லோர் முகத்திலும் ஒரு ஆனந்தம்: நிறைவு

தெரிந்தது. மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தவறினால் ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை கிராமத்தில் ஊர்சாத்திரைத் திருவிழா நடைபெறும். இந்த நடைபெறுதலுக்கும் ஏதாவது எதிர்பாராத தடங்கலும் வந்து சேரும். விழா நடத்தவேண்டியதுதான் என்று தீர்மானிக்கலாம் என்று இருக்கும்போது கீழத்தெருவில் இன்னார் வீட்டில் அம்மை விளையாண்டிருக்கு என்கிற தகவல் வந்துசேரும். அது பெரியம்மையாக இருந்தாலும் சிச்சிலுப்பையாக இருந்தாலும் சரி, அந்த ஆண்டு ஊர் சாத்திரை இருக்காது.

அம்மை நோய்க்குக் கொட்டுச் சத்தமே ஆகாது. வெளியூரிலிருந்து யாரும் பந்த சேர்வை, வாய்ப் பூட்டு, நேமகம் என்று மேளமடித்துக் கொண்டு வந்தாலும் நிப்பாட்டச் சொல்லி அப்படியே திருப்பி அனுப்பிவிடுவார்கள்.

ஊருக்குள் பெரியவர்களுக்குள் ஏதாவது மனஸ்தாபம் சண்டை என்று வந்துவிட்டாலும் ஊர்சாத்திரை நடைபெறாது. எப்படித் தள்ளிப் போனாலும் பன்னிரெண்டு வருசத்துக்கு ஒருக்க எப்படியும் ஊர்சாத்திரை செய்தே ஆகணும். இல்லையென்றால் கிராமத்துக்கே பெரிய பீடை வந்துசேரும் என்பார்கள். ஊர்க்கூட்டத்தில், ''எல்லோரும் வந்தாச்சா?'' என்று கேட்டார்கள். அம்பலக்காரர் சுற்றிலும் முகத்தை அரை வட்டமாகத் திரும்பிப் பார்த்து திருப்தி தெரிவித்தார். ''ஊர்சாத்திரை நடத்திற வேண்டியதுதானெ?'' என்று கூட்டத்தைப் பார்த்துக்கேட்டார். ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டிருந்தாலும் சம்பிரதாயமாக இப்படிக் கேட்கவேண்டும். எல்லாரும் மகிழ்ச்சியோடு ஒப்புதல் கேட்க வேண்டும். எல்லாரும் மகிழ்ச்சியோடு ஒப்புதல் சொன்னார்கள். அவ்வளவுதான்; பிறகு, எந்த ஊர் மேளகாரனை வரவழைக்கிறது போன்ற பேச்சுக்கள் தொடரும்.

ஊர்சாத்திரையில் முக்கிய அம்சம் மதுக்குடம் எடுப்பது. மதுவை எதிர்த்து மதுவிலக்குப் பிரச்சாரம் செய்த வாலிபர் சங்கத்துக்கு இது ஒரு இக்கட்டான நிலை! மதுவை மட்டிலும் என்றால் எதிர்க்கலாம். இதில் சாமி சம்பந்தப்பட்டிருக்கிறதே. பெரியவர்களுக்கும் மதுப் பிரியர்களுக்கும் ரொம்ப சந்தோஷம், கொண்டாட்டம்.

❖

செவ்வாய்கிழமை ராத்திரி ஏகரலி ஊர்சாட்டினான்.

மறுநாள் காலையிலிருந்து கிராமம் விழாக்கோலம் பூண ஆரம்பித்தது.

கட்டாந்தரை போலிருந்த செல்லேரம்மன் கோயிலைச் சுற்றிலும் பெரியவர்களும் இளவட்டங்களும் களை சுரண்டிகளாலும் மண்வெட்டிகளாலும் செடி செத்தைகளை செதுக்கியும் கொத்தியும் சுத்தப்படுத்த ஆரம்பித்தார்கள். பெண்டுகள் குடங்குடமாக கம்மாயி லிருந்து தண்ணீர் மொண்டு சுமந்துகொண்டு வந்து தரையில் தெளித்தார்கள். தரையில் தண்ணீர் பட்டதுமே மண்வாசம் கமகமத்தது.

வேளாரிடம் சொல்லி மதுக் குடங்கள் செய்துகொண்டு வரச் சொன்னார்கள். அதில் கோவிலுக்கு என்று மட்டும் மிகப்பெரிய மதுக்குடம்.

புதுக்குடங்கள் வந்து சேர்ந்ததும் சோளத்தை இடித்து அதோடு கம்பு பச்சரிசி முதலிய அரிசிகளையும் இடித்து மாவாக்கி குடங்களில் இட்டு காடித் தண்ணீர் ஊற்றி முக்கால் பானைக்கு இருக்கும்படியாகச் செய்தார்கள்.

வேளார் கொண்டுவந்த புதிய மண்தொட்டிகளில் மண்ணையும் செமித்த குப்பையையும் நிரப்பி அதில் நெருக்கமாக பருப்புவகை வித்துக்களைப் போட்டு தண்ணீர் விட்டு சூரிய ஒளி படாமல் அரங்கு வீட்டுக்குள் வைத்து முளைப்பாரி தயார்செய்தார்கள்.

ஊர்சாத்திரை நாள் நெருங்க நெருங்க மதுக்குடங்களிலிருந்து மது மேல் நோக்கிப் பொங்கிவந்து கொண்டிருந்தது. மக்கள் அதை தினமும் கவனித்துக்கொண்டே வந்தார்கள். இன்னார் வீட்டில் இதைவிட உயரமாகப் பொங்கி வந்துவிட்டது என்று சொல்லு வார்கள்.

விழாத் தொடக்கத்து அன்று மதியம் குடங்களிலுள்ள மதுபொங்கி நுரைகட்டி குடத்தின் வா விளிம்பு வரை வந்துவிட்டது.

வெளியூரிலிருந்து உறவுக்காரர்கள் சொந்தக்காரர்கள் என்று வீடு கொள்ளாமல் ஒவ்வொரு வீட்டிலும் நெருக்கம் அதிகமாகியது. மேளகாரர்கள் வந்துவிட்டார்கள்.

மேளம் தட்டியதும் விழா களை கட்டியது.

கோவில் மதுக்குடத்தை வழக்கமாகத் தூக்கிக்கொண்டு வரும் அச்சயநாயக்கர் மேல்த்துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு பய பக்தியாய் மதுக்குடத்தின் கிட்டெ இருந்தார். மதுக்குடம் தூக்குகிறவர்கள் விரதம் இருந்து மடியாகவும் இருக்கவேண்டும்.

அதனால் அவர் உடம்பு சோர்வாகத் தெரிந்தாலும் முகம் பிரகாசமாக இருந்தது.

மேளகாரர்கள் கோயில் மதுக் குடத்தை சுற்றிச் சுற்றி வந்து மேளமடித்தார்கள். பூசாரி வந்து மதுக்குடத்துக்கும் அச்சய நாயக்கருக்கும் அம்மன் காப்பு வைத்தார்.

மதுக்குடத்தின் நுனிவாயில் வயிரக் கற்களால் கும்பம் வைத்தது போல் மதுபொங்கி நுரைத்து நின்றது. அந்தப் பொங்கு நுரையின் மேல் சூரிய ஒளிபட்டு பலநிறங்களில் மின்னாப்பு தெரிந்தது.

மக்களின் கவனமெல்லாம் இப்போது மதுவின் நுரை பொங்கி வழியப் போவதையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தது.

எந்த ஊர்சாத்திரை நாளிலும் மது பொங்கி வழிய இவ்வளவு தாமதமான ஞாபகம் இல்லை பெரியவர்களுக்கு.

கிராமத்தில் இப்போதெல்லாம் ''தெய்வ குத்தம்'' நிறைய்யவே நடக்க ஆரம்பித்துவிட்டது என்று பெரியவர்கள் நினைத்தார்கள். முக்கியமாக மதுவையே எதிர்த்து ஒரு சிலர் பேசுவது அவர்களுக்கு ஞாபகம் வந்தது.

கட்டிப் பொங்கி மேல் எழுந்து நின்ற நுரை வழிவதாக இல்லை; அப்படியே நின்றது. பலர் மனம் கலங்கினார்கள்.

சிலர் எந்தப்பக்கம் - எந்தத்திசையில் - வழியும் என்று யூகம் சொன்னார்கள். எந்தத் திசையில் வழிந்தாலும் அந்த அந்தத் திசைக்கு என்று பலன்கள் இருக்கிறது. முக்கியமாக வடக்குத்திசை பார்த்து மது பொங்கி வழிவதுதான் கிராமத்துக்கும் மக்களுக்கும் க்ஷேமம். நேரம் நகர்ந்துகொண்டிருந்தது. மது எந்தத் திசையிலும் பொங்கி வழிவதாக இல்லை. மக்கள் மிகவும் மனசு பாதிக்கப்பட்டார்கள். உணர்ச்சி வசப்பட்டார்கள். அந்தப் பெருங்கூட்டத்தினுள்ளிருந்து பெண் குரல் ஒன்று மிகவும் உணர்ச்சிவயப்பட்டு ஒரு அழும் குரலில் ''தாயே அம்மா...'' என்று கேவியது. அது மக்களை மேலும் பாதித்தது.

அம்மன் மனசில் இருப்பது யாருக்குத் தெரியும். அவள் மதுப்பிரியைதான். இருந்தாலும் அவள் தன் மக்களிடம் இன்னும் எதை எதிர்பார்க்கிறாள் என்று தெரியவில்லையே.

''அம்மா, நாங்க என்ன குத்தம் செஞ்சிருந்தாலும் நீதான் பொறுத்துக் கொள்ளணும் தாயே'' என்று அனைவரும் மண்ணின் மேல் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கினார்கள்.

வேலுக்கோனாருக்கு ''அம்மன் அருளாகி'' விட்டாள்.

காற்றில் அலைக்கழியும் தீபச்சுடர்போல் அவர் உடம்பு நெளிந்து வளைந்தது. அதிகம் முறுக்கேறிய கயிறுபோல் உடம்பு திருகி மறுகியது. கண்விழி பிதுங்கிக் கீழே விழுந்துவிடும் போலப் பார்த்தார். வாயினுள் மணல் கிடப்பதுபோல பற்களை நெறு நெறித்தார். பயம் தரும் ஆவேச இடிக்குரல் அவரிடமிருந்து கிளம்பியது.

அவரைச் சாந்தப்படுத்த குடம்குடமாகக் குளிர்ந்த நீரைத் தலைவழியாகக் கொட்டினார்கள். பூசாரி ஓடி வந்து அவருக்கு மாலை போட்டுக் கையில் வேப்பிலைக் கொத்தைக் கொடுத்தார். பிறகுதான் நிதானமாகி அவர் மேளத்தின் தாளஅடிக்கேற்ப ஆட ஆரம்பித்தார். அந்தச் சமயத்தில் மது பொங்கி வழிய ஆரம்பித்தது. கட்டி மேளம் முழங்கியது. பெண்டுகள் குலவையிட்டார்கள்.

ஊர்வலமாக மதுக்குடம் எடுத்துச் செல்லப்பட்டது, மேள தாளத்துடன், வீடுகளில் வைக்கப்பட்டிருந்த மதுக்குடங்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டன. ஊர் சுற்றிவர ராத்திரி நெருங்கி விட்டது. பூசை முடிந்து மக்களுக்கு மது விநியோகிக்கப்பட்டது.

❖

## 13

கம்மாக்கரை மரநிழலில் உட்கார்ந்து நரசிம்மனும் கஸ்தூரியும் இளவட்டங்களோடு பேசிக்கொண்டிருந்தார்கள். மதுக்குடம் பொங்கியது அம்மனின் அருளால்த்தான் என்று ஜனங்கள் பேசிக் கொள்வதைப்பற்றி கஸ்தூரி அவர்களுக்கு விவரம் சொன்னான். அரிசி மாவோடு புளித்த காடிக் கலவை சேர்ந்தால் அது பொங்கியே தீரும்; அது இயற்கை நியதி என்றான்.

கடவுளுக்கே மது பிரீதியானது, அதை மனிதனுக்கு அவர் தந்தார் என்பதெல்லாம் மக்களின் கட்டுக்கதைகள் என்றான் நரசிம்மன். மனிதனுக்கு எதெல்லாம் பிரீதியானதோ அவைகளையெல்லாம் மனிதன் கடவுளுக்குக் காட்டிவிட்டு இவன் அவைகளை அனுபவிக் கிறான் என்பதுதான் நெசம் என்றான். பால்ப்பாயசம், சக்கரைப் பொங்கல், தோசை, லட்டு, கள், சாராயம், மாமிசம் எல்லாம் இப்படித்தான் என்றான்.

எத்தனையோ தலைமுறைகளாக மனித வாழ்வோடும் தெய்வத்தோடும் சம்மந்தப்படுத்தப்பட்ட இந்த மதுவை ஒழிப்பது எப்படி என்று அந்த வாலிபர்கள் யோசித்தார்கள். விவாதித்தார்கள். இவர்களுக்கு எதிர் அணியில் எதிரிகளாக அணிவகுத்து நிற்பவர்கள் பனை சொந்தக்காரர்கள், கள்ளுக் கடை ஏலக் குத்தகைதாரர்கள். மடாக்குடியர்கள், ரௌடிகள், இவர்களோடு சம்பிரதாயங்களை மீறமுடியாத அப்பாவிகளும் இருந்தார்கள். இவர்களுக்குப் பெரும் ஆதரவாக அரசாங்கமும் போலீஸும் இருந்தது.

அந்த வாலிபர்களுடையை பிரச்சாரமும் பணிவான வேண்டுதலும் மறியலும் குடிகாரமட்டைகளிடம் எடுபடவே இல்லை. ரொம்பவும்தான் இவர்களை அவர்கள் சிரித்துக் கேலிபேசி இகழ்ந்தார்கள்.

கஸ்தூரி சொன்னான். நாம் இனியும் போய் அவர்கள் குடிக்கிற இடமான கள்ளுக்கடைக்குப் போவதில் அர்த்தமில்லை. அவர்களுடைய குடிசைகளுக்கு அவர்களால் துன்பப்படும் அவர்களுடைய குடும்பத்தாரிடமும் போவோம். நம்மோடு அவர்களும் சேர்ந்துகொள்ளக்கூடும். நமக்கு அது பலமும்கூட.

இந்த யோசனை அவர்களுக்குச் சரி என்று பட்டது. ஆகவே சாயங்காலம் அன்று கள்ளுக்கடைக்குப் போவதற்குப் பதில் பகடைகள் குடியிருப்புக்குப் போனார்கள்.

இவர்கள் நினைத்ததையும்விட நல்ல வரவேற்பு, ஆதரவு இருந்தது. கொத்தனார் சாமிநாயக்கர் நினைத்தார்: பரவாயில்லையே என்று. இவர்கள் கூட்டத்தில் அவர்தான் நடு வயசுக்காரர். நல்ல பலாட்டியர்.

இப்படி இவர்கள் தினமும் வந்து தங்களுக்கு எதிராக தங்கள் குடும்பத்தாரையே 'கிளப்பி' விடுகிறார்கள் என்று தெரிந்துகொண்ட குடிகாரர்களுக்குச் சகிக்க முடியாத எரிச்சலாகவும் கோபமாகவும் இருந்தது. இவர்களை என்ன செய்வது என்றும் தெரியவில்லை. இவர்கள் கிராமத்தின் பெரிய வீட்டுப் பிள்ளைகள். பயமறியாத இளங்கன்றுகள். துடிப்பும் இளரத்தமும் உள்ள இவர்களை என்னதான் செய்வதென்று தெரியாமல், குடிக்கும் இடமான கள்ளுக் கடையில், போதை ஏற ஏற, சவள திட்டித் தீர்த்தார்கள்.

பாலான் பகடை குடித்துவிட்டு வந்து வீட்டில் அவனுடைய பெண்டாட்டி பிள்ளைகளைப் போட்டு கொடூரமாக அடித்துக் கொண்டிருக்கிறான் என்றும், என் சம்பாத்தியத்தில் நாங்குடிக்கிறன்

ஊர்க்காரங்களுக்கு என்ன போச்சி; அவங்களோட நீங்களும் சேந்துக்கிட்டீளெ என்று சொல்லி அடிக்கிறான் என்று கேள்விப் பட்டதும் நரசிம்மனும் கஸ்தூரியும் இளவட்டங்களோடு அந்த இடத்துக்கு விரைந்தார்கள்.

அங்கே சென்று பார்த்தபோது இவர்களுக்குப் பயமாகவும் தயக்கமாகவும் இருந்தது; பாலானுக்குப் பின்னால் குடிகாரர்களின் கூட்டம் தட்டுப்பட்டது. அவர்களுடைய வாய்களால் ஊர்க் காரர்களைத் திட்டிக்கொண்டே தங்கள் குடும்பத்தாரை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

நரசிம்மனும் கஸ்தூரியும் பாலான்பகடைக்குமுன் போய் மறித்ததுபோல் நின்றார்கள். அப்போதுதான் அவர்களுக்குத் தெரிந்தது அவனுடைய சுயத் தோற்றம்! வழக்கமாக பணிவோடும் பவ்யத்தோடும் நிற்கும் அந்த உருவம் இப்போது நிமிர்ந்து உயர்ந்து நின்று இவர்களைப் பார்த்தது. போதையினால் சிவந்த பெரிய்ய கண்கள், புதர் போன்ற மயிர் அடர்ந்த முகத்திலிருந்து இவர்களைக் கவனித்த கொள்ளிப் பார்வை, புற்றிலிருந்து தலை நீட்டிய செந்நாகப் பாம்புகளிரண்டு படமெடுத்துப் பார்ப்பதுபோலிருந்தது. வாயெல் லாம் ரத்தமாகச் சிவந்த ஈரமும், கறுத்துக் கனத்த தோள்களின் பூரிப்புக்கட்டும், மயிர்க்காடாய் விம்மிய நிமிர்ந்த மார்பும் அவர்களைத் திகைக்கச் செய்தது.

இறந்த மாட்டை மற்றவர் துணை நாடாமல் தானே தனியாகப் புலியைப்போல் முதுகில்ப் போட்டுக்கொண்டுபோய்விடுவான் என்று கேள்விப்பட்டது நெசமாகவே இருக்கும் என்று பட்டது.

அவன் கொஞ்சமும் மறைவு ஒளிவு இல்லாமல் கோபத்துடன் இவர்களைப் பார்த்துத் தெலுங்கில் கேட்டான் ''எதுக்காக வந்தீக?'' என்று. துளிக்கூட மதிக்காமல் மரியாதை காட்டாமல் அப்படி அவன் கேட்டதும் கஸ்தூரிக்கும் நரசிம்மனுக்கும் கோபம் மூட்டிக்கொண்டு வந்தது. நரசிம்மனின் உடம்பு ஆட ஆரம்பித்ததைக் கொத்தனார் சாமிநாயக்கர் கவனித்தார். இப்பொ என்ன நடக்கும் என்று அவர் யூகித்தாரோ அதே வினாடியில் அப்படியே அது நடந்தது. யானையை ஒரு கழுகு வானத்திலிருந்து மின்னல் வேகத்தில் பறந்து வந்து தாக்குவதுபோல் நரசிம்மன் பாலான் பகடையைப் பாய்ந்து தாக்கினான். மாறி மாறித் தாக்கினான். இளவட்டங்களும் நரசிம்மனோடு சேர்ந்துகொண்டார்கள். அங்கே நின்ற குடிகாரர் களின் கூட்டம் ஓட்டம் பிடித்தது.

அந்த பிரம்மாண்டமான உருவம் கொஞ்சம் நேரத்தில் ''சாமீ எசமான்களே என்னெக் காப்பாத்துங்க'' என்று சொல்லிக் காலில் விழுந்தது.

❖

மூணாம் நாள் அதே இடத்தில் அதே நேரத்தில் ''காட்சி'' வேறு விதமாக அமைந்தது!

நரசிம்மனும் மற்றவர்களும் அதே சக்கிலியர் குடியிருப்புக்குப் போனபோது பாலான்பகடை அதேபோல்த்தான் எதிரே வந்து நின்றான்.

யாருமே எதிர்பார்க்கவில்லை; நெரசலிலிருந்து ஒரு சரியான கருவக்கம்பை உருவி எடுத்து ஓங்கிக்கொண்டே ''இண்ணைக்கி நாஞ் சாகணும், இல்லெ நீங்க சாகணும் என்று சொல்லி ஆவேசமாக நின்றான் ஒரு மலைபோல. கொத்தனார் சாமி நாயக்கரும் அதேபோல் ஒரு கருவக்கம்பை உருவி எடுத்தார். இதற்குள் பாலான் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் மற்றவர்களும் ஓடிவந்து பாலானைச் சேர்த்துப் பிடித்து இழுத்துக்கொண்டு போக முயன்றார்கள். உடம்பின்மேல் விழுந்து அப்பிய அவர்களை அவன் ஒரு குலுக்கலில் உதிர்ந்து விழச் செய்தான்! என்றாலும் மொலோரென்று அவன்பேரில் ஆவேசமாக விழுந்து அவனைத் தள்ளிக்கொண்டு போனார்கள். யாருக்குமே கட்டுப்படுவதாக இல்லை அவன். அவனுடைய வயோதிகத் தாய் வந்து கீச்சுக்குரலில் தன்மீது ஆணை வைத்து ஏதோ சொன்னதுபோல் இருந்தது; அவன் சொன்னது அந்த களேபரத்திலும் கூச்சலிலும் இவர்களுக்குச் சரியாகக் கேட்க வில்லை. அதன் பிறகுதான் கம்பை அவன் தரையில் விசிறி அடித்து விட்டு, கை கட்டிக்கொண்டு நின்றான்.

மேல்குடியினரின் காதுகளுக்கு இந்த விஷயங்கள் வந்து சேர்ந்தபோது வேறு விதமாகிவிட்டது! அது பரவத் தொடங்கிய போது அதிர்ச்சியும் ஆங்காரமும் ஒரு கொந்தளிப்பே ஏற்பட்டு விட்டது கிராமத்தினுள்.

குடித்துக் கெட்டுப்போக வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப் போன கோட்டையார் வீட்டு நரசிம்மனையும் நுன்னகொண்ட கஸ்தூரியையும் பாலான் பகடை கம்பால் சரியானபடிக்கு அடித்துப்

போட்டுவிட்டதாகவும், அந்தப் பிள்ளைகள் பாவம், நிலைமை மோசமாகிக் கிடக்கிறார்கள் என்றும், பிழைப்பார்களா என்பதே சந்தேகம் என்கிறவரைக்கும் போய்விட்டது!

❖

## 14

இப்படி ஒரு செய்தியைக் கேட்டதும் ஊரே நிலை குலைந்து போய்விட்டது.

என்ன நடந்தது என்று வீட்டுப் பெரியவர்கள் கஸ்தூரி ரெங்கய்யனையும் நரசிம்மனையும் கூப்பிட்டுக் கேட்டார்கள். நடந்ததை அவர்கள் சொன்னார்கள். என்னதான் இருந்தாலும் ஒரு தாழ்ந்த சாதிக்காரன் மேல்சாதிக்காரப் பிள்ளைகளை, அதிலும் ஊரின் பெருந்தனக்காரங்களின் செல்வப் பிள்ளைகளை இப்படிக் கம்பை எடுத்து ஓங்குவது என்றால்...?

இவர்களென்ன அவன் வீட்டுக்குக் கன்னம் வைக்கப் போனார்களா. களவாங்கப் போனார்களா. அடேய், குடிச்சிக் கெட்டுப்போகாதே என்றுதானே சொல்லப் போயிருக்கிறார்கள்; இது தப்பா?

அவர்களால் இதைப் பொறுத்துக்கொள்ள முடியலை. சக்கிலியர் குடியிருப்பையே நொறுக்கிவிடுவது என்று ஊரே கோபத்தோடு கிளம்பிவிட்டது. கம்பையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆவேசமாகக் கிளம்பியவர்களையெல்லாம் பெரியாட்கள் சமாதானப்படுத்தி நிறுத்திப் பார்த்தார்கள். இவர்களுடைய கொந்தளிப்பைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

இவர்களைத் திசை திருப்ப அவர்களுக்குத் தெரிந்த ஒரே வழி உடனே ஊர்க் கூட்டத்தைக் கூட்டுவதுதான் என்று தீர்மானித்தார்கள். ஊர்க் கூட்டத்துக்கும் அவர்கள் கட்டுப்படவில்லை என்றால் பிறகு என்ன செய்வது என்பதை யோசிப்போம். அவர்களை வகையாகப் பைசல் செய்வோம். நம்மை மீறிய ஆட்களா அவர்கள், என்றெல்லாம் இளவட்டங்களின் கோபத்தை சாந்தப்படுத்தி ஊர்க்கூட்டத்தைக் கூட்ட, சாட்டச் சொன்னார்கள்.

கம்மாய்க் கரையின் அரசமரத்தடி நிழலில் ஊர் கூடியது, என்றுமே இல்லாதபடி ஊர்க் கூட்டம் பெருசாக இருந்தது. பாலான் பகடையும் அவன் குடும்பத்தாரும் சக்கிலியர் குடியிருப்பைச் சேர்ந்த அனைவரும் வந்து ஊர்க் கூட்டத்தின் முன்னால் தரையில் விரிக்கப்பட்ட பாய்போல் கூட்டத்தின் காலில் விழுந்து கிடந்தார்கள். அவர்கள் இப்போது கிராமத்தின் அடைக்கலம்.

அவர்களின் சரணாகதி, - அவர்கள் அப்படித் தரையில் மண்ணின் மேல் குப்புறப் படுத்து கைகள் ரண்டையும் நீட்டிக் கும்பிட்டபடியே வெகு நேரமாகக் கிடப்பது - கஸ்தூரியையும் நரசிம்மனையும் ரொம்பப் பாதித்தது; என்ன என்று இரக்கத்துடன் யோசித்தார்கள்.

நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கிடந்த அவர்களின் மத்தியிலிருந்து ஊர்ப்பகடையின் தீனமான குரல், ''சாமி, எசமான்களே எங்களைக் காப்பாத்துங்க காப்பாத்துங்க'' என்று கேட்டுக் கொண்டேயிருந்தது.

ஊர்க்கூட்டத்தின் ஒரு பகுதியாக அரசமரத்தடி விநாயகர் கோவிலுக்குப் பின்புறமாக மன்னார் நாயக்கர் வேலுக்கோனார் இவர்களைச் சுற்றி கொஞ்சப்பேர் உட்கார்ந்துகொண்டு தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள்.

''பார்த்தீரா இவஞ் செஞ்ச காரியத்த. கடசிக் கந்தாயத்தில பயபுள்ளெ கம்பை எடுத்து ஓங்கீட்டானெ நம்மள அடிக்க!'' என்றார் வேலுக் கோனார்.

''அவங்கள யாருண்ணு நெனைச்சீரு. ஏதோ ஒரு சத்தியத்துக்கில்லெ அவங்க நம்மகிட்ட அடங்கிக் கிடக்காங்க. அவங் களப் பத்தி அவங்களுக்கே தெரியாது பாத்துக்கிடும்! யானைக்குத் தன்பலம் தெரியாதும் பாங்க. திருமால் நாயக்கர் ராஜாவும் கிருஷ்ணதேவராய ராஜாவும் இவங்களெ முக்கியமான ஒரு பட்டாளமாக பயிற்சிகொடுத்து மாதாரியான் பட்டாளம்ண்ணே வச்சிருந்தாங்களாக்கும்.'' என்றார் மன்னார் நாயக்கர்.

''அப்படிக்கு என்ன விசேசத்தை இவங்கள்ட்டெ கண்டாங்க அந்த ராஜாக்கள்?''

''அதென்ன அப்படிச் சொல்லீட்டீரு. மாடுதிங்கிறவங்கிட்டெ இருக்கிற பலம் ஆடு திங்கிறவங்கிட்டெ இருக்குமா?'' என்று கேட்டார் மன்னார் நாயக்கர்.

''அப்பொ இவங்களெ ஜெயிக்கணும்ன்னா நாம யானை திங்கணும்ன்னு சொல்றீரு!'' என்று கூட்டத்தில் ஒரு ஏளனக் குரல் கேட்டது.

அந்த வேடிக்கைப் பேச்சு வந்த திசைக்கு அவர் தலையைத் திருப்பாமலே இவர்களிடம் சொன்னார், ''அடங்காத, சேட்டை பண்ணுகிற துலுக்க ராஜாக்களை அடக்கவும் அரமனைக் காவலுக்கும் களவு சில்லரைகளை ஒடுக்கவும் இந்த மாதிரிப் பட்டாளம் பயன்பட்டது. இவங்கட்ட இருந்து தோணியவந்தான் மதுரை வீரன்'' என்றார்.

''அப்பிடியா!'' என்று அதிசயப்பட்டார் வேலுக்கோனார்.

ஊர்ப் பெரியாட்கள் தனியாகக் கூடி யோசித்தார்கள். அபராதம் போடலாமா அல்லது அவனைமட்டும் ஊரைவிட்டு போகச் சொல்லிவிடலாமா என்று.

அப்படிப் போகச் சொல்லும்போது எல்லாருமே கிளம்பிப் போய் விட்டால் அப்புறம் கமலையின் கூனைவாலைத் தைக்கவும் களத்து வேலைகளைச் செய்யவும் காலுக்குச் செருப்புதைக்கவும் என்ன செய்கிறது.

சொல்லப் போனால் இந்தப் பாலான் பகடை ரொம்பவும் நல்லவன், யோக்கியனுங்கூட. மிக நல்ல 'தொள்ளாளி', அழகழகா செய் நேர்த்தியுடன் செருப்பு வகைகளைத் தைத்துக்கொடுப்பான். அவன் தைத்துக் கொடுக்கும் கிறுச்சு மிதியடிகள் இந்த சுத்துப் பட்டிகளிலெல்லாம் பேர்போனது. இந்த கிறுக்சு மிதியடிக்காக சுத்துப்பட்டி தொரைமார்களெல்லாம் தன்னைத் தேடிவருவதாக அவனே பெருமைப்பட்டுக்கொள்வான்.

அவனுடைய சமூகத்திலேயே அவனுக்கு ''ஓஸ்தி''யான பேர். எவ்வளவு சம்பாதித்து என்ன செய்ய; அவ்வளத்தையுமே கள்ளுத்தண்ணியில் கரைத்து விடுவான்.

குரலெடுத்து இனிமையாகப் பாடுவான் பாலான் பகடை, மற்ற நேரங்களில் பாடச் சொன்னாலும் பாடமாட்டான்; நல்ல குடி போதையில் மெய்மறந்து அவர்கள் குலதெய்வமான ''அந்த மாயவுதாரன் ஸ்ரீ கோவிந்தன்'' பேரில்ப் பாடுவான். அவ்வளவும் அவன் இட்டுக்கட்டிப் பாடுவதே''

இப்பேர்ப்பட்ட பாலான் பகடை இப்படி ஒரு காரியம் செய்து விட்டானே என்று நினைத்தார்கள்.

''அவம் நல்லவனோ கெட்டவனோ' எண்ணைக்கு நமக்கு நேரா நிமிச்சரலா -கம்பெ எடுத்து ஓங்கிட்டானோ, அவனெ இங்க இனி வச்சிப் பாக்கப்படாது'' என்று பெரும்பாலானவர்கள் அபிப்ராயப் பட்டுவிட்டார்கள். தரையில் விழுந்து கிடந்தவர்களின் மத்தியி லிருந்து ஊர்ப்பகடையின் தீனமான அபயக்குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

ஊர்ப் பெரியாள் ஒருத்தர் உரத்த குரலில் இப்படிச் சொன்னார் ''வெய்யண்டரா பினாண்டி பிட்லால (எந்திரிங்கடா பய பிள்ளைகளா). ஆனால் யாருமே எழுந்திருக்கவில்லை. குழந்தை குட்டிகள் பெண்டுகள் உட்பட அனைவரும் அதே நிலையில் கிடந்தார்கள், கும்பிட்ட நீண்ட கைகளுடன்.

ஊர்மணியத்தின் குரல் அதட்டலாக ஒலித்தது:

''ஏந்திருங்கடா பயபிள்ளைகளா'

சொல்லி வச்சதுபோல எல்லாரும் எழுந்து நின்றார்கள். ரண்டுகைகளும் தலைக்குமேல் கும்பிட்டபடியே இருந்தன. ஆண்களின் மேல்வேட்டி இடுப்பில் கட்டியபடி இருந்தன. ஊர்ப்பகடைதான் சொன்னான்: ''எசமாங்களே, நீங்க பாத்து அடிச்சா நாங்கள எங்க போவம் சாமீ. நாயி செஞ்சது தப்புதாம் மகாபெரிய தப்பு. குடிவெறியிலெ செஞ்ச காரியம். ஊரு என்ன சொல்லுதோ அதுக்கு நாங்க கட்டுப்படுதோம். ''ஊர்ப் பகடை இப்படிச் சொல்லி முடித்ததும் மீண்டும் அனைவரும் கிராமத்தின் காலில் விழுந்து கும்பிட்டார்கள்.

''சர்தான் எந்திரிங்கடா பயபிள்ளைகளா'' என்று சத்தம் போட்டார் மணியம். அவர்கள் எழுந்து நின்றதும், கிராமத்தின் சார்பாக மணியம் தீர்ப்பைச் சொன்னார். ''சக்கிலியக் குடியிலிருந்து நூறுரூபா அபராதமாகச் செலுத்திர வேண்டியது. பாலான் பகடை ஊரை விட்டே ஓடிப்போயிற வேண்டியது''

தீர்ப்பைக் கேட்டதும் மண்ணின்மேல் அனைவரும் முன்னைப் போலவே விழுந்தார்கள். ''தாங்காது சாமீ தாங்காது சாமீ'' என்றான் ஊர்ப்பகடை. அவர்கள் அதேபடி தரையில்க் கிடக்க, திரும்பவும் ஊர்ப்பெரியாட்கள் கூடி யோசித்தார்கள்.

அபராதத் தொகையைக் குறைத்துக்கொண்டு, பாலான் பகடையை ஊரைவிட்டுப் போகச் சொல்வதில் மட்டும் கவனமாய் இருந்தார்கள்.

கடைசியில் அதுபடிதான் ஆயிற்று. பாலான் ஊரை விட்டே அன்றே - ஓடும்படி ஆகிவிட்டது.

அன்று ராத்திரி - யார் செய்த காரியமோ - கள்ளுக் கடைக்குத் தீ வைக்கப்பட்டது.

❖

## 15

ராத்திரியோடு ராத்திரியாக கள்ளுக்கடை எரிந்து சாம்பலாகி விட்டது. இந்தக் காரியத்தைச் செய்தவனும் பாலான் பகடையாகத் தான் இருக்கலாம் என்று சிலர் பேசிக்கொண்டார்கள்! ஆனால், கள்ளுக்கடை குத்தகைதாரர் கவுலூர் நாயக்கருக்குத் தெரியும்; இந்தப் பெரிய வீட்டுப் பிள்ளைகளின் கண் அசைப்பு இல்லாமல் யாரும் இவ்வளவு தைரியமாய் இந்தக் காரியத்தைச் செய்திருக்க முடியாது என்று. அவருக்கு ஒரு விஷயம் புலப்பட்டுவிட்டது; இனிமேல் இந்தக் கிராமத்தில் தம்முடைய யாவாரம் ஒழுங்காக நடைபெறாது என்று இந்த வருசத்தை மட்டும் எப்படியாவது ஒப்பேத்தி விட வேண்டும் என்று மட்டும் உறுதி பூண்டார். அதை வெளிப்படை யாகவும் சொன்னார்; அப்போது தான், பாவம் இந்த பாக்கி வருசத்துக்கு இவர் இருந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டு விடுவார்கள் என்று.

ஊருக்கு வர முடியாத பாலான் பகடை பக்கத்து ஊர்களிலுள்ள கள்ளுக்கடைகளில் குடித்துவிட்டு பாடிக்கொண்டே அலைவதாக யாரோ சொன்னார்கள். பிறகு, கொஞ்ச நாட்களுக்கெல்லாம் கோவில்பட்டி பஜாரில் ஒரு தோல் ஷாப்பில் சேர்ந்து மிதியடிகள் செய்து கொடுத்துக்கொண்டிருக்கிறான் என்று சொன்னார்கள்.

கொத்தனார் சாமிநாயக்கர் ஒரு நாள் ஊர்க் குளத்தங்கரை அரசமரத்தடி நிழலில் பேசிக்கொண்டிருந்தபோது, பாலான் பகடையைக் கோவில்பட்டியில் வைத்துப் பார்த்ததாகச் சொன்னார். நல்ல தொழில் முன்னேற்றம் என்றார். அழகழகான குரோன் அடிச்செருப்புகள் தைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கிறான் என்றார். பக்கத்தில் போய் நின்றதும், சாமீ வாங்க என்று கும்பிட்டானாம். யார் பேரிலேயும் வருத்தமில்லை எனக்கு; நீங்கள்ளாம்

நல்லதுதானே சாமி சொன்னீக என்றானாம். அவன் இப்பொ ஒரு கல்யாணம் பண்ணியிருக்கானாம், புதுசாக, என்றார் சாமிநாயக்கர் சிரித்து.

''போடு சக்கெ'' என்றார் வேலுக்கோனார் குஷியாக.

✥

அந்தக் கள்ளுக்கடை எரிந்தபிறகு வேறொரு இடத்தில் திரும்பவும் ஒரு கள்ளுக்குடிசை போட்டார்கள். சில நாள் கழித்து அதிலும் தீ வைக்கப்பட்டது. திரும்பவும் சிலநாள் கழித்து இன்னொரு இடத்தில் கடை போட்டார்கள். அதையும் தீ வைத்துக் கொளுத்தினார்கள். சரி; இனி, இந்த ஊரில் கள்ளுக்கடை செல்லாது என்று தீர்மானித்த கவுலூர் நாயக்கர் பக்கத்து ஊரில் கொண்டு போய்ப் போட்டார்.

அதுக்குப் பிறகு அந்தக் கிராமத்தில் கள்ளுக்கடை தோன்றவே இல்லை. நுன்னகொண்ட நாயக்கரே முதலில் கள்ளுக்கடைக்கு இடம் கொடுக்க மறுத்துவிட்டார். ஊர்ப் பெரியாட்களும், ''அது சரிதான்; இனி அந்தச் சீண்ரம் வேணாம் நமக்கு'' என்று சொல்லி விட்டார்கள்.

ஆனால், பழக்கத்துக்கும் அதன் மயக்கத்துக்கும் ஆட்பட்ட மனசும் உடம்பும் அடங்கி சும்மா இருக்குமா?

''கம்புக்காரர்'' களில் ஒருவரான லகுவணத்தேவரிடம் ஒரு பழக்கம் இருந்தது. அவர் எப்பவுமே கள் குடிப்பதில்லை. அவருடைய பாட்டுக்கு வீட்டிலேயே சாராயம் வடித்து வைத்துக் கொள்வார். மற்ற குடிகாரர்களைப்போல குடித்திருக்கும் சமயத்தில் அவர் அடாதுடியாகப் பேசமாட்டார். லம்புறது தள்ளாடுகிறது என்கிற தெல்லாம் அவரிடம் கிடையாது. இன்னும் சொல்லப் போனால் சாராயம் சாப்பிட்டதும் சாந்தமாகிவிடுவார்! ஒரு ஆனந்தமான புன்னகை அவர் முகத்தில் நிறந்தரிக்கும் அப்போது. ஸ்ருதியில் லயித்தது போலாகிவிடும் அவர் நிலை. அப்படி அவர் லயித் திருக்கும் சமயத்தில் என்ன கேட்டாலும் தூக்கிக் கொடுத்து விடுவார். அப்படித் தூக்கிக் கொடுத்துவிட அவரிடம் விசேஷமாக ஒன்றும் கிடையாது!

லகுவணத்தேவருக்கு குழந்தை குட்டி என்கிற பிக்கல் பிடுங்கல் ஒண்ணு கிடையாது. வீட்டில் அவரும் அவரது செல்ல மனைவி

கருப்பாயிந்தான். பேர்தான் கருப்பாயி; ஆள் நல்...ல செவ செவ என்றிருப்பாள். பிராயத்தில் அவளை அவர் தூக்கிக்கொண்டு வந்துதான் கலியாணங் கட்டினார். அவரிடம் இருக்கும் மற்ற அய்வேசுகள்; ஒரு பாலாக் கம்பு, வெட்டுக்கத்தி, இதோடு பழக்கிய காடைக் கூண்டு ஒன்று ஆகியவை மட்டுந்தான். பாலாக்கம்பு கையில் கொண்டுபோக. வெட்டுக்கத்தி வேலம் பட்டையைச் சீவ, காடைக்கூண்டு சாப்பாட்டுக்கு.

சாராயம் காய்ச்சும் தொழில்ப்பாகம் அப்போது அந்த ஊரில் அவருக்கு மட்டுமே தெரிந்திருந்தது.

மருந்துபோல் அதை அவர் மற்றவருக்குத் தருவார்; முக்கியமாக பெண்டுகள் பிரசவம் ஆனவுடன்.

பிரசவ தயாரிப்புகளில் பேறுகால மருந்து இடித்து முடித்து வைத்துவிட்டு லகுவணத்தேவரிடம் போய் கொஞ்சம் சாராயமும் வாங்கி வைத்துக்கொள்வது என்பது பழக்கத்தில் இருந்தது.

தேள்க் கடித்தவர்களும் அவர் வீடுதேடிப் போவார்கள்.

தேள்க் கடிக்கும் மந்திரிப்பார். மந்திரிச்சி முடித்து, லோட்டாவில் கொஞ்சம் சாராயத்தை விட்டு 'இந்தா; இந்த மருந்தைக் குடிச்சிட்டுப் பேசாமல்ப் போய் படு'' என்று அங்கேயே குடிக்கச் சொல்லி அனுப்பி வைத்துவிடுவார்.

''லகுவணத்தேவரு கொடுக்கிற மருந்து தேள்க்கடிக்கு ரொம்பச் சொன்னாங்கம்'' என்கிற பாராட்டைப் பெற்றது!

கிராமத்தில் கள்ளுத் தண்ணியின் கதை முடிந்ததும் லகுவணத் தேவரின் ''தண்ணி''க்கு ரொம்பவும் பிரியக்கால் ஏற்பட்டுவிட்டது. தினோமும் எப்படிக் கேட்டு தொந்தரவு பண்றது என்று நினைத்து, அந்த மாயத்தை எங்களுக்குந்தான் கொஞ்சம் சொல்லித்தர்றது? என்று கேட்பார்கள்.

இதுல என்னத்தெ மாயம் இருக்கு; ஒரு புண்ணாக்குமில்லெ; என்று சொல்லிவிட்டு ஒரு சொலவடையையும் சொல்லிக் காட்டுவார்;

'வேலம்பட்டையும் கருப்பட்டியும் வேர்த்துவடிஞ்சா சாராயம்!' அவ்வளவுதான் என்பார்.

லகுவணத் தேவர் வேலைக்குப் போய் யாரும் பார்த்ததில்லை. அவசரமான சம்சாரி வேலைகளுக்குக்கூட கூப்பிட்டாலும் வர

மாட்டார். ஒரு 'இட்டடி முட்டடி'க்குக்கூட உதவ முன்வர மாட்டார். அவர் உண்டும் அவரோட காரியம் உண்டும் என்று இருப்பவர். அதே சமயத்தில் சுயநலவாதி என்றும் சொல்லிவிட முடியாது. கொடுக்கிற சாராயத்துக்கு யாரிடமிருந்தும் பைசா வாங்கிக்கொள்ள மறுத்து விடுவார். அதோடு அந்தக்காலம், எதையும் துட்டுக்கு விற்கிற வழக்கம் என்று வரவில்லை. ஒரு பொருளை ஒருவரிடமிருந்து வாங்கவேண்டியது ஏற்பட்டு விட்டதா, சரி; இதுக்குப் பதிலாக அந்த ஆளிடம் என்ன இல்லையோ அப்படி ஒரு பொருளைக் கொண்டு போய்க் கொடுப்பதில் ஒரு சந்தோஷம் இருந்தது அவர்களுக்கு. அப்படிக் கொடுக்கும்போதும் இதைப் பதிலுக்குக் கொண்டுவந்து தருகிறான் என்கிறது தெரியாதபடிக்கு இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்வார்கள்!

காடை வேட்டைக்குப் போவார். தன்னிடமிருக்கும் கூட்டுக் காடையைக் கொண்டு போவார். காட்டுக்குள் நுழைந்ததும் காடை கூவுவதுபோலவே குரல் கொடுத்துக்கொண்டே போவார். தூரத்திலுள்ள காடைகள் பதிலுக்குக் குரல் கொடுக்கும். அந்த பதில்க் குரல்களைக் கேட்ட பிறகுதான் கூட்டுக் காடை குரல்கொடுக்க வாயைத் தொறக்கும்!

அதன் பிறகு கூட்டுக்காடை தொடர்ந்து அந்தக் காட்டுக் காடைகளைத் தன்னிடம் வரச் சொல்லி கூப்பிட்டுக்கொண்டே யிருக்கும். கூண்டை ஒரு இடத்தில் வைத்து, கூட்டைத் திறந்து கூண்டின் கதவைமூடும் சூத்திரக் கயிறை நீ...ளமாக விட்டு அதன் நுனியைப் பிடித்துக்கொண்டு மறைந்துகொள்வார். கூட்டுக் காடை கூப்பிட்டுக்கொண்டே இருக்கும்.

கொஞ்ச நேரத்தில் கூட்டுக் காடையைத் தேடி காட்டுக் காடைகள் வரும். கூட்டுக்காடை கூட்டைவிட்டு வெளியே வராது. வந்த காடைகளை அது கூட்டுக்குள்ளேயே கூப்பிடும். முதலில் அவை கொஞ்சம் தயங்கினாலும் இது ரொம்ப வசதியாக இருக்கே என்பதுபோல் உள்ளுக்கு வந்துவிடும்! இப்போது கூண்டுக்குள் காடைகளின் கலவைக்குரல் கேட்பது ஒளிந்துகொண்டிருக்கும் லகுவணத்தேவருக்குத் தெரிந்தவுடன் சூத்திரக் கயிற்றை இழுப்பார். கூட்டின் கதவு மூடிக் கொண்டுவிடும். ஒருகணம் அவைகள் - வந்த காடைகள் - திகைக்கும். கூட்டுக் காடையின் அழகுக்கு ஆசைப் பட்டு வந்ததின் வினை இது என்பது போலிருக்கும் அது!

❖

# 16

''காடைக் கறிக்கு மிஞ்சின கறி ஒலகத்திலேயே கிடையா தாக்கும்!'' என்கிற பெருமை லகுவணத்தேவருக்கு.

''முழு உடும்பு
முக்காக் காடை
அரை ஆடு
கால்க் கோழி''

என்று சொல்லப்படும் சொலவடையில் அவருக்கு நம்பிக்கை இல்லை. அதை ''முழுக்காடை முக்கால் உடும்பு'' என்று மாற்றிச் சொல்லுவார். தாட்சண்யமுள்ளவர்கள் மறுக்கமாட்டார்கள்; சிலர் ''மனங்கொண்டது மாளிகை'' என்று பதிலுக்கு ஒரு சொல வடையைச் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள்!

காட்டுக்குத் தேவர் கூட்டை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டார் என்றால் கருப்பாயி, மசால் அரைத்துவிடுவாள்; அப்படி ஒரு நிச்சயிப்பு கறிக்குக் காடை வந்துவிடும் என்பதில்.

கூட்டைக் கொண்டுவந்ததும் அவளைத் தொட விடமாட்டார். கூட்டைத் திறக்கும்போது புதுசாக வந்திருக்கும் பறவை தப்பிப் பறந்துவிடாமல் சாமர்த்தியமாக அவரால்தான் பிடிக்க முடியும். அதோடு கூட்டுக் காடைக்கும் வந்த காடைக்கும் வித்தியாசம் தெரிய வேண்டும்.

''இது கூப்டுறத நம்பி இந்தக் கோட்டிக் களுதெக எப்பிடி இந்தக் கூட்டுக்குள்ளெ வந்திருது?'' என்று கேட்டு அதிசயப்படுவாள் கருப்பாயி ஒரு பொங்குதலான சிரிப்புடன்.

''கூட்டுக் காடெய வச்சிக் காட்டுக் காடெயப் பிடி'ண்ணு சும்மாவா சொல்லியிருக்கு!'' என்று சொல்லிக்கொண்டே அவளைச் செல்லமாக ஒருநுள்ளு நுள்ளுவார்.

''ப்சு, பேரம் பேத்தி எடுக்கிற வயசாச்சி!'' என்று விலகிக் கொள்வதுபோல இடிப்பாள் அவரை.

''ஆம்பளைக்கேதடீ வயசு''

''சர்தாம்; பிள்ளையில்லாத வீட்ல கிளவன் துள்ளி விளையாண்டானாம்'' என்று வர்மத்தில் ஒரு சொல்லடி தருவாள்.

"பிள்ளெ இல்லைண்ணா என்ன இன்னொரு கலியாணம் முடிச்சிக் கிறது" என்று அவரும் பதிலுக்கு ஒன்று கொடுப்பார். நடுவயசைத் தாண்டினாலும் அவர்கள் இளசுகள்போலத்தான்.

கருப்பாயி - 'சொல்ச்சத்தி'யிலும் வசதியிலும் தோற்றத்திலுங்கூட அவள்தான் அந்தத் தெருவுக்கே ராணி.

அவளிடமுள்ள கோழிகள் வீதம் அங்கே யாருக்குமே கிடையாது. கோழிக்கு அவள் ராசியானவள் என்று பேரெடுத்திருந்தாள்.

மேகாட்டிலுள்ள அவளுடைய ஊரிலிருந்து அவள் கொண்டு வந்தது கோழி மட்டுந்தான். முட்டைக்கும் கறிக்கும் அவள் வீட்டில் பஞ்சம் வந்ததேயில்லை.

தினந்தவறினாலும் சாப்பாட்டில் கோழிமுட்டை தவறாது. அதேபோலத்தான் கோழிக்கறியும்.

தேவரைப்போல கருப்பாயிக்குப் பருக்கைச் சோறுகள் வேணு மென்று கிடையாது. அவளுக்கு இஷ்டமானது கேப்பைக்களியும் கோழிக்கறியுந்தான்.

லகுவணத் தேவருக்குக் கட்டாயம் 'மேப்பானைச் சோறு' இருந்தே தீரணும். இந்த விஷயத்தில் அவர் அவளோடு ஒத்துப் போவது என்கிற பேச்சுக்கே இடமில்லை. அப்போது பர்மா விலிருந்து மூடை அரிசி கப்பல் கப்பலாக வந்து இறங்கிக் கொண்டி ருந்தது. கடைகளில் எங்கே பார்த்தாலும் அரிசி வதி கழிந்தது. அரைக்கால் ரூபா (12 ½ பைசா) கொடுத்தால் கடைக்காரன் பட்ணம் பக்காவுக்கு ரண்டுபடி நொய் அரிசி தருவான். தேவருக்கு மட்டும் கால்படி அரிசி "மேல்ப் பானை"ச் சோறு வடித்து வைத்து விடுவாள் கருப்பாயி. ரண்டு படி அரிசி அவருக்கு எட்டுநாள்ப் பொழுது கழிந்துவிடும். புருசன் பெண்டாட்டி ரண்டு பேருக்கும் கறிதான் முக்கியம் சாப்பாட்டில்.

'யாரு கண்ணு பட்டுதோ' கோழிகள் சீக்கு வந்து மளமள என்று சாக ஆரம்பித்தது. இந்த நோய் இதுக்கு முன்னால் கிடையாது. புதிதாக வந்த இந்த நோயை "கொக்கு நோய்" என்றார்கள், வெள்ளைக்காரன்தான் இந்த நோயைக்கொண்டு வந்து பரப்பி விட்டான் என்றார்கள். கள்ளிச்செடியை அழிக்க சீமையிலிருந்து வெள்ளைக்காரன் வெள்ளைப் பூச்சி என்று ஒரு கிருமியைக் கொண்டு வந்து விட்டதாகவும் அது கோழிகளையும் பாதித்து விட்டது

என்றார்கள் பாட்டிமார்கள். தின்ற இரை செமிக்காமல் கோழிகள் வெள்ளை நிறத்தில் கழியும். ஒரு மூலையில் போய் கொக்கைப் போல் கூன் முதுகு விழ நின்றுகொண்டிருக்கும். மறுநாள் செத்துப்போகும். இந்த நோய் ஒரு ஊரில் வந்துவிட்டால் ஒரு கோழி கூடத் தப்பாது. ''பாவிப் பய வெள்ளைக்காரன் இந்த நாட்டுக்குப் பீடையாக வந்திருக்கான்'' என்று ஏசுவார்கள் கோழியைப் பறி கொடுத்த பெண்டுகள். கருப்பாயியின் துக்கத்துக்கு அளவே இல்லை.

அதே தெருவில் இருக்கும் சம்முக நாடாருக்கு இந்தப் பிரச்சனையே கிடையாது. அவருக்குக் கோழியும் வேண்டாம் முட்டையும் வேண்டாம். இந்த உலகத்தில் கடல் இருக்கும் வரை அவருடைய சாப்பாட்டில் 'கறி'க்குப் பஞ்சமே கிடையாது!

சம்முக நாடாருக்குத் துணை பனை; அவருண்டு பனை உண்டு. அவருடைய உண்டி உணவு உடுக்கை இருக்கையெல்லாம் பனையும் பனை மரத்தடியுமே. குடும்பம் பக்கத்து ஊரில் இருக்கிறது. 'நெனப்பு' வந்துவிட்டால் ''நாலே எட்டில்'' போய்வந்து விடுவார். ஒரு சின்ன குச்சில் போட்டு அதில்தான் குடியிருக்கார். சாப்பாடு என்பது பதினி, பனம்பால், நொங்கு, பனம்பழம், கூப்பதினி; நொங்கு இல்லாத காலங்களில் தகணு, பனங்கிழங்கு இப்படி, நாள் ஒன்றுக்கு ஒரு பொழுதுதான் பருக்கை.

ஊருக்குள் அவர் விற்பதற்குப் பதினி கொண்டு வருவது அபூர்பம். எல்லாம் பனையடியிலேயே விற்றுத் தீர்ந்துவிடும். குச்சில் திரும்ப உச்சிப் பொழுதாகிவிடும். வருகிறபோதே கடையில் கால்ரூபா கொடுத்து, ஒருபடி அரிசி அதுக்கான ராமேஸ்வரம் பால் நெத்திலி (கருவாடு), பச்சமிளகாய். உள்ளி, தேங்காய் முதலிய பலசரக்குகள் அன்றைய அந்த ஒரு வேளைப்பொழுதுக்கு மட்டும் வேண்டிய சாமான்களோடு வருவார். வந்ததும் முதல்க்காரியம் நெத்திலிக் கருவாட்டுக்குழம்பு வைப்பார். பிறகு ஒரு படி அரிசியையும் வடிப்பார். பச்சோலையைப் பெரிய்ய பட்டை பிடிப்பார். அதில் பானைச் சோற்றைத் தட்டுவார். அதில் சட்டிக்கறி பூராத்தையும் ஊற்றுவார். கறியும் சோறும் நெரக்க அகப்பைக் காம்பால் கிண்டுவார். பட்டையை உருட்டி அதன் வாயைப் பொருத்தி சிப்பமாக்கி, விரிந்து விடாமல் ஒரு ஓலை இதழை இழுத்து சுருக்கா முடிச்சிப்போட்டு, சிப்பத்தின் வால் ஓலையை பாளையருவாளால் தட்டிச் சீவிட்டு, செல்லமாக ஒரு உருட்டு தரையில் உருட்டிவிட்டு விடுவார்.

சமையல் வேலை முடிந்தது. படலையை இழுத்துக் கட்டி விட்டு இறங்குகிணற்றில்க் குளிக்கப் போவார்.

ஈரத்துண்டைக் கட்டிக் கொண்டு வேட்டியை விரித்துத் தூக்கிப் பிடித்து அசைத்துக்கொண்டே வருவார்.

குச்சில் வந்து சேரவும் வேட்டி காயவும் சரியாக இருக்கும் வேட்டியைக் கட்டிக்கொண்டு துண்டை படலையின்மேல் காயப் போட்டு விட்டு சாப்பிட உட்காருவார்.

கொய்யாப்பழ அளவு உருண்டை எடுப்பார். அதனுள்ளே பச்சை மிளகாய் முழுசான வெங்காயம், நெத்தலி இதெல்லாம் கலந்த அந்த சோற்றுண்டையை ஆவலோடு வாயில்ப் போட்டு மென்று விழுங்கு வதைப் பார்க்கிறவர்களுக்கு வாயில் எச்சில் ஊற்றெடுக்கும்.

ஒரு வெங்காயச் சருகோ கறிவேப்பிலை இலையோ கழிவு போகாது. இப்படியாக பக்காவுக்கு ஒரு படி அரிசிச் சோற்றை ஒரே நேரத்தில் சாப்பிட்டுவிடுவார்.

நாள்த் தவறினாலும் இந்த நியதி தவறாது அவரிடம்.

இளம்பச்சோலையும் சூடான சாதமும் கருவாட்டுக் குழம்பும் ஆக இந்த மூன்றும் சேரும்போது அதிலிருந்து ஒரு ரசிப்பான மணமும் ருசியும் கிடைக்கும் என்று சொல்லுவார் சம்முக நாடார்.

தினோமும் கருவாட்டுக்குழம்பா என்று கேட்கிறவர்களுக்கு ''பெறகென்ன; நாத்தமில்லாத சோறு என்ன சோறு?'' என்பார் ஒரு அனுபவிப்புடன்.

ஊருக்குள் எந்த வீட்டில் ஆடு அறுக்க வேண்டியதிருந்தாலும் சம்முகநாடார் இல்லாமல் அது நிறைவேறாது.

அறுப்புக் கூலியாக அவருக்கு தலையும் குடலும் கிடைக்கும். ஆட்டின் ஈரலுக்குப் பக்கத்திலுள்ள ''சுவரொட்டி''யை வெட்டி எடுத்து சுவரின் மேல் வீசுவார். சப்பென்று அது சுவரில் ஒட்டிக் கொள்ளும். குழந்தைகளுக்கும் குழந்தை மனமுள்ள பெண்டு களுக்கும் அது ஒரு வேடிக்கை. இதை அவர் ஒரு கண்கட்டி வித்தைக்காரனின் சந்தோஷத்தில் செய்வார். அப்படிச் செய்துவிட்டு ஒரு குழந்தையைப்போல் எல்லோரையும் பார்ப்பார்! வீட்டுக் காரர்கள் சிலர் அந்த 'வித்தை' செய்து காட்டியதுக்கு அதை அவருக்கே தானமாகக் கொடுத்துவிடுவார்கள்.

இளம் கறியாக இருந்தால், தொடைக்கறியை வெட்டும்போது ''ஹ, என்னாமா இருக்கு!'' என்று சொல்லி ஒரு சிறு துண்டு நறுக்கி வாயில்ப்போட்டு சுவைத்து மெல்லுவார்.

முழு ஆட்டையும் ஒரு வீட்டார் திங்க முடியாதாகையால் நெருங்கிய சொந்தக்காரர்கள், வேண்டியவர்கள் இவர்களுக்கெல்லாம் கொடுத்தனுப்பியது போக மீதிக் கறியை வெட்டி உப்பும் மஞ்சளும் தோய்த்து சரக்கயிற்றில் கோர்த்துக் கொடுப்பார் வெயிலில் காயவைக்க. அப்போதெல்லாம் கறியை விலைக்குக் கொடுக்கும் வழக்கம் ஏற்படவில்லையாதலால் வீடுகளின் முற்றத்தில் இப்படிக் கோர்க்கப்பட்ட கறித்துண்டுகளின் தோரணத்தைப் பார்க்கக் கூடியதாக இருந்தது.

ஓரளவு காய்ந்தபிறகு அவைகளை நூல்ச்சரட்டிலிருந்து உருவி எடுத்து அதைப் பாக்கு அளவு வில்லையாக நறுக்கி திரும்பவும் வற்றலாகக் காய வைத்து எடுத்து வைத்துக்கொள்வார்கள்.

தாய் வீட்டுக்கு வரும் மகளுக்கு ஊர் திரும்பும்போது இந்த உப்புக்கண்டத்தை தாய்மார்கள் பிரியமாகக் கொடுத்தனுப்புவார்கள்.

காய்கறிகள் கிடைக்காத மழைக் காலங்களிலும் வராத அபூர்வ விருந்தாடிகள் வந்த நேரத்திலும் சமையலில் உப்புக் கண்டம் கை கொடுத்து உதவும்.

❖

## 17

சம்சாரி வீட்டுப் பிள்ளைகள் கள்ளுக் குடிப்பதில்லை. பனைச் சொந்தக்காரர்களில் சில பேருக்கு மட்டும் பனம்பால் உடம்புக்கு நல்லது, சூட்டை ஆத்தும் என்று விரும்பிக் குடிக்கும் வழக்கம் இருந்தது. பனம்பால் துவர்ப்புடன் கூடிய சற்றே இனிப்பு ருசியும் கொண்டிருக்கும். ருசி கவனம் உள்ளவர்களுக்குப் பனைக்குப் பனை ருசி மாறுபடும். அபூர்வமாக சில பனைகளின் பால் மிகுந்த ருசியாக இருக்கும் அதை கேட்டு விரும்பிச் சாப்பிடுவார்கள். பனையிலிருந்து இறக்கிய உடனே குடிக்க வேண்டும்; இல்லையென்றால் அது கள்ளாக மாறிவிடும் என்பார் சம்முகநாடார். கள்ளின் புளிப்பிலும் பல ஸ்தாயைகள் உண்டு. ஒவ்வொருவருக்கும் ஒருவகை புளிப்பு ஸ்தாயை பிடிக்கும்.

போதைகளின் வகைகளை ருசிபார்த்து, ரசித்து அனுபவிப்பதில் ராஜா நாயக்கருக்குப் பிந்திதான் மற்றவர்கள்.

பர்மா நாயக்கரின் மகன் என்ற பட்டப் பெயரோடு அந்த ஊருக்கு வந்த காலத்திலிருந்தே இப்படியான பழக்க வழக்கங்களோடுதான் வந்தார். பர்மா நாயக்கர் அங்கு வந்ததும் முதல்க் காரியமாக ஒரு காரை வீடு கட்டினார். வீடுகட்டி முடிந்ததும் குடும்பத்தில் யாராவது ஒருத்தர் சாகணும் என்கிற உலக எதிர்பார்ப்பின்படி அவரே போய்ச் சேர்ந்தார். அவ்வளவு செலவழித்து வீடுகட்டியும் கூட ''அடி மண்டி''யாகத் திரண்ட சொத்தும் ரொக்கமும் இருந்தது. ராஜா நாயக்கர் அவருக்கு ஒரே பையன். சின்ன வயசு. தட்டிக்கேட்க குடும்பத்தில் யாருமில்லை. மனம் போனபடி சினேகங்களும் பெண் சேர்க்கைகளும் ஏற்பட்டன. எப்போது பார்த்தாலும் பத்துப்பேர் அவருக்குப் பின்னால் திரிந்தார்கள். பக்கத்து ஊர்களிலும் சுத்துப் பட்டிகளிலும் அவரைக் ''கோபல்ல மைனர்'' என்றுதான் அழைப்பார்கள். சொந்தப் பெயர் மறைந்து அந்தப் பட்டப் பெயரே உள்ளூரிலும் நிலைத்துவிட்டது.

கள்ளுக்கடை அந்த ஊரில் அழிந்ததுக்குப் பிறகு அவரும் சேக்காளிகளும் பக்கத்து ஊர் எல்லைக்குப் போவதை வழக்கமாகக் கொண்டார்கள். அங்கேயும் இந்தக் கவுலூர்நாயக்கர்தான் கடைக் குத்தகைதாரராக இருந்தார். அதனால் அவர் ஒரு தந்திரம் செய்தார். கோபல்ல கிராமத்தின் எல்லையும் கொத்தூர் கிராமத்தின் எல்லையும் சந்திக்கும் இடத்தில், கொத்தூர் கிராமத்தின் எல்லை யிலேயே கடையை ஸ்தாபிதம் செய்துகொண்டார்!

வருமானமுள்ள வாடிக்கையாளரான இவரைக் கவுலூர் நாயக்கர் அட்டகாசமாக வரவேற்றார். மற்றவர்களும் இவர்களுக்கு ஒதுங்கி இடம் அளித்தார்கள். அங்கே அந்நேரத்தில் ஒரு நரிக்குறத்தியும் நரிக்குறவனும் கள் குடிக்க வந்திருந்தார்கள்.

இப்படி வரவேற்பும் உபசரிப்பும் நடக்கிற இந்தத் ''துரை'' யாரோ என்று திகைப்படைந்து, ஒரு பெரிய கும்புடுபோட்டு அந்த நரிக்குறவ தம்பதி மழலைத் தமிழில் மைனரைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

தன்னோடு வந்தவர்களையும், கடையில் தான் வந்ததும் ஒதுங்கி மரியாதை செய்தவர்களையும் இந்த நரிக் குறவர்களையும் தன்னோடு சேர்ந்து பட்டை பிடிக்கும்படி கேட்டுக் கொண்டார் மைனர்.

கள் எல்லோருக்கும் ஒரு சுற்று வந்தது. அடுத்த சுற்றுக்கு கடையின் உள்ளே இருந்த மடாவைக் கொண்டுவரச் சொல்லி

ஏற்பாடு செய்துகொண்டிருந்த போது, அந்த நரிக்குறத்தி மைனருக்கு முன்னால் வந்து, தன் கையினால் துரைக்குப் பச்சை குத்தவேணும் என்று கேட்டுக்கொண்டாள். அவளின் அந்த முன்வரத்து அங்கே ஒரு சின்ன சந்தோஷக் கலகலப்பை ஏற்படுத்தியது.

''மைனர் மொதலாளிக்குப் பச்செ குத்தி விடுதேன்ங்குறா!'' என்றார் ஒருத்தர் அங்கிருந்தவர்களிடம்.

''சவ்வாஸூ! என்ன பச்செ குத்திவிடப் போறாளாம்?''

''என்ன பச்செ வேணாலுங் குத்துறன். இப்பொப் புதுஷா ஒரு பச்சே வந்துருக்கு. காந்திப்பச்செ, கதர்க் கொடிப் பச்செ, கலர்ப்பச்செ... ஒன்க்கு என்னா பச்செ ஒணும் தொரெ, சொல்லு தொரெ?''

''என்னது; காந்திப் பச்சையா?''

''எல்லா எடத்லேயும் இப்பொ அதான் குத்துராங்கோ; மவாத்மா காந்திப் பச்செ''

மைனர் எப்பவும் பேசுறது கொஞ்சம்தான். அவரைச் சுற்றியுள்ள படைகள்தான் அதிகம் பேசும். அதைக் கேட்டு அவர் ஆனந்தப் பட்டுக்கொண்டிருப்பார். எப்பவாவது அவர் வாயைத் தொறந்து பேச ஆரம்பித்தால் பக்கத்தில் இருப்பவர்கள் கப்சிப் ஆகிவிட வேண்டும். ஊடாலெ யார் பேசினாலும் அவருக்குப் பிடிக்காது.

பர்மாவிலுள்ள பச்சை குத்தும் கலையைப்பற்றி, அதன் செய்நேர்த்தியையும் அழகையும் பற்றிப் பேச ஆரம்பித்தார் அவர்.

அவருடைய பேச்சுக்கு அவருக்குள் இருந்த இளம் போதை உதவியது. ''என்னா பச்சை குத்துறாங்க இங்கெ; சாவஞ் செத்த பச்சை...'' இந்த வார்த்தைகளை அந்த நரிக்குறவர்கள் பலமாக ஆட்சேபிக்கத் தொடங்கப் போகும் கட்டத்திலேயே, அப்போது தான் பிடிக்க ஆரம்பித்த தீயை உடனே அமத்துவது போல் அங்கிருந் தவர்கள் தங்கள் பார்வையாலேயே அதை நிறுத்தி விட்டனர்; 'சதங்காட்டாம இரு; வர்ற வரவைக் கெடுத்துக்கிறாதெ' என்பது போல்.

முகங்களைக் கண்டதும் படித்துத் தெரிந்துகொள்ளும் சாமர்த்திய முள்ள நாடுகண்ட அந்த நரிக்குறவர்கள் உடனே அமைதியாகி விட்டார்கள்.

பர்மாவுக்கு வந்து சீனாக்காரர்கள் குத்தும் கலர்பச்சையைப் பற்றி அவர் விவரித்தார். அந்த மஞ்ச நிறத்துக்கும் அந்தப் பச்சையின் நிறத்துக்கும் உள்ள எடுப்பைப்பற்றி வர்ணித்தார். உடம்பு முழுவதும் கலர் கலராகக் குத்திக் கொள்ளும் பச்சையைப் பற்றிச் சொன்னார். யாவற்றுக்கும் சிகரமாக பர்மாக்காரிகளின் பளிங்குத் தொடைகளில் தான் கண்ட பச்சைகளைப் பற்றி அனுபவித்துப் பேச ஆரம்பித்தார்.

❖

அவர் பேசி முடியும் வரை பொறுமையாகக் காத்திருந்து, அவருக்கு அங்கிருந்தவர்கள் ''ராஜா மைனர்'' என்கிற பட்டத்தைச் சூட்டி, அதையே அவருடைய வலதுகையில் பச்சை குத்தும்படி சொன்னார்கள் அந்த நரிக்குறத்திக்கு.

அந்தப் பெயர்மீது அவருக்கும் பிரீதி இருந்ததால் அவளிடம் கையை நீட்டினார்.

படங்களாகவும் கோலங்களாகவும் பச்சை குத்திய அவளுக்கு எழுத்து, பெயர் விஷயம் திகைப்பாக இருந்தது. அவள் நீட்டிய மை டப்பியில் வெற்றிலைக்காம்பினால்த் தொட்டு அங்கிருந்தவர் களில் ஒருத்தர் அவருடைய கொடங்கையில் ''ராஜா மைனர்'' என்று எழுதினார். எழுதி முடித்ததும் அங்கே ஒரு சின்னக் கோலாகலம்; ஆரவாரம்.

அந்த எழுத்தின் மேலே நரிக் குறத்தி ஊசியினால் நறுக்நறுக் கென்று வேகமாகக் குத்தினாள். 'இந்த வலியெல்லாம் என்னை ஒண்ணும் செஞ்சிராது' என்பதுபோல அவளுக்கு நீட்டிய கையுடன் முகத்தைப் பெருமிதமாக வைத்துக்கொண்டார் ராஜாமைனர்.

பச்சை குத்தி முடிந்ததும் அதை விழாவாகக் கொண்டாட ஊருக்குள் ஆட்களை அனுப்பி வெத்திலைபாக்கு, இனிப்புப் பலகாரங்களும் வரவழைக்கப்பட்டது. இதைக் கேள்விப்பட்ட பலர் ஊருக்குள்ளிருந்து கள்ளுக்கடையைப் பார்க்க வேகமாக வந்தார்கள். வந்தவர்கள், இருந்தவர்கள் எல்லாருக்குமே ராஜா மைனர் கணக்கில் கள் சப்ளை நடந்தது. கள்ளுக்கு 'உபகாரமாக' காரங்கள் இட்ட மொறுமொறுப்பான உப்புக் கண்டமும் நெத்திலிக் கருவாடும் தட்டுத் தட்டாக வந்துகொண்டிருந்தன.

பச்சை குத்திய நரிக்குறத்திக்கு ராஜாமைனர் ரூபாய் நோட்டு ஒன்றைத் தந்தார் பரிசாக. கூட்டம் பூராவும் அந்த நோட்டை

அவளிடமிருந்து வாங்கி அதிசயமாகப் பார்த்தது. அந்த ஊரில் அவரிடம் மட்டும்தான் ரூபாய் நோட்டு இருக்கிறது என்று பேசிக்கொண்டார்கள். அந்த ஊருக்கே முதல் முதலில் ரூபாய் நோட்டுக்களைக் கொண்டு வந்தவரே பர்மா நாயக்கர்தான் என்று பேச்சு.

பெரிய்ய பணக்காரர்கள் வீட்டில்தான் ரூபாய்நோட்டு இருக்கும் என்று சொன்னார்கள்.

❖

## 18

நுன்னகொண்ட நாயக்கரிடம், மறுநாளே ஒருத்தர் போய் ''இன்னமாதரி இப்படி ரூபாநோட்டுண்ணு புதுசா வந்திருக்காமே? மைனர் நாயக்கர் வீட்லெதாம் ரூபா நோட்டு இருக்கு, வேற யாரு வீட்லெயும் இந்த ஊர்லெயே கெடயாதுண்ணு பேசிக் கிடுராங்களே'' என்று கேட்டுவிட்டார். கேட்டதுக்குப் பிறகுதான் நிம்மதியாச்சி அவருக்கு!

வாயில் வைத்துக் கொண்டிருந்த சுருட்டை கையில் எடுத்துக் கொண்டு நுன்னகொண்ட நாயக்கர் சிரித்தார். 'ம்: பிறகு' என்பது போலிருந்தது அந்தச் சிரிப்பு. ''நீ ரூபா நோட்டெப் பாத்திருக்கயா?'' என்று கேட்டார். ''நாம் பார்த்ததேயில்லே'' அவருக்கும் காட்ட வேண்டும் என்று தோன்றியது போலிருக்கு. தன்னிடமிருந்த அஞ்சி, பத்து, நூறு ரூபா நோட்டுக்களைக் காண்பித்தார்.

இதைப்பற்றிய பேச்சு கள்ளுக்கடையில் ஒருநாள் வந்தது. இந்த ஊருலயே, அல்லது இந்த வட்டகையிலேயே யாரிட்டெ நிறைய்யப் பணம் இருக்கு என்பது பற்றி அடிக்கடி பேச்சுவரும்.

அப்போது கவுலூர் நாயக்கர் சொன்னார்:

''என்னெண்ணு நீ நெனைச்செ நுன்னகொண்ட நாயக்கரே; கோட்டையார் வீட்டுக்குச் சமதையா துட்டுள்ள ஆளுடா அவரு'' என்று சொல்லிவிட்டு திடீரென்று குரலைத் தாழ்த்தி, ''திருப்பிச் சொன்னா அவங்களையும் பாக்க அதிகம்ண்ணு சொல்லுவேன்!'' என்று உதட்டை நமட்டித் தலையை மேலும் கீழும் ஒந்தியைப் போல் ஆட்டினார்.

''ஆங்! வட்டித்துட்டு வருதில்லெ!!'' என்று சொன்னான் வரதன்.

''வட்டி மட்டுமா. ஆடுக'' என்றார் பக்கத்திலிருந்தவர். கவுலூர்நாயக்கர் முகத்தை எரிச்சல்ப்படுவது போல பொய்யாக வைத்துக்கொண்டு உடம்பை முன்கவிந்து ''அடே...ய்...'' என்று தாளக்கமாய் நீட்டி ''ஆடு ஒண்ணு எட்டுக்குட்டி போட்டாலும் அந்த எட்டுக்குட்டி ஒவ்வொண்ணும் எட்டுக்குட்டி போட்டாலுமே வட்டிதுட்டுக்கு ஈடாகுமோ...ண்ணேன்''என்று சொல்லி நிமிர்ந்தார்.

''ஹு¬ம்'' என்று ஒரு குரல்; 'நீர் ஒண்ணு' என்பதுபோல் கேட்டது. புதூர் நாயக்கர்தான் எழுந்திருந்து, கொப்பளிக்கும் அளவுக்கு வாய்க்குள் இருந்த போயிலை எச்சிலைத் துப்பிவிட்டு வந்து, தான் அறிந்து வைத்திருந்த ஒரு ''உம்மை''யை அந்தக் கூட்டத்தில் அவிழ்த்தார்.

ஊருக்கெல்லாம் தெரிந்த கதைதான் என்றாலும் அதைத் திரும்பவும் சொல்லிப் பார்ப்பதில் ஒருவித குரூர வியப்பு! 'முப்பது வருசம் வாழ்ந்ததுமில்லை, முப்பது வருசம் கெட்டது மில்லை என்பது கிராமத்தில் சொல்லப்படும் ஒரு சொலவம். ஒரு மனிதனுக்கோ ஒரு குடும்பத்துக்கோ ஏழ்மையானாலுஞ்சரி சீர்மையானாலுஞ்சரி முப்பது வருசங்களுக்குத்தான். சுழலும் சக்கரம் போல கீழேயுள்ளது மேலேயும் மேலே உள்ளது கீழேயும்; இப்படி மாறி மாறி வரும் என்கிறது. ஆனால் கோட்டையார் வீடோ ''ஏளுதலைமுறை''யாக 'அண்ணு கண்டது' அப்படியே அலுங்காமல் தெரிவது எப்படி? ஜனங்களுக்கு இது அதிசயமாக இருந்தது. கிராமத்தில் இப்போது புதுசு புதுசாக குடியேறியவர்களிடம்கூட கோட்டையாரையும் மிஞ்சும் அளவுக்குத் துட்டு இருக்குமோ என்றெல்லாம் நினைக்க வைத்தது. என்றாலும் கோட்டையார் வீட்டைப் பார்க்கும்போது ஏற்படுகிற மலைப்பு மரியாதை இவர்கள் பேரில் வருவதில்லை. இந்த அடிப்படைக்கு ஒரு கதை ஜனங்களிடம் புழங்கி வந்தது. போயிலைச் சக்கையைத் துப்பிவிட்டு வந்து புதூர்நாயக்கர் சொல்லத் தொடங்கினார்.

சீதேவி வந்து ஒரு குடும்பத்துக்குள்த் தங்கிவிட்டால் கேட்க வேண்டாம் சவுகரிய சுகபோகங்களுக்கு. அப்படிக் கொண்டு வருகிற சீதேவியை நாம எம்புட்டுத்தான் கவனமாகப் பார்த்துக் கொண்டாலும் நாள் ஆக ஆக அவளுக்கு அங்கே இருக்கப் பிடிக்காதாம்! அப்படியொரு கொணம். ஒரு செல்லக் குழந்தையின்

சிணுக்கட்டத்துடன் ''நாம் போறேன்; நாம் போறேன்'' என்று மொணங்கிக்கொண்டே இருப்பாளாம். கோட்டையார் குடும்பத்தில் ரெகுராம நாயக்கர் என்று ஒருத்தர் இருந்தது ரொம்பப் பேருக்குத் தெரியாது. கோவிந்தப்ப நாயக்கருடைய ரண்டாந் தாரத்தின் கடேசிப்பிள்ளை. கப்பல் போன்ற அந்த வீட்டின் ஒரு அறையில் அவர் நோயாளியாகவே கிடந்தார். அவருக்கு என்ன நோய் என்று எந்த வைத்தியராலும் சொல்ல முடியவில்லை. கர்ம வினைப்பயன்; போன ஜென்மத்தில் செய்தது இந்த ஜென்மத்தில் வந்து பிடித்திருக்கிறது என்று சொல்லிக்கொண்டார்கள். ஆனாலும், அதிலும் ஏதோ ஒரு புண்ணியம் செய்திருக்கவேணும். இல்லை யென்றால் இப்படிக் கோட்டையார் வீட்டு வயிற்றில் வந்து பிறந்து வசதியாக ஒரு நோயாளியாகப் படுத்திருக்க முடியுமா என்றும் கேட்டார்கள்.

அந்த வீட்டில் அத்தனை ருசிகளும் மணமும் உள்ள ஆகாரங் களும் பலகார பட்சணங்களும் இருந்தும் ரெகுராம நாயக்கரால் ஒன்றுமே சாப்பிட முடியாது. பசும்பால் சாப்பிட்டாலுங் கூடச் செமிப்பதில்லை. திடீரென்று ஒரு வயிற்றுவலி வரும் - எப்ப வரும் என்று அவருக்கே தெரியாது - தரையில விழுந்து உருண்டு கொண்டே கிடப்பார். இப்படியாக அவர் ஆள் உருக்குலைந்து வீட்டி னுள்ளேயே கிடந்தார். பல தடவை அவருக்குத் தற்கொலை செய்து கொள்ள வேண்டியதுதான் என்கிற வரை வந்ததும் உண்டு.

கோவிந்தப்ப நாயக்கரும் அவரது சகோதரர்களின் மறைவுக்குப் பிறகு அவர் தனது படுக்கையை அந்த வீட்டின் கிணற்றடிக்குப் போகிற பாதையில் யாருக்கும் இடைஞ்சல் இல்லாதபடி அமைத்துக்கொண்டார்.

ரெகுராம நாயக்கரைப்பற்றிப் புதூர் சொல்லிக் கொண்டிருந்த போது கவுலூர் கொண்டுவந்து நீட்டிய 'பட்டை'யை வாங்கிக் கொண்டார். மணல் தரையில் உட்கார்ந்துகொண்டிருந்த அவர் தனது மீசையை இடதும் வலதும் நீவிவிட்டுக்கொண்டு பட்டையில் வாய் வைத்து ஒரு அரை இழுப்பு இழுத்து சப்பினார். 'அடடா; ஆஹ... என்ன மணம்; இந்தப் பச்சை ஓலையின் மணத்துக்கும் கள்ளின் வாடைக்கும்' என்று சொல்லிக்கொண்டது மனசு. உள்ளே போன கள் வயிற்றுக்குள் இருந்த கள்ளோடு இணைந்தது. இப்படிப் பட்டைக்கும் வயித்துக்கும் ஒரு பிணைப்பு இருக்கவேண்டும் அவருக்கு.

ரெகுராமநாயக்கருக்கு, சிலது நாட்களாகவே அந்தக் குரல் கேட்டுக் கொண்டிருந்தது! கொஞ்... சம் கண் அசருவ்து போ...ல இருக்கும் போது, ஒரு பெண்பிள்ளையின் குரல்:

''தள்ளிக்கொ; வழியை விடு. நாம் போகணும்; நாம் போகணும்''

என்னடா இது. இந்தச் சத்தம் எங்கெயிருந்து வருது?

ராத்திரிகளில் அவர் காத்தோட்டத்துக்காக வாசலுக்கு நேராய் கட்டிலைப் போட்டு படுக்கிறது வழக்கம். அவர் முதலில் நினைச்சது, வெளியே இருந்துதான் யாரோ உள்ளே வர வழி விலகிச் சொல்லுகிறார்கள் போலிருக்கு என்று. அதனால் அவர் வெளிப் பக்கமே பார்ப்பார் அந்தச் சத்தம் கேட்டதும்!

திரும்பவும் அந்தச் சத்தம் கேட்டது ''தள்ளிக்கொ வழிவிடு. நாம் போகணும். நாம் போகணும்'' தற்செயலா ரெகுராம நாயக்கர் வீட்டினுள்ளே பார்த்தார். ''பார்த்தா...!ஜெகஜோதியா, அந்த இருட்டுக் கெசத்துலயும் தத்ரூபமா வந்து நிக்காளாம் அம்மை சீதேவி!''

திரும்பவும் அவள் வாயிலிருந்து அந்த வார்த்தை வந்தது. பார்த்தார். 'ஆஹ; நம்ம வீட்லெ குடியிருந்த சீதேவியில்லா புறப்பட்ரிச்சி போல. விடப்படாதெ இதெ' அப்பிடீண்ணு ரோசனை செஞ்சாராம். பளிச்சிண்ணு அவருக்கு மனசுல பட்டதெச் செஞ்சிட்டாரு.

''அம்மா ஒனக்கு என்ன கொறை இங்கெ; ஏம் போணும்ன்னு சொல்லுதெ?'' ''இல்லெ; நாம் போகணும். தள்ளிக்கொ; வழி விடு'' பச்சைப்பிள்ளைகெணக்க அதே சொல்லீட்டிருக்காளாம்! சரீ; இனி இவளெத் தாமரிக்க ஏலாதுண்ணு நெனைப்பு வந்துவிட்டது.

ரெகுராமநாயக்கர் எழுந்திருந்தார். கட்டிலை நகர்த்தவில்லை. அம்மா, கொஞ்சம் பொறு; நா வந்ததும் நீ போகலாம் என்றார். அவள் சரி என்று ஒப்புக்கொண்டாள். தேவதைகள் வார்த்தை பிசகாது என்று தெரியும் அவருக்கு.

''நிக்கெயே அம்மா, நிக்கப்படாது நீ, உக்காரு''ண்ணாரு கதையைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களுக்கு ஆச்சரியம்; ரெகுராம நாயக்கர் அப்படி அவளை அதிகாரம் பண்ணியிருக்காரே என்று.

பட்டையிலிருந்து மெதுவாக ஒரு இழுப்பு இழுத்துச் சப்பினார் புதூர். பிறகு தொடர்ந்தார். அவர் பட்டையைச் சப்புவதற்கு

எடுத்துக்கொண்ட அந்த இடைவெளி நேரத்தில் கவுலூர் சொன்னார்; ''லெச்சுமி ஒண்ணு உக்காந்துதாம் இருக்கணும்; நிக்கப்படாது. நிண்ணுட்டா; கிளம்பீட்டாண்ணுதான் அருத்தம். அதனாலெதாம் 'உட்காரு'ண்ணு சொன்னது''

கவுலூர் சொல்லி நிறுத்தியதும், புதூர் தொடர்ந்தார் ஒரு ஓங்கிய அழுத்தத்துடன்; ''உக்காந்துட்டா;'' என்று நேரில் பார்த்தது போலச் சொல்லி மகிழ்ந்தார்.

''விறு விறுண்ணு போயி பக்கத்துல இருக்க கிணத்துல குதிச்சி கதெய முடிச்சிக்கிட்டாரு ரெகுராமநாயக்கரு!!''

கதையை, அங்கே இருந்தவர்களில் புதுசாகக் கேட்டவர்களுக்குக் கடேசியில் வேகமாகப் புதூர் சொன்னதை விளங்கிக்கொள்ள முடியவில்லை. தெரிந்த, பக்கத்திலிருந்தவர்கள் விளக்கிச் சொன்ன பிறகுதான் தெரிந்தது; எப்படி ஒரு தந்திரம் பண்ணி - உயிரைக் கொடுத்து - சீதேவியை அந்த வீட்டில் அவர் நிலை நிறுத்தினார் என்று.

❖

## 19

சொக்கய்யர் கள்ளுக்கடைக்கு ஒரு வாடிக்கையாக வந்து சேர்ந்ததே தனிக்கதை. அவர் சூட்டு நோய் தாங்காமல் துன்பப்பட்டார். பாக்காத வைத்தியமில்லை. கடேசியில் நாட்டு வைத்தியர்கள் அவருக்குச் சொன்ன அறிவுரை ஒரு மண்டலம் பனம்பால் சாப்பிடவேண்டும் என்பது. கொஞ்சம் குணம் தெரிந்தது போல் இருந்தது. கவுலூர்தான் சொன்னார் பனம்பாலை விடக் கள்ளு தான் இதுக்கு சொன்னாங்கம் என்று. 'சரி; அதோட புளிப்பையு யுந்தான் பாத்துருவமே' என்று வந்துவிட்டார் கடைக்கு.

சாப்பிடுகிறவரை ஒன்றும் இல்லை. நிறுத்தி விட்டால் திரும்பவும் சூடு பிடித்து பிராணனை வாங்குகிறது.

வைத்தியத்துக்கு என்று ஆரம்பித்து, நிரந்தரமாகிவிட்டது; தடுமன் பிடித்திருக்கும்போது மூக்கடைப்புக்குப் பொடிப் போட ஆரம்பித்து பிறகு அதே 'ராப்தா' ஆகிவிடுவதுபோல.

சொக்கய்யர் கள்ளுக்கடைக்கு வருகிற நேரமும் தோரணையும் ஒரு அலாதி; அவர் கடைக்கு வந்துவிட்டார் என்றாலே கள்ளுக்கடை களைகட்டிவிடும்.

சாயங்காலமானால் கூட்டம் நெரிபரியாக இருக்கும். அதைத் தவிர்க்க அவர் நிழல் சரிய ஆரம்பித்த உடனேயே வந்துவிடுகிறது.

தூரத்தில் அவர் வரும்போதே கடையிலுள்ளவர்கள். ''ஏ... அந்நா பார்ரா, அய்யர் வார வரத்தெ'' என்பான் ஒருத்தன்.

''ஏ பாவி மட்டெ; மனுசன் தூசிக்கோட்டையா வாறாரே!'' என்பான் மற்றொருவன். கள் அப்படி அவரை இங்கே இழுத்துக் கொண்டு வருகிறது என்கிற அர்த்தத்தில்.

அவர், பிள்ளையார் கோவில் பூசையை முடித்துவிட்டு வருகிற நேரம் அது. ஊருக்கு மேற்கே வெயில் உகந்த விநாயகர் கோவில் இருக்கிறது. வெயில் மட்டுமில்லை மழை பனி காற்று எல்லாமே அந்த விநாயகருக்கு உகந்ததுதான்; என்றாலும் இவைகளிலெல்லாம் அதிகம் கிடைப்பது இந்தக் கரிசல்க் காட்டு வேனா வெயில்தான்.

''சாமி வாங்க'' ''சாமி வாங்க'' என்று உபசரிப்பு பலம். ஒவ்வொரு 'சாமி வாங்க'வுக்கும் கழுத்து சுளுக்கிக்கொள்ளாமல் சுமாரான ஒரு தலை அசைப்பு. ''சாமி கும்புடுதென்'' என்பவர் களுக்கு இடதுகையை மட்டும் கொஞ்சம் வெட்டியிழுப்பதுபோல வெடுக்கென்று அசைப்பார். அவரது மூதாதையர்கள் 'நெய் ஊற்றி ஊற்றி யாகத்துக்கு அக்கினிவளர்த்த வலது கையால் கும்பிடுவை ஏற்க பதிலுக்கு உயர்த்தினால் பாவம் இவர்கள் சாம்பலாகப் போய் விடுவார்கள் என்றுதான் அப்படி இடதுகையால் அசைக்கிறது' என்று மைனர் நாயக்கர் கேட்டதுக்குப் பதில் சொல்லியிருக்கிறார் அய்யர்.

பட்டத் தார்பாய்ச்சிக் கட்டிய வேட்டி, மேலே சிகப்புப் பட்டு அங்கவஸ்திரம், சொட்டை விழுந்த ஏறுநெற்றி, குதிரைலாடம் போன்ற கரும்பிறைச் சந்திர வடிவில் பின்பக்கம் மட்டும் சிகை, சுண்டைக்காய் அளவு கொண்டை, நல்ல சேப்பு நிற நெற்றியில் செவசெவ என்று பிரகாசிக்கும் குங்குமம். வலது கையில் வெள்ளிக்காப்பும் விரலில் தாமிர மோதிரமும்.

ஊருக்கு உள்ளேயும் வெளியேயும் அய்யருக்கு ரண்டு பெயர்கள். பிள்ளையார் கோயில்ச் சாமி; கள்ளுக்கடை அய்யர். தெரிந்தவர் களுக்குத்தான் தெரியும் அவருடைய சொந்தப் பெயர். அய்யர்வாள் அட்டகாசமாக வந்து அமர்ந்தார் கள்ளுக்கடை மணலில் - ''அடேய் சுவுனாரா... என்றுதான் கடைக்காரரைக் கூப்பிடுவார். அய்யர் வாளுக்குக் காது நன்றாகக் கேட்கும் என்றாலும் சில காது கேளாத வர்கள்போல் சத்தம் போட்டுத்தான் பேசுறது என்று எப்படியோ பழக்கமாகிவிட்டது.

உட்கார்ந்ததும் முதக்காரியமாக வெயிலை ஒருபாட்டம் அர்ச்சனை செய்வார்.

உற்சாகம் பீறிடும்போதும் கோபமாகப் பேசும்போதும் சபை நடுவில் மற்றவர்கள் சொல்லக் கூசும் கெட்ட வார்த்தைகளையும் வசவுகளையும் சரமாரியாக அவிழ்த்துவிடுவார்; தான் மாத்திரம் அப்படிப் பேசலாம் என்பதுபோல! அப்போது மைனர்நாயக்கர் அங்கிருந்தால் ஒரு பொய் நடிப்புடன் காதுகளைப் பொத்திக் கொண்டு ''சாமி சாமீ, காயத்திரி மந்திரம் சொல்ற நாக்கு சாமீ?'' என்பார் அவரைப்பார்த்து.

அய்யரின் கழுத்தில் தலைமட்டும் அப்போது முன்னும் பின்னும் ஆட்டிக்காட்டும்!

இந்த வித்தியாசமான தலை ஆட்டல் அவருக்கே என்று உள்ள ஒரு பிரத்யேகமான செய்கையாக இருந்தது. அவருடைய பேச்சின் ஆரம்பமே பல சமயம் கேள்வியாகவே தொடங்கும். இல்லாத எதிராளியை எதிரில் நிறுத்தி வைத்துக்கொண்டு கேள்வியால் மடக்கியதுபோல் ஆக்கிவிட்டுத் தலையை அப்போது அப்படி ஆட்டுவார்!

முக்கியமாக மகாத்மா காந்திபேரில் அவருக்கு ரொம்பக் கடுப்பு. மது குடிக்கக்கூடாது என்று சொன்னதுக்காகக்கூட இல்லை; கோவிலுக்குள் அரிஜனங்களை அனுமதிக்கவேண்டும் என்று சொன்னதுக்குத்தான், ''நீ ஒரு கோயிலைக் கட்டு, சொந்தத்துல; ஒந் துட்டைப் போட்டுக் கட்டு. கூட்டீட்டுப்போ. ம்; கூட்டீட்டுப்பொ பள்ளுப் பாறை பதினெட்டு ஜாதியையும்; யாரு வேண்டாங்கா?'' என்று கேட்டு, கொஞ்சம் இடைவெளியிட்டு தலையை அப்படி முன்னும் பின்னும் ஆட்டினார்.

அந்தத் தலையாட்டலை கவுலூர் நாயக்கரும் மற்றவர்களும் ரசித்துச் சிரித்தார்கள்.

''ஒனக்கு அதுக்கு வக்கில்லெ...; பூர்வீகமாகக் கட்டி வச்சிருக்கிற ஆச்சாரமான கோயிலுக்குள்ளெ பள்ளுப்பறையெ கூட்டுட்டுப் போவேன்னா இங்க இருக்கப்பட்டவன் என்ன சும்பக்கூ....ன்னு நெனைச்சுண்டயோ?'' அதே தலையாட்டல்.

அதே குரலிலிருந்து கொஞ்சம் இறங்கி, ''ஒவ்வொருத்தன் கும்பிடறதுக்குன்னே சாமியுமிருக்கு; கோயிலுமிருக்கு. அதவுட்

டுட்டு, நா மீனாக்ஷியம்மன் கோவிலுள்குள்ளதாம் போவேன்னுட்டு சொல்றது எதுல சேர்த்தி? காலெ ஒடிச்சுப்போடுவம் படவா'' என்றார்.

''சாமி சொல்றது நூத்துல ஒரு வார்த்தெ'' என்றார் கவுலூர். எங்கே கள்ளுக்கடைகள் எடுபட்டுப் போய்விடுமோ என்கிற பயம் அவருக்கும் இருந்தது.

''கள்ளுக் கடைகளெ மறியல் செஞ்சி, கள்ளெ ஒழிக்கணும்ண்ணு காந்தி சொன்னது சாமிக்குக் கொஞ்சம் வருத்தந்தான்'' என்றான் வரதன்.

''போடா போட. இதை இவனில்லெ இவம் பாட்டன் வந்தாலும் நடக்காதுரா'' என்றார் குரலை உசத்தி.

புதூர் கேட்டார், ''நாங்கதாம் கள்ளெக் குடிக்கிறோம்; ஒங்க கூட்டாளி இதக் குடிக்கலாமா சாமி?''

''டே புதூர், அந்தக் கோட்டிக்காரப் பயல் பேசற மாதரியே நீயும் பேசாத. நீ விஷயம் புரிஞ்சவன்; நோக்கு சொன்னா வெளங்கும், கேட்டுக்கொ. தேவாதி தேவர்களெ மதுவ அருந்தியிருக்காள். மது தேவ பானம்டா! அதனாலெதான் மதுக்குடம் எடுத்து ஸ்வாமிக்குத் திருவிழாக் கொண்டாடுறோம்.''

''ஒசந்த சிந்தனை, நல்ல மனசோடவும் பக்தி சிரத்தையா மதுவெ அருந்தினா அந்தக் குணங்கள் விருத்தியாகும்.

இந்த மூடப் பயல் என்ன பண்றான்; மனசுல கெடுதல் சித்தத் தோடவும் அக்ஞானத்தோடவும் மதுவெ அருந்தினா அதுவே விருத்தியாகி, தப்புப் பண்ணவும் மோசமா நடக்குறதுமா ஆயிடறது. அது அவாள் தப்பே தவிர மது என்ன பண்ணும்?''

சொக்கய்யர் அப்படிச் சொன்னாரே தவிர, அவருக்கும் போதை ஏற ஏற வார்த்தைகள் நிதானம் தவறத்தான் செய்தன.

மைனர் நாயக்கரோ, புதூரரோ அதைச் சுட்டிக் காட்டிக் கேட்டால் அதுக்கும் ஒரு பதில் தயாராக வைத்திருந்து சொல்லுவார்; ''அடேய், மனுசப்பயலே ஒரு நீசன்தான்டா. நாம தேவ அம்ஸத்துக்கு ஒசரணும் ன்னு நெனைக்கிறோம்; எங்க முடியுது. (மார்பைத் தொட்டுக் காட்டி) இங்க இருக்கிற அழுக்கு கொஞ்சமா நஞ்சமா! உள்ளுக்கு எதெது உண்டோ, வியர்வைமாதரி அதெல்லாம் வெளிவரத்தான் செய்யும்''என்பார்.

அய்யரின் பேச்சிலெ அடிக்கடி வருவது கலியுகம் என்பது. கலி வந்துதான் மனுஷாளைக் கெடுத்தது என்பார். புதூர் கேட்டார் ஒரு நாள்; ''சாமீ கலியுகத்துக்கு முந்தியுள்ள யுகங்கள்ளேயும் அக்குருவம் இருக்கத்தானே செஞ்சது. அப்படி இருக்கப் போயிதானே பகவானே அவதாரம் பண்ணவேண்டியது வந்தது?''

தலையைக் கொஞ்சம் சாய்த்து புதூரை ஒருவிதமாகப் பார்த்தார் அய்யர்!, ''மத்த யுகத்துக்கும் கலியுகத்துக்கும் அடிப்படையிலேயே ஒரு வித்தியாசம் உண்டு. அதுக்கு ஒரு கதையிருக்கு. சொல்றே கேட்டுக்கொ'' என்று ஆரம்பித்தார்.

நாளைக்குக் கலியுகம் பிறக்கப் போறது. அதுக்கு முதல் நாள், ஒருத்தன் தன்னோட புஞ்சையை இன்னொருவனுக்கு வித்தான். வாங்கினவன் அந்தப் புஞ்சையில கலப்பையைக் கட்டி முங்க உழுதான். கொழுமுனை பட்டு ஒரு சொம்பு பூமிக்குள்ளெயிருந்து மேலெ வந்தது. எடுத்துப் பாத்தா...! அதுக்குள்ளெ அவ்வளவும் தங்க நாணயங்கள்! அதெ நேர புஞ்சைய வித்தவங்கிட்டக் கொண்டு போயிக் கொடுத்து, 'இந்தாப்பா; இது ஒன்னோட புஞ்சைக்குக் கீழே இருந்தது; வச்சிக்கொ'ண்ணான்.

அதுக்கு அவஞ் சொல்லுவான்; 'அதெப்படி நா வாங்குறது? அந்தப் புஞ்சைய ஒனக்கு நா வித்துட்டென். அதுல கிடைக்கிறது என்ன உண்டுமோ அவ்வளவும் ஒனக்குத்தான் சொந்தம்'ன்னு வாங்கிக்க முடியாதுன்னுட்டான்.

அதுக்கு இவஞ் சொன்னான்; 'நா புஞ்சையத்தான் வாங்கினனே தவிர புஞ்சைக்குக் கீழே பொதைஞ்சு கிடக்கிற பொதையல வாங்கலை. இது ஒன்னுதுதான்; பேசாம் வாங்கிக் கொ' ன்னு தங்கச் சொம்பை நீட்டினான் அவன்ட்டெ.

'ஏ நீயென்ன என்னெ பேராசெ பிடிச்சவன்னு பாத்தயா. எப்ப ஒனக்கு அந்தப் புஞ்செய வித்தனோ, அதுல கெடைக்கிற அத்தனையும் ஒன்னெச் சேந்தது தான்''ன்னு சொல்லி புதையல்ச் சொம்பை வாங்க முடியாதுன்னுட்டான்!'' என்று சொல்லி நிறுத்தி, அய்யர் தலையை ஆட்ட ஆரம்பித்தார், எப்படி இருக்கு பாத்தியா என்பதுபோல்.

''அங், பெறவு?''

பெறகென்ன; வெவகாரம் பஞ்சாயத்துக்குப் போச்சு. பஞ்சாயத்துல சொன்னான், நாளைக் காலம்பெற பஞ்சாயத்து வச்சுக்குவோம் சொம்பெக் கொண்டு போங்கன்னான்.

சொம்பெக் கொண்டு போக முடியாது; கொண்டு போற தாயிருந்தா யாரு கொண்டு போறதுங்குற பிரச்னெ வரும். சொம்பு இங்கயே இருக்கட்டும்ன்னு சொல்லி, பஞ்சாயத்துக்காரனிடமே ஒப்படைச்சுட்டுப் போனாங்க.

விடிஞ்சது.

❖

## 20

முதல்ல பஞ்சாயத்த தேடி வந்தது யாருன்னு நெனைச்செ; நிலத்த வித்தானே, அவந்தான்!

அவஞ்சொன்னான், இன்ன மாதரி, 'இவனுக்கு நா ஏம் புஞ்சைய வித்தது வாஸ்தவந்தான். புஞ்சையெத்தான் வித்தனே தவிர புஞ்சைக்குக் கீழே பொதைச்சிருந்த பொதையல் என்னெத்தான் சேரணும். அதுல இவனுக்கு எந்த விதத்திலயும் பாத்யதை கெடை யாது. அதனாலெ புதையல்ச் சொம்பு எங்கைக்கு வந்துரணும்'

புஞ்சையை வாங்கினவன் சொன்னது; 'எண்ணைக்குப் புஞ்சையெ விலை கொடுத்து வாங்கிட்டனோ அண்ணைக்கிலிருந்தே புஞ்சை யும் புஞ்சையிலுள்ளதுகளும் எனக்குத்தான் சொந்தம். அதனாலெ சொம்பு என் கைக்கு வந்துரணும்'. கதையைக் கேட்டுக் கொண் டிருந்த புதூர் உட்பட எல்லோரும் சிரித்தார்கள். ''பாத்தியளா! மொதநா அவங்க வந்து சொன்னதென்னெ; மறுநா அவங்க வந்து சொல்றதென்ன! பாத்தியளா. கலி பிறந்தண்ணைக்கே அப்பிடி இருந்தா...?'' என்றார் புதூர்.

''அப்புறம் என்னாச்சி அந்தப் பொதையல் சொம்பு வெவகாரம்.'' என்று கேட்டார் கவுலூர். என்ன ஆகும்? என்று பதிலுக்குக் கேட்டுவிட்டு அய்யர் தரையைப் பார்த்து ஒரு சின்னச் சிரிப்புச் சிரித்தார். செருமி, தொண்டையைச் சரிசெய்து கொண்டு, பஞ்சாயத்துக்காரன் சொன்னான், 'ஏலெ, நீ புஞ்சையை சும்மா விக்கலெ; அதுக்குண்டான பணத்தெ வாங்கிக்கிட்டுத்தான்

கொடுத்தெ. ஒங்கணக்கு அத்தோட முடிஞ்சது; 'ஓடிப்பொ நீ' என்று சொல்லி அவனை வெறட்டீட்டு. புஞ்சைய வாங்கினவனைப் பார்த்து பஞ்சாயத்துக்காரன் சொன்னான், 'ஏலெ, நீ புஞ்செய என்னத்துக்கு வாங்குனெ; மாசூல் பண்ணத்தானே? மாசூல் வச்சுக்கொ, மாசூல் எடுத்துக்கொ, மாசூல் வெக்க மண்ணெ வெலக்கு வாங்குன வனுக்கு மண்ணும் அந்த மாசூலுந்தான் சொந்தம். அதுக்குள்ளெ இருக்கிற பொதையலையெல்லாங் கொண்டு போவேன்னா அது என்னடா ஞாயம்? புதையல் ஒங்க ரெண்டு பேத்துக்குமே கெடையாது. அது பஞ்சாயத்துக்குச் சேர்ந்தது. ஓடிப் போங்கடா'ன்னுட்டான் பஞ்சாயத்துக்காரன்! எல்லோருடைய சிரிப்போடும் அய்யரும் சேர்ந்து சிரித்தார்.

''நாயி. பொதையல் கெடைச்சா பேசாம அரவமில்லாம வச்சிக் கிடுவானா; அதக்கொண்டு போயி, கொடுக்கப்போயி உள்ளதும் போச்சி சாவஞ்செத்த நாயிக்கி!'' என்றார் கவுலூர்.

''சரி. கொண்டு போனதுதாம் பொயிட்டெ; மூதி, ஆளுக்குப் பேர்பாதியா எடுத்துக்கிடறது'' என்றார் புதூர்.

''பேசாம அந்த ரண்டுபேரும், பஞ்சாயத்துக்காரனுமா சேந்து மூணு பங்காப் பிரிச்சியாவது வச்சிருந்திருக்கலாம்; சல்க்காருக்குத் தெரிஞ்சதனா வம்பா யாருக்கும் கெடைக்காம அவனே கொண்டு போயிருவான்!'' என்றான் வரதன்.

அய்யர் இதையெல்லாம் காதில் வாங்கிக்கொண்டாலும் பட்டையில் உள்ளதை அனுபவித்து உறிஞ்சிக்கொண்டிருந்தார். அதுக்கு உபகாரமாய் அவரே தயாரித்துக்கொண்டு வந்திருந்த காரம் இட்ட வாழைக்காய் வத்தலை மடியிலிருந்து எடுத்து மென்று கொள்வார்.

ஒரு நாள் சொக்கய்யர் இப்படி வாழைக்காய் வத்தலை கடித்துக் கொண்டிருந்தபோது மைனர் நாயக்கர் வந்தார். வழக்கம்போல் அவருக்குப் பின்னால் 'பத்துப்பேர்' வந்தார்கள். அந்தப் பத்துப் பேருக்கு மட்டுமில்லை, கடையில் இருக்கிற அனைவருக்குமே தன் கணக்கில் கள் விடச் சொல்லுவார். அதனால் அய்யருக்கும் கிடைக்கும்.

இப்படி அவர்கள் எல்லாரும் சேர்ந்து குடித்துக்கொண்டிருந்த போது மைனர் நாயக்கர் அய்யரிடம் ''அதில ஒண்ணெ இப்பிடித்

தள்ளுங்க'' என்று அந்த வாழைக்காய் வத்தலில் ரண்டை வாங்கிக் கொறித்து ருசிபார்த்துவிட்டு. ''ம்ஹூம்; இது சரிப்பட்டு வராது நமக்கு. இதுக்கெல்லாம் சரியானபடி காரம் போட்ட உப்புக்கண்டம் தான் சரி'' என்று சொல்லி, தன்னிடமிருந்த நாலு உப்புக்கண்டத் துண்டுகளை அய்யருக்கு நீட்டினார், புன்னகை கலந்த மரியாதை யுடன்.

''அத நீயே வச்சிக்கொ'' அய்யர் கராலாகச் சொன்னார். மைனர், நீட்டிய கையை மடக்காமல்.

''சாமீ, எதெதுக்கு எதெதைச் சேத்துக்கிடணும்ன்னு ஒரு இது இருக்கில்ல, வெத்தலையோட சுண்ணாம்புதாஞ் சேரும்; அதுல கொண்டு போயி தோசை மாவைத் தடவுனா எப்பிடி?''

மைனர் சொன்ன உதாரணத்தை மனசுக்குள் அய்யர் ரசித்தாலும், வெளியில் அவர் சத்தம் போட்டுச் சொன்னது.

''போடா போடா''

''சாமியவுகளைப் போயி நம்ம மாதரி எலும்பைக் கடிச்சி உருஞ்சச் சொன்னா, அதெப்படி?'' என்று கேட்டார் கவுலூர் மைனர் நாயக்கரைப் பார்த்து.

''மாமிசத்தைக் கடிச்சி உறிஞ்சி வெறி அடங்காத மனுசனே ஒலகத்துல இல்லெ பாத்துக்கிடும் என்றார். அதுக்கு மைனர்.

''அதென்னடா அப்படிச் சொல்லிட்டாய்?'' என்று கேட்டார் அய்யர்.

''அப்படிச் சொல்லிட்டாயா; எப்படிச் சொல்லிட்டேன். உள்ளதத்தான் சொல்லுதேன்''

''எதுடா உள்ளது?''

மைனர் தனது குரலைத் தாழ்த்தி முன்பற்களைக் கடித்துக் கொண்டு சன்னமான குரலில் ''பொம்பளையின் உதட்டைக் கடிச்சிச் சுவைக்கீளே அது என்னவாம்?''

அங்கே ஒரு மெல்லிய கிளுகிளுப்பான சிரிப்பொலி பரவியது. ''போடா போடா; ஒன்னோட பேச முடியாது'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார் அய்யர்.

✤

# 21

தன் வயசுக்கு மிஞ்சிய பெரியவர்களையும் ''அடேபுடே'' என்று அய்யர் ''டா'' போட்டுத்தான் கூப்பிடுவார்.

அப்படிக் கூப்பிடாமல் மரியாதையாக விளிக்கும் நபர்களும் கிராமத்தில் உண்டு. நுன்னகொண்ட நாயக்கரை ''முதலாளி'' என்றுதான் அவர் அழைக்கிறது. கோட்டையார் வீட்டு திரவத்தி நாயக்கர், அப்பிநாயுண்டு போன்ற பிரமுகர்களையும் அவர், ''என்ன முதலாளி'' என்றுதான் கவுரவமாக அழைப்பார். அதே சமயத்தில அவர்கள் வீட்டுப் பிள்ளைகளை அவர் ''ஒரே; ஏமிரா'' என்று தெலுங்கில் மதலை தொனிக்க விசாரிப்பார். அடே என்று தமிழில் சொல்லுவதைவிட அதையே அவர்கள் வீட்டு மொழியில் கூப்பிட்டால் ஒரு அந்யோன்யம் காரணமாக வித்தியாசமாகத் தெரியாது என்பது அய்யரின் அபிப்ராயம்!

நரசிம்மனுக்கும் கஸ்தூரிக்கும் இது உவப்பாக இல்லை என்ப தோடு உள்மன எரிச்சலாகவும் இருந்தது. தங்கள் பெற்றோர்களைப் போல அவர்கள் அய்யரைக் கண்டதும் ''சாமி'' என்று சொல்லிக் கும்பிடுவதும் இல்லை. 'நம்ம கும்பிடும் வேண்டாம் ஒம்ம தலை யாட்டும் வேண்டாம்' என்கிற 'சொலவ'த்தைப் பின்பற்றினார்கள்; என்றாலும், அவர்கள் பேசாமல்க் கடந்து போனாலும் அய்யர் விடமாட்டார். ''ஏமிரா...'' என்று அவர்களைக் கண்டதும் தனக்கு சந்தோஷம் ஏற்பட்டதுபோல அபிநயிப்பார். அவர்களும் ஒரு மரியாதைக்கு அதேபோல் ''என்ன சாமீ'' என்பார்கள். இந்த அய்யரை என்னத்துக்கு ''சாமீ'' என்று அழைக்கணும் என்று ஒவ்வொரு 'சாமீ'க்கும் அவர்கள் உள்மனசு கண்டிக்கும்.

அய்யருக்கு, 'இவர்கள் ராஜாங்க துவேஷிகள்' என்கிற நெனைப்பு. அதோடு, மரியாதை தெரியாத விளையாட்டுப் பையன்கள்; இப்ப இப்படித்தான் இருப்பார்கள்; பின்னால் தானாக எல்லாம் சரியாகி விடுவார்கள் என்கிற நம்பிக்கை.

❖

திரும்பவும் அன்றைக்கு அந்தப் பரபரப்பு நிலவியது. உயரமாக வளர்ந்தவர்களெல்லாம் ஓடி ஒளிய ஆரம்பித்தார்கள். குட்டையாக இருப்பவர்கள் மட்டும் திருப்தியாக அலைந்தார்கள்.

குட்டையாக இருப்பவர்களும் ஓடிஒளியும் நேரம் இருக்கிறது! ''உருக்குத்தி''க்காரன் வந்திருக்கான் என்று கேள்விப்படும் போது. இப்பொ உருக்குத்திக்காரன் வரவில்லை; பட்டாளத்துக்கு ஆள்ப் பிடிப்பவன் வரப் போவதாகத் தாக்கல் கிடைத் திருக்கிறது.

குட்டையாக இருப்பவர்களுக்கு, ஊரில் இது ஒரு வேடிக்கை. அவர்களே திடீர் என்று இப்படி ஒரு கப்பி கட்டி விட்டுவிடுவார்கள். உயரமானவனோடு சண்டைவந்து அவனிடம் அடி வாங்கி, பதிலுக்கு அடிக்க முடியாதபோது இருடா, ஒன்னெ நாம் பாத்துக் கிறென்; அடுத்த தபா பட்டாளத்துக்கு ஆளப் பிடிக்க வருவாம்; அப்பொ நீ எங்கே ஓடி ஒளிவேன்னு பாக்கிறென், இரு'' என்று குரோதத்தோடு கறுவுவான். ஊர்ப் பெரியவர்கள் உடனே இருவரையும் கூப்பிட்டு சமாதானப்படுத்தி விடுவார்கள்!

சம்பந்தகாரர்களுக்குள் உயரமாக வளர்ந்தவர்களைப் பார்த்துக் கேலி செய்யும்போது, ''மாமோவ், பட்டாளத்துக்கு ஆள்பிடிக்க வாரான் ஓடீருங்க!'' என்று ஒல்லிக் குரலில் ரகசியம்போலக் கூவுவார்கள். நெசத்துக்குச் சொல்றானா இவன் கேலிக்குச் சொல்றானா என்று தெரிந்துகொள்ள முடியாமல் அவர்கள் தயங்கித் திகைக்கும்போது ரொம்பப் பாவமாக இருக்கும்.

மன்னார் நாயக்கர் கொஞ்சம் வளர்ந்த ஆள்தான். இளவட்டம் என்று சொல்ல முடியாது. என்றாலும், கெட்ட காலத்துக்கு பட்டாளத்துக்கு ஆள் எடுப்பவனின் கண்ணில்ப் பட்டுத் தொலைந் தால், பிடித்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்ய. தகவல் கேள்விப் பட்டதிலிருந்து அவருக்கும் அவருடைய சம்சாரம் அச்சம்மாவுக்கும் நிம்மதியில்லை. அவர்களுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. அவரைப் பிடித்து இழுத்துக்கொண்டே போய் மாட்டுக்கூளம் போடும் காடிக்குள் தள்ளிப் படுக்கச் சொல்லி மேலே கூளத்தை அள்ளிப்போட்டு அவரை மூடி மறைத்து விட்டாள்! முதலில் மாடுகள் மருண்டு கலைந்தன. பழகிய ஆள் என்பதால் பிறகு சரியாகிவிட்டது. காடிக்குள் அவர் கிடந்த இடம் மேடாகக் கூளம் தெரிந்ததால் பார்த்தவர் யாருக்கும் ஒரு சந்தேகம் தோன்றுமோ

---

✝ உருக்குத்திக்காரன் - அம்மை குத்துகிறவன். உருக்குத்திக்காரன் வந்திருக்கிறான் என்றதும் குழந்தைகளை எடுத்துக்கொண்டு காடுகளுக்கு ஓடி விடுவார்கள். (வீடுவீடாக நுழைந்து வலுவந்தமாக குழந்தைகளுக்கு அம்மை குத்தினார்கள்) குழந்தைகளுக்கு அம்மை குத்திக்கொள்ளா விட்டால் தண்டனை உண்டு என்று பிற்பாடு சட்டம் வந்தது.

என்று அச்சம்மாவுக்குப் பட்டது. திரும்பவும் கதவை அடைத்துத் தாட்பாள் போட்டுவிட்டு வந்து, ''கொஞ்சம் எந்திரிங்க சொல்றென்'' என்று எழுப்பி, கீழே கிடந்த கழி கூளத்தையெல்லாம் எடுத்து மாடுகளின் காலடியில் போட்டுக் காடியைத் துப்பரவு செய்து, படுக்கச் சொல்லி மேலே கூளத்தைப் போட்டுத் திருப்தியாக மூடினாள்.

திகைத்த மாடுகள் ரொம்ப நேரம் கூளத்தைக் கடிக்காமல் இருந்தது. பிறகு வேகமாகத் திங்க ஆரம்பித்தது. கீழே கிடந்த அவருக்கு முதலில், நம்மால் மாடுகள் இப்பிடிக் கூளம் கடிக்காமல் நின்றுகொண்டு இருக்கிறதே என்று வருத்தமாக இருந்தது; பிறகு, இப்படி வேகமாகத் தின்றால் நாம் காடிக்குள் கிடப்பது பார்க்கிறவர் களுக்குத் தெரியுமே என்றும் இருந்தது!

அடிக்கடி அச்சம்மா வந்து எட்டிப் பார்த்து மாடுகள் கூளம் திங்கத் திங்க அவர்மேல் கூளத்தைப் போட்டுக்கொண்டேயிருந்தாள். பொழுது நகர்வது அவருக்கு ஒரு ''கெண்ணமாக'' இருந்தது. பயம் நீங்கிய கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சுள்ளுச் சுள்ளென்று மேலெல்லாம் அரிப்பது போலிருந்தது. எறும்புகள் கடிப்பதுபோலு மிருந்தது. 'செய், நல்ல வெள்ளைக்காரன் வந்தாண்டா' என்று நினைத்து சங்கடப்பட்டார். காங்கிரஸ்காரங்க சொல்றதெல்லாம் சரிதான்; இந்தப் பய நாட்டை விட்டு ஒழிஞ்சாத்தான் பீடை கழியும் என்று நினைத்துக்கொண்டார்.

''அச்சம் மோவ்...'' என்று சன்னமான குரலில் மெதுவாக் குரல் கொடுத்தார்.

''ஒண்ணுக்கு இருக்கணுமே'' என்றார்.

என்ன எளவோ இப்படிச் சமயம் பார்த்துத்தான் அடிக்கடி ஒண்ணுக்கு வர்றது போலவும் வெளிக்கி வர்றது போலவும் தோணுது!

''என்ன இது, பச்சப் புள்ள கெணக்கா...'' என்று மதளையில் அலுத்துக்கொள்வதுபோல முகத்தைச் செல்லமாக வைத்துக் கொண்டு வந்தாள் அச்சம்மா.

மிகச் சில சமயங்களில்த்தான் இப்படி செல்லமாகக் கொஞ்சுவது போலப் பேசுவது, அப்படியான சமயங்களில் ரொம்பப் பிரியமாக இருக்கும் அவரைப் பார்க்க. உடனே அவருக்கு 'நினைப்பு' வந்தது. ''அய்யோ'' எப்படியாப்பட்ட நேரம் இது.

கூளத்தை விலக்கித் தலையைத் தூக்கி அவரும் முகம் சிணுங்கி அவளைப் பார்த்தார், தலைவாசக் கதவு 'பிளாச்' சென்று திறந்து இருந்தது; மூடியிருந்தால் சந்தேகம் வரும் தேடி வருகிறவர்களுக்கு என்று அச்சம்மா அப்படிச் செய்திருந்தாள்.

அவளே முனைப்புடன் ''விரும்பும்'' நாட்களில் - அச்சம்மாவுக்கு அன்று மட்டும் வெற்றிலை போட்டுக்கொள்வது என்றொரு பழக்கம் இருந்தது. சாய்ந்திரம் அவர் வீட்டுக்குள் வரும்போது மச்சு வீட்டு மாடாக் குழியில் சின்னப் பிளாப் பெட்டியில் வெற்றிலை பாக்கு இருந்தாலே தெரிந்துகொண்டு விடுவார்; காலையிலிருந்தே அவள் செல்லமாக மதளையில் அவரிடம் பேசியதும் நினைவுக்கு வரும்!

இதை அறிந்துகொள்ள அவருக்கு நீண்டநாள்ப் பிடித்தது! முயங்கும்போது அன்றுமட்டும் அவள் உடம்பு ஒரு ஆச்சரியகரமான மிருதுத்தன்மை கொர்ண்டதாக இருக்கும். ஒரு மணமேகூட ஏற்படும் பெண் உடம்பில் அப்போது என்று அப்பிநாயுண்டு சொல்லக் கேட்டிருக்கிறார். ஆனால் அது இவருக்குப் பிடிபடவில்லை.

மனுசப் பயலுடைய மோப்ப சக்தி, ருசி எல்லாம் மழுங்கிப் போய்விட்டது என்பார் அப்பிநாயுண்டு.

பால் சம்மந்தமான விஷயம் பேச்சுக்களில் அப்பி நாயுண்டுவின் தேர்ச்சி யாருக்கும் வராது. மூணு கல்யாணம் ஆகியிருந்தது மட்டுமா; ஆத்துமணலை எண்ண முடிந்தாலும் அருச்சுனனுக்கு இசைந்த பெண்டுகளை எண்ணமுடியுமா என்கிற கதைதான் அவரிதுவும்.

வயது முதிர்ந்து, உடல் தள்ளாடி வீடுநிறைய்ய கொள்ளுப் பேரம் பேத்திகள் எடுத்துவிட்ட அப்பி நாயுண்டு, இந்த அனுபவங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் இளவட்டப் பிள்ளைகளின் திறந்த வாய்க்குள் ஈ நுழைந்து வெளியே வருவதுகூடத் தெரியாது!

❖

## 22

ஊர் மடத்துக்கு மன்னார்நாயக்கர்போய்ச் சேர்ந்தபோது ராத்திரி ரொம்ப நேரமாகி விட்டிருந்தது.

இவ்வளவு நேரத்துக்குப் பிறகு அங்கே போவதா வேண்டாமா என்றும் யோசனை வந்தது. என்றாலும் அவரால் அங்கே போகாமல் இருக்கமுடியவில்லை. அந்த இடத்துக்கு அப்படி ஒரு கவர்ந் திழுக்கும் சக்தி இருந்தது. குடிக்கும் இடத்துக்கு ஒரு குடிகாரனை அவனறியாமல் அவனைத் தள்ளிக்கொண்டு போவதுபோல் ஏதோ ஒன்று அவரையும் அங்கே தள்ளிக்கொண்டு போனது.

அச்சம்மாவும் ஊரிலுள்ள மற்ற பெண்டுகளும் சொல்ற மாதரி 'சாப்பிட்டகை ஒணறுவதுக்குள்ள அங்கே போய் நிக்கணும்' 'சாப்பிட்டவாய், கொப்பளித்துக் துப்புகிறதே அங்கனெ போய்த்தான்'

''பொரு ஹிண்டிகி போய்ன காலு
பொரணி மாட்டலாடின நோறு''

என்பாள் அச்சம்மா.

*('பிறன்மனை போன கால்கள்; பிறர் பற்றியே பேசியவாய்' இவை அதையேதான் செய்து கொண்டிருக்கும் என்பது.)*

எந்த அடைமழை பெய்தாலென்ன, எந்தப் புயல் வீசினாலென்ன, மடத்துக்குப் போகலையென்றால் மண்டை வெடித்துச் சிதறிவிடும் அவர்களுக்கு.

மடத்துக்குக் கதவுகள் கிடையாது; ஒரே திறந்தாம் பத்திதான். யாராவது அங்கே ஒன்றிரண்டு பேராவது இருந்துகொண்டுதான் இருப்பார்கள். பெரியவர் யாரும் இல்லையென்றால், கைக்குழந்தை களை வைத்துக்கொண்டு, அவர்கள் அழாமலிருக்க விளையாட்டுக் காட்டிக்கொண்டு, ரண்டு பெரிய பிள்ளைகளாவது அங்கிருப் பார்கள்.

'ஊர்மேல்ப் பயணம்' போகிறவர்கள், பரதேசிகள், பிச்சைக் காரர்கள் இப்படியாவது வந்து கொஞ்சம் தங்கி தகிப்பாறிவிட்டுப் போவார்கள்.

இப்படி வந்தவர்களில் ஒருத்தன்தான் சாப்பாணி, யாரையும் கேட்காமல் அவனே மடத்தைத் தூத்து, தெளித்தான். வெள்ளிக் கிழமை போன்ற நல்ல நாட்பொழுதுகளில் மடத்தை ஒட்டடை அடித்துத் தட்டிப் பெருக்கினான். நடைப் பயணிகள் ராப்பொழுது மடத்தில் தங்க நேர்ந்தால் அவன் ஊருக்குள் போய் 'தருமச்சோறு' எடுத்துக்கொண்டு வந்து அவர்களுக்கும் போட்டு தானும்

சாப்பிட்டுக்கொள்வான். மடத்தில் ராத்திரி வந்து தங்குகிறவர்கள் ராப்பட்டினி இருக்கக்கூடாது என்பது ஊர்க்கட்டு.

எப்பவாவது சப்பாணி திடீரென்று காணாமல்ப் போய்விடுவான். பத்துநாள், ஒருமாசம் கழித்து, போனதுபோலவே திடீரென்று வந்து நிற்பான். ''என்னடே சப்பாணி எங்கடே போனெ?'' என்று கேட்டால் ''ராமேச்வரம் போனேம்; கன்யாகுமரி போனேம்'' என்று சொல்லுவான்.

யாராவது, அவனுக்கு மனசுக்குப் பிடித்த சாமியார்கள் மடத்துக்கு வந்தால் அவர்கள் புறப்பட்டுப் போகும்போது அவனும் அவர்களோடு கொஞ்சதூரம் போய் ஊர்கள் சுற்றிவிட்டு வருவான்; அவர்களோடு சேர்ந்து சிலும்பி அடிப்பான்.

சிலும்பியில் கஞ்சாவைப் போடுவதற்கு முன், அந்தக் கஞ்சாவை உள்ளங்கையில் வைத்து அதில் அய்ந்தாறு சொட்டுத் தண்ணீர் விட்டு, நசுக்கி நசுக்கி உருட்டி பெருவிரலால் அமுத்தி நீரை வடித்துவிட்டு, பிறகும் அதேபோல சொட்டுத் தண்ணீர்விட்டு நசுக்கி நசுக்கி உருட்டி... இப்படியாக எத்தனை தடவைகள் அதிகம் செய் கிறார்களோ அதுக்குத் தக்கபடி 'தம்' ரொம்பச் சொகமாக அமையும் என்று சொல்லுவார்கள்.

இதை ஒரு வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டிருப்பவர்களுக்குக் கண்கண்ட சுவாரஸ்யம். கஞ்சாவை உள்ளங்கையில் வைத்து அதில் தண்ணீர் விட்டு, பெருவிரலால் பிசைந்து உருட்டும் போதும் அதே பெருவிரலால் அதை அமுக்கி தண்ணீரை வடிக்கும் போதும் அதைச் செய்கிறவருடைய முகம் போகிற போக்கு! சப்பாணி மிகவும் ஒல்லி. உலகத்திலேயே ஒல்லி யார் என்று கேட்டால் சப்பாணி என்று பதில் கிடைக்கும்; உயரமும் கம்மிதான். அவனுடைய மண்டைவாகு, ரோமம் நரைக்காததும் பல் உதிராததும் வயசைக் கண்டுபிடிப்பது சிரமம். இந்த 'அழகில்', பத்து இருபது ரோமங்களே கொண்ட ஒரு ஏழைத் தாடி அவனுக்கு. செல்வச் செழிப்பு மிக்க அடர்ந்...த, நீண்ட...ட தாடிக்கு முன்னால் சப்பாணியின் தாடி ஒரு கொசு; அதிலும் ஒரு 'குருட்டுக்கொசு'

அவன் உடம்பின் முழுப் பலத்தையும் கொடுத்துக் கஞ்சா கசக்கும் போது அவனுடைய முகமும் உடம்பும் கோணுகிற 'அழகை' அந்தப் பரதேசிகள் பார்க்காமல் வேற ஏதோ கவனமாக இருப்பார்கள்! அதைக்கண்டு அனுபவித்து, இதழ்பிரியாச் சிரிப்போடு கண்களால் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொள்வது ஊர்க்காரர்கள் மட்டும்தான்.

தடவைக்குத் தடவை சிலும்பியைச் சுத்தம் செய்து, சிரமப்பட்டு -'உயிரைக் கொடுத்து' - கசக்கிப் பிழிந்த அந்த ''பரிபூரண''த்தை சிலும்பியினுள் வைத்து, சிறிய்ய கோமணத்துணி போன்ற வெள்ளைத் துணியை குளிர்ந்த தண்ணீரில் நனைத்து, ரொம்பப் பிழியாமல் பக்குவமாகப் பிழிந்து, அதைச் சிலும்பியின் அரையில் பூப்போல சுற்றி, சுற்றிய தொங்கலை மடித்து, இரு கைகளுக்குள் அடக்கி, நெருப்புக்காகப் பணிந்து குனிவது ஒருவித நமஸ்காரம் போல்த் தோன்றும்!

சிலும்பிக்கு 'உயிர்' வரவழைப்பவன் என்கிற சலுகையில் முதல்த் 'தம்' சப்பாணிக்குக் கிடைக்கும். 'பட்டம்' முடிந்து அவனிடம் வரும்போது பவ்யமாக விலகிக்கொள்வான், வற்புறுத்தி நீட்டினால் பணிவோடு சிலும்பியைத் தொட்டுக் கும்பிடுவதோடு சரி.

ஒருநாள் மிராட்டிக்காரர்களின் கூட்டம் - ''கேங்க்'' - ஊர்மடத்துக்குப் பக்கத்தில் வந்து தங்கியது. வருஷத்துக்கு ஒரு முறையோ ரண்டு வருஷத்துக்கு ஒரு முறையோ இப்படி வந்து தங்கும் அந்த நாடோடிக் கூட்டம்.

வந்தவர்களேதான் திரும்பவும் வருகிறார்கள் என்றும் சொல்ல முடியாது. புதுப்புதுக் கூட்டமாகத் தெரியும்.

அவர்கள் வந்து தங்கியிருக்கும் நாட்களில், ஊர்க்காரர்கள் யாருக்கும் கம்மாய்க்கரையில் 'ஒதுங்க' நீதமிருக்காது. பாவாடை சட்டையும் தலையில் ஒரு கண்டாங்கித் துணியையும் அணிந்து கொண்டு, ''ராட்சஸி''களைப் போன்ற பெண்களின், உரத்த கூக் குரல்ப் பேச்சுக்களை ஊர்ப் பிள்ளைகள் கொஞ்ச தூரத்தில் இருந்து கொண்டு, வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பார்கள்.

இந்தக் கேங்க்காரர்களை சதா கண்காணிக்க எப்போதும் ரண்டு போலீஸ்காரர்கள் அவர்கள் கூடவே வந்து இருப்பார்கள்.

ஒரு போலீஸ் சரகத்தைத் தாண்டி மறுபோலீஸ் சரகத்தின் எல்லைவரை கொண்டுபோய் அவர்களைச் சேர்க்கும்வரையும் அவர்களோடேயே போய், ஒப்படைத்து விட்டுத்தான் திரும்பு வார்கள். மிராட்டியர்களுக்குள்ளேயே திடீரென்று கலகம் வரும். ஊர்க்காரர்களுக்கு இது ஒரு ஆச்சரியம்; கொஞ்ச நேரத்துக்கு முன்னால்த்தான் அவர்கள் கலகலப்பாகச் சிரித்துப் பேசிக்கொண்டிருந்திருப்பார்கள்! அவர்கள் எது செய்தாலும் அதில் ஒரு ராட்சசத்தனம் இருப்பதாகப் படும்.

கலகம் வந்து அவர்களுக்குள் ஒருவரையொருவர் வெறித்தனமாக தாக்கிக்கொண்டிருக்கும்போது போலீஸ்காரர்கள் 'எஞ்சிவனே' என்று பார்த்துக்கொண்டுதானிருப்பார்கள். ஏன் அப்படி என்று கேட்டால், ''நாங்க இதுக்காக வரலை; இந்தக் களுதை ஊருக் குள்ளார போயி என்னத்தையும் களவாண்டுட்டுப் பொயிறப் படாதேங்கிறதுக்குத்தான் சர்க்காரு எங்களெ அனுப்பிச்சிருக்கு'' என்பார்கள்.

என்னதான் போலீஸார் கண்காணித்துக்கொண்டிருந்தாலும் கேங்க்காரர்களில் சில முக்கியமான புள்ளிகள் போலீஸாருக்கு டேக்கா கொடுத்துவிட்டு ராத்திரியோட ராத்திரியாய் ரொம்பத் தூரம் போய்த் திருடிக்கொண்டு வந்துவிடுவார்கள் என்று பேசிக் கொண்டார்கள்.

ஒரு மிராட்டிக் கேங்க் ஒரு ஊரில் இருக்கும் வரையும் அந்த ஊரில் எந்தவிதக் ''களவு சில்லரை''கள் நடப்பதில்லை. அவர்கள் ஊரைவிட்டுப் போனபிறகுதான் ''அதக் காணலெ இதக் காணலெ'' என்கிற பேச்சு வரும். நெசமாகவே அது மிராட்டிக்காரங்க செய்ததா வேற யாரும் அவங்க பேரை வச்சிச் செய்ததா என்று தெரியாது.

கேங்க்காரர்கள் வந்துவிட்டார்கள் என்றால் கிராமத்துக்காரர் களுக்குப் பொழுது நல்லாப் போகும்: வேடிக்கை பார்க்கிறது என்கிற சாக்கில். இதில் சிறுவர்கள் பார்க்கிற வேடிக்கை வேற: இளவட்டங்கள் பார்க்கிற விசயங்கள் வேற!

மிராட்டிச்சிகள் ஓங்குதாங்காகவும் முரட்டுத்தனமாகவும் இருந் தாலும் நல்...ல சிகப்பு நிறமாக இருந்தார்கள். அந்த நிறமே இவர் களை ஒரு அசத்து அசத்தும்; 'மாட்டுக்கு மயிலைநிறம் பெண்டுக்கு சேப்புநிறம்' என்ற கூடுதலான ஒரு ஆதரிப்புடன், அழுக்கும், கடந்து செல்லும்போது வீசும் காரநெடியும் இளவட்டங்களை என்னவோ செய்யும். அந்த சேப்புநிறத்துக்கு அழுக்கும் ஊத்தையும் ஏதோ ஒரு வகையில் ஒத்துப்போவது போல்த் தெரியும்!

ஊராரும் மிராட்டியர்களும் பழகத் தடையாக இருந்தது மொழி. அவர்கள் இவர்களிடம் என்ன கேட்கிறார்கள் என்று இவர்களுக்குப் புரியாது; இவர்கள் சொல்லுவது விளங்காது. ஊர்க் கிணத்தடியில் வந்து குடிக்கத் தண்ணீர் சேந்தித் தரச் சொல்லி வாங்கிக்கொண்டு போவார்கள். மொழி தெரியாவிட்டாலும் இப்படிச் சமயங்களில் கட்டாயம் 'பேசி'த் தானாக வேண்டும்: வேலைகள் மிகுந்த ஆடைக் காலத்தில் கிணத்தடியிலும் பரபரப்பாகத்தானிருக்கும். ஒரு வாளி

மட்டும் என்றாலும் சேந்தி ஊத்தி அனுப்பிவிடலாம். இருநூறு முந்நூறு பேர் கொண்ட ஒரு கூட்டத்துக்குத் தண்ணீர் சேந்தி ஊத்திக் கொண்டிருக்க யாருக்கு சாவகாசம் இருக்கும். ஆனாலும் இவர்கள் ஆளுக்கு ஒரு வாளி என்று சேந்தி ஊத்தத்தான் செய்தார்கள்.

மிராட்டிச்சிகளில் சில பேர், இளவட்டங்களிடம் பாத்திரங்களை நீட்டி தண்ணீர் நிரப்பச் சொல்வார்கள். தண்ணீருக்காக பாத்திரம் நீட்டும் மிராட்டிச்சி வயசுப்பொண்ணாக இருந்தால் கிணத்தடியில் அது கொஞ்சம் கலகலப்பை ஏற்படுத்தும். ஒருநாள் இதேபோல் ஒரு அழகான மொரட்டு மிராட்டிச்சி வந்து தண்ணீர் சேந்திக்கொண்டிருந்த சப்பாணியிடம் பாத்திரத்தை வைத்துத் தண்ணீர் ஊற்றும்படி வேண்டினாள். எல்லாரையும்போல அவனும் ஒரு வாளித் தண்ணீரையாவது ஊத்தியிருக்கலாம்; அவளைக் கவனிக்காதது போல அவன் அங்கிருந்து புறப்பட ஆரம்பித்தான், வாளியை எடுத்துக்கொண்டு. இப்படி யாருமே செய்வதில்லை என்பதில் அவள் அவனுக்கு வழியைவிடாமல் வந்து மறித்துக் கொண்டாள்! ஏதோ சொன்னாள்; என்ன சொன்னாள் என்று யாருக்கும் புரியவில்லை. கோபமாகப் பேசவில்லை என்று மட்டும் தெரிந்தது. அவளை மீறிக்கொண்டும் இவனால்ப் போக முடியவில்லை. அவளுக்கு முன்னால் இவன் ஒரு ஆட்டுக்குட்டிப் போல் இருந்தான். இந்தக் காட்சி அங்கிருந்த ஆண்பெண்களுக்கு சுவாரஸ்யம் தந்தது; முக்கியமாக இளவட்டங்களுக்கு. மொழி தெரியாவிட்டாலும், சப்பாணியை மறித்துக்கொண்டு நின்ற முரட்டு மிராட்டிச்சியிடம் அவர்கள் ''விடாதே விடாதே'' என்று உத்ஸாகப்படுத்தினார்கள்.

வாய்மொழி தெரியாவிட்டாலும் ஓசை மொழி என்று ஒன்று இருக்கிறதே. மிராட்டிச்சி அதைக் கண்டுகொண்டாள். அவளுக்கு ஒரு தைரியம் பிறந்தது.

சப்பாணியிடம் அவள் நெருக்கமாகச் சென்று அவனுடைய ஏழைத் தாடியைத் தொட்டு உருவி, உருவிய தனது விரல்களை முத்தமிட்டு, அவனை மன்றாடினாள், காலியாக உள்ள ஏனத்தை நீட்டி. அப்படி அவள் கெஞ்சுவது அங்கேயிருந்த ஊர்ப் பெண்களின் மனசைத் தொட்டது.

''ஏ சப்பாணி, நீதாம் ஒரு வாளித் தண்ணி அவளுக்கு எறைச்சி ஊத்துனா என்ன'' என்று கேட்டார்கள்.

''முடியாது; நாம் மாட்டெம். நா என்ன இவளுக்கு வச்ச ஆளா'' கோவத்தோடு வெடுக்கென்று கேட்டான். தன்னிடம் அவள் நடந்துகொண்டது சரியில்லை; தன்னை அவள் ரொம்பத்தான்

ஏனம் பண்ணுகிறாள் என்று பட்டுவிட்டது. அவன் கூசக் கூச அவள் அதிகமானாள்!

அவள் பேசுவது அங்கேயுள்ள அவளைச் சேர்ந்த பெண்டுகளுக்கு வேடிக்கையாக இருந்திருக்கும்போல; அவர்கள் கெக்கொலி கொட்டி நகைத்தார்கள்.

இது சப்பாணிக்கு இன்னும் கோவத்தை அதிகமாக்கியது. அவனுடைய கோபநிலை எல்லோரையும் சிரிக்க வைத்தது. அவனது மிகச் சிறிய ஒல்லியான உடம்பு அவனது பெருங் கோபத்தைத் தாங்க முடியாமல் கிடுகிடுவென்று ஆடியது. ஒரு பொம்பளைக்கு முன்னால் ஒரு ஆம்பளை இப்படி ஆடி நடுங்குவது இளவட்டங்களுக்கு வேடிக்கையாக, ஆச்சரியமாகப் பட்டது.

இதே நிலையில் அவனை விட்டுவைத்தால் தாங்கமாட்டாமல் விழுந்துவிடலாம். அந்தச் சமயத்தில்தான் அந்த மிராட்டிச்சி ஒரு காரியம் செய்தாள்! பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டு, ஒரு பொம்மையைத் தூக்குவதுபோல் அவனைத் தூக்கிக்கொண்டு ஓடினாள்.

❖

## 23

முதலிலிருந்தே ஓரக்கண்ணால் இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த ஆம்பிளை மிராட்டிகள், இப்படி அவள் அவனைத் தூக்கிக்கொண்டு ஓடுவதைப் பார்த்து கைத்தட்டி வாய்விட்டுச் சிரித்தார்கள்.

அந்தச் சிரிப்புகள் அவளுக்கு மேலும் உத்ஸாகத்தைக் கொடுத்தது போல. கிணற்றையும் மடத்தையும் சுற்றிச் சுற்றி வந்தாள்!

முதலில் அவள் பிடியில் கையைக் காலை ஆட்டி உளத்திய சப்பாணி கப்சிப் என்று அடங்கிவிட்டான்.

கொஞ்சம் கழித்து அவள் சப்பாணியை அப்படியே கொண்டு வந்து, பூப்போல, மடத்தில் உட்கார்த்தி வைத்து விட்டுப்போய் விட்டாள்.

சப்பாணியைச் சுற்றி ஒரே கூட்டம்! யார் வந்து எது கேட்டும் அவன் வாயே திறக்காமல் அப்படியே 'பிரமத்தி' பிடித்ததுபோல உட்கார்ந்திருந்தான்.

இந்தமாதிரி ஒரு பெண்பிள்ளை வந்து கிராமத்தில் ஒரு ஆம்பிளையோடு தொட்டு விளையாடுவது என்பது ''பங்காருப் பட்சி'' ஒருத்திக்குத்தான் உண்டு.

அங்கீகரிக்கப்பட்ட ஒரு உரிமையாக அவள் வந்து யாரோடும் எந்தப் பெரிய மனிதரோடும் தொட்டு விளையாடுவாள். அவளை யாரும் ஒண்ணும் சொல்ல முடியாது; சொல்லவும் கூடாது. அது அவள் இஷ்டம். அவள் யாருக்கும் கட்டுப்பட்டவள் அல்ல. கழை ஒன்றுக்குத்தான் கட்டுப்பட்டவள். அந்தக் கழை மரம்தான் அவளுடைய புருசன். அதுதான் அவளுக்குத் *தாலிகட்டியிருக்கிறது.

தேன் கூட்டில் ஒரு ராணி ஈதான் உண்டு. தொம்மரிகள் கூட்டத்திலும் அப்படியே ஒரு ராணியான பங்காருபட்சிதான் உண்டும். இன்னொரு பங்காருபட்சி அந்தக் கூட்டத்தில் உருவானால் கூட்டம் ரண்டாகப் பிரிந்துவிடும். அவளுடைய கூட்டத்தில் எந்த ஆணோடு வேண்டுமானாலும் அவள் உறவு கொண்டாடி குடும்பம் நடத்தலாம்.

கிராமத்தில் ஒரு பங்காருப்பட்சி எந்த ஆணின் மேல்வேட்டியையும் உரிமையோடு பறிப்பாள்; விரும்பினால் கொடுப்பாள். அது எழுதப்படாத சட்டம்! தன் மேல்வேட்டியை வந்து பறிக்க மாட்டாளா என்று ஏங்க வைக்கிற அதிரூபவதியான பங்காருப் பட்சிகளும் இருந்தார்கள். எங்கே வந்து நம்ம வேட்டியைப் பறித்துக்கொண்டு போய் விடுவாளோ என்று பயப்படுத்தற பங்காருப் பட்சிகளும் உண்டும்!

---

*தாலிக்கட்டியிருக்கிறது - தொம்மரிகள் என்று அழைக்கப்பட்ட கழைக் கூத்தாடிகளின் கூட்டத்துக்குத் தலைவியான பங்காருப்பட்சி, தனக்குக் கல்யாணம் செய்து கொள்ள விருப்பம் ஏற்படும்போது, ஒரு முகூர்த்தத்தில் தாலியை எடுத்து அவளே கழைமரத்தைத் தொட்டு தன் கழுத்தில் கட்டிக்கொள்வாள்.

அந்த வினாடியிலிருந்து அவள் பங்காருப்பட்சி என்று அழைக்கப் பட்டாள். அந்தக் கூட்டத்தின் தலைவியாக தானே தன்னைப் பிரகடனப் படுத்திக்கொள்கிற ஒரு முறை

பறித்துக்கொண்டு போய்விட்ட மேல்வேட்டியை பங்காருப் பட்டி இருக்கும் இடம் போய் நின்று மரியாதையாகத்தான் கேட்டு வாங்கவேண்டும். பதிலே பேசாமல் அவள் இருப்பாள். தலையைச் சாய்த்து அவள் தோரணையான, ஒரு ஒய்யாரமான சிரிப்பும் சிரிக்கலாம். மூச்சுக் காட்டாமல் மேல்த்துண்டை எடுத்து வீசி, - 'போ; எடத்தைக் காலிபண்ணு' என்றும் -எறியலாம். எது செய்வாள் என்று அவளைத் தவிர யாருக்குத் தெரியும்!

மிராட்டிச்சிகளில் இதுவரை யாரும் இப்படி 'வேடிக்கை' பண்ணியதில்லை. ஒரு புது மிராட்டிச்சி போலிருக்கு! காலம் ரொம்பத்தான் மாறிக்கொண்டு வருகிறது என்று பெரியாட்களும், பெண்டுகளும் பேசிக்கொண்டார்கள் ஊருக்குள். ''அந்தோ... அந்த மிராட்டிச்சிதாம் அப்படிச் செஞ்சது'' என்று மன்னார் நாயக்கரிடம் காட்டினார்கள், மடத்தில் சப்பாணியைச் சுற்றி நின்றவர்கள். அவருக்கு சந்தோஷம் பொத்துக்கொண்டு வந்தது, கூடவே பயமும் வந்தது. மிராட்டியர்கள் பச்சை ரத்தம் குடிப்பவர்கள் என்று கேள்விப்பட்டிருந்தார்கள். அவர்களில் யாரும் இதுவரை நம்ம பெண்களிடம் 'தப்பிதமாக' நடந்து கொண்டதில்லை; அதுபோல வே அவர்களுடைய பெண்டிரும் இங்கே நமது இளவட்டுகளிடம் தவறாக நடந்துகொண்டதும் கிடையாது. இது எப்படியோ ஒரு வேடிக்கைப் போல் நடந்துவிட்டது. அதுவும் இந்த சப்பாணியால்த் தான். கிணத்தடிக்கு என்று சில ஒழுங்குமுறை இருக்கிறது. குடம் நிறைந்தவுடன் மீதி வாளித் தண்ணீரை கீழே கொட்டுவதற்கு முன் யாரும் - தொடாதவர்கள் - குடத்தைக் கொண்டு வந்து மூலையில் வைத்திருந்தால் அதில்த்தான் ஊற்ற வேண்டும். தொடாதவர்களில் பச்சைக் குழந்தைக்காரி வந்து தண்ணீர் கேட்டால் கட்டாயம் தண்ணீர் ஊற்றி அனுப்ப வேண்டும். கிணத்தடியில் வந்து தாகத்துக்குத் தண்ணீர் கேட்பவர்களுக்கு 'வர்ணத்தை'த் தெரிந்துகொண்டு, வாளித் தண்ணீரை அவர்கள் முன்வைப்பது, வாளியைத் தருவது, வாளித் தண்ணீரை கையில் ஊற்றுவது என்றெல்லாம் இருக்கிறது.

நிறை கர்ப்பிணிகள் தண்ணீர் சேந்த வந்தால் அவர்களை சேந்த விடாமல் - பகையாளி வீட்டுப் பெண்ணாக அவள் இருந்தாலும் - தாம்தான் சேந்தி ஊற்றி அவர்கள் குடத்தை ரெப்பி தூக்கிவிட்டு அனுப்பவேண்டும். கிணற்றில் ஒன்றிரண்டு ''ராட்டு''கள் இருந்தால் அதில் கயிறு போட்டு இறைக்கும் உரிமை கர்ப்பிணிகளுக்குத்தான் உண்டு. இப்படி வெளியார்கள் வந்து குடிக்கும் தண்ணீருக்காக ஏனத்தை ஏந்தினால் முதல்காரியம் அவர்களுக்குத் தண்ணீர் சேந்தி

ஊற்றிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கவேண்டியதிருக்க இந்த கூறு கெட்ட சப்பாணி இப்படிச் செய்திருக்கானே என்று நினைத்துக் கொண்டே மன்னார் நாயக்கர் அவனிடம் போனார்.

சப்பாணி யாரையும் பார்க்காமல் என்னத்தையோ பறி கொடுத்தவன்போல் மருண்டுபோய்க் கிடந்தான். 'என்ன எளவு இவன் இப்படி பொண்டாட்டியப் பறி கொடுத்தவம்போல இருக்காம்' என்று நினைத்துக்கொண்டு, ''அடே சப்பாணி, அந்த மிராட்டிச்சி ஒன்ன என்ன செஞ்சாடா; முத்தம் வச்சாளாமேடா...'' என்றார். சுற்றியிருந்தவர்கள் சிரித்தார்கள்.

''நாமளும் இருக்கமெ என்னத்துக்கு; நமக்கிக் கெடச்சதா இந்த யோகம்?'' என்றார் வேலுக்கோனார் சலிப்புடன்! இவர்கள் பேசுவது ஒன்றும் சப்பாணியின் காதில் விழுந்ததாகத் தெரியலை.

''ராத்திரிக்கு ஞா...பகமாப் படுத்துக்கொ சப்பாணி; நீ மடத்துலதாம் படுத்துக் கிடக்கிறதுங்கிறது அந்த மிராட்டிச்சிக்கு நல்லாத் தெரியும். 'வந்து அத்தாசமாத் தூக்கீட்டு ஓடினாலும் ஓடீருவா, வல்லரக்கியா இருப்பா போலிருக்கே சப்பாணீ...'' என்றார் மன்னார் நாயக்கர்.

''நாஞ் சப்பாணி பக்கத்துலதாம் படுக்கப்போறென் இண்ணைக்கி'' என்றார் வேலுக்கோனார்.

''அது செரி; அவம்ண்ணு நெனைச்சி ஒம்மத் தூக்கீட்டு போனா நல்லதுண்ணு பாக்கீருபோல'' என்றார் சிருப்பாணிகளுக்கிடையே.

❖

## 24

அந்த அத்த ராத்திரியில் மன்னார் நாயக்கர் மடத்துக்கு நுழைந்து பார்த்தபோது...

எல்லாருமே அனேகமாக உறங்கியிருப்பார்களோ என்று நினைத்துக்கொண்டு போனவருக்கு, கங்குபோல் அரிக்கன் விள்க்கை சுருக்கி வைத்திருந்தாலும் இன்னும் யாரும் படுக்காமல் ஒரு மூளையில் உட்கார்ந்து கசுபுசு கசுபுசு என்று சன்னமான குரலில் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டார்.

மழைக்காலங்களில் மட்டும் *ஒலுங்குக் கடிக்குப் பயந்து லைட்டை சீக்கிரமே அணைத்துவிடுவார்கள். மற்ற நாட்களில் கொஞ்சம் சுருக்கினாலும் எரிந்துகொண்டுதான் இருக்கும், ஊர் ஒடுங்கும்வரை.

இருட்டில் நடந்துவந்த அவருக்கு அந்த மிகச் சிறிய வெளிச்சம் கவனிக்கப் போதுமானதாக இருந்தது. அந்தக் கூட்டத்தில் சப்பாணி இருப்பதும் தெரிந்தது. யோகக்காரந்தான்; எந்தப் பட்டாளத்துக்கும் அவனை வந்து யாரும் பிடித்துக்கொண்டு போகமாட்டார்கள் என்று நினைத்தார்.

மன்னார் நாயக்கரைக் கண்டதும் முதலில் யாரோ என்று நினைத்து பிறகு தெரிந்துகொண்டார்கள்.

''யோவ் பயந்தாரி, எங்கனெ போயி இந்நேரவரைக்கும் ஒளிஞ்சீட்டுக் கிடந்தீரு?'' என்று வரவேற்புக் கொடுத்தார் வேலுக் கோனார். அவருக்குப் பக்கத்தில்ப் போய் மன்னார் நாயக்கர் நெருக்கமாக உட்கார்ந்தார். இன்னொரு அம்பை எடுத்தார் வேலுக்கோனார்; குரலைச் சுருக்கி இவருக்கு மட்டும் கேட்கும் படியாக, ''யோவ், என்னத்தெப் பண்ணீட்டு வந்தீரு ஒரே கெட்டவார்த்தை வாடையடிக்கி?'' என்று கேட்டார்!

இருட்டிலும் கூட 'சரியாகக் குறிபார்த்து' அடிப்பதில் வேலுக் கோனார் வல்லவர்தான் என்று நினைத்து ஆச்சரியப்பட்டுப் போனார் மன்னார் நாயக்கர்.

கொஞ்சம் நேரம் பேசிக்கொண்டிருந்ததில், சப்பாணியைத் தவிர அங்கிருந்த எல்லாருமே அங்கங்கே என்று பல திக்குகளில்ப் போய் ஒளிந்திருந்துவிட்டு கொஞ்ச நேரத்துக்கு முன்னாடிதான் வந்திருக் கிறார்கள் என்று தெரிந்துகொண்டார்.

''கேலிப் பொளப்பாய் போச்சி; தாயோ...து இந்த வெள்ளைக் காரனாட்சியிலெ. பொண்டாட்டி பிள்ளைகளோட நிம்மதியா இருந் தோம்ன்னு கெடையாது. பட்டாளத்துக்கு ஆள்ப்பிடிக்க வராம்ன் னுட்டுக் கேள்விப்பட்டதிலிருந்து ஒரு நிம்மதியில்ல பாத்துக்கிடும். மூலக்காட்டு வேப்பமரத்தடியிலெ போயி வெக்கு வெக்குண்ணு கெடந்துவிட்டு, செத்த மின்னாடி தாம் வந்து வயித்துப் பாட்டுக்குப் பாத்துவிட்டு வர்ரென்'' என்றார்.

---

*ஒலுங்கு - கொசு

ஒவ்வொருத்தரும் அவரவர் ஒளிஞ்சிருந்த 'வயணத்தை'ச் சொல்லிச் சொல்லி மற்றவர்களைச் சிரிக்கச் செய்தார்கள்.

''என்ன மயித்துக்கு இப்பிடி ஒளிஞ்சிட்டுக் கெடக்கணும்ன்னு கேக்கென்; தாயோ...து ஆறிலும் சாவு நூறிலும் சாவு!'' என்றார் தைரியஸ்தர் (!) மன்னார் நாயக்கர் சிரித்துக்கொண்டே.

''பேசாமக் கெடயும்; போயும் போயும் இந்த வெள்ளைக் காரனுக்காகவோ நாம போயி சாகணும். அவன் கொளுத்துப் போயி செர்மன்காரனோட சண்டை போட்டா அதுக்கு நாமா பழி?'' என்று கேட்டார் வேலுக்கோனார்.

பேச்சு அரசியலுக்குத் திரும்பியது.

❖

முதன் முதலில் அந்தக் கிராமத்தில் ஒரு அரசியல்ப் பொதுக் கூட்டம் நடந்தது. பெரிய பெரிய காங்கிரஸ் பேச்சாளர்கள் வந்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.

கூட்டம் ஆரம்பிக்க முன்னால் அவர்களில் சிலர் உணர்ச்சி ததும்பப் பாடல்கள் பாடினார்கள். அதைப்போலப் பாடல்கள் கிராமத்துக்குப் புதுசு. ஆவலோடு அவைகளைக் காது கொடுத்துக் கேட்டார்கள். தாளக்கட்டோடும் ராக அடக்கத்தோடும் ஒருத்தர் இப்படிப் பாடினார்:

''ஆட்டுத் தோலுக்கிடங்கொடுத்த
தாலே வந்த மோசம் - அத
னாலே வந்த மோசம்...''

எப்படி வெள்ளைக்காரன் நம்ம நாட்டுக்கு முதல்முதலில் ஆட்டுத்தோல் வாங்க என்று இங்கே ஒரு வியாபாரியாக வந்து நம்மை ஏமாற்றி, நம்மவர்களைப் பிரித்து நமக்குள் சண்டை மூட்டி விட்டு வஞ்சகமாக நம்மை அடிமைப்படுத்தி ஆண்டுகொண்டிருக் கிறான் என்று அழகாக விவரித்தது பாடல்.

ஒவ்வொரு பாட்டு முடிந்ததும், பஜனையில் ''கோவிந்த நாம சங்கீர்த்தனம்...'' சொல்லுவதுபோல அவர்கள் ''வந்தே மாதரம்'' என்று சொல்லி, அதை ஜனங்கள் எப்படி வாங்கித் திரும்பச் சொல்லணும் என்று சொல்லித் தந்தார்கள். இதனால் அந்த கோஷங்களைத் திரும்பத் திரும்பச் சொல்ல நேர்ந்தது. இது

குழந்தைகளை ரொம்பத்தான் உத்ஸாகப்படுத்தியது! அவர்கள் ரொம்ப ஆர்வமாகக் கலந்துகொண்டார்கள் இதில். ''வந்தே... மா... தரம்'' என்று சொல்லி, தே என்பதைக் கொஞ்சம் நீட்டி, மா என்பதைக் கூடக் கொஞ்சம் நீட்டி ஒரு நாமசங்கீர்த்தனம்போல - ஒரு சுருதியோடு சேர்த்துச் சொல்லுவதுபோல - சொல்ல வேண்டும் என்று சொல்லிக் காட்டினார் அந்த சிந்துபூந்துறைக்காரர்.

''வந்தே... மா...தரம்''

''அல்லா...ஹூ... அக்குபர்''

''நமதே... ராஜ்யம்; அடைந்தே... தீருவோம்''

''போலோ; மஹான் மகாத்மா காந்தீக்கி; ஜே''

பிரசங்கிகள் ஒவ்வொருவராகப் பேசினார்கள். மக்களுக்குத் தெரியவேண்டுமே என்று எளிய தமிழில், பேச்சு நடையில் கதை காரணங்களோடு ஜனரஞ்சிதமாகப் பேசினார்கள்.

குடியின் கேட்டைப்பற்றி ஒருவர் பேசினார். ''முந்தியெல்லாம் இப்படிக் கடையை ஏலத்துக்கு விட்டு ஊரு தவறாமல் கள்ளுக் கடையை நிலையாக இருக்கும்படி யாரும் பண்ணியதில்லை. இது இந்த வெள்ளைக்காரன் வந்த பிற்பாடுதான். கள்ளை வியாபாரப் போட்டிக்கு உட்படுத்தியதால், போதை அதிகம் இருக்கவேண்டும் என்பதற்காக செயற்கையாக அதில் உடம்புக்குக் கேடு விளைவிக்கும் பொருள்களை சேர்த்து விற்கும்படி ஆகிறது. இந்த அதிபோதையால் அரசுக்கும் அதை விற்பவர்களுக்கும் நல்ல காசு என்பதோடு, போதையில்க் கிடக்கும் மக்களின் தொகை அதிகமாக, ஆக ஆக அரசாங்கத்தை எதிர்த்து நடத்தும் போராட்டங்கள் திசை திருப்பப் பட்டு பலவீனப்பட்டுப் போகும். மக்கள் போதையில் கிடப்பது கொள்ளைக்காரர்களான வெள்ளைக்காரர்களுக்கு நல்லது. அதனால் நாம் முதலில் நமது மக்களைப் போதையிலிருந்து மீட்க வேண்டும். அதோடு நமது குடும்பப் பொருளாதாரத்துக்கு இந்தக் குடி உதவவே உதவாது. ஆகையால்த் தான் மகாத்மா காந்தி அவர்கள் கள்ளுக்கடை மறியலையும் தனது நிர்மாண திட்டத்தில் சேர்த்துக் கொண்டார் என்று சொல்லிக் கூட்டத்தில் பெண்கள் பகுதியைப் பார்த்து, கையெடுத்துக் கும்பிட்டுக்கொண்டே 'தாய்மார்களே உங்கள் வீட்டுக்காரர்களை, சகோதரர்களை குடிக்கவிடாமல் எப்படியாவது தடுத்து நிறுத்துங்கள்'' என்று உருக்கமாகக் கேட்டுக் கொண்டார்.

அடுத்தபடியாகப் பேசியவர் ''பஞ்சாப் படுகொலை சொக்க லிங்கம்பிள்ளை'' என்பவர். இவர் பெயரைக் கேட்டதுமே

ஊர்க்காரர்கள் முதலில் நினைத்தது, பஞ்சாப் படுகொலைகளில் இவரும் சம்பந்தப்பட்ட ஆளாக இருப்பார் போலிருக்கு(!) என்று.

பேசியபிறகுதான் தெரிந்தது அவருக்கு அந்தப்பேர் வந்ததுக்கான காரணம். ஜாலியன் வாலாபாக்கில் நடந்த அந்தப் படுகொலையை அந்தப் பாஞ்சால நாட்டுமக்கள் பட்ட இன்னலை, அப்படியே இந்த மக்களின் கண்ணெதிரே, நடந்தது நடந்ததுபோல்க் கொண்டுவந்து காட்டினார்.

பேசிக்கொண்டு வரும்போது அவருடைய முகம் அழுகையினால்க் கோணியது. கண்ணீரைத் துடைத்துக்கொள்ள மூக்குக் கண்ணாடியை பல தடவை கழற்றினார். அங்கிருந்த பெண்களையெல்லாம் ஒரு நொடியில் அழ வைத்துவிட்டார். ஒரு அப்பாவின் தோளில் உட்கார்ந்துகொண்டிருந்த சிறுவன் ''வீட்டுக்குப் போகலாம் ப்பா'' என்று சொல்லும்போதும் அவனுக்கு நாக்குக் குழறியது.

ஒரு பாவமும் அறியாத மக்களை, பெண்களை மண்டி போட்டு நடக்கும்படியாக நிர்ப்பந்தித்து வெள்ளை அதிகாரி அவர்களை சவுக்கால் அடித்ததாக அவர் சொன்னபோது இவர்கள் நெஞ்சிலே அந்த அடி விழுந்ததுபோலிருந்தது.

வெள்ளையர்கள் இவ்வளவு கொடூரமானவர்களா என்று தோன்ற ஆரம்பித்தது. இந்தக் கொடூரம் நாளைக்கு இங்கேயும் தோன்றாது என்று எப்படிச் சொல்லமுடியும்?

அவருக்குப் பிறகு பேசிய பிரசங்கி, பம்பாயில் நடந்த அந்நியத்துணி பகிஷ்கரிப்பு (புறக்கணிப்பு) போராட்டத்தில் ஒரு சத்யாகிரகிமீது வேண்டுமென்றே லாரியை ஏற்றிக் கொன்றதைப் பற்றிச் சொன்னார்.

ஜெயிலுக்குப் போன இளைஞன் எதீந்திரநாத்தாஸ் என்பவர், ஜெயிலில் 'ஒருவாய்' மோருக்காக - சாப்பாட்டில் ஒரு வேளைக்காவது கொஞ்சம் மோர் தரவேண்டும் அனைத்துக் கைதிகளுக்கும் என்று - 63 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து 64-வது நாளில் உயிர் நீத்ததைப்பற்றிச் சொன்னார். அதைக் கேட்கும்போதே அங்குள்ள மக்களின் மனசைப் பிசைந்தது அந்தச் செய்தி.

''எதீந்திரநாத் மரணம் பம்பாயை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. பம்பாயை மட்டுமா, இந்தியா பூராத்தையும்தான். பத்திரிகை

ளெல்லாம் அதைப்பற்றித் தலையங்கங்கள் எழுதின. டெல்லி சட்டசபையில் அதைப்பற்றிக் கேள்விகள் கேட்டார்கள்.

''இந்தியா உஷ்ணமான நாடு. ஜெயிலில் அடைக்கப்பட்டுள்ள கைதிகளின் உணவில் ஒரு வேளைக்காவது 'ஒரு வாய்' மோர் தர வேண்டாமா?'' என்று கேட்டார்கள்.

''ஒரு பொன்னான உயிரைப் பலிகொடுத்து, பத்திரிகைகளும் சட்டசபைக்குள்ளும் கேள்விக் கணைகள் தொடுத்து, மக்களும் கொர்ந்தெழுந்த பிறகே இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், ஜெயில்க் கைதிகளுக்குச் சிறிது மோர் தர ஒப்புக்கொண்டது.

''அப்பேர்ப்பட்ட கொடுங்கோலான அரசாங்கம் இது'' என்றார் பிரசங்கி.

கூட்டத்தின் கடைசியில் பேசியது ஒரு சிறிய்ய பையன்! இளங்கோ என்று பேர் சொன்னார்கள். பத்து வயசுக்குள்த் தானிருக்கும். மேஜைமீது அவனைத் தூக்கிவிட்டார்கள். எல்லோருக்கும் ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

கால்களையும் கைகளையும் ஆட்டி உடம்பை நிமிர்த்தி அழகான தமிழில் அவன் அமளப்பொரி பொரிந்தான். பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தையே, 'என்னோட சண்டைக்கு வாராயா?' என்று கேட்டது போலிருந்தது! கைதட்டி அவனை உத்ஸாகப்படுத்தினார்கள் வந்திருந்த பிரசங்கிகள்; அதைப் பார்த்த ஊர்க்காரர்களும் கை தட்டினார்கள்.

கூட்டத்தின் முடிவில் ஜே.கோஷம் வானைப் பிளந்தது. இப்படியாக இந்திய நாட்டு சுதந்தரப் போரின் சங்கநாதம் அந்த கிராமத்தினுள்ளும் வந்து ஒலிக்கத் தொடங்கியது. அந்த கிராமத்தின் குழந்தைகள், அந்த அரசியல் பொதுக்கூட்டத்துக்குப் பிறகு தங்கள் விளையாட்டில் ஒரு புது விளையாட்டைச் சேர்த்துக்கொண்டார்கள். சோளத்தட்டையின் நுனியில் சிறிய துண்டுத் துணிகளைக் கட்டிக் கொண்டு ஊர்வலம் வந்தார்கள். ''நமதே ராஜ்யம்; அடைந்தே தீர்வோம்'' என்று கத்தினார்கள்.

இப்படிப் பல ஊர்வலங்களை தினமும் குழந்தைகள் தவறாமல் நடத்தி விளையாண்டார்கள். ''பாரத மாதாக்கி ஜே'' ''மகாத்மா காந்திக்கி ஜே'' ''வந்தே... மா...தரம்''

❖

# 25

காலையில் எழுந்திருந்த கிராம முன்சீப் அய்யர் கச்சேரிக்கு (கிராமச் சாவடி) முன்னால் நின்றுகொண்டு 'காச் மூச்' என்று கத்திக்கொண்டிருந்தார். என்னமோ ஏதோ என்று தலையாரித் தேவர் ஓடோடி வந்தார்.

''என்னடா இது; ஊருக்கு விநாசகாலமா? பாரு மரத்துக்கு மேலே. இப்படிப் பண்ணியிருக்கானே! மேலாவிலிருந்து வந்தா நா என்னடா பதில்ச் சொல்றது? யாரு பண்ணுன காரியம்டா இது. குடியெக் கெடுத்தானே பாவி...''

மூச்சு இறைக்க அய்யர் கூவிக் கொண்டேயிருந்தார்.

தலையாரிக்கு முதலில் விளங்கவில்லை. பிறகுதான் தெரிந்து ராவோடு ராவாய் ஒரு 'பாவி' மூவர்ணக் கதர் - கொடியை பிள்ளையார் மேடை அரசமரத்தின் உச்சியில் கொண்டுபோய் உயரமான வருச்சியில் கட்டி அதை ''ஊரு உலகத்துக்கெல்லாம்'' தெரியும்படியாகப் பண்ணியிருந்தான்.

வெகுதூரத்திலிருந்து பார்த்தாலே தெரியும்படியாக இருந்தது கொடி. மங்கம்மா சாலை வழியே போகிறவர்களுக்குக் கட்டாயம் தெரியும். வேணுமென்றே அக்கிரமத்துக்காக - செய்த காரியமாப் பட்டது, அய்யருக்கு. ''கூட்டம்போட்டுப் பேசினான்கள். செரி. பேசீட்டுத் தொலை. பொ. காத்தொட போறதுன்னு இருந்தேன். இப்பொ 'அடி மடியிலே' கையைக் கொண்டாந்துட்டானெ?! நா ஒர்த்தன் பிராமணன் இங்கெ உத்யோகம் பாக்றது யாரு கண்ணெ உறுத்துறதுன்னு தெரியவில்லை...'' கொஞ்ச நேரத்துக்குள் ஒரு கூட்டத்தையே கூட்டிவிட்டார் தனது கூப்பாட்டின் மூலம்.

அதிகாலை மம்மல் நேரத்திலேயே சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு தோட்டத்துக்குப் போய்விட்டுத் திரும்பிக்கொண்டிருந்த நுன்னகொண்ட நாயக்கரைப் பார்த்ததும் அய்யர் குரலை உயர்த்தி னார். ''பாத்தியளா மொதலாளி, பயல்களோட காரியத்த!'' என்று அரச மரத்தின் உச்சியைக் காண்பித்தார்.

புகையும் சுருட்டைப் பற்களால்க் கடித்துக்கொண்டு இடது கைவிரல்களைப் புருவக்கட்டில் வைத்து ''கண்ணாடி போட்டு'' அண்ணாந்து பார்த்தார் நுன்னகொண்ட.

பகீரென்றது வயிற்றில் அவருக்கு.

'ம்; செரி' என்று எண்ணிக்கொண்டு, அங்கே கூடியிருந்த இளவட்டங்களின் முகங்களை ஒரு பார்வையால் ஆராய்ந்தார். ஓரளவுக்கு யூகிக்க முடிந்தது அவரால்.

அய்யரைப் பார்த்துச் சொன்னார் கையில் சுருட்டை எடுத்துக்கொண்டு; ''கட்டுச்சோறு கட்டிக்கிட்டா வரப் போறான் அசலூரிருந்து இதுக்கு. சவத்துப் பயல்க'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தார். அவர் போனதுக்குப் பிறகும் கொஞ்சம் நேரம் சுருட்டின் வீச்சம் அங்கே மணத்துக்கொண்டிருந்தது.

அய்யர் இந்த மாதரி பேக்கூப்பாடு' போடுவாரே தவிர தன்னுடைய கிராம மக்கள் பேரில் எப்பவும் எந்த விஷயத்துக் காகவும் மேலாவுக்கு எழுதி அனுப்பியதில்லை. இந்த விஷயங் களில் அவர் மக்களிடம் நல்ல பெயர் எடுத்திருந்தார்.

பிரிட்டிஷ் அரசு மூவர்ணக் கொடியைத் தடைசெய்திருந்தது. அதனால் எல்லா இடங்களிலும் இப்படி ராவோடு ராவாக ''கொடி ஏத்தங்கள்'' நடைபெற்று வந்தன.

இதே கொடியைப் பிடித்துக்கொண்டு பகிரங்கமாக ரோட்டில் நடந்து கைதியானவர்களும் உண்டு. அப்படிக் கொடியைக் கையில் பிடித்துக்கொண்டு போகும்போது, ''போடு கீழே'' என்று சொல்லி போலீஸார் 'லத்தி'யால் அறைவதும் உண்டு. உடம்பில் அடிமேல் அடி தொடர்ந்து விழும்போது, வலி பொறுக்க முடியாமல், தன்னையறியாமல் அய்யோ அம்மா என்று அலறுவதற்குப் பதில் 'வந்தேமாதரம் வந்தேமாதரம்' என்று மாறிமாறிச் சொல்லுவார்கள்; இதனால் அவர்கள் மேலும் அடி வாங்குவார்கள். இப்படி அலறிக்கொண்டே மயங்கி விழும்வரை அடிவாங்குவார்கள். திருப்பூர் என்கிற ஊரில் குமரன் என்ற பேருடைய பிள்ளையாண்டான் ஒருத்தனை இப்படி அடித்தே கொன்றுவிட்டார்களாம் பாவிகள் என்று பேசிக்கொண்டார்கள். தலையாரியை மரத்தின்மேலே ஏறி அந்தக் கொடியை அவிழ்க்கும்படிச் சொன்னார் கிராம முன்சீப் அய்யர். வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு தலையாரி கிட்ணத்தேவர் மேலே ஏறினார். வளர்ப்பு ஆட்டுக்குக் குழை ஒடிக்க மரம் ஏறிப் பழக்கந்தான் அவருக்கு. மேலே ஏறிப்போன கிட்ணத்தேவருக்கு மலைப்பு ஏற்பட்டது. ஒருப்பூட்டாக எழுந்து நின்று உச்சிக் கொப்பில் கொண்டுபோய் அதிலும் இருட்டு

வேளையில் எப்படிக் கட்டினான் இந்தக் கொடியை என்று யோசித்தார். கொப்பைப் பிடித்துத் தொத்தி எப்படியாவது மேலே போய் விடலாம்; கட்டுவதோ, அவிழ்ப்பதோ என்பது சாத்தியமே இல்லை என்று தோன்றியது. எப்படி ஏறிவந்து கட்டியிருப்பான் என்று யோசித்தார். சாமி வந்து ஆவேசத்தோடு ரவ்வாளி போடுகிறவனை பத்துப்பேர் சேர்ந்து பிடித்தாலும் அமைக்க முடிவதில்லை. இதெல்லாம் ஒரு வெறிச்சியில் செய்கிற காரியம் என்று நினைத்தார்.

மேலே ஏறி எந்த ஆசில் இருந்துகொண்டு கட்டிய கொடிக்கம் பத்தை அவிழ்ப்பது என்று பார்த்தார். நினைக்க நினைக்க உடம்பு புல்லரித்தது. தவறிக் கீழே விழுந்தால் அவ்வளவுதான். நச்சத்திரம் கழண்டுறும் என்பதோடு கழைக்கூத்தாடிக்காரன் சொல்லுவது போல எண்ணுவதற்கு ஒரு எலும்புகூடக் கிடைக்காது!

இறக்கிக் கீழே வந்து விஷயத்தைச் சொன்ன கிராம முன்சீப்பிடம் அதைக் கேட்டவர்களுக்கு மகிழ்ச்சியும் குஷியும் ஏற்பட்டது.

ஒருத்தருக்கொருத்தர் கலந்து யோசித்தார்கள், இது யார் செய்த காரியமாக இருக்கும் என்று. கொத்தனார் சாமிநாயக்கரும் அங்கே இருந்தார்; துண்டை இழுத்துப் போர்த்திக்கொண்டு, குளத்தின் கைபிடிச் சுவரில் உட்கார்ந்து முழங்கால்களை ஆட்டிக்கொண்டு, இந்தத் தலையாரி எப்படித்தான் அந்தக் கொடியை அவிழ்க்கிறான் பார்ப்போம் என்று. அவருக்குப் பக்கத்தில் வந்து செவிட்டு குருசாமி நாயக்கர் உட்கார்ந்துகொண்டு சந்தோஷத்துடன் கேட்டார் ''இத எப்பிடி அங்கன போயி கட்டியிருக்கான்!'' சாமி நாயக்கர் பதில் சொல்லாமல் வேகமாகக் காலை ஆட்டினார். மனசுக்குள் 'எங்கலெ வந்து மெள்ள விளாறு ஓட்டுதெ' என்று நினைத்துக்கொண்டார்.

பேருதான் செவிட்டு குருசாமி நாயக்கர்; யாருடைய ரகசியங்களும் அவர் காதுக்குள் நுழைந்துவிடும். நுழைந்த வேகத்தில் பத்துஜோடிக் காதுகளில்ப் போய் எதிரொலிக்கும். யார் என்ன பேசிக்கொண்டிருந்தாலும், செவிட்டு குருசாமி நாயக்கர் வாரார் என்றால் பேச்சை நிப்பாட்டிவிட்டுப் பாட ஆரம்பிப்பார்கள்!

கிராமத்தில் எப்பவாவது சில காரியங்கள் நடக்கும்; யார் இதைச் செய்திருப்பார்கள் என்று யூகிக்கவே முடியாதபடி இருக்கும். அப்போது செவிட்டுகுருசாமி நாயக்கர் எங்கே என்று எல்லோரும் தேடுவார்கள். அவரும் ஓடியாடி, விஷயத்தின் நுனி நூலைப் பிடித்துக்கொண்டு வந்து தந்துவிடுவார்.

இளவட்டங்களின் ஒருமித்த ஏளனப் பார்வை தலையாரியை உசுப்பிவிட்டுவிட்டது. குழை அறுக்கும் கத்தி கட்டிய தொறட்டிக் கம்பை எடுத்துக்கொண்டு வந்தார் வேகமாக. மரத்தில் ஏறி, அதைக் கொடுக்கச் சொல்லி வாங்கி, ஒவ்வொரு கொப்பிலும் அதைத் தொங்க விட்டுக்கொண்டே மேலே ஏறிப் போனார். வசமான ஒரு கிளையில் இருந்துகொண்டு உச்சிக்கொப்பில் கட்டிய கயிற்றைக் கொஞ்சங்கொஞ்சமாக அறுத்துக் கொடியோடு கம்பைக் கீழே விழச்செய்தார்.

கீழே விழுந்த கொடியை கிராம முன்சீப் அதைக் கம்பத்திலிருந்து பிரித்து எடுத்தார். அதை என்ன செய்வது என்று தெரியவில்லை! வீட்டுக்கும் கொண்டுபோக முடியாது; கச்சேரியில் வைத்துக் கொண்டிருக்க முடியாது. பிள்ளையார் சதுர்த்தி முடிந்ததும் களிமண் பிள்ளையாரை குளத்துத் தண்ணீரில்க் கொண்டுபோய் போடுவது போல, அவர் அதில் நாலைந்து கற்களை எடுத்து வைத்து மூட்டைபோல்க் கட்டினார். குளத்தில்க் கொண்டுபோய் வீசி எறிந்துவிட்டு, விசுக்விசுக்கென்று வேகமாக வீட்டைப்பார்க்க நடந்தார். வேடிக்கைபார்த்துக் கொண்டிருந்த குழந்தைகள் கை தட்டிப் பலமாகச் சிரித்தார்கள்.

❖

## 26

இது நடந்து கொஞ்சநேரத்துக்கெல்லாம், பார்வதியம்மன் கோவிலுக்குப் பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த தன்னுடைய மாட்டு வண்டிக்கு அருகே நின்றுகொண்டு ''ஊர் பய பிள்ளைகளை'' வாய்க்கு வந்தபடித் திட்டி நொறுக்கிக்கொண்டிருந்தார் வெல்லம் ரங்கசாமி நாயக்கர்.

அவருடைய வண்டிப் பைதாவில் யாரோ சாக்பீஸால் வந்தே மாதரம் என்று எழுதிவைத்து விட்டார்களாம். ''நா ஒரு வண்டி வச்சிப் பெளைக்கிறது இந்தப் பயபிள்ளெகளுக்குப் பிடிக்கலெ'' என்று சொல்லிக்கொண்டே அதை அழித்தார். அழித்ததில் எழுத்துக்கள் கலைந்ததே தவிர மறையவில்லை. வாளியில் தண்ணீர் கொண்டுவந்து துணியை முக்கித் துடைத்துக் கொண்டிருந்தபோது

செவிட்டு குருசாமி நாயக்கர் வந்து, ''என்ன மாமா இது?'' என்று விசாரித்தார் ''பாத்தியாடா இந்தக் கொடுமயெ; எந்த நாறப்பய புள்ளையோ வந்து ஏம் வண்டியில் 'வந்தே மாதரம்' எழுதித் தொலைச்சிருக்கான் பாத்துக்கொ.''

அதானெ மாமா, சல்க்காருக்கு தெரிஞ்சா அம்புட்டுத்தான்; வண்டியும் பொயிரும்; நீங்களும் கம்பியெ எண்ணணும். செருக்கி பிள்ளையளுக்கு வந்தே மாதரம் எழுத வேற எடமே கெடைக்கலை பாத்தியளா!''

வேகம் வந்துவிட்டது வெல்லம் ரங்கசாமிநாயக்கருக்கு. தனக்கு எத்தனை வசவுகள் தெரியுமோ அத்தனையும் மனப்பாடமாக ஒப்பிப்பதுபோல மள மளவென்று சொல்லிக்கொண்டே போனார்.

ஊர்ப்பிள்ளைகளெல்லாம் சுற்றி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். இது வேறு அவருக்கு எரிச்சலாக வந்தது. அவர்களைப் பார்த்து எரிந்து விழுந்தார். அவர்கள் நகருவதுபோல பாவலாக் காட்டினார்களே தவிர நகரவில்லை. ஆகவே அவர் களையும் ஒரு பாட்டம் வசவுகளால் ''அர்ச்சனை'' செய்து கொண்டே வாளியையும் துணியையும் எடுத்துக்கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார். நாலு எட்டுகள்தான் எடுத்து வைத்து நகர்ந்திருப்பார்; யாரோ ஒரு பையன் அவரைப் பார்த்து வந்தேமாதரம் என்று கத்தினான். மற்ற பிள்ளைகள் அதை வாங்கிச் சொன்னார்கள்!

நாயக்கருக்கு ஆங்காரம் வந்துவிட்டது. ''எவண்டா அவன் வந்தே மாதரம் சொன்னது'' என்று கேட்டார்.

''பொடிப்பய புள்ளக. நீங்க போங்க மாமா'' என்று சமாதானப் படுத்தினார் செவிட்டுக் குருசாமி நாயக்கர்.

சமாதானம் பண்ணவும் சேர்த்துப் பிடித்துத் தடுக்கவும் ஒரு ஆள் கிடைத்துவிட்டால் அதுக்கென்று ஒரு வேகம் வருமே; அந்த 'வேகம்' வந்தது வெல்லம் ரங்கசாமி நாயக்கருக்கு. அதன் பலனை அவர் ஆயுள் பூராவும் அனுபவித்தார்! தினமும் காலையில் வந்து பார்க்கும் போதெல்லாம் அவருடைய வண்டிப் பைதாவின் அலகில் வந்தே மாதரம் எழுதியிருப்பதும், அதை அவர் வாளியும் தண்ணீரும் கொண்டுவந்து துடைத்துக்கொண்டே வைதுவிட்டுப் போவதும் கொஞ்ச நாள் இருந்தது. ஒரு நாள் காலையில் வாளியும் தண்ணீரோடும் வந்து பார்த்தபோது, சாக்பீஸுக்கு பதில் கீல் எண்ணெய் கொண்டு எழுதப்பட்டிருந்தது! ரொம்ப நேரம் அதைச்

சொரண்டி எடுத்துக்கொண்டிருந்தார். அன்றைக்கு அவர் வேலைக்குப் போக முடியவில்லை. இனி வண்டியை வெளியே வைத்தால் சரிப்பட்டு வராது என்று பைதாக்களை அச்சிலிருந்து உருவி எடுத்து, சட்டத்தையும் வீட்டுத் தொழுவுக்குள் கொண்டு போய் வைத்துக்கொண்டுவிட்டார், பிரச்சனை அதோடு முடிய வில்லை. எந்நேரமும் நாலு பையன்கள் அவருடைய வீட்டு வாசலைப் பார்த்துக்கொண்டே கொஞ்சதூரத்தில் காத்துக் கொண்டிருப்பார்கள். வெளியில் அவருடைய தலை தெரிய வேண்டியதுதான் தாமதம், வந்தே மாதரம் என்று கத்துவார்கள். திட்டிக்கொண்டே அவர்களைக் கொஞ்ச தூரம் விரட்டுவார். தெருவிலோ காட்டிலோ எங்கே அவரைக் கண்டாலும் பிள்ளைகள் வந்தே மாதரம் என்று தூரத்தில் இருந்துகொண்டு கூப்பாடு போட்டுச் சொல்லுவார்கள்.

ஊர்மடத்துக்கு முன்னால் பிள்ளைகள் தெல்லு விளையாடிக் கொண்டிருந்தார்கள். வெளியூர்க்காரர்கள் யாரோ ரண்டுபேர் வந்து வெல்லம் ரங்கசாமி நாயக்கர் வீடு எது என்று பையன்களிடம் விசாரித்தார்கள்.

''என்னது; வெல்லம் ரங்கசாமி நாயக்கரா'' என்று முகத்தை ஒரு மாதரி வைத்துக்கொண்டு கேட்டான் அதில் ஒரு பையன் ஒன்றுமே தெரியாததுபோல.

''அதாண்டா நம்ப வந்தேமாதர நாய்க்கர் வீட்டைக் கேக்கறாங்க'' என்றான் மற்ற ஒருவன்.

''வந்தே மாதர நாயக்கரா!'' என்று கேட்டார் வந்தவர்களில் ஒருத்தர்.

''ஆமாம்! அது தெரியாதா ஒங்களுக்கு? அவரு இப்ப வந்தே மாதரங் கட்சியிலெ சேந்துட்டாரில்லெ'' என்றான் பையன். இவர்கள் சிரித்த விதம் வந்தவர்களுக்கு, இது தெரியாதா உங்களுக்கு என்பதுபோல்ப் பட்டது.

''ஏங்கூட வாங்க நாங் காட்டுரென்'' என்று அவர்களை அழைத்துக்கொண்டுபோய், ''அந்தோ தெரியிதில்லெ, அந்தக் கல்லுவீடுதான்'' என்று காட்டிவிட்டு வந்தான்.

''என்னடே ''வந்தேமாதரம்'' இருந்தாரா? என்று மடத்தில் ''பதினைஞ்சாம்பிள்ளை'' விளையாட்டில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்த கொண்டுசாமி கேட்டார் குறும்பாகச் சிரித்து.''

''இருக்காரு, தொளுவுக்குள்ளெ சத்தம் கேட்டது'' என்றான்.

''என்ன விசயமாத் தேடி வந்திருக்காகளாம்?''

''பசுமாடு ஒண்ணு வெலைக்கி நிக்கில்லா அவரு தொளுவுல; அதெ வாங்கீட்டுப் போக''

''அத அவரு யான வெலெ குருதெ வெலெ சொல்லுவாரெ''

''சொன்னா என்ன வந்தேமாதரம்ன்னு மாத்திரம் சொல்லுங்க; 'செ, நம்ம கச்சி ஆளுகள்ளெ வந்திருக்காக போலுக்குன்னு நெனைச்சி கொஞ்சம் கொறைச்சிக் கொடுத்துருவாருன்னு சொல்லிக் கொடுத்துட்டுத்தாம் வந்திருக்கென்'' என்று அந்த வினாடியில் அவனுக்குத் தோன்றியதைச் சொன்னான், அவனுடைய கற்பனையை மடத்தில் இருந்தவர்கள் பாராட்டிச் சிரித்தார்கள்.

நுன்னகொண்டநாயக்கர் ஒருநாள் வெல்லத்தைக் கூப்பிட்டு ''ஏண்டா, யாரு என்ன சொன்னா ஒனக்கென்ன. எதுக்காக அப்படிக் கோவப்படணும், நீ அப்படிக் கோவப் படப்படத்தான் அதும் அதிகமாகும்'' என்று சண்டை பிடித்தார். ''நா யாருக்கு என்ன செஞ்சென் பெரியப்பா, என்ன இப்படிக் கண்ணுலெ காங்காம வையிராங்களெ'' என்று சொல்லும்போது அவருக்குத் தொண்டை அடைத்துக்கொண்டு வந்தது.

வெல்லம் ரங்கசாமி என்று துலங்கி வந்த அவருடைய பெயர் அதன்பிறகு, ''வந்தேமாதர நாயக்கர்'' என்று சொன்னால்த்தான் தெரியும் என்கிற அளவுக்கு வந்துவிட்டது. அவர் விரும்பினாலும் - விரும்பாவிட்டாலும் அதுவே அவருடைய பட்டப்பெயராக நிலைத்து நின்றது அவருடைய வாழ்நாள் பூராவும்; அதுக்குப் பிறகும் கூட.

கையில் கரித்துண்டோ சாக்பீஸோ எது கிடைத்தாலும், சுவர் என்று ஒன்று கிடைத்துவிட்டால் அந்தவூர்க் குழந்தைகள் தப்பும் தவறுமான வந்தேமாதரம் என்று எழுதியும் கை ராட்டையின் படத்துடன் மூவர்ணக் கொடியையும் வரையாமல் விட மாட்டார்கள்.

❖

கோபல்லபுரத்தின் தோற்றத்தைப் போலவே அந்த மக்களின் மன இயல்பும் மெதுவாக மாற்றமடைந்து கொண்டே வந்தது. பழக்க வழக்கங்களைவிட, ஆடை அணிகள் போன்ற உடம்பு சம்மந்தப் பட்ட காரியங்களில் மட்டும் வெகுதுரிதமான மாற்றம் காண முடிந்தது. பாதிப் பேருக்கு மேல் இளம் தலைமுறையினர் தங்கள் குடுமியை வெட்டி எறிந்துவிட்டு ''சேக்கு'' (கிராப்) வெட்டிக் கொண்டார்கள். முத்து நாயுண்டு தன்னுடைய கொண்டையை எடுத்துவிட்டு கிராப் வெட்டிக்கொள்ளப் போகிறார் என்று கேள்விப்பட்டதும் அந்த முடியைப் பெற பலத்த போட்டி ஏற்பட்டது பெண்களிடையே. அவருடைய தல முடியின் அடர்த்தியும் நீளமும் பெண்களுக்கு மத்தியில் எப்பவும் ஒரு பேச்சாக இருக்கும் . கடைசியில் அது அப்பிநாயுண்டு வீட்டுப் பெண்களுக்குக் கிடைத்தது. பொன்னையனாசாரியைக் கூட்டிக் கொண்டுவந்து அந்த வெட்டிய முடியை சன்னமான வெள்ளிக் கம்பியால் மூடிக்கொத்தின் மேல்நுனியை அழகாக இறுக்கிக் கொடுக்கச் சொல்லிப் பெற்றுக் கொண்டார்கள். அந்த முடி மிக நீண்ட நாள் அந்தக் குடும்பத்தின் மதிப்புக்குரிய சொத்தாக இருந்தது. பல கல்யாணங்களுக்கு வந்து வாங்கிக்கொண்டு போவார்கள் மணப்பெண்ணின் முடி சிங்காரித்தலுக்கு.

❖

தாலுகா போர்டுகளைக் கலைத்துவிட்டு பெரிய அளவில் ஜில்லாபோர்டு என்று அமைத்து அதனிடம் கல்வி, சுகாதாரம், சாலைகள் பராமரிப்பு முதலிய பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டன.

இதனால் கோபல்லபுரத்தில் ஜில்லா போர்டு ஆண்கள் பாடசாலை, ஜில்லா போர்டு பெண்கள் பாடசாலை என்று ரண்டு பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டன.

ஜில்லாவின் பல பகுதிகளிலிருந்தும் அந்த கிராமத்துக்கு வாத்தியார்களும் வாத்தியாரம்மாக்களும் தங்களோடு பல்வேறு வகையான விஷயங்களோடும் வந்து தங்க நேர்ந்தது.

முக்கியமாக, எழுதப்படிக்கப் பெண்கள் கற்றுக்கொண்டதைவிட வாத்தியாரம்மாக்களிடம் அவர்கள் பார்த்துக் கற்றுகொண்டதுதான்

ரொம்ப. குமருப்பெண்டுகளிடம் இது வேகமாகப் பரவியது. உச்சி வகிடு பக்க வகிடாகியது. ரவிக்கை அணியும் வழக்கம் வந்தது. பதினாறு முழம் பன்னிரண்டுமுழச் சேலையாகியது. உள்ப்பாவடை உள்பாடி என்று வந்தது. மாராப்பு சரிந்து விழாமல் இருக்கவும் அலங்காரத்துக்காவும் புரூச் குத்திக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. வாசனைச் சோப்பு போட்டுக் குளிக்கும் பழக்கம்கூட வந்துவிட்டது.

பெரிய குடும்பங்களில் மட்டும் முன்பெல்லாம் சீவில்லிபுத்தூர் போனால் ஆண்டாள் கோவிலில் தரும் ஸ்நானப் பவுடர் வாங்கிக் கொண்டுவந்து தேய்த்துக் குளிக்கும் பழக்கம் பெண்களிடம் இருந்தது. அதையொட்டி இவர்களும் பல வாசனாதிப் பொருள் களைச் சேர்த்து இடித்து, தேய்த்துக் குளிப்பதற்கென்றே குளியல்த் தூள் தயாரித்து வைத்துக்கொள்வது என்றிருந்தது. இந்த வாசனைச் சோப் வந்த பிறகு அதைக் கைவிட ஆரம்பித்தார்கள்.

தபால் ஆபிஸ் வந்ததினால் பத்திரிகைகளும் வர ஆரம்பித்தன. நுன்னகொண்டார் வீட்டுக்கு ''சுதேச மித்திரன்'' தினப் பத்திரிகையும் ''ஆனந்தபோதினி'' கதைப் பத்திரிகையும் தொடர்ந்து வர ஆரம்பித்தது. தினப்பத்திரிகை மூலம் நாட்டு நடப்பு உலக நடப் பெல்லாம் படித்துத் தெரிந்துகொண்டார்கள்; அதைப்பற்றி விவாதித்தார்கள்.

சாய்ந்திரமானால் நுன்னகொண்டார் வீட்டுத் திண்ணையில் பேப்பர் படிக்கக் கூடும் கூட்டத்தைப் பார்க்கலாம். அதில் முக்கியமாக வாத்தியார் சுப்பையாச் செட்டியாரின் சத்தம் போட்டு வாசிக்கும் குரல் ரொம்பத்தூரம் கேட்கும். 'மணி கொண்டடிச்ச மாதிரி' அப்படி ஒரு குரல் அவருக்கு. பள்ளிப் பிள்ளைகளோடு சத்தம் போட்டுப் போட்டுக் குரல் அப்படி வசமாகியிருந்தது அவருக்கு. சதா வெத்திலை போயிலை என்று போடுவதினால் பற்கள் மாதுளம் விதைச் சுளைகள்போல சிவந்தது வாசனைப் போயிலையின் மணமும் நிரந்தரமாக அவரிடம் குடிகொண்டிருந்தது.

வாத்தியார் சுப்பையாச் செட்டியார் அன்று சத்தம் போட்டுப் படித்த விஷயத்தில் எல்லோருடைய கவனமும் சென்றது. டெல்லி சட்டசபையில் 'கறுப்புச் சட்டம்' பற்றி விவாதம் நடந்து கொண்டிருந்தபோது, பகத்சிங், பட்டு கேஸ்வரதத் என்ற இரு இளைஞர்கள் சட்ட சபையின் காலரியிலிருந்துகொண்டு சபையின் தாழ்வாரத்தை நோக்கி வெடிகுண்டு வீசி வெடிக்கச் செய்தார்கள். 'புரட்சி ஓங்குக' 'பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒழிக' என முழக்கமிட்டு

துண்டுப் பிரசுரங்களையும் வீசினார்கள். 'அந்த இரு இளைஞர்களையும் போலீஸார் கைது செய்தார்கள்.'

செய்தியைப் படிக்கக் கேட்டவர்களுக்குப் பரபரப்பும் பதட்டமும் உண்டானது. திரும்பவும் அதைப் படிக்கச் சொல்லிக் கேட்டார்கள். வாங்கி வாசித்துப் பார்த்தார்கள்.

பெரியாட்கள் ரொம்ப யோசித்தார்கள். 'தலைநகர் டெல்லியில் வைசிராய்க்கு முன்னாடி இப்பிடி வந்து இம்புட்டுத் தைரியமா வெடிகுண்டை வீசியிருக்காம்ண்ணா... கொஞ்சம்கூட ஒடம்பு புல்லரிக்காம! இந்தப் பயபுள்ளெகளுக்குக் கெட்டகாலம்தானே?''

இளைஞர்கள் யோசித்தது; 'தலைநகர் டெல்லியிலேயே வைசிராய்க்கு முன்னாடி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒழிகன்னு சொல்லி வெடிகுண்டையே வீசீட்டானே! இந்த ‡வெள்ளைக்காரனுக்கு இனி இதிலயிருந்து கேடுகாலம் தொடங்கிருச்சின்னுதான் அர்த்தம்.

பத்திரிகைகளில் அடுத்துவந்த செய்திகள்: பகத்சிங்கையும் அவருடைய தோழர்களையும் 'லாகூர் சதிவழக்கு' என்று ஒரு வழக்கை அவர்கள்மீது போட்டு, 'சட்டபூர்வமாக அமைந்த பிரிட்டிஷ் சர்க்காரை ஆயுதம் தாங்கிய போராட்டத்தின் மூலம்

---

‡ வெள்ளைக்காரன் - வட்டார வழக்குச் சொல்.

(''வெள்ளையன்'') ஆங்கிலேயரை மட்டுமே குறித்துச் சொல்லப்படுவது.

''ஊரான் ஊரான் தோட்டத்திலே
ஒருத்தன் போட்டானாம் வெள்ளரிக்காய் - அத
காயிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்''

-நாடோடிப்பாடல்

''வாராண்டா வாராண்டா வெள்ளக்காரன்
வரட்டும் தாயோளி தொப்பிக்காரன்''

- கட்டபொம்முநாடகப்பாடல்.

''வெள்ளைக்காரன் பணம் வெள்ளிப்பணம்
வேடிக்கை பண்ணுது சின்னப் பணம்
வெள்ளிப் பணத்துக்கோ ஆசைப்பட்டு
வேடங்குலைந்தாளே வீராயி...''

- நாட்டார்பாடல்

''வெள்ளையனே வெளியேறு'' என்பது நாட்டுமக்களின் வெகுஜன கோஷமாக விளங்கியது.

பலாத்காரமாகக் கவிழ்க்க சதி செய்ததாக' என்று அவர்கள் பேரில் குற்றம் சுமத்தப்பட்டது.

''என்னது என்னது அதெ இன்னொருக்க வாசிங்க'' என்று கொத்தனார் சாமிநாயக்கர் கேட்டார். ''சட்டபூர்வமாக ஏற்பட்ட பிரிட்டிஷ் சர்க்காரை...'' ''சட்...ட பூர்வமாக என்று அழுத்திச் சொல்லி சாமிநாயக்கர் அதைத் திரும்பத் திரும்பச் சொல்லி குரூரமாகச் சிரித்து, ''யாரு ஏற்படுத்னாங்க சட்டபூர்வமாக இந்த பிரிட்டிஷ் சர்க்காரை?'' என்று கேட்டார்.

அவருடைய வக்ரமான கேலியை அங்கிருந்த இளவட்டப் பிள்ளைகள் ரொம்பவும் ரசித்தார்கள்.

அடுத்த தினங்களில் தொடர்ந்து வந்த செய்திகள்:

'தங்களைக் கிரிமினல் கைதிகள்போல் நடத்தாமல் ஒரு அரசியல் கைதியாகத் தங்களை நடத்தவேண்டும் என்று பகத்சிங்கும் பட்டு கேஸ்வரதத்தும் சிறையில் உண்ணாவிரதம் இருக்கிறார்கள்.'

'பட்டு கேஸ்வரதத்தின் உடல்நிலை உண்ணாவிரதத்தினால் மோசமடைந்துகொண்டே வருகிறது'

'பிரிட்டிஷ் அரசு இவர்களுடைய கோரிக்கைக்கு இணங்குவதாகத் தெரியவில்லை' 'பகத்சிங், பட்டுகேஸ்வரதத் இவர்களுடைய உடல்நிலை மிகவும் மோசமடைந்து கொண்டு வருவதை அறிந்த மக்கள் பல ஊர்களில் திரண்டு பொதுக்கூட்டங்களும் ஆர்ப்பாட்டங் களும் நடத்துகிறார்கள்'

'உண்ணாவிரதம் தொடங்கி 50 நாட்களைத் தாண்டிவிட்டது. பிரிட்டிஷ் அரசு இவர்களின் கோரிக்கையை ஏற்காமல் மௌனம் சாதித்துக் கொண்டிருக்கிறது. 56-வது நாள் பட்டு கேஸ்வரதத் லாகூர் சிறையில் உண்ணாவிரதத்தினால் உயிர் நீத்தார்.'

''தேசமே கண்ணீர் விடுகிறது. கொதிக்கிறது'' பட்டுகேஸ் வரதத்தின் உடலை பஞ்சாப் மெயிலில் கல்கத்தாவுக்குக் கொண்டு வருகிறார்கள். வழி எங்கும் மக்கள் செய்த அஞ்சலி காரணமாக 10 மணிநேரம் தாமதமாக அந்த ரயில் கல்கத்தா வந்தடைகிறது. கல்கத்தா ரயில் நிலையத்தில் பட்டுகேஸ்வரதத்தின் உடலைப் பார்க்க ஒரு லட்சம் மக்கள் காத்திருக்கிறார்கள்.

பட்டுகேஸ்வரதத்தின் உடலை அவர்கள் ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்கள். கல்கத்தா மக்கள் அந்த ஊர்வலத்தைப் பார்த்து கண்ணீர் விட்டார்கள்; அழுதார்கள்.

நாட்கள் தொடர்ந்து வந்த இந்தச் செய்திகளை வாசித்து கோபல்லபுரத்து இளைஞர்கள் நெஞ்சம் குமுறினார்கள்; பெரியாட்களின் திடமனசைக்கூட இச்செய்திகள் பாதித்தன.

❖

# 28

அந்தக் கிராமத்துக்கு வேலை பார்க்க வந்த எத்தனையோ வாத்திமார்களில் நாறம்புநாதன் தம்பதியர் குறிப்பிடத்தக்கவர்கள். நாறம்பு நாதன் ஆண்கள் பாட சாலைக்குத் தலைமை ஆசிரியராகவும் அவரது மனைவி காந்திமதி அம்மை பெண்கள் பாடசாலைக்குத் தலைமை ஆசிரியையாகவும் இருந்தார்கள். அவர் வந்தபிறகுதான் பள்ளிக்கூடத்தில் பல மாற்றங்களை நிகழ்த்திக் காட்டினார்.

வகுப்புகள் நடந்து கொண்டிருக்கும்போது ஊர்க்காரர்கள் அனாவஸ்யமாக உள்ளே வரக்கூடாது என்கிற கட்டை ஏற்படுத்தினார். அதற்கு முன்பெல்லாம்...; கரும்பலகையில் வாத்தியார் எழுதிப் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருப்பார். அப்போது ஊர்க்காரர் ஒருத்தர் உள்ளே வருவார். வந்தவருக்கு வாத்தியார் முகமன் கூறுவதோ, வாத்தியார் வந்தவருக்குக் கூறுவதோ கிடையாது.

உள்ளே வரலாமா, தான் யார், எதுக்காக வந்திருக்கிறேன், இந்தப் பேச்சே கிடையாது! என்ன விஷயம்? என்று கேட்டாலும், ''ஒண்ணுமில்ல; சும்மாதான்'' என்று பதில் கிடைக்கும். 'சரி' என்று நினைத்துக்கொண்டு வாத்தியார் கரும்பலகையில் மேல்க்கொண்டு எழுதிப் பாடம் சொல்லிக் கொடுக்கத் தொடங்குவார். வந்தவருக்கு அந்நியம்மாறி ஒரு சுயாதீனம் ஏற்பட்டு, மொள்ளவந்து வாத்தியாரின் நாற்காலியிலேயே உட்கார்ந்துகொண்டு விடுவார்!

பிள்ளைகள் பாடத்தைக் கவனிப்பதுக்குப் பதில் வந்தவரைக் கவனிக்கத் தொடங்கிவிடும். வந்தவரை முகம் முறித்து வாத்தியாரால் ஒன்றும் சொல்ல ஏலாது. அதோடு, வாத்தியார் அசலூர்க்காரர்; வந்தது உள்ளூர்க்காரர்; யாரு, எப்பேர்ப்பட்டவர் என்று தெரியாது.

பிறகென்ன; வாத்தியார் வந்தவரோடு 'கதை' பேசுவதைத் தவிர வேற வழி இருக்காது. இதுக்குள் பிள்ளைகளுக்கும் விளையாட்டுப் புத்தி வந்துவிடும்!

கிராமத்தில் சிலருக்குப் பொழுது நகர்வது என்பது ஒரு சங்கடந்தான். யார் வாயையாவது பார்த்துக்கொண்டிருக்க வேண்டும், அல்லது யார் வாயையாவது கிளறிக்கொண்டிருக்க வேண்டும். யாரிடம் எதைப்பற்றிப் பேசுவோம் என்று அலை மோதிக்கொண்டு அலைவார்கள் சிலர். விதைப்புக்காலம், அறு வடைக்காலம், களத்துச் சோலி இப்படி நேரங்கள்தவிர மற்றக் காலங்களெல்லாம் விட்டாத்தியாகத்தான் இருக்கும்.

நாறம்புநாதன் வந்ததும் முதல்க்காரியமாக பலவிஷயங்களில் பள்ளிக்கூடத்தை ஒழுங்கு பண்ணினார். அதில் முக்கியமான ஒன்று பாட நேரத்தில் ஊர்க்காரர்கள் வகுப்புக்குள்ளே பிரவேசிக்கக்கூடாது என்பது.

சுகாதார வாரக் கொண்டாட்டங்களில் ஊர்க்காரர்களையெல்லாம் கூட்டமாகக் கூட்டி இப்படியான விஷயங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி, ஒத்துழைக்கவேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக்கொள்வார். ''அது சரிதானே'' என்று சொன்னார்கள் ஊர்க்காரர்கள்.

பிள்ளைகளிடம் சில ஒழுக்க முறைகளைக் கொண்டுவரு வதற்குள் ரொம்பச் சிரமப்பட்டுப் போனார். முக்கியமாக அவர் களைக் காலையில் குளிக்கும் பழக்கத்தை வருத்துவது கஷ்டமாக இருந்தது. கரிசல் கிராமங்களில் காலையில் குளிக்கும் பழக்கம் கிடையாது. உடல் உழைப்பாளிகளுக்கும் காலைக் குளிப்புக்கும் ரொம்பதூரம்.

காலையில் எழுந்திருந்ததும் முதல்சோலி சாணிக்கூடையைத் தான் தொடவேண்டும். மாட்டுத் தொழுவத்தை சுத்தப்படுத்து வதிலிருந்துதான் அவனுடைய நாள் தொடங்குகிறது. அவனுடைய பிள்ளைகள் அந்த அதிகாலை நேரத்தில் எருமைமாட்டைப் ''பனிப்புல்'' மேய்ச்சலுக்குப் பத்திக்கொண்டு போகவேண்டும். வீட்டுப் பெண்டுகள் எழுந்ததும் முத்தம் தொளித்துவிட்டு ''பயிர்முகத்தில் முழிக்க''ப் போய் விடுவார்கள். ''சம்சாரிண்ணா படுக்கையை விட்டு எழுந்திருச்சதும் முதக்காரியம் மாட்டு முகத்திலே முழிக்கணும்; இல்லெ, பயிர் முகத்துல போயி முழிக்கணும்'' என்பது ''வேதவாக்கு.'' இந்த 'நெறிபொரியில்' காலைக்குளியலுக்கு எங்கே போறது! ஆனாலும் பள்ளிக்கூடத்தில் படிக்கிற பிள்ளைகள் என்கிற சலுகையில் சில 'பிடிசாதகமாக' காலையில் குளித்து சொகம் கண்டதோடு அது ஒரு உயர்வு என்பது போலக் காட்டிக்கொண்டது ரொம்பப்பேருக்கு பிடிக்கவில்லை.

''ராத்திரிக்கு வேட்டியில் மூத்திரம் பெய்துகிடறவங்க காலையில வேட்டியத் தொவச்சிக் குளிச்சிதானெ ஆகணும்'' என்றார்கள்!

ஊர்க்காரர்கள் வகுப்பறைக்குள் நுழையாமல் இருந்தது பல வகைகளிலும் பிரயோஜனமாக இருந்தது. முக்கியமாக ஆதி திராவிடப் பிள்ளைகளை மற்றப் பிள்ளைகளோடு சேர்த்து நெருக்க மாக உட்காரவைக்க முடிந்தது.

படிப்புத் தரத்துக்கு - ''ரேங்க்'' - தக்கபடி வகுப்பில் வரிசைப் படுத்தி உட்கார்த்தி வைக்கலாமா என்று நாறம்புநாதன் முதலில் நினைத்தார். இப்போதைக்கு அது வேண்டாம் என்று அதைக் கைவிட்டார். மற்ற சாதி மாணவர்களோடு படிப்பிலும் இவர்கள் பின்தங்கி இருக்கிறார்கள். இவர்களை வகுப்பறையிலும் பின்தள்ளினால் தாழ்வு மனப்பான்மை வந்துவிடக் கூடும் என்று எண்ணினார். அதனால் பிள்ளைகளின் பெயர்களின் அகரவரிசைப் படி உட்கார வைத்தார். இப்படியெல்லாம் செய்தும்கூட ஒருநாள், சாய்ந்திரம் விளையாட்டுப் 'பீரீடு'வின்போது ஒரு பெரியவர் வந்து கவனித்துவிட்டார்!

அவருடைய கடுமையான ஆத்திரத்துக்கு இன்னொரு காரணமும் இருந்தது.

பள்ளிக்கூடத்துக்குக் கிழக்கேயுள்ள சிறிய விளையாட்டு மை தானத்தில் பள்ளிப்பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில், படப்பில் கூளம் பிடுங்கிக் கட்டிக்கொண்டு வரு வதற்காகக் கையில் கயிறு எடுத்துக்கொண்டு அந்த வழியாகப் போன இட்லி ரங்கசாமி நாயக்கர் கண்ணில் அந்தப் பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருந்த 'மல்லுக்குடட்டி' விளையாட்டு பட்டது. இட்டிலிக்கு அடுத்தபடியாக அவருக்குப் ரொம்ப பிடித்தமான விளையாட்டு. இந்த மல்லுக்குடட்டி விளையாட்டைக் கவனிக்க அங்கே போய் நின்றார்.

யாரோ ஒரு பையன் அழகாகப் பாடி வந்தான். வல சாரி இடசாரியாக கொம்பு சுற்றிப் பாடினான். அவன் கலக்கிய கலக்கு இட்லி நாயக்கருக்கு ரொம்பப் பிடித்தது.

மூச்சுக் குடட்டி என்றால் மூச்சு நிற்பதற்குள் நடு எல்லையைத் தாண்டி வந்துவிட வேண்டும்; இது மல்லுக்குடட்டி என்பதால் அந்தப் பயல் மாறி மாறி விதவிதமாகப் பாடிக் குதியாளம் போட்டான். 'வாக்காக இருக்கிறபோது லாவி அமுக்கிவிடலாமே,

என்னத்துகாகத் தயங்குகிறார்கள்?' என்று யோசித்தார். 'விட்டுப் பிடிக்கிறது' என்கிற தந்திரமாக இருக்கும் என்று நினைத்து முடிப்பதற்குள் பயலை அப்படியே கப்பென்று ஒரு அமுக்கு; சத்தத்தையே காணோம்!; ''விட்டுறு''என்கிற சத்தந்தான் வந்தது அவனிடமிருந்து.

'அட! பொடிப் பயல்கள்; என்னமா விளையாடுராங்கள்' என்று 'மகுந்து' போன . இட்லிரங்கசாமி, உட்கார்ந்துவிட்டார் விளையாட்டைக் கவனிக்க.

பிடிபட்டவன், இவருக்குப் பக்கத்தில் வந்து சிரித்துக்கொண்டே உட்கார்ந்தான். எதிர்வெயிலினால் முதலில் அடையாளம் தெரிய வில்லை. பிறகுதான் தெரிந்தது யார் அவன் என்று. ஆனாலும் கேட்டார்; அடே, நீ அப்பிநாயண்டு பேரன்தானே?

ஆமா என்று தலையை ஆட்டிவிட்டு அவன் கவனம் விளையாட்டில் லயிக்க ஆரம்பித்தது.

''ஓம் பேரென்ன?'' என்று கேட்டார்.

''எல். சுப்பையா'' என்றான் விளையாட்டைப் பார்த்துக்கொண்டு.

எல்.சுப்பையாவின் அணியிலிருந்து இப்போது ஒருவன் பாடிப்போனான், 'பரவாயில்லை' என்று நினைத்துக்கொண்டார் இட்லி. எதிர் வெயிலைத் தடுக்கக் ''கண்ணாடி'' போட்டுப் பார்த்தபோதுதான் தெரிந்தது தன்னுடைய பேரன் அது என்று. வாயெல்லாம் பல்லானது! கொஞ்ச நேரங்கூட ஆகவில்லை அவருடைய மகிழ்ச்சியில் மண்விழ. யாரு என்று தெரியலை; அந்த மொரட்டுப் பயபிள்ளை. பேரனைச் செந்தூக்காய் அலக்காத் தூக்கி அப்படியே படுக்கப் போட்டு மேலே ஏறி சக்கென்று உட்கார்ந்து விட்டான்.

பாடி வந்தவனை அப்படித் தூக்கிய விதமும், நோகாமல்க் கீழே போட்டு 'அமுக்கிய' விதமும் நல்ல முறையில் இருந்ததால் யார்ரா அவன் என்று விசாரித்தார் எல்.சுப்பையாவிடம். ''கழுவன் மகன்'' என்று பதில் வந்தது. அவ்வளவுதான்; ஆங்காரம் வந்துவிட்டது நாயக்கருக்கு! தொடக்கூடாத ஒரு சாதிக்காரன் தனது பேரனைத் தொட்டுத் தூக்கிக் கீழே போட்டு மேலேயும் ஏறி உட்காருவது என்றால்...!!

நேரடியாகவே அவனோடு சண்டைக்குப் போனார். மாணவர் களுக்கு அவர் செய்கிற காரியம் வள்ளிசாகப் பிடிக்கவில்லை.

அவருடைய பேரனுக்கே அது எரிச்சலாக வந்தது. ஆனாலும் அவனால் அவரிடம் வாய் திறக்க முடியாது. வீட்டில் செல்வாக்குள்ள தாத்தா அவர்.

சத்தம் கேட்டு ஹெட்மாஸ்டர் ஓடி வந்தார். நிலைமையைக் கண்டதும் என்ன என்று புரிந்துகொண்டார். 'இந்த இதுகளுக்குத் தான் வெளியாட்களைப் பள்ளிக்கூட எல்லைக்குள்ளேயே அனுமதிக்கக்கூடாது எங்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே ''வாங்க பெரியவரே'' என்று மரியாதை கொடுத்து அழைத்து, ''வாங்க; உள்ளெ வாங்க'' என்று கூட்டிக்கொண்டுபோய் உட்கார வைத்துப் பேசினார் ஆதரவாக.

''இந்த ஜாதி மத வித்தியாசங்களெல்லாம் நம்ம தலை முறையோடு போகட்டும். குழந்தைகளிடம் - அதுவும் பள்ளியில் வந்து படிக்கிற குழந்தைகளிடம் - காட்ட வேண்டாம். தேசத்தில் இப்பொ ஒரு புதிய விடியல் உண்டாகிக்கொண்டிருக்கிறது. நம்ம பழம்பெருங் கோயில்களுக்குள்ளேயெல்லாம் தாழ்த்தப்பட்ட வர்கள் போய் சாமி கும்பிடலாம் என்று ஏற்பட்டுக்கொண்டிருக்கு. பள்ளிக்கூடமும் ஒரு கோயில்மாதரிதான். இது பொதுமக்களோ வரிப்பணத்திலிருந்து நடத்தப்படுகிற காரியம். இது எல்லாத் தரப்பு மக்களுக்கும் சொந்தம். இங்கெ வந்து மேல்ச்சாதி கீழ்ச்சாதி என்றெல்லாம் பாராட்டக்கூடாது.

நீங்க இதுல பிடிவாதமா இருந்தா, ஒங்க வீட்டுப் பிள்ளையத்தான் நாங்க வகுப்புல தனியா உட்கார வைப்போம். இது அவம் மனசைப் பாதிக்கும். வாத்தியார்க நல்லா சொல்லிக் கொடுக்கிறாங்களா, பாடங்களைப் பிள்ளைக ஒழுங்காப் படிக்கிறாங்களா; இதெத்தாம் நீங்க கவனிக்கணுமே தவிர, பள்ளிக்கூடத்து உள்வெவகாரங்களை நீங்க கண்டுக்கிடக்கூடாது.

இந்தப் பள்ளிக்கூடம் பிடிக்கலையா, வேற பள்ளிக்கூடத்தில் கொண்டுபோயி ஒங்க பேரப்பிள்ளையச் சேத்துருங்க. ஆனா எங்க கொண்டுபோயிச் சேர்த்தாலும் அங்கயும் இதே கதெதாம் நடக்கும்.''

எவ்வளவு எடுத்துச் சொல்லியும் இட்லி ரங்கசாமி நாயக்கர் 'மசிய' வில்லை; அவரை சமாதானப்படுத்தவே முடியவில்லை. எங்க வீட்டுப்பிள்ளை அப்படிப் படிச்சி என்ன மண்டகப்படி கணக்கு எழுதப்போறானா. எங்களுக்கு நிலம் இருக்கு. அதெக் கிண்டிக் கிளச்சி நாங்க பொளைச்சிக்கிடுவோம் என்று, ''வாடா போவம்'' என்று பேரனைக் கூட்டிக்கொண்டே போய்விட்டார்.

ஊருக்குள்ளே போய் பலரிடமும் இந்த ''அந்யாயத்தை' எடுத்துச் சொன்னார் அவர்.

''நீரு ஒரு சரியான 'நாப்பதாமாண்டு'; ரயில்லயும் கார்லயும் பள்ளிக்கூடத்துலயும் போயி சாதியப் பாத்தா முடியுமா? ''வேணும்ன்னா, நீரே ஒம்ம சொந்தத்துல ஒரு தனீப் பள்ளிக்கூடம் கட்டி தனீ வாத்தியாராய் போட்டு ஒம்மப் பேரப்... புள்ளைக்குப் படிப்புச் சொல்லிக் குடும் போம்'' என்று சொல்லிவிட்டார்கள்.

''நீங்கள்ளாம் இப்பிடிச் சொல்லப் போயித்தாண்டா மளை இப்படி மோளுது'' என்று சொல்லிவிட்டு விறுவிறு என்று நடையைக் கட்டினார் இட்லி. மாசந்தவறாமல் - மும்மாரி - பெய்ய வில்லை, இப்படியான நடப்புகள் வந்ததிலிருந்து என்பது அவருடைய மனக்குறை!

❖

# 29

''குமார ரதம்'' என்று அந்த வில் வண்டியில் இரு பக்கங்களிலும் எழுதியிருந்தது. குமார என்பதற்கும் ரதம் என்பதற்கும் இடையில் சின்னதாக ஒரு ராட்டைப் படம் இருந்தது. அது ஒரு ஒத்தை மாட்டு வண்டி. அந்த வட்டாரம் பூராவும் அந்த மாட்டு வண்டி சுற்றிவரும். தேச விடுதலை இயக்கத்துக்காக, காங்கிரஸ் பிரச்சாரத்துக்காகவே அந்த வண்டியும் மாடும் அதில் உள்ள ஒருவரும் இருந்தார்கள். அந்த வண்டியையும் மாட்டையும் அந்த இயக்கத்துக்குத் தானமாக வழங்கி அதன் அன்றாடப் பராமரிப்புச் செலவையும் ஏற்றுக் கொண்டிருந்தார் கோவில்பட்டி கனகசபாபதி என்பவர்.

அந்த வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தவரைக் ''கழுகு மலை அய்யர்'' என்று குறிப்பிட்டார்கள். அவர்தான் பிரச்சாரகர்; அவர்தான் வண்டியோட்டி. வண்டிக்குள் பிரச்சார சாதனங்களும், அவருக்கு தேவையான பெட்டி படுக்கையும் மாட்டுக்கு வேண்டிய பருத்திக்கொட்டை, நாத்துக் கூளம் இதெல்லாம் இருந்தது.

கோபல்ல புரத்துக்குள் அந்த வண்டி நுழையும்போது நல்ல மத்தியான நேரம். வண்டியை உத்ஸாகமாக வரவேற்றார்கள். அய்யர் வண்டியை விட்டிறங்கினார். இளவட்டப் பிள்ளைகளில்

ஒருத்தன் வண்டியை அவிழ்த்தான். மாட்டைப் பிடித்துக்கொண்டு போய் கம்மாயில் தண்ணீர் காட்டினான். இன்னொருத்தன் தன்னு டைய நாத்துப் படப்பில்ப் போய் நாத்துக் கூளம் பிடுங்கிக் கொண்டு வந்து மாட்டுக்குப் போட்டு அதைக் கரை மரத்து நிழலில் வேரில் கட்டினான்.

''ஏ, அப்பிடியே மாட்டெக் குளுப்பாட்டிரப் பிடாது டேய்?'' என்று கேட்டார் ஒரு பெரியவர்.

''கொஞ்...சம் கூளம் கடிச்சிக்கிடட்டும்; பெறவு குளுப் பாட்டிரலாம்'' என்றான் அவன்.

''என்னெ சாமீ, இப்பதாம் வந்தீயளா?'' என்று உபசாரத்துக்காகக் கேட்டார் ஒருத்தர்.

''என்ன சாமி, கீமின்னு கூப்பிடக் கூடாதுன்னுட்டு போன வாட்டி வந்தபோது தானெ சொன்னெனென்?'' என்றார் அய்யர்.

''பின்னெ எப்படிக் கூப்பிடுறது?''

''அண்ணாச்சின்னு கூப்பிடுமே வே''

வண்டியில் கொண்டுவந்த கூளம் அப்படியே இருந்தது; அதேபோல் வண்டியில் கொண்டு வந்த அரிசி, பருப்பும் அப்படியே இருந்தது. கமலைக் கிணற்றில் போய் அய்யர் குதித்து முங்கி நீந்திக் குளித்தார். கமலையின் சிறகுப் பலகையில் வேட்டி சட்டை யெல்லாம் காயப் போட்டுவிட்டு வேறு வேட்டிசட்டையை உடுத்திக்கொண்டார்.

''யார் வீட்டுக்கு சாப்பிட வர?'' என்று கேட்டார். அங்கிருந்த எல்லாருமே தங்கள் வீட்டுக்குக் கூப்பிட்டார்கள்;

''கம்மங்கஞ்சி இருக்கு. பட்ட வத்தல்தான் வெஞ்சனம்'' என்றார்கள்.

''எது நீங்க சாப்பிடுறீளோ அதாம் எனக்கு. நா விருந்தாளியில்லெ. வீட்டுக்காரன்; ஒங்க வீட்டாள்!'' என்றார்.

எந்த ஊருக்குப்போனாலும் முதலில், அவர் சாப்பிட விரும்புவது ஒரு அரிஜன் வீட்டில். கிராமங்களில் இது அநேகமாய் அவருக்குச் சாத்தியமாகாது. குடிக்க ஒரு மடக்கு 'நீச்சுத் தண்ணி'யாவது தாங்க என்று கேட்டு அவர்களிடம் மன்றாடுவார்.

''அய்யமாருக்குக் குடிக்க தண்ணி தந்துட்டு அந்தப் பாவத்தே நாங்க எங்கனெ கொண்டுபோயித் தொலைப்பொம். சும்மாவே

நாங்க படுற 'லோல்' போதாதா'' என்று அவருடைய காதில் விழாமல் பேசுவார்கள்.

சேரிக் குழந்தைகளிடம் காணப்பட்ட உடம்பு அழுக்கும் அழுக்குத் துணியும் நெடியும் அவர் மனசை வாதைப்படுத்தும்.

ஒருநாள் அவர் கழுகுமலையில் தன்னோடு சில தொண்டர் களையும் சேர்த்துக்கொண்டு கையில் நல்லெண்ணெய்ச் சீசாவும் சீயக்காய்ப் பொடியும் எடுத்துக்கொண்டு போய் அந்தப் பிள்ளை களுக்கு, அவர்களே எண்ணெய் தேய்த்து குளத்துக்குக் கூட்டிக்கொண்டுபோய் சீயக்காய் தேய்த்து தலை முழுக்காட்டி விட்டார்கள்.

பல குழந்தைகள் தலையில் எண்ணெய் தேய்ப்பதை மட்டுமே விரும்பினார்கள். ''எங்க கையில விடுங்க நாங்களே தேச்சிக் கிடுதோம்'' என்றார்கள். ''அய்யோ 'அரப்பு' (சீயக்காய்) வேண்டாம் கண்ணு காந்தும்'' என்று பதறினார்கள்.

சில பிள்ளைகள் பயத்தினால் என்ன சொல்லுவது என்றே தெரியாமல் பேசாமல் இருந்தார்கள். சில பிள்ளைகளுக்கு இது ஒரு வேடிக்கையாக இருந்தது. ''மத்தியானம் வெயில் வரட்டும்; இப்ப 'வாடை' நடுங்கும்'' என்று பல பிள்ளைகள் காலை நேரத்தில் வர முடியாது குளிக்க, என்று சொன்னார்கள். சில பிள்ளைகள் மட்டும் 'கொண்ணாலும் குளிக்க முடியாது' என்று சொல்லிவிட்டார்கள். சுத்தத்தின் அருமை பெருமையை எல்லாம் அவர்களுக்கு எடுத்து விளக்கினார் அய்யர்.

ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் மத்தியான நேரத்தில் போய் சேரிக்குழந்தைகளை இப்படி எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி விடுவதைத் தனது வாழ்க்கையில் ஏற்பட்ட புண்ணியமான காரிய மாகக் கருதினார் அவர். சில குழந்தைகள் சீயக்காய் வேண்டாம் என்று சொல்லிவிட்டு களிமண்ணை தலை, உடம்பு பூராவும் தேய்த்துக் குளித்தது அய்யருக்கு ஒரு ஆச்சரியம்! உடனே அவர் நினைத்தது, இந்த மக்கள் மண்ணைத் தேய்த்துக் குளிக்கிறார்கள்; மகான் மகாத்மா ஒரு கல்லை வைத்துக் கொண்டிருக்கிறார் உடம்பைத் தேய்த்துக் குளிக்க. கேரளத்து மக்கள் ஒரு மரப்பட்டை யால் உடம்பைத் தேய்த்துக் குளிக்கிறார்கள் என்று கேள்விப் பட்டிருந்தார்.

ஒரு வெள்ளிக்கிழமை மத்தியானம் நல்லெண்ணெய் சீயக்காய்த் தூளோடுபோய் நின்றபோது, சேரியில் ஒரு 'ஈக் குஞ்சைக்கூட'க்

காணோம்! எங்கே போனார்கள் என்று விசாரிக்கலாமென்றாலும் கூட, யாரையும் காணோம்.

தூரத்தில் ஒரு மரத்தடியில் ரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு அவர்களுக்கு விளையாட்டுக் காட்டிக்கொண்டிருந்த ஒரு பையன் தட்டுப்பட்டான். அவனிடம் போய் விசாரித்தார்கள். அந்தச் சேரிப்பையன் சொன்ன பதில் இவர்களைத் திக்குமுக்காட வைத்தது. ''இண்ணைக்கு நீங்க வருவீங்கண்ணு தெரிஞ்சிதான் எல்லோரும் ஓடிப்போயிட்டாங்க.''

''ஏம்பா; நாங்க ஒங்களுக்கு நல்லதுதானே செய்யிறோம். எண்ணெ தேச்சிக் குளிக்கிறது நல்லதில்லையா?'' என்று கேட்டார் ஒரு தொண்டர்.

''நீங்க பாட்ல தலெ முழுக்காட்டிட்டுப் போயிர்றீங்க. தலெ முளிகிட்ட ஒடனே வகுறு ஒரேயடியாப் பசிக்கி'' என்றான். சுரீர் என்றது மனசுக்குள் அய்யருக்கு.

'என்ன முட்டாத்தனம்; எவ்வளவு முட்டாள்தனம் செய்து கொண்டிருக்கோம்' என்று அந்தப் பையன் சொன்ன பிறகுதான் தெரிந்தது. பசி தீர்க்க ஒருவழி செய்யாமல் உடம்பு சுத்தத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோமே என்று பட்டது.

''வாஸ்தவம்தான்; அதிலும் தலெ முழுகின அண்ணைக்கு ரொம்பத்தான் பசிக்கும்'' என்றார்கள் அவரோடு சேர்ந்த மற்றவர்களும்.

''அய்யோ இந்த மக்களின் பசியைத் தீர்க்க ஓர் வழியில்லையே' என்று ஏங்கினார் அய்யர்.

சின்ன வயசில் கழுகுமலை ஊரில் அவருக்கு ஒரு கவுண்டர் பையன் சேக்காளியாக இருந்தான். அவனோடு சேர்ந்து விளையாட அவர் மலைமீது ஏறிச் சுற்றுவார். அவனிடம் மத்தியானம் ஒருநாள் கேட்டார் ''ஏண்டா, இன்னும் நீ பல்த் தேய்க்கலைபோல?''.

''ஆமா சாமி; தேய்க்கல''

''ஏம்? நேரம் என்னாகப் போகுது; மதியமாகப் போகுதெ!'' சாமீ..., பல்லத் தேச்சீட்டா ஒடனே பசிக்கும்.

தேய்க்கலைண்ணா எவ்வளவு நேரமிண்ணாலும் இருக்கலாம்''

அய்யர் இப்போது நினைத்தார்: 'பல்லைத்தேச்சா பசிக்கும்;' 'எண்ணெ தேய்ச்சித் தலை முழுகுனா அகோரமாப் பசிக்கும்.' நெஞ்சு வலிப்பது போலிருந்தது அவருக்கு.

இங்கே அன்ன சத்திரங்களெல்லாம் இருக்கு. அங்கே போடப் படும் ஒரு வேளைச் சோறு இந்தப் பசித்திருக்கும் மக்களுக்காக இல்லை. சில சத்திரங்களில் தேசாந்திரிகளுக்கும் சில சத்திரங்கள் பிராமணர்களுக்குமே சோறு போடுகிறது. அதுவும்கூட குறிப்பிட்ட ஒரு எண்ணிக்கையில் தான்.

நாடு அந்நியனிடம் அடிமைப்பட்டுக் கிடக்கிறது. மக்களின் பசியும் ஏழ்மையும் ஒழியவேண்டும் என்றால், மிக விரைவில் சுதந்திரம் அடைந்து ஆகவேண்டும். இன்றையக் கூட்டத்தில் இதைப்பற்றி விஸ்தாரமாக இந்த கிராமத்தில் பேசவேண்டும் என்று தீர்மானித்தார்.

வண்டிக்குள்ளே இருந்த பெட்ரோமாக்ஸ் லைட்டை பொருத்தி னார். அதை எரிய வைப்பதற்கு அவர் செய்த 'சடங்கு'களை அந்த கிராமத்துக் குழந்தைகள் ஆச்சரியத்தோடு வேடிக்கை பார்த்தன. கப்பென்று அது பரப்பிய அற்புத வெண்ணிற வெளிச்சம் அங்கே ஒரு மகிழ்ச்சியைப் பரப்பியது. மேலும் வண்டிக்குள்ளிருந்து ஒரு மடக்கு நாற்காலி, மடக்கு மேஜை இதெல்லாம் வந்தன.

நாராயணசாமி கோவிலுக்கு முன்னால் கிராமத்து மக்கள் ஆணும் பெண்ணும் அடங்கலாக வந்து கூடினார்கள். உட்கார்ந்திருந்த குழந்தைகள் போக, தவழும் குழந்தைகளெல்லாம் பெண்டுகளின் இடுப்பிலும் ஆண்களின் 'குடங்கை'யிலும் உட்கார்ந்திருந்தன.

''அய்! *பூனக்காரப் பெட்டி! பூனக்காரப்பெட்டி!! என்று குழந்தைகள் மத்தியிலிருந்து சந்தோஷ ஒலி எழுந்தது.

அந்தப் பெட்டியை அய்யர் மேஜைமீது வைத்தார். ஒரு ராட்க்ஷஸ பறங்கிப் பூசணிப்பூவைப்போல் உருவம் கொண்ட அடிசிறுத்து நுனிவிரிந்த ''குழாய்'' ஒன்று அந்தப் பெட்டியில் பொருத்தப் பட்டதைப் பார்த்த குழந்தைகளுக்கு 'வாயெல்லாம் பல்லாக' முகம் மலர்ந்தது.

பெட்டிக்குச் 'சாவி' கொடுக்கப்பட்டது.

'பிளேட்'டைத் தேடி எடுத்து வைத்தார்.

'முள்'ளை மாற்றிவிட்டு, சுற்றுகிற பிளேட்டின்மேல் அதைப் பதனமாக வைத்தார். கிஸ்ஸ்... என்ற மெல்லிய இரைச்சலைத்

*கிராம போன் பெட்டி

தொடர்ந்து அதிலிருந்து ஒரு குரல் மூக்கைப் பிடித்துக்கொண்டு பாடுவதுபோல்க் கேட்டது.

''கதர்க் கப்பல் கொடி தோணுதே...
கரம்சந்த்ர மோகனதாஸ்
காந்தியின் சுதேசிக் கதர்க்கப்பல் கொடி தோணுதே...''

குழந்தைகளுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை!

பூனக்காரப் பெட்டியிலிருந்து பாட்டுகள் விதவிதமாக வந்து கொண்டிருந்தன.

''தாழ்த்தப்பட்ட சோதரரை தாங்குவாருண்டோ
தாங்குவார் உண்டோ மண்ணில் ஏங்குவாருண்டோ
தாழ்த்தப்பட்ட சோதரரை...''

அந்தப் பெட்டிக்குள்ளேயிருந்து எப்படி இந்தப் பாட்டு- அசல் மனுசர் பாடுகிறமாதரியே - வருகிறது என்று குழந்தைகளுக்குப் புரிய வில்லை. யாரோ ஒருத்தன் - ரொம்பச் சின்னதாக ஒரு ஆள் - அதுக்குள் இருந்துகொண்டுதான் பாடுவதாக நம்பினார்கள்.

மேலும் சில பாடல்களைப் பாடவிட்ட பிறகு, அய்யர் தொண்டையைச் சரி செய்துகொண்டு பேச ஆரம்பித்தார். குழந்தைகளின் முகச் சிணுக்கத்தைக் கண்ட அவர், கூட்டம் முடிந்தபிறகும் குழந்தைகளுக்காகப் பாட்டு வைக்கப்படும், நல்ல பாடல்களெல்லாம் இருக்கிறது என்று சொல்லிவிட்டு, வந்தே மாதரம் சொன்னார். குழந்தைகளையும் தன்னோடு சேர்ந்து சொல்லச் சொன்னார். அதன்பிறகு, எட்டயபுரம் சுப்பிரமணிய பாரதியின் ''நாட்டு வணக்கம்'' பாடலைப் பாடினார். கைகளை உயர்த்தியும் விரித்தும் ஆவேசமாகப் பாடியது, குழந்தைகள் உட்பட அனைவர் மனசையும் தொட்டது.

அவர் தன்னுடைய பேச்சை மெதுவாகத் தொடங்கிப் படிப்படியாகக் குரலை உயர்த்திக்கொண்டே போனார். இந்திய நாட்டின் பழம் பெருமைகளையும் இங்கே தோன்றிய அவதார புருஷர்களையும் மகான்களையும்பற்றிச் சொன்னார். இந்தப் பூமியை வளப்படுத்தும் ஜீவ நதிகளை, புனித ஆறுகளைப்பற்றி விவரித்தார்.

இங்கே பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து நீடித்த தாது வருஷப் பஞ்சத்தைப்பற்றிச் சொன்னார். அதைப்பற்றிக் கவிஞர் வில்லியப்ப பிள்ளையின் ''பஞ்சலட்சணத் திருமுக விலாசம்'' எனும் நூலிலிருந்து

சில பாடல்களைச் சொன்னார். ஜீவநதிகளும் புண்ணிய ஆறுகளும் பாய்ந்து ஓடும் இந்த மண்ணில் ஏழ்மையும் பட்டினியும் ஏன் வந்தது என்று கேட்டார்.

''என்று வெள்ளைக்காரன் இந்த நாட்டில் காலடி எடுத்து வைத்தானோ அன்றே பிடித்தது பீடை இந்த நாட்டுக்கு. இவன் யார் இந்த வெள்ளைக்காரன்? அண்டை வீட்டுக்காரனா, அயல் வீட்டுக்காரனா; பக்கத்து ஊர்க்காரனா, பக்கத்து நாட்டுக்காரனா? எங்கோ... ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால், ஒரு சின்ன தீவைச் சேர்ந்தவன். நம்முடைய நாடோ பிரம்மாண்டமான நாடு. ஒரு தேசம் என்பதையும்விடப் பெரியது; கண்டம் என்று சொல்லப் படுவது. பரதகண்டம் என்று பேர் நமது நாட்டுக்கு. முப்பது கோடி ஜனத்தொகை கொண்டது நம்ம நாடு. இந்த முப்பது கோடிப் பேரும் அவனோடு சண்டைக்குப் போக வேண்டாம்; அப்படி, எழுந்திருந்து நின்றால்ப் போதும்'' என்று சொல்லி உடம்பை எவ்விக் காட்டினார். ''ஒரே ஓட்டம் ஓடிவிடுவான்!'' என்றதும் குழந்தைகளெல்லாம் சிரித்தன.

வெள்ளைக்காரன் அவனோட நாட்ல விடிய விடியத் தோண்டுனாலும் நிலக்கரியும் இரும்புந்தான் கிடைக்கும். நம் முடைய நாட்ல தோண்டுனா... தங்கமும் வைரமும் கிடைக்கும்! இன்றைக்கு பிரிட்டிஷ் சக்ரவர்த்தியோட கிரீடத்தில் ஜொலிக்கிற கோஹினூர் வைரம் யாருடையது? நம்ம நாட்ல இருந்து கொண்டு போன வைரம்.

கோஹினூர் வைரத்தை மட்டுமா இங்கிருந்து கொண்டு போனான். நவரத்தினங்கள் பதித்த தங்கத்தினாலான மயில் ஆசனத்தையே கொண்டுபோய் விட்டான்! இப்படி நம்முடைய செல்வங்களையெல்லாம் கொண்டுபோய் விட்டான். கொண்டு போய்க் கொண்டேயிருக்கிறான்.''

இந்திய நாட்டின் நெசவுத் தொழிலின் 'வயணத்தை'ப் பற்றி அவர் வர்ணித்தார். நாற்பது கெஜம் துணியை ஒரு சிறிய்ய தீப்பெட்டிக்குள் வைத்து அடக்கிவிடலாம்; அவ்வளவு மெல்லிசான, ''நாக்குல பட்டா நமந்து போகும்'' படியாக - டாக்கா மஸ்லின் என்று பேர் பெற்ற துணி நெசவு செய்த - நெசவாளிகளைப் பாராட்டுவதுக்குப் பதிலாக இந்த வெள்ளைக்காரன் என்ன செய்தான். அவர்களுடைய கட்டை விரல்களை வெட்டினான். அப்பேர்க்கொத்த படுபாவி இவன்'' என்றார் கோபமாக.

இங்கே நம்முடைய பெரியாட்கள் சிலர் இந்த வெள்ளைக்கார விஞ்ஞானிகளைப் பெரிய்ய கில்லாடி என்று பாராட்டிப் பேசுகிறார்கள்; அவம் அதைக் கண்டுபிடிச்சான், இதைக் கண்டுபிடிச்சான்; அவம் மூளையைப்போல நமக்கு உண்டுமா என்று கேட்கிறார்கள். அப்பேர்க்கொத்த ஒரு வெள்ளைக்கார விஞ்ஞானிக்கு நம்முடைய பலகாரமான சுசியம் கொடுத்தார்கள் தின்று பார்க்க. ''அடேயப்பா ரொம்ப நல்லா இருக்கு' என்று சொல்லிவிட்டு இன்னொரு சுசியத்தைக் கையிலெ எடுத்துப் பிய்த்துப் பார்த்தான். அவிச்ச கோழி முட்டைக்குள்ளே மஞ்சக்கரு இருக்கிற மாதரி சுசியத்துக்குள்ளே இருக்கிற பூரணத்தைப் பார்த்துவிட்டு, இதை எப்படி இதுக்குள்ளே கொண்டுபோயி வைத்தார்கள் என்று தெரியாமல் முளிச்சான்! இது ஒரு பலகாரந்தானா இல்லெ ஒரு பறவையின் முட்டையான்னு கேட்டானாம் பிரகஸ் பதி!!

பெண்களும் குழந்தைகளும் சிரித்தார்கள். கூட்டத்தை - முக்கியமாகக் குழந்தைகளை - மேலும் சிரிக்க வைக்கவேண்டும் என்று பட்டது அவருக்கு. தன்னுடைய கையில் சுசியம் இருப்பதாக பாவனை பண்ணிக்கொண்டு திருப்பித் திருப்பிப் பார்த்தார்! ''ஒரு ஓட்டையையும் காணலியே. எப்படி இந்தப் பூரணத்தெக் கொண்டுபோயி இதுக்குள்ளரெ வச்சான்?'' என்று அந்த வெள்ளைக்கார விஞ்ஞானி யோசனையில் முனகுவதைப்போல முனகினார். 'வடையத்தான் செஞ்சான்' சரி தொளையத்தான் போட்டான்; சரி, இந்த நூலை எப்பிடிடா கோர்த்தான்!' என்று ஊசிப்போன உளுந்தவடையைப் பிய்த்துப் பார்த்துவிட்டு அதிசயப் பட்ட 'ஒண்ணுந்தெரியாத அப்புராணி'யின் கதையைச் சொல்லி அவரும் சிரித்து மற்றவரையும் சிரிக்க வைத்தார்.

இந்த வெள்ளைக்காரன் 'ஏரோப்பிளையம்' (ஏரேப்பிளேன்) கண்டுபிடிச்சதைப் பெரிசாகப் பேசுகிறார்கள் நம்ம பெரியாட்கள். இவம் அத இண்ணைக்குத்தானே கண்டுபிடிச்சான்; நாம அதெ எப்பவோக் கண்டுபிடிச்சிட்டமெ! ராமர், சீதாபிராட்டியை மீட்டிய பிறகு அங்கேயிருந்து நடந்தாவா வந்தாரு? விமானத்துலதானே வந்தாரு!! என்று கூட்டத்தைப் பார்த்துக் கேட்டார்.

விமானம் மக்களுக்குச் சோறு போடாது என்று பலமாகச் சொன்னார். மக்களுக்கு உணவு கிடைக்கக்கூடிய உருப்படியான திட்டங்களை சுதந்திரம் கிடைத்த பிறகு நம்முடைய சுதந்திர சர்க்கார் செய்யும். முதல்க் காரியமாக அது, மேற்குத் தொடர்ச்சி மலைமீது இருக்கும் கிரி ஆற்றைக் கீழே கொண்டுவந்து சங்கரங்கோவில்

தாலுகா கோவில்பட்டித் தாலுகா ரெண்டையும் - மலையிலிருந்து கடல் வரைக்கும் - செழிப்பாக ஆக்குவதுதான் நம்முடைய முதல் வேலை என்றார்.

இந்தக் கீரி ஆற்றைப் போலத்தான் கங்கைநதியும் ஒரு காலத்தில் பூமியிலுள்ள மக்களுக்குப் பயன்படாமல் இமயமலையின் உச்சியில் இருந்து கொண்டிருந்தது. அதை பகீரதன் என்கிற ராஜா எவ்வளவோ சிரமப்பட்டு அபாரமான மராமத்து வேலைகள் செய்து கங்கையைத் தரைக்குக் கொண்டுவந்து பூமியை வளப்படுத்தினான். இமயமலையின் உச்சியில் இருக்கும்வரை அதுக்குப் பேர் கங்கை; பூமிக்கு வந்ததும் அந்த ராஜாவின் பெயரான பாகீரதி ஆயிற்று. அதேபோல் மேற்குத் தொடர்ச்சிமலைமீது இருக்கும் கீரி ஆற்றை இந்தக் கரிசல் மண்ணில் பாயவிட்டு இந்தப் பூமியை வளப்படுத்தும் நம்முடைய சுதந்திர சர்க்கார் என்றார் உணர்ச்சியோடு. அதைக் கேட்ட மக்களுக்கு உள்ளுக்குத் தேனாமிர்தம் இறங்குவது போலிருந்தது. தங்கள் கரிசல்க் காடெல்லாம் மனக்கண்ணில் 'தீரவாச'மாக மாறி, எங்கே கண்டாலும் நெல், வாழை, மா, பலா, கமுகு, கரும்பு என்று தோன்ற ஆரம்பித்தது.

❖

## 30

கரிசல்க் காட்டின் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் ''கோவ்பல்ல'' எனும் கோபல்லபுரத்து மக்களின் மனசில் இந்திய நாட்டின் சுதந்திரப் போராட்டக் கனல் ஒன்று தெறித்து வந்து விழுந்து மெல்லக் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. அதற்கு முன்னால், அந்த கிராமத்தின் சிறிதே தொலைவில், - அதே மண்ணில் - ஒரு சிறிய 'ஹாம்பர்க் ரிவால்வரி'யிலிருந்து வெடித்துப் பாய்ந்த குண்டின் சத்தம் அவர்கள் காதில் வந்து விழ பல வருஷங்கள் ஆகியது! அப்போது, பஞ்சாப் மாநிலத்தின் லாயல்ப்பூர் மாவட்டத்திலுள்ள பங்கா என்னும் கிராமத்தின் தெருவில் மண் அளைந்து விளையாடிக்கொண்டிருந்தான் பகத்சிங் எனும் நாலு வயசுச் சிறுவன்.

அது 1911-ஆம் ஆண்டு ஜூன் மாசம் 17-ஆம் தேதி சனிக்கிழமை அன்றைக்குக் கொடைக்கானல் போவதற்காக ரயில் ஏறிப்

பயணமான நெல்லை ஜில்லாக் கலெக்டர் ஆஷ்துரையை மணியாச்சி ஜங்ஷனில் வைத்து, செங்கோட்டை ரகுபதி அய்யரின் மகன் வாஞ்சிநாதன் என்பவன் சுட்டுக்கொன்று, தானும் தற்கொலை செய்துகொண்டான்.

❖

இப்போது லாகூர் மத்திய சிறையில் பகத்சிங்குக்கும் அவனது தோழர்களான சுகதேவுக்கும் ராஜகுருவுக்கும் தூக்குக் கயிறுகள் தயாராகிக் கொண்டிருந்தன. இப்போது பகத்சிங்குக்கு வயசு 24.

இவர்களுக்குத் தூக்கு சொல்லப்பட்ட செய்தியை, தேசத்து மக்களைப் போலவே அந்த கிராமத்து மக்களாலும் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எந்நேரமும் எங்கும் அதைப்பற்றியே பேச்சாக இருந்தது. வைஸ்ராய் இர்வினை காந்தி சந்திக்கப் போகிறார். நிச்சயமாக பகத்சிங்கின் தூக்குத் தண்டனையைப்பற்றி இர்வினிடம் பேசுவார். பேசுவாராவது; பேசி, தண்டனையை ரத்து செய்யச் சொல்லுவார். அப்படிச் செய்யிறது கஷ்டம். தூக்குத் தண்டனையை வேணுமானால் ஆயுள் தண்டனையாக மாற்றச் சொல்லலாம். உடனே ஒரு பரவசம் பரவியது அவர்களிடம். காந்தி - இர்வின் ஒப்பந்தத்தில் ஒரு ஷரத்து; உடனே பகத்சிங்கின் தூக்கு தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்றும்படி சொல்லியிருப்பதாக! சாமி நாயக்கர் நினைத்தார்; பரவாயில்லை; ஆயுள் தண்டனைதானே, சுதந்திரம் கிடைத்தவுடன் நம் நாடு ஜெயிலிலுள்ள அரசியல் கைதிகளையெல்லாம் விடுதலை செய்யும். அப்போது பகத்சிங்கும் சுகதேவ், ராஜகுரு இவர்களும் வந்துவிடுவார்கள்.

ஆனால்...

காந்திஜி அதைப்பற்றி வைஸிராயிடம் மூச்சே விடவில்லையாம்! அவருடைய கொள்கைக்கும் அதுக்கும் சம்பந்தமில்லையாம். இதைப் பத்திரிகைகளில் படித்து அறிந்தபோது கிராமத்து இளைஞர்களுக்கு காந்திஜி பேரில் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

பகத்சிங் விஷயம்கூட அவர்களுக்கு அவ்வளவு ஆத்திரத்தைத் தந்தது என்று சொல்லமுடியாது; கார்வாலி சிப்பாய்கள் விஷயத்தில் காந்திஜி நடந்துகொண்டதை அவர்களால் மன்னிக்கவே முடியவில்லை!

சட்டமறுப்பு இயக்கத்தில் நாடுபூராவும் மக்கள் உற்சாகமாகப் பங்குகொண்டார்கள். அந்நியத் துணிக்கடைகள் முன், மதுபானக் கடைகள் முன் மறியல் மும்முரமாகவும் தீவிரமாகவும் நடை

பெற்றது. இந்த மக்கள் இயக்கத்தை நசுக்குவதற்காக பிரிட்டிஷ் அரசு ஒன்றன்பின் ஒன்றாக அவசரச் சட்டங்கள் கொண்டுவந்தது. ஊர்வலங்கள் பொதுக்கூட்டங்கள் தடை செய்யப்பட்டன. காங்கிரஸ் ஸ்தாபனம் நாடு பூராவிலும் தடை செய்யப்பட்டு சட்ட விரோதமாக்கப்பட்டது.

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் தலைநகராகிய பெஷாவரில் மக்கள் ஆர்த்தெழுந்து பிரம்மாண்டமான ஆர்ப் பாட்டம் நடத்தினார்கள். போலீஸ் அதிகாரிகளும் அவர்களின் படைகளும் அந்த மக்கள் கூட்டத்துக்கு முன்னால் நிற்க முடியாமல் போலீஸ் ஸ்டேஷனை விட்டே ஓட்டம் பிடித்தார்கள்! நகரத்தின் நிர்வாகமும் ஆட்சியும் காங்கிரஸ் தொண்டர்கள் கைவசம் வந்துவிட்டது.

இதனை முறியடிக்க பிரிட்டிஷ் அரசு ராணுவத்தை அனுப்பியது. முதலில் அனுப்பப்பட்ட கூர்க்கா படையினர் அந்த மக்கள்மீது சுட மறுத்துவிட்டார்கள்! அதன் பிறகு பிரிட்டிஷ் சோல்ஜர்களைக் கொண்ட படை அனுப்பப்பட்டு மக்கள் ஒடுக்கப்பட்டனர். அந்தப் பெரும்பலம் வாய்ந்த ஆயுதம் தாங்கிய படையின் முன்பு கூர்க்கா சிப்பாய்கள் ஆயுதங்களைக் கீழே போட்டனர். அவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டு, ராணுவக் கோர்ட் முன்னால் கொண்டு நிறுத்தி, அவர்கள் அனைவருக்கும் ஆயுள் தண்டனை வழங்கப்பட்டு அந்தமான் தீவு கொண்டுபோகப்பட்டார்கள்.

காந்தி - இர்வின் ஒப்பந்தத்தின் அடிப்படையில், காந்திஜி சட்ட மறுப்பு இயக்கத்தைத் தற்காலிகமாக நிறுத்திக்கொண்டார். இந்த ஒப்பந்தத்தின்படி, காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மீது விதிக்கப்பட்டிருந்த தடை நீக்கப்பட்டது. காங்கிரஸ் சட்டபூர்வமாகச் செயல்படும் நிலை ஏற்பட்டது. சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்ற அனைவரும் விடுதலை செய்யப்பட்டனர். பலாத்காரக் குற்றங் களுக்காகவும் பலாத்காரத்தைத் தூண்டிய குற்றங்களுக்காகவும் தண்டிக்கப்பட்டவர்கள் யாரும் விடுதலை செய்யப்பட மாட்டார்கள் என்று இந்த ஒப்பந்தத்தில் திட்டவட்டமாகக் கூறப்பட்டிருந்தது. பெஷாவரில் மக்களைச் சுட மறுத்ததற்காக ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட கூர்க்கா சிப்பாய்கள் எவ்வித பலாத்காரத்திலும் இறங்கவில்லை. அவர்கள் தங்கள் சகோதரர்கள் பேரில் - அவர்கள் மீது - சுட மறுத்தார்கள். காந்திஜி கூறிய அகிம்சா நெறியைத்தான் கடைப்பிடித்தார்கள். என்றாலும் அவர்கள் விடுவிக்கப்பட வில்லை. இதைப்பற்றி காந்திஜி வைஸ்ராய் இர்வினிடம் பேச வில்லை.

இந்தச் செய்தி கோபல்லபுரத்து மக்களிடம், முக்கியமாக இளைஞர்களிடம் அதிர்ச்சியையும் வருத்தத்தையும் தந்தது. கொத்தனார் சாமிநாயக்கர் ஆவேசப்பட்டார். காந்தி சொல்லுகிற 'மனச்சாட்சிப்படி, அந்தராத்மா உத்தரவுப்படி' தான் இந்த கூர்க்கா சிப்பாய்கள் நடந்திருக்கிறார்கள். அவர்களைப் போற்ற வேண்டாம்; விடுதலைக்காக வைஸிராயிடம் ஒரு வார்த்தையாவது பேசியிருக்க லாம், இந்தக் கிழடு என்றார் சாமி நாயக்கர் வருத்தத்துடன்.

பலநாள்க் கழித்து அதற்கான விடை கிடைத்தது இவர்களுக்கு. சில மாதங்களுக்குப் பிறகு, வட்ட மேஜை மகாநாடு. கலந்துகொள்ள காந்திஜி லண்டனுக்குப் போயிருந்தபோது ''லேமாண்டே'' என்கிற பிரெஞ்சு தினசரிப் பத்தரிகையின் நிருபர் திரு.சார்லஸ் பெத்ராஸ் என்பவர் காந்திஜியைப் பேட்டி கண்டபோது ஒரு கேள்வி கேட்டார்.

''அந்த கூர்க்கா சிப்பாய்களை விடுவிக்கக் கோரி நீங்கள் ஏன் வைஸ்ராய் இர்வின் பிரபுவிடம் கேட்கவில்லை?''

'சுடு' என்று மேலதிகாரி உத்தரவிடும்போது, கீழ்ப்படியாத சிப்பாய் அவன் எடுத்துக்கொண்ட - சத்தியப்பிரமாண - உறுதி மொழியை மீறியவனாகிறான். மேலதிகாரிக்கு இவ்வாறு கீழ்ப்படி யாத சிப்பாய் கிரிமினல் குற்றத்தை இழைத்தவனாகிறான். மேலதி காரிக்குக் கீழ்ப்படியாமல் இருப்பதை நான் கற்றுக்கொடுத்தால் நாளைக்கு நாங்கள் அதிகாரத்துக்கு வரும்போது அவர்கள் அதையே செய்வார்கள் என்று அஞ்சுகிறேன்'' என்று பதில் அளித்தார் காந்திஜி.

காந்திஜியின் இந்தப் பதிலைப்பற்றி அன்று கம்மாய்க் கரை மரத்து நிழலில் இளவட்டங்களுக்குள் காரசாரமாக விவாதம் நடந்தது. அப்போது அன்னமய்யாவும் அதைக் கேட்டுக்கொண்டிருந்தான். கொத்தனார் சாமி நாயக்கர் விவாதத்தின் ஊடே வெகுண்டெழுந்தார். கூட்டத்தை விட்டு விறுவிறு என்று வெளியேறிப் புறப்பட்டவர் கொஞ்சதூரம் போய் வேகமாகத் திரும்பி வந்து, ''மேலதிகாரி சொன்னதை அப்படியே நிறைவேத்தணும்? அப்படி நிறைவேத் திட்டா அவன் குத்தவாளி இல்லை!! ஜாலியன் வாலாபாக்கில் சுட்டானே டயர்; அவன் செய்ததும் மேலதிகாரியின் உத்தரவுப் படிதான். ஆகவே டயர் நிரபராதி!!!'' என்று சொல்லி எகத்தாளமாய் ஒரு கோணல்ச் சிரிப்பு சிரித்துவிட்டு வேகமாய் நடந்து போய் விட்டார்.

பெரியவர்கள் பேசும்போது நடுவில் பேசக்கூடாது என்று அன்னமய்யா பொறுமையாக இருந்தான். சாமி நாயக்கர் சொல்லி விட்டுப் போனதை அவனால் ரொம்ப நாளைக்கு மறக்க முடிய

வில்லை; 'கண்ணுலேயே' இருந்தது. அந்தக் கூர்க்கா சிப்பாய்கள் அநியாயமாக அந்தமான் தீவில் ஆயுள் தண்டனைக் - கடுங்காவல் தண்டனைக் கைதிகளாக வாடுவதை நினைத்து வேதனைப் பட்டான். பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகளின் உத்தரவுக்குப் பணிந்து தங்கள் சகோதரர்களைச் சுடவில்லை அவர்கள். தேசபக்தி மிக்க சிப்பாய்கள் அவர்கள் என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

❖

அன்னமய்யாவின் படிப்பு பாதிலேயே நின்றுபோய்விட்டது. ரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கி காட்டுத்தீ போல அது வேகமாகப் பரவிக்கொண்டு வந்தது. ஒரு அரக்கன் பசியோடு மாமிசச் சோற்று உருண்டைகளை எடுத்து வெறி ஆவலோடு விழுங்குவதுபோல அய்ரோப்பிய நாடுகளை இட்லர் படு வேகமாகப் பிடித்துக்கொண்டே வந்தான். உலகம் இதற்கு முன் கண்டிராத ஒரு வேகம் அது!

தினம் தவறினாலும் இங்கிலாந்துத் தீவின்பேரில் மழை கொட்டுவதுபோல இட்லரின் நூற்றுக்கணக்கான விமானங்கள் குண்டுமாரி பெய்தன. பிரெஞ்ச் நாட்டைப் பிடித்ததிலிருந்து அங்கிருந்துகொண்டு இங்கிலீஷ் கால்வாயை - ஒரு தாண்டு - தாண்டிப் போய் இங்கிலாந்தைக் குண்டுகளால் தாக்குவது, மேலும் வசதியாக இருந்தது அவனுக்கு. ஒரு நாளைக்கு எத்தனை தடவை தாக்குகிறது. எந்த நேரத்தில் தாக்குகிறது என்றெல்லாம் கிடையாது. குழந்தைகள் நினைத்த போதெல்லாம் சிறு தீனி தின்பதுபோல, சந்தோஷத்துக்குத் தக்கபடியெல்லாம் பறந்து போய் விமானங்கள் குண்டுகள் வீசிவிட்டு வருவது பற்றி பத்திரிகைகளில் செய்திகள் வந்துகொண்டே இருந்ததை படித்துப் படித்து ஆனந்தித்தார்கள் கோபல்லபுரத்து இளைஞர்கள்.

''இத்தனை நாட்டைப் பிடிச்சவனுக்கு, இந்த இங்கிலாந்தைப் பிடிக்காமல் இந்த ''இட்லன்'' லேட்டாக்கிக்கிட்டே இருக்கானே!'' என்கிற வியப்பு அவர்களுக்கு.

கொத்தனார் சாமிநாயக்கர் வழக்கம்போல் ஓங்கிச் சொன்னார்; ''பிடிக்கத் தெரியாம இல்லெ. அந்த இங்கிலாண்டு தீவையே குண்டுகளாலேயே அடிச்சி, கடலுக்குள்ள அப்பிடியே கரஞ் சிரணும்ங்கிறதுதான் இட்லனோட எண்ணம்'' இந்திய நாடு பூராவும்

அந்தச் சமயத்தில் இருந்ததுபோல எப்பவும் இல்லை என்று சொல்லும்படியாக சுதந்தர ஆவேசம் கொந்தளித்தது மக்கள் மனசில். இதுதான் சமயம் இந்த வெள்ளைக்காரனை விரட்டி அடிக்க என்று தீர்மானித்தார்கள்.

இளைஞர்கள் எல்லோரும் ஒரு புதிய தலைமை வேண்டும் தேசத்துக்கு என்று நினைத்தார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு ஒரு புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய திருந்தது. பட்டாபி சீத்தாராமய்யாவின் பெயரைச் சொன்னார் காந்திஜி. சீத்தாராமய்யாவை எதிர்த்து சுபாஷ் சந்திரபோஸ் நின்றார்.

சுபாஷ் போஸ் ஜெயிக்க வேண்டுமே என்று மனம் அடித்துக் கொண்டது கிராமத்தில் இளைஞர்களுக்கு.

203 வாக்குகள் அதிகம் பெற்று, காங்கிரஸ் தலைமை பதவியை சுபாஷ் சந்திரபோஸ் வென்றார். எல்லோர் மனசும் குதூகலித்தது. ''பாட்டாபி தோல்வி என் தோல்வி'' என்றார் காந்திஜி.

அவர் அப்படிச் சொன்னது ஏதோ ஒரு வகையில் கிராமத்து இளைஞர்களைப் பாதித்திருக்கவேண்டும். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளும்போதெல்லாம். ''பட்டாபி தோல்வி எந் தோல்வி'' என்று சொல்லிக்கொண்டார்கள்! அதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொள்வதில் ஒரு சந்தோஷம் இருந்தது அவர்களுக்கு.

யுத்தம் தீவிரமாகியது. எந்த நிமிஷமும் இட்லர் ஜெயிக்கலாம் என்று பேசிக்கொண்டார்கள். இட்லரோடு முசோலினியும் ஜப்பானும் சேர்ந்துகொண்டதால் இவர்களை ''மும்மூர்த்திகள்'' என்று கிராமத்தில் குறிப்பிட்டுப் பேசினார்கள்.

கலெக்டர் போன்ற பெரிய பெரிய அதிகாரிகளெல்லாம் கிராமத்துக்கு வந்து யுத்த நிதி திரட்ட வந்தார்கள். யுத்தத்துக்குப் பணம் கொடுங்கள், யுத்தத்துக்கு ஆட்களை அனுப்புங்கள் என்று கேட்டார்கள், கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்த சாமிநாயக்கர், ''ஏம், நீ போய் சாகேம் லெ'' என்றார் முணுமுணுப்பான குரலில்! கிராம முன்சீப் அய்யர் கையை ஆட்டி அந்தத் திசை நோக்கி சத்தம் போடாமல் இருங்கள் என்று பாவனையில் சொன்னார்.

யுத்த உதவிக்கு எதிராய் காந்திஜி தனிநபர் சத்யாக்கிரகம் தொடங்கினார். யுத்தத்துக்குப் பண உதவி செய்யாதீர்கள்,

பட்டாளத்துக்கு ஆள் அனுப்பாதீர்கள். வெள்ளைக்காரர்கள் இந்த நாட்டைவிட்டுக் காலி செய்துகொண்டு கிளம்பிப்போய் விட வேண்டும் என்ற காந்திஜியின் குரலை கிராமம்தோறும் வந்து காங்கிரஸ் தொண்டர்கள் சொல்லிக்கொண்டேயிருந்தார்கள்.

பார்த்தான் வெள்ளைக்காரன். இது சரிப்பட்டுவராது என்று சர்வாக்கமாக 1942 ஆகஸ்டில் பம்பாயில் கூடிய எல்லாத் தலைவர் களையும் பிடித்து ''உள்ளே'' போட்டான். அவ்வளவுதான்; வந்தது கோபம் மக்களுக்குக் கண்மண் தெரியாமல். என்ன செய்கிறதென்று தெரியாமல், தங்களுக்குத் தோன்றியபடியெல்லாம் நடந்தார்கள்.

கோவில்பட்டி ஹாஸ்டலில் தங்கி அன்னமய்யா படித்துக் கொண்டிருந்தான். தங்களுடைய கணக்கு வாத்தியாரை வந்து போலீஸ்காரர்கள் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள் என்று கேள்விப்பட்டதுதான்; பையன்களுக்கெல்லாம் கண்ணீரும் கோபமும் பொங்கியது.

அப்பதான் சாப்பாட்டுக்கு தட்டை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். செய்தியைக் கேள்விப்பட்டதும் அன்ன மய்யா தட்டை எடுத்து ஓங்கித் தரையில் அடித்தான். உடனே எல்லா டம்ளர்களும் தட்டுகளும் சுவர்களிலும் ஜன்னல்களிலும் போய் சரமாரியாய் மோதின. ஆங்காரத்தை மேலும் எப்படித் தணித்துக் கொள்ள என்று தெரியவில்லை. ரண்டு முஷ்டிகளை வானத்தை நோக்கி உயர்த்திக்கொண்டு செவிப்பறை கிழியும்படியாக கீச்சுக் குரலில் ரயில் கூவுவதுபோலக் கத்தினான் ஒரு மாணவன்.

எல்லாரும் எழுந்து ஓடினார்கள். எங்கே போவது என்று தெரியவில்லை. பள்ளக்கூடத்துக்கு எதிரேதான் ரோடு. அப்பதான் ஒரு பஸ், பயணிகளை அடைத்துக்கொண்டு, திணறிக்கொண்டும் மோசமாகப் புகையைக் கக்கிக்கொண்டும் வந்தது. 'ஒங்களுக் கெல்லாம் இப்பப் பயணம் ஒரு கேடா, என்று தோன்றியதோ அல்லது ஜனங்களை சதா இம்சிக்கும் இந்த பஸ்ஸையும் அந்தக் கண்டக்டனையும் நொறுக்கணும் என்று தோன்றியதோ, கற்களைப் பொறுக்கி எடுத்து பஸ்ஸை நோக்கி விர் விர் என்று எறிந்தார்கள். 'இதேதடா வம்பு!' என்று நினைத்த டிரைவர் லாவகமாய் வண்டியை வேகமாக ஓட்டித் தப்பித்தேன் பிழைத்தேன் என்று இவர்கள் கண்களிலிருந்து மறைந்தார்.

அப்போதுதான் தேசத் தலைவர்களையெல்லாம் 'பிடித்து அடைத்ததற்கு' ஒரு பெரிய்ய 'ஹர்த்தால்' நடந்து முடிந்த சமயம்.

இந்த ஸ்தம்பிப்பிலிருந்து எப்படி மீள என்று தெரியாமல் திகைத்துக்கொண்டிருந்தபோதுதான் முன்பின் தெரியாத ஒருத்தர் வந்து, நோட்டீஸ் போன்ற ஒரு தாளை அந்த மாணவர்களிடம் சிக்கனமாக விநியோகித்தார். அது உருட்டச்சில் எழுதப்பட்டது. அதில் தந்திக் கம்பிகளை அறுப்பது, தண்டவாளத்தைப் பெயர்க்கிறது போன்ற விஷயங்கள் அடங்கியிருந்தன. வாங்கி ஆர்வமுடன் படித்தார்கள். அதேபடி செய்துவிட வேண்டியதுதான் என்று தோன்றிவிட்டது. அந்த நோட்டீஸின் அடியில் ஒரு குறிப்பு தரப்பட்டிருந்தது.

❖

# 31

இந்த நோட்டீஸைப் போலவே, இதைப் படிப்பவர்கள் இதே போல் பல நகல்களை எழுதி எடுத்து மக்களிடம் பரப்பச் சொல்லியிருந்தது அதில். அன்னமய்யாவும் அவனது சில நண்பர்களும் இரண்டு பகுதியாகப் பிரிந்து ஒரு பகுதி அன்று இரவு 4 மணிக்கு எழுந்திருந்து பக்கத்திலிருந்த தந்திக் கம்பியை அறுப்பது என்றும் இன்னொரு பகுதி இதேபோல் எழுதி கிராமங்கள்தோறும் பரப்புவது என்றும் முடிவு செய்துகொண்டு ஹாஸ்டலுக்கு வந்தார்கள். வந்த பிறகுதான் தெரிந்தது அங்கே நடந்தேறியிருக்கும் அலங்கோலம்.

தூரத்தில் வரும்போதே ஹாஸ்டல் வார்டன் சத்தம் போட்டுச் சொல்லுவது காதுகளில் விழுந்தது. 'பெட்டி படுக்கையெல்லாம் எடுத்துக்கிட்டு அவங்கவங்க ஊருகளுக்குப் போய்ச் சேருங்க. பள்ளிக்கூடம் எப்பத் திறக்கிறதுன்னுட்டு தகவல் வந்த பிறகு வந்தாப் போதும்; ம்; சீக்கிரம். காலிபண்ணுங்க' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

அன்னமய்யா அந்த நோட்டீஸோடு ஊர்வந்து சேர்ந்தான். வரும்போதே ஞாபகமாக டிம்மிப் பேப்பரும் கார்பன் ஷீட்டுகளும் வாங்கிக்கொண்டு வந்திருந்தான்.

ஒரு தடவை நகல் செய்து எழுதிவிட்டு, திரும்பவும் படித்துப் பார்க்கும்போதுதான் தெரிந்தது, ஏகப்பட்ட எழுத்துப் பிழைகள்

விழுந்திருக்கிறது என்று. பார்த்து எழுதுகிறதுலேயே இப்படியா என்று தன்னை நொந்துகொண்டான்.

எழுத்துப் பிழையில்லாமல் அச்சுக் குண்டாகவும் எழுதும் அழகரசனைக் கூப்பிடுவமா உதவிக்கு என்று நினைத்தான். அவனும் அதே பள்ளியில் படிப்பவன்தான். பர்மா நாயக்கருடைய பேரன். சௌந்தரராஜன் என்ற தனது பெயரை அழகரசன் என்று மாற்றி வைத்துக்கொண்டவன். இவனைப்போல் ஹாஸ்டலில் தங்கிப் படிக்காமல் அவர்கள் சொந்தக்காரர்கள் வீட்டில் தங்கிப் படித்துக்கொண்டிருந்தான். முதலில் அவன் கோவில்பட்டியி லிருந்து வந்துவிட்டானா என்று தெரியவில்லை. வந்திருந்தாலும் இதுக்கென்று கூப்பிட்டால் வருவானா என்றும் சொல்லமுடியாது. அவனுக்கென்று ஒரு சிந்தனை, பேச்சு எல்லாம் இருந்தது. அவனோடு வாதம் செய்து திரும்புவது என்பதே முதலில் கடினம் என்றெல்லாம் நினைத்தான் அன்னமய்யா.

போன 'முழுவருசப்பரீட்சை' லீவில் வந்திருந்தபோது கரை மரத்து நிழலில் ஒருநாள் அழகரசனோடு அரசியலைப்பற்றிப் பேச நேர்ந்தபோது, அவனுடைய கொள்கைகள் வாதங்களைக் கேட்ட கோபல்லபுரத்து வாலிபர்களுக்குப் புதுசாக இருந்தது. இப்படி ஒரு சிந்தனை இருப்பதை அன்றுதான் அன்னமய்யாவும் அறிந்தான்.

வெள்ளையரிடமிருந்து நாடு விடுதலை பெறவேண்டுமென்ற துடிப்பு அழகரசனுக்கு இல்லை. அந்த விடுதலை வேண்டியதுதான் என்று அவன் ஒப்புக்கொண்டாலும் அதைவிட முக்கியமான ''விடுதலை''யைப் பற்றிப் பேசினான்;

வெள்ளை ஏகாதிபத்யத்திடமிருந்து நாம் விடுதலை பெறுவதற்கு முன் ''சிகப்பு ஏகாதிபத்தியத்திடமிருந்து முதலில் நாம் 'விடுதலை' பெறவேண்டும்'' என்ற புதிய சிந்தனையை அவர்கள் முன்வைத் தான். ''செகப்பு ஏகாதிபத்யமா'' அது என்னப்பா புதுசா இருக்கு! என்று சாமிநாயக்கர்கூட அவனிடம் கேட்டார்.

''சிகப்பு ஏகாதிபத்யம்ண்ணா சிகப்பு நிறத்தோலைக் குறிப் பிடாது. ஒரு வகையில் அப்பிடியும் வச்சிக்கிடலாம்; தப்புக் கெடை யாது! ஆனா இங்கெ நிறம் முக்கியமில்லெ. நம்முடைய மக்கள் முதல்லெ பார்ப்பன ஆதிபத்யத்திலிருந்து முழுசா விடுதலை பெறணும்'' என்றான்.

'இவன் என்ன சொல்லுதான்!' என்று திகைத்தான் அன்னமய்யா. ''வெள்ளை ஏகாதிபத்யம் கண்ணுக்குத் தெரியிறமாதரி இந்தச்

செகப்பு ஏகாதிபத்யம் கண்ணுக்குத் தெரியாது; அவ்வளவு நுட்பமாப் பின்னப்பட்டிருக்கு அந்த வலை. அதுமட்டுமில்லெ, நம்ம விரலை எடுத்து நம்ம கண்ணுலயே குத்துற சாமர்த்யமும் கொண்டது அது''

'என்ன சொல்லுதான் இவன்!' என்கிறமாதரி எல்லாரையும் ஒரு பார்வை பார்த்தார் சாமி நாயக்கர். அவர் பார்த்தவிதம் இவன் சொல்லுவதை இங்கே இருப்பவர்கள் யாரேனும் புரிந்து கொண்டிருக்கிறார்களா என்று அறிந்துகொள்ளத் தேடுவது போலிருந்தது.

''புராண இதிகாசங்களாலும் சாஸ்திரங்கள் என்ற பேரிலும் மூடநம்பிக்கைகளாலும் நம்மைப் பரம முட்டாள்களாக்கி விட்டார் கள் இவர்கள்'' என்றான் அவன்.

''நம்முடைய உழைக்கும் மக்களுடைய கைகள் 'காய்காய்ச்சி'ப் போயிருப்பதையும் அவர்களுடைய கைகள் இப்பதான் பிறந்த குழந்தையின் கைகளைப்போல் பூப்போல இருப்பதையும் கவனியுங்கள். எந்தப் பார்ப்பனனும் பாறைக் கூட்டங்களுக் கிடையில்ப் போய் கல் உடைப்பதில்லை. நம்முடைய பெண்டிரைப் போல வெயிலில் முகம் கருகுவதில்லை. ஆனாலும் அவர்கள் மிகச் சௌகரியமாக, பாலும் நெய்யும் உண்டு, ஆடை ஆபரணங்களோடு சுகவாசிகளாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றான் அழகரசன்.

அவன் சொல்லுவதைப் பலமாக ஆட்சேபித்த அன்னமய்யா ''இந்தமாதரி ஒட்டுண்ணி வாழ்க்கை நடத்துகிறவர்கள் மற்ற ஜாதிகளிலும், ஏன் நம்முடைய ஜாதியிலேயே இல்லையா?'' என்றுகேட்டான்.

''அதானே!'' என்று கேட்டார் சாமி நாயக்கரும்.

''தேசம் பரிபூரண சுதந்திரம் அடைந்தவுடன், இந்த ஒட்டுண்ணி களுக்கும், மற்றவன் உழைப்பையே உண்டு வாழும் மூட்டைப் பூச்சிகளுக்கும் முடிவுகாலம் வந்துவிடும்'' என்றான் அன்னமய்யா.

''இல்லை; நீ சொல்றது தவறு. தேசம் சுதந்திரம் அடைவது என்பது நாம் 'சட்டிக்குப் பயந்து நெருப்பில் விழுந்த' கதையாத் தானிருக்கும் என்றான் அவன்.

''அப்ப, வெள்ளைக்காரன் இருக்கனும்ன்னு சொல்லுதயா நீ?'' என்று கேட்டார் சாமி நாயக்கர்.

இந்த நேரடியான கேள்விக்குச் சட்டென்று எப்படி பதில் சொல்ல என்று அவன் கொஞ்சம் திகைத்தமாதரி இருந்தது. சாமிநாயக்கர் அவசரப்படுத்தினார் ''சொல்லப்பா; சொல்லு''

''வெள்ளைக்காரன் இருக்கணும்ண்ணு சொல்ல முடியாது. நாடு எப்படி விடுதலை பெறணும்ன்னு நினைக்கிறமொ, அதேபோல பார்ப்பனியத்திலிருந்தும் மக்கள் விடுதலை பெறணும்; இது ரொம்பவும் முக்கியம்''

''நாடு விடுதலை அடைந்த பிறகு இப்படியான சீரழிவு சக்திகளும் அழிந்தே தீரும்'' என்றான் அன்னமய்யா, ஓங்கி.

''தீராது; அதுக்கு வழியில்லை''

''ஏந் தீராதுன்னு சொல்லுதெ?''

''காங்கிரஸ் இயக்கத்தின் தலைமையே அந்த அவர்களிடம் தானிருக்கு''

''எந்த எவர்களிடம் இருக்கு; எந்த எவர்களிடமும் இல்லெ. நீ சொல்ற பிராமணன் அல்லாத காந்திஜியிடம் இருக்கு தேசத்தின் நலமெ''

''காந்தியாரிடமிருந்து அது போயிட்டதுங்கிறதுதானே 'பாட்டாபி தோல்வி எந்தோல்வி'ங்கிறது புலப்படுத்துது!''

''அது காந்தியோட, அவரோட கொள்கைக்குக் கிடைச்ச தோல்வியில்லெ. அது தனிநபர் விஷயம்; இளைஞர்களின் வெற்றிதானே ஒழிய, நீ நெனைக்கிற மாதிரி பிராமணன் அபிராமணன் விசயம் இல்லெ''

''இல்லை; ஒங்களுக்கு விஷயங்களைத் தள்ளிப் பார்க்கிற பார்வை இல்லை. சுதந்திரம் கிடைக்கிற வரைதான் காந்தியாரை வைத்துப் பார்ப்பார்கள்; அதம்பிறகு அவருக்கு என்ன நடக்குமன்னு சொல்ல முடியாது''

''கிறுக்குத்தனமா பேசாதே'' என்று எரிச்சல்ப்பட்டார் சாமி நாயக்கர். ''நா ஒண்ணும் கிறுக்குத்தனமாப் பேசலை; நீங்கதான் கிறுக்கங்களா இருக்கீங்க!'' என்று சிரித்துக்கொண்டே பதிலடித்தான் அழகரசன்.

விவாதம் தடம் விலகுவதைக் கவனித்த அன்னமய்யா சூட்டைத் தணிக்க எப்படிப் பேச்சைத் திருப்புவது என்று யோசித்துக்கொண்டு

இருக்கும்போது அந்த வழியாப் போன கஸ்தூரி, என்ன கூட்டமா இருக்கு என்று அறிய அங்கே வந்தார். அழகரசனைப் பார்த்ததும் அவருக்குப் புன்னகை வந்தது. அவனை அவர் ''சூனாமானா ஆசாமி'' என்று தமாஷாகக் குறிப்பிடுவார். ''ஈரோட்டு நாயக்கரின் பேரப்புள்ள'' என்றும் கேலி செய்வதுண்டு. அழகரசனிடம் ஒரு குணம் இருந்தது. விவாதத்தின்போது அவனை யாராலும் ஆத்திரப்பட வைக்கவே முடியாது. உணர்ச்சிவசப்பட்டுப் பேசமாட்டான். விவாதங்களை ஒரு விளையாட்டாகவே 'ஆடிக்' காட்டுவான். கிராமத்தில் மற்றவர்களால் அது முடிவதில்லை. பேச்சு ஆரம்பித்த கொஞ்ச நேரத்துக்குள் அவனுக்கு வசவுதான் கிடைக்கும்! பகபகவென்று சிரிப்பான் அழகரசன். இந்தமாதிரி விவாதம் பண்ணுவதற்காகவே ஏதோ ஒரு பள்ளியில் படித்துத் தேறி வந்திருக்கிறமாதரியே இருக்கும் அவனுடைய பேச்சு.

'பேசிப் பேசியே கெட்டுப் போய்ட்டடா நீ'' என்பார்கள் கிராமத்துப் பெரியவர்கள் அவனிடம்.

''என்ன, ஈரோட்டு மாப்ளெ என்ன சொல்லுதான்'' என்று கேட்டுக்கொண்டே கஸ்தூரி வந்து அவர்களிடையே உட்கார்ந்தார்.

''காங்கிரஸூத் தலைமெ கம்ப்ளிட்டா பிராமணங்க கைக்குப் போயிட்டது ங்குராரு ஒங்க மாப்பிளெ'' என்றார் சாமி நாயக்கர் கஸ்தூரியிடம், ஒரு ஆவலாதி சொல்லும் குரலில்.

''ஆமாம்; மாப்பிளெ சொல்றதுஞ் சரிதான்! அவனோட ஈரோட்டு நாயக்கருக்கும் அப்படித் தோணப் போய்த்தான் அவருங் காங்ரஸ்லெ இருந்தே வெலகுனதெ'' என்றார் கஸ்தூரி.

'வர்ணாசிர தர்மங்கள்ளாம் அப்படியே இருக்கணும்ன்னு சொல்லுதாரே காந்தியார்'' என்று கேட்டான் அழகரசன். ''ஆமா; இருக்கலாம்; இருந்துட்டுப் போகட்டும், ஆனா அதைப் பாராட்டக்கூடாதுங்குறார் அவர்''

''இருந்தால் பாராட்டாமல் எப்படி இருக்கிறது? முதலில் அது இருக்கப்போயித்தானே பாராட்டி நடக்கவேண்டியதே வந்தது?''

''அது முந்தியக் காலம். இப்பொ, நம்முடைய தலைவர்கள் அதைப் பாராட்றது இல்லெ. அவர்கள் நடத்துற மகாநாடுகளிலெல்லாம் எல்லோரும் சமமாத்தான் உட்காந்து சாப்பிடுராங்க. நானே பாத்திருக்கென்''

''மகாநாட்ல ஒரு நா அப்பிடி நடந்துட்டா எல்லாம் ஆயிருச்சா; அது ஒரு நாக் கூத்து. வாழ்க்கைக்கு வரவேண்டாமா?''

''வாழ்க்கைக்கு வராம என்ன! காந்தியின் ஆஸ்ரமத்திலும் அது தான் நடக்குது''

''காந்திஜி ஆஸ்மரத்தில நடந்தது ஏன் *'பரத்வாஜர் ஆஸ்ரமத்து'ல நடக்கலெ?

கஸ்தூரி சிரித்தார்!

''சிரிச்சி மழுப்ப முடியாது'' என்றான் அழகரசன்.

''மகரிஷி''ன்னு எல்லாராலும் மதிக்கப்படுற வ.வே.ஸு அய்யராலேயே செய்ய முடியாத காரியத்தை நாளைக்கி இவங்க நடத்திக் காட்டுவாங்கங்கிறது என்ன நிச்சயிப்பு?'' என்று கேட்டான்.

அழகரசன் அன்று கேட்ட அந்தக் கேள்வி வெகுநாளாய் அன்ன மய்யாவின் மனசில் எதிரொலித்துக்கொண்டேயிருந்தது. அதன் பிறகு அவனுடைய கணக்கு வாத்தியார் ருத்ரப்பா சொன்ன ஒரு காட்சி அவன் நினைவுக்கு வந்தது...

வக்கீல் வைத்தியநாதய்யர் தனது தோளில் ஒரு ஹரிஜனக் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குள் நுழைகிறார். அவருடைய மற்றொரு கை ஒரு ஹரிஜனக் கிழவியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது. அவருக்குப் பின்னால் ஒரு ஹரிஜனங்களின் கூட்டம். அவர்கள் கைகளில் தேங்காய், பழம் முதலிய மங்கலப் பொருள்கள் நிறைந்த தட்டுகள். அவர்களைக் கோவிலுக்குள் நுழையவிடாமல் தடுக்க வைதீகர் களின் தலைமையில் கம்பும் கையுமாக ஆலயப் பணியாளர்களும் குண்டர்களும்.

---

*பரத்வாஜ ஆஸ்ரமம்- நெல்லை மாவட்டம் சேர்மாதேவி என்ற ஊரில் வ.வே.ஸுப்ரமண்ய அய்யர் நடத்தி வந்த ஆஸ்ரமம். இங்கே பிராமணக் குழந்தைகளும் மற்ற ஜாதிக்குழந்தைகளும் சேர்ந்து ஒரே பந்தியில் உட்கார்ந்து சாப்பிட அனுமதிக்க மறுத்துவிட்டார் மகரிஷி, வ.வே.ஸு. அய்யர்.
இந்த ஆஸ்ரமம் நடத்த காங்கிரஸ் கட்சி நிதி உதவி செய்தது. அப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் மாநிலத்தலைவராக இருந்த ஈரோடு ராமசாமி (பெரியார்) இதைப் பலமாக ஆட்சேபித்தார். தொடர்ந்து ஆட்சேபித்தும் நிதி உதவியை அவரால் நிறுத்த முடியவில்லையாதலால் காங்கிரஸ் கட்சியிலிருந்தே இதன் காரணமாக கோபத்தோடு விலகினார்.

வைத்திய நாதய்யரை அந்த வைதீகப் பெருமக்கள், இனத்துரோகி என்றும் நாத்திகன் என்றும் தூற்றினார்கள்.

❖

## 32

அழகரசன் இன்னும் ஊர் திரும்பியிருக்கவில்லை என்று விசாரித்து அறிந்துகொண்டான் அன்னமய்யா. இனி என்ன செய்ய என்று யோசித்துக்கொண்டிருந்த போதுதான் 'கடவுள்போல'' சுப்பையா தட்டுப்பட்டான். அவன் மதுரைக் கல்லூரி மாணவன்; இவனைவிட ஒரு வகுப்பு முந்தியதால் காலேஜுக்குப் போய் விட்டான். படிப்பில் படுசுட்டி. அரசியல் விஷய அக்கறைகளிலும் அப்படித்தான். ரொம்ப உணர்ச்சிவசப்பட்டவன்.

சுப்பையாவைப் பார்த்ததும் அன்னமய்யாவுக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. நல்ல சமயத்துக்கு வந்தான் என்று நினைத்துக் கொண்டு ''வா, வீட்டுக்குப் போவோம்'' என்று அழைத்தான். ''வீட்டுக்கு என்னத்துக்கு; காத்தாட நடுச்சுவரில் உக்கார்ந்து பேசுவம் வா'' என்றான். குளத்துக்கு மத்தியில் அரைகுறையாகக் கட்டி முடிக்கப்படாமல் நிற்கும் நடுச்சுவரில் உட்கார்ந்து பேசிப் பொழுது கழிப்பதில் ஒரு ஆனந்தம் இருந்தது அவர்களுக்கு.

அன்னமய்யாவுக்கு இப்போது அந்த ஆனந்தம் வேண்டாம். அதைவிடப் பெரிசான அதையும்விட முக்கியமான பேரானந்தம் ஒன்றை நோக்கி சுப்பையாவை அழைத்துப் போகவேண்டும். ''ஒரு முக்கிய சமாச்சாரம் இருக்கு; வீட்டுக்கு வா சொல்லுதென்'' என்று கூட்டிக்கொண்டு போனான்.

என்னவாயிருக்கும் முக்கிய சமாச்சாரம்? பொம்பளைங்க சமாச்சாரம் எதாவது இருக்குமா. எதாவது ஒரு காதல்கடிதம் வந்திருக்குமோ பயலுக்கு, என்றெல்லாம் யோசித்துக்கொண்டே போன சுப்பையாவுக்கு, நினைத்ததுபோலவே இவன் ரகசியமா ஒரு காயிதத்தைக் கொண்டுவந்து தர்றானே, என்று பிரித்துப் பார்த்தால்'.. தந்திக் கம்பியை அறுக்கிறது, தண்டவாளத்தைப் பெயர்க்கிறது இப்படி!!

எரிச்சலோடு அன்னமய்யாவின் முகத்தைப் பார்த்தான். ''என்ன புத்திகெட்டதனம் இதெல்லாம்; தண்டவாளத்தைப் பெயர்த்து ரயில் கவிழ்ந்தால் விழுந்து சாகிறது நம்ம நாட்டு ஆட்கள்தானே; வெள்ளைக்காரன் இல்லையே. அதோட, மொதல்லெ இது காங்கிரஸ் கட்சியின் திட்டம் இல்லெ; தெரிஞ்சிக்கொ; காந்தி உட்பட நம்ம எந்தத் தலைவரும் இப்படிச் சொல்லவே மாட்டாங்க. மொதல்ல இதெக் கிழிச்சித் தூரப்போடு'' என்றான்.

அன்னமய்யாவின் ஆனந்தக் கனவு ஒரு நொடியில் தகர்ந்தது. மேலும் மேலும் சுப்பையா சொன்னதைக் கேட்கக் கேட்க தலை சுற்றியது!

❖

தேசத்தில் அன்றாடம் நடந்துகொண்டு வருகிற செய்திகள் மக்களை வந்து அடைய வெகுநாட்கள் பிடித்தது. கோபல்ல கிராமம் போன்ற குக்கிராமங்களை வந்து அடைய மேலும் பல நாட்கள் ஆவதில் ஆச்சரியமில்லை. கடுமையான செய்தித் தணிக்கை யிருந்ததால் வதந்திகளுக்குக் கொண்டாட்டமாக இருந்தது. எது செய்தி எது வதந்தி என்று பிரித்துப் பார்ப்பது இப்படிச் சமயங்களில் ரொம்பக் கஷ்டம்.

❖

'பலத்த போலீஸ் பாதுகாப்புடன் வீட்டுக்காவலில் வைக்கப் பட்டிருந்த தலைவர் சுபாஷ் சந்திர போஸ் பெண் வேடமிட்டு பாதுகாப்பிலிருந்து தப்பினார்!' என்கிற செய்தி பத்திரிகைகளில் வந்தது. அதைப் படித்ததும் மக்களிடம் ஒரே பரபரப்பு; சந்தோஷம்.

போலீஸ் பாதுகாப்பிலிருந்து மாறுவேடம் போட்டுக்கொண்டு தப்பிய சுபாஷ், ''ஜியாவுதீன்'' என்கிற பெயரில் போலி பாஸ்போர்ட்டுடன் ஆப்கானிஸ்தான் வழியாக ஜெர்மனிக்குப் புறப்பட்டுப் போனார். போகும் வழியில் அவர் தன்னுடைய பெயரை ''சிக்னார் ஆர்லண்ட்டோ மஸோட்டா'' என்று மாற்றி வைத்துக் கொண்டார். அவரிடம் இத்தாலிய பாஸ்போர்ட் இருந்தது.

சுபாஷ் போஸ் பெர்லினில் ஒரு வருச காலம் காத்திருந்தார். அவர் எதிர்பார்த்து வந்த உதவி ஹிட்லரிடமிருந்து கிடைக்கவில்லை. நாஜி சைன்யம் சிறைப்பிடித்து வைத்திருந்த இந்திய ராணுவவீரர்களைக்

கொண்டு ஒரு தேசிய ராணுவம் அமைக்க விரும்பினார். ஆனால் அது அவர் நினைத்ததுபோல் கைகூடவில்லை.

இந்தச் சமயத்தில் ஜப்பானிய அரசிடமிருந்து சுபாஷ் போஸை தங்களிடம் அனுப்பிவைக்கச் சொல்லி செய்தி வந்தது ஹிட்லருக்கு.

எல்லா இடங்களிலும் பயங்கரமாக யுத்தம் நடந்துகொண்டிருந்த அந்தச் சமயத்தில் சுபாஷை பாதுகாப்போடு எப்படி அங்கே அனுப்பி வைப்பது என்பது பிரச்சனையாக இருந்தது. யுத்த மேகங்கள் சூழ்ந் திருந்த வானப்பிராந்தியம் அவ்வளவு பாதுகாப்பானது அல்ல. நீண்ட கடல் வழியாகத்தான் அனுப்ப வேண்டும். செல்லும் கடல் வழி முழுவதும் பிரிட்டீஷ் - அமெரிக்க கடற்படை அபாயம் நிறைந் திருந்தது.

அப்போது பெர்லினிலிருந்த ஜப்பானிய தூதர் ஜெனரல் ஒலிமாவும் ஜெர்மன் ராணுவ நிபுணர்களும் சேர்ந்து ஒரு திட்டம் வகுத்தார்கள். அதன்படி, இந்துமகா சமுத்திரத்தில் ஒரு இடம்வரை ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பலில் சுபாஷைக் கொண்டுபோவது, பிறகு அங்கிருந்து ஜப்பான் நீர்மூழ்கிக் கப்பல் வந்து அழைத்துப் போக வேண்டும் என்பது ஏற்பாடு.

சுபாஷ் போஸ் ரண்டு இந்தியர்களின் துணையுடன் ஜெர்மன் சப்மெரினில் கிளம்பினார். இங்கிலீஷ் கால்வாய்க்குள்ப் புகுந்து, பிஸ்கே வளைகுடாவைத் தாண்டி, அட்லாண்டிக் கடலுக்குள் வந்து, தென்னாப்பிரிக்காவின் தென்முனையைத் தொடாமலேயே மட காஸ்கர் தீவுக்கருகில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வந்து நின்றது அந்த சப்மெரின். அங்கே அவருக்காகக் காத்திருந்த ஜப்பானிய சப்மெரினில் ஏறிக்கொண்டு சுமத்ரா வந்து சேர்ந்தார் போஸ். இது நடந்தது *1943* மே மாசம் முதல்த் தேதி.

மே மாசம் 16-ம் தேதி அவர் டோக்கியோ போய்ச் சேர்ந்தார் அங்கே அவர் ஜப்பானிய ராணுவ ஜெனரல் போகோவைச் சந்தித்தார்.

❖

சுபாஷ் போலீஸ் காவலில் இருந்து மாறுவேடத்தில் தப்பினார் என்கிற செய்தி மட்டும்தான் கோபல்ல புரத்து மக்களுக்குத் தெரியும்; மற்றபடி நடந்த சங்கதிகள் அவர்களுக்குத் தெரியாது! அதேபோல்

ஒரு நாள் தினப்பத்திரிகையில் முதல்ப் பக்கத்தில் ஏழு பத்தித் தலைப்பில், ''பிரின்ஸ் ஆப் வேல்ஸ்'' ''ரிபல்ஸ்'' என்ற பெயருடைய பிரமாண்டமான பிரிட்டிஷ் போர்க் கப்பல்கள் ஜப்பானியர்களால் மூழ்கடிக்கப்பட்டன என்கிற செய்தியை அந்த கிராமத்து மக்கள் பரப்பரப்போடு வாசித்தார்கள்.

உலகத்திலேயே பலம் வாய்ந்த கடற்படையைக் கொண்டது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம். அந்தக் கடற்படைக்குக் கிரீடமாக விளங்கின இந்தப் போர்க்கப்பல்கள். இந்தக் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டதைத் தொடர்ந்து வந்த செய்திகள் நம்பமுடியாத சந்தோஷத்தைக் கொடுத்தது அந்த மக்களுக்கு.

*1942* பெப்ரவரி 5-ம் தேதி சிங்கப்பூரைப் பிடித்தது ஜப்பான். சிங்கப்பூர் என்கிற பெயரை மாற்றி அதற்கு ஷெர்னன் என்று பெயர் வைத்தது!

அங்கே இருந்த பிரிட்டிஷ் ராணுவம் பூராவும் ஜப்பானிடம் சரண் அடைந்தது. சரண் அடைந்த அந்த பிரம்மாண்டமான படையில் இருந்த இந்தியர்கள் மட்டும் நாற்பது ஆயிரம் பேர்! பிரிட்டிஷ் தளபதி ஆர்சரிபால்ட் பெர்ஸிவல் அந்த இந்தியச் சிப்பாய்களை ஜப்பானிய மேஜர் ப்யூஜிவாராவிடம் கைதிகளாக ஒப்படைத்தார்.

மேஜர் ப்யூஜிவாரா அந்த இந்தியப் படை வீரர்களைப் பிரியத்தோடு 'என் அன்புக்குரிய இந்திய வீரர்களே' என்று சொல்லி ஏற்றுக்கொண்டாராம்.

இதைப்பற்றி அந்த மேஜர் பத்திரிகைக்காரர்களிடம் குறிப்பிடும் போது, ''ஜப்பான் இந்தியர்களை விரோதிகளாகக் கருதவில்லை. பிரிட்டிஷ் அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெற அவர்கள் செய்யும் முயற்சிகள் அனைத்துக்கும் எல்லாவித உதவிகளையும் செய்ய ஜப்பான் தயாராக இருப்பதாக அவர் சொன்னதோடு 'இந்தியாவிலிருந்து அவர்களைத் துரத்த நேரம் வந்துவிட்டது'' என்று சொன்னாராம்.

சிங்கப்பூர் வீழ்ந்ததைத் தொடர்ந்து மார்ச்சில் ரங்கூனும் வீழ்ந்தது. அதே மாதத்தில் கிழக்கிந்தியத் தீவுகளும் வோடல் கால்வாயும் ஜப்பானியர் வசமாகிவிட்டது.

*42* ஜூன் 15-ம் தேதி பாங்காக்கில் கிழக்காசிய, தென் கிழக்கு ஆசிய இந்தியர்களின் மாநாடு தலைவர் ராஷ்பிகாரி போஸ் தலைமையில்

நடந்தது. இந்த மாநாட்டில் ஜப்பானிடம் சரண் அடைந்த இந்திய ராணுவத்தின் பிரதிநிதியாக 50 பேர் வந்து கலந்து கொண்டார்கள்.

இந்த மாநாடு இந்திய விடுதலைக்கு ஒரு ராணுவம் அமைக்கவும் அதை வழிநடத்திச் செல்ல ராஷ் பிகாரிபோஸ் தலைமையை ஏற்றுக் கொள்ளவும் தீர்மானித்தது.

ஜப்பான் பர்மாவைக் கைப்பற்றியதைத் தொடர்ந்து, வங்காளத்தைச் சேர்ந்த ஹீகூமாவும் அதைத் தொடர்ந்து அந்தமான் - நிகோபர் தீவுகளும் ஜப்பான் வசமாகியது. அந்தமானை ஜப்பான் பிடிக்கும்போது ஒரு குண்டுகூட சுடவில்லையாம்; அவ்வளவு சுலபமாகப் பிடித்ததாகப் பேசிக்கொண்டார்கள்.

இந்தியர்களின் தலைவரான ராஷ்பிகாரிபோஸ் இந்திய ராணுவ வீரர்களை இந்திய தேசிய ராணுவமாக சீர்திருத்தி அமைத்தார். கிழக்கு - தெற்கு ஆசிய இந்தியர்களின் ஆதரவைத் திரட்டினார். முழுமூச்சோடு அவர் இப்படி அரும்பாடுபட்டுக் கொண்டிருக்கையில் அவருடைய நீரிழிவுநோய் அதிகப்பட்டதோடு, சயரோகநோயும் சேர்ந்துகொண்டது. இந்த நோய்க்கு மருந்து கண்டுபிடிக்கப்படாத காலம் அது. ராஷ்பிகாரி படுக்கையில் விழுந்தார். 'அய்யோ இந்தச் சமயத்தில் எனக்கு இப்படி ஆகிவிட்டதே' என்று வருந்தினார். தனக்குப் பதில் ஒரு நல்ல தலைமையை அவர் மனசு தேடியது. அப்போதுதான் அவருக்குத் தப்பி வந்த தலைவர் சுபாஷ் போஸின் ஞாபகம் வந்தது.

ஜூலை 2-ம் தேதி சுபாஷ் சிங்கப்பூருக்கு வந்தார். ராஷ்பிகாரிதான் அவரை சிங்கப்பூருக்கு அழைத்து வந்தது. இந்தியா லீக் சுபாஷுக்கு ஒரு வரவேற்பு அளித்தது. பெரிய்ய கூட்டம்; ஏராளமான இந்தியர்கள் கலந்துகொண்டார்கள். ''நான் உங்களுக்கு ஒரு அருமையான பரிசு கொண்டு வந்திருக்கிறேன்'' என்று கூட்டத்தினரைப் பார்த்துப் பேசும்போது ராஷ்பிகாரி சொன்னார். ''அந்தப் பரிசு இதோ இவர்தான்'' என்று சொல்லி சுபாஷ் போஸைக் காண்பித்தார். மக்களுடைய, ராணுவ வீரர்களுடைய மகிழ்ச்சிக் கரமுழக்கமும் குரல் முழக்கமும் சூழலை அதிரடித்தது. அந்தக் கூட்டத்தில் சுபாஷ்போஸ் அன்று பேசிய பேச்சு இந்திய விடுதலைப் போராட்ட சரித்திரத்தில் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று என்று சொல்லுகிறார்கள்.

''ஜூலை 5-ஆம் நாள் பேச்சு'' என்ற அவருடைய பேச்சில், ''ராணுவ உதவி இல்லாமல் இந்தியா விடுதலை பெற முடியாது என்று பல ஆண்டுக் காலமாகவே நான் நினைத்து வந்திருக்கிறேன்.

ஒரு ராணுவம் தன்னிடம் இருந்ததினால்த்தான் ஜார்ஜ் வாஷிங்டன் போரிட்டு வெற்றி பெற்றார். தன்னிடம் ஒரு ராணுவம் இருந்ததினால்த்தான் கரிபால்டியால் இத்தாலியை விடுவிக்க முடிந்தது'' என்று குறிப்பிட்டார்.

இந்திய ராணுவ வீரர்களைப் பார்த்து அவர் பெருமிதத்தோடு ''இந்தியாவின் முதல் விடுதலை ராணுவத்தில் சேரவும் அதில்ப் பணிபுரியவும் உங்களுக்கும் வாய்ப்பும் பெருமையும் கிடைத்திருக்கிறது. இதைப் பயன்படுத்தி உழைத்து நம் இந்திய நாட்டின் விடுதலைக்கு முட்டுக்கட்டையாக உள்ள அனைத்தையும் தகர்த்து முன்னேறுங்கள்'' என அறைகூவல் விடுத்தார்.

அதுவரை அவர் அணிந்துகொண்டிருந்த சிவிலியன் உடையைத் துறந்து ராணுவ உடை அணிந்திருந்தார். மானிட கம்பீரம் நிறைந்த அவர் உடம்புக்கு அந்த ராணுவ உடை எடுப்பாகவும் பொருத்த மாகவும் இருந்ததோடு அவரிடம் வீரலக்ஷ்மி 'துதிகொண்டு' விளங்கினாள்.

ஜுலை 9-ஆம் தேதி சிங்கப்பூரில் மக்கள் கூட்டத்தில் பேசும்போது ''ரோம் வீழ்ந்துவிட்டது; கிழக்காசிய இந்தியர்களே ஒன்றுபடுங்கள், கிளர்ந்தெழுங்கள். முழுமூச்சுடன் பிரிட்டிஷ் அரசை எதிர்த்துக் கிளம்புங்கள். நாம் வெளியில் பிரிட்டிஷ் ராணுவத்தை ஒடுக்கு வோம்; அதே சமயம் இந்தியாவில் ராணுவம் அவர்களுக்கு எதிராகக் கிளர்ந்து எழும்'' என்றார் உறுதிபட.

❖

## 33

சுபாஷ் போஸ் சுதந்திர இந்தியாவின் அரசியல் சட்டம் ஒன்றைத் தயாரித்தார்.

1943 அக்டோபர் 21-ல் அவர் முதல் சுதந்திர இந்திய அரசு அமைக்கப்படுவதாக ஆயிரக்கணக்கான இந்தியர்கள் நிறைந்த கூட்டத்தில் அறிவித்தார். அப்போது மகிழ்ச்சி ஆரவாரம் பொங்கியது.

சுதந்திர இந்திய அரசின் தலைமையகம் தற்காலிகமாக சிங்கப்பூரில் இருந்தது. இந்த சுதந்திர சர்க்காரை அங்கீகரித்து, இந்த அரசைத் தன் சொந்த மண்ணில் செயல்படவேண்டும் என்பதற்காக அந்தமான் - நிகோபர் தீவுகளைத் தம்வசம் ஒப்படைக்கும்படி ஜப்பான் அரசைக் கேட்டுக்கொண்டார் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்.

43 டிசம்பர் 27-ஆம் தேதி சுதந்திர இந்தியாவின் முதல் ஜனாதிபதி நேதாஜி சுபாஷ் முதல் சுதந்திர மண்ணான அந்தமானில் வந்து இறங்கினார். நேதாஜி அங்கே தேசியக் கொடியாக ''தாயின் மணிக்கொடி''யை ஏற்றி வணங்கினார்.

எத்தனையோ ஆண்டுகாலம் அந்தமான் ஜெயிலில் துன்பப்பட்டு வாடிய எல்லாக் கைதிகளுமே விடுவிக்கப்பட்டு சுதந்திரமானார்கள். அந்தமான் - நிகோபர் தீவுகளில் வீசிய அந்த சுதந்திரக் காற்றைச் சில நாட்கள்தான் அங்கிருந்தவர்கள் சுவாசிக்க முடிந்தது. லெப்டி னன்ட் கர்னல் லோகநாதனிடம் அந்தத் தீவுகளின் பொறுப்பை ஒப்படைத்து விட்டு நேதாஜி பர்மியப் போர் முனையைக் கவனிக்கச் செல்ல வேண்டியதாகிவிட்டது.

இந்திய தேசிய ராணுவம் என்று சொல்லப்பட்ட ''அய்.என்.ஏ'' அப்போது துப்பாக்கிகளை உபயோகிக்க வேண்டிய சந்தர்ப்பம் வரவில்லை. பின்னால் வந்தது. அரக்கான் போர் முனையில், ஜப்பானியர் பின்வாங்கி ஓடியதும் ''அய்.என்.ஏ'' தன் காலில் நின்றது. ''வரட்டும். பிரிட்டிஷ் படை வரட்டும். இங்கே இருப்பது அடிமை ராணுவமல்ல; சுதந்திர இந்திய ராணுவம் என்பதை உலகுக்குக் காட்டும்'' என்று நேதாஜி சொன்னார்.

எதிர்த் தரப்பில் - மறுபக்கம் - மவுண்ட் பேட்டன் தலைமையில் பிரிட்டிஷின் தென்கிழக்காசிய கமாண்ட் படையினர் முன்னேற்பாடு களுடன் தயாராக இருந்தார்கள்.

இம்பால், கோஹிமா பகுதிகளில் இவர்களை உள்ளே வர விட்டு சுற்றி வளைத்துக்கொண்டார் மவுண்ட்பேட்டன்! ஏராளமான சேதங்களுக்குப் பிறகு ''அய் என் ஏ'' சரண் அடையும்படி ஆயிற்று. எதிரிகள் கையில் சிக்காமல் நேதாஜி தப்பினார்.

தான் வெளியிலிருந்து ராணுவத்துடன் தாக்கத் தொடங்கும் அதே வேளையில் இந்தியாவினுள் தன் மக்களும், இந்திய ராணுவ வீரர்களும் பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்துவார்கள், பொங்கி எழுவார்கள் என்று நேதாஜி எதிர்பார்த்த எதிர்பார்ப்பு கனவாகிவிட்டது; என்றாலும் அவர் எதிர்பார்த்தது வேறு வகையில் நடக்கவே செய்தது பம்பாயில்.

❖

சுப்பையாவும் அன்னமய்யாவும் காரசாரமாகப் பேசிக் கொண்டார்கள். சுப்பையாவின் பேச்சு ஒவ்வொன்றும் அன்னமய்

யாவுககுக் கோபத்தை வரவழைத்தது. தந்திக் கம்பி அறுக்கிறது, தண்டவாளத்தைப் பேர்க்கிறது என்பது வேண்டாம் என்று சொல்லி அதோடு சுப்பையா நிறுத்திக்கொண்டிருந்தால் அன்னமய்யாவுக்குக் கோபம் வந்திருக்காது; இந்த யுத்தத்தில் நாம் பிரிட்டிஷாருக்கு ஒத்துழைக்கவேண்டும் என்று சொன்னான்!

இது என்னடா கூத்து என்று முதலில் அன்னமய்யா திகைத்தான். சுப்பையா, அதுக்கான காரணங்களை ஒவ்வொன்றாக விரல்களை மடக்கி விளக்க ஆரம்பித்தான். இந்த யுத்தம் பாசிசத்துக்கும் ஏகாதிபத்தியத்துக்கும் ஆரம்பித்த யுத்தம்தான். அதனால்த்தான் நமக்கென்ன என்று இருந்தோம். இப்போது யுத்தத்தின் தன்மையே மாறிவிட்டது. ஏகாதிபத்திய நாடுகளையும் முதலாளித்துவ ஆதிக்க நாடுகளையும் பாசிசம் தாக்கித் தன் வசப்படுத்திக்கொண்டிருக்கும் போது அடிமை இந்தியாவில் வசிக்கும் நாம் யுத்தத்தின் போக்கில் அக்கறை கொள்ளாமல் இருந்தது சரிதான்.

இப்போது அந்த பாசிசம் தொழிலாளர் - விவசாயிகள் ஆட்சி செய்யும் ஒரே நாடான ரஷ்யாவின்மேல் படையெடுத்துவிட்டது. நமக்கென்ன என்று இப்போது நாம் இருக்கக்கூடாது என்றான். ஏகாதிபத்ய யுத்தமாக இருந்தது இப்போது மக்கள் யுத்தமாக மாறி விட்டது என்று குரல் உயர்த்திச் சொன்னான் சுப்பையா.

அன்னமய்யாவுக்கு இது புரிந்துகொள்ள முடியவில்லை. அவன் கேட்டான், ''இது மக்கள் யுத்தம் என்றால் உலகத்திலுள்ள சகல தரப்பு மக்களுக்கும் பாசிசத்துக்கும் இடையேவா நடக்கிறது இந்த யுத்தம்? இந்த யுத்தத்தின் இறுதியில் நீ சொல்லுகிற ''மக்கள்'' வெற்றி பெறுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்: அந்த வெற்றி நமக்குக் கிடைக்குமா பிரிட்டிஷ்காரனுக்குக் கிடைக்குமா?'' என்று கேட்டான்.

இந்தக் கேள்வி சுப்பையாவுக்கு சங்கடத்தைத் தந்தது. எப்படி இந்த அன்னமய்யாவுக்கு இதை விளக்குவது என்று யோசித்தான். ''பிரசவம் ஆகும் வேளையில் நெலமை மோசமாகும்போது பெரிய உயிரைக் காப்பாத்துறதா சின்ன உயிரைக்காப்பாத்துறதான்னு வந்தா எந்த உயிரை நீ காப்பாத்தச் சொல்லுவே?''

''சந்தேகமில்லாம பெரிய உசுரைத்தான்''

''ஆங்! இத ஞாபகம் வச்சிக்கொ. சோவியத் நாடு அழிஞ்சி போச்சிண்ணா; அவ்வளவு தான். மேலும் மக்கள் ஆட்சி உலகத்துல பரவ வழியில்லாமல் போயிரும். அந்த ஒளிய அணைஞ்சி போயிராம காப்பாத்த வேண்டியது உலகத்திலுள்ள ஜனநாயக வாதியின் கடமெ.''

''நீ வேணாலும் பாரு! இந்த யுத்தத்தின் முடிவில் பல நாடு கள்ளெ உண்மையான மக்கள் ஆட்சி மலரும். இப்பொ இருக்கிற இந்த பிரிட்டிஷ் வல்லரசு எழுந்திருச்சிகூட நிக்கமுடியாம லொட லொடட்டையாப் போயிரும். அப்ப நாம இந்த வெள்ளைக்கார னோட சண்டை போடக் கூட வேண்டாம்; எந்திரிச்சி நிண்ணாப் போதும்! ஒட்டம் பிடிக்கிறதெத் தவிர வேற வழியில்லெ''

அன்னமய்யாவுக்கு இதுகேட்க நன்றாக இருந்ததே தவிர அவன் மனசில், இதில் ஏதோ ஒரு தவறு இருக்கிற மாதரியே பட்டுக் கொண்டிருந்தது. வெள்ளைக்காரன் ஆட்சியைக் கவிழ்க்க இந்த நேரத்தை விட்டுவிட்டால் இது மாதரியான நேரம் இனி அமையாது என்று தோன்றிக் கொண்டேயிருந்தது. நாளைக்கிக் கிடைக்கப் போற பலாப்பழத்தைவிட இன்றைக்குக் கிடைக்கப் போகும் கிளாப் பழமே போதும் போல்ப்பட்டது. அன்னமய்யாவுக்குத் தோன்றியது, இந்த ஹிட்லர் ஏன் தான் ருஷ்யாவின் மேல படையெடுத்தானோ; பேசாமல் இந்த பிரிட்டிஷ்காரனையே அடிச்சி நொறுக்கி இங்கிலாந்து நாட்டையே பிடிச்சிருக்கலாமே என்று அதைச் சுப்பையாவிடம் கேட்டான்.

''பார்க்கப் போனா ஹிட்லரோட ரண்டாவது எதிரிதான் இந்த வெள்ளைக்காரன். அவனோட முதல் எதிரி மக்கள் ஆட்சி செய்யும் சோவியத்நாடுதான்''

சுப்பையாவோடு பேசப் பேச அன்னமய்யாவுக்கு மனசில் குழப்பங்களும் கேள்விகளும் அதிகரித்துக்கொண்டே வந்தன. சுப்பையாவின் ஒவ்வொரு பதிலும் மேலும் பல கேள்விகளைக் கேட்க வைத்தது. அவன் பேசும் பேச்சில் இவன் இதுவரை கேள்விப்படாத பல புதிய புதிய வார்த்தைகள் இருந்தன. அதைப்பற்றிக் கேட்டால் அதுக்கு அவன் பதில்ச் சொல்லும்போது மேலும் பல புதிய வார்த்தைகள் வந்து விழும்! நாம் தெரிந்துகொள்ள வேண்டிய வார்த்தைகளும் விவரணைகளும் மலைபோல் இருக்கும் போலிருக்கே என்று மலைத்தான்.

ஒவ்வொரு வார்த்தைக்குமாக அர்த்தம் கேட்கும்போதும் சுப்பையாவால் 'ஒரு மூச்சு' பேசவேண்டியதிருந்தது! சுப்பையாவின் 'கட்சி'யில் நியாயம் இருப்பதும்போல்ப் பட்டது; நியாயம் இல்லை என்றும் பட்டது!

❖

'எல்லாப் பொருள்களும் யுத்த முனையை நோக்கி' என்று இருந்ததால் மக்களுக்குக் கிடைக்கவேண்டிய அத்யாவசியப் பொருள்களுக்கெல்லாம் பலத்த தட்டுப்பாடு ஏற்பட்டு, இதுவரை கேள்விப்பட்டேயிராத ''பிளாக் மார்க்கெட்'' எனும் வார்த்தை மக்களிடையே பிரபலமானது. அரிசி எங்கே எங்கே என்று தேடவேண்டியதிருந்தது. அதுக்கு என்னதான் ஆச்சி என்றே தெரியவில்லை. நாத்தம் பிடிச்ச 'அரிசி'யையும் உளுத்த சோளத்தையும் ''ரேஷன்'' என்ற பெயரில் ''தின்னுங்கடா'' என்று கொண்டுவந்து போட்டது வெள்ளை அரசு. இதுங்கூடக் கிடைக் காமல் வங்காளத்தில் லட்சக்கணக்காக மக்கள் பட்டினி கிடந்து சாகிறார்கள், செத்துக்கொண்டே இருக்கிறார்கள் என்று தெருக் களிலும் ஆங்காங்கேயும் கிடக்கும் மனித எலும்புக்கூடுகளை கழுகு கள் வந்து திங்கும் காட்சிகள் படங்களாக தினப் பத்திரிகைகளில் தொடர்ந்து வந்துகொண்டே இருந்தன. அந்தப் படங்களை யெல்லாம் பார்த்த கோபல்லபுரத்து மக்கள் இது என்ன கொடுமை யடா என்று கலங்கினார்கள். ''தாது வருசத்துப் பஞ்சம்'' இது கிட்டப் பிச்சை வாங்கணும் போலிருக்கே! என்று சொல்லித் திடுக் கிட்டார்கள்.

இந்த வெள்ளைக்காரன் நம்ம மக்களை மனுசங்களாக நினைக்க வில்லை. நெனைச்சிருந்தா இப்பிடி மடிய விடுவானுங் களா? என்று கவலையோடு பேசிக்கொண்டார்கள். அவன் நம்மை மனுசங்களா நினைச்சிருந்தா, ★''மாப்பிள்ளைமார்'' கலகத்தப்பொ ஒரே ''பொசல்டக்'க்குள்ளார 500 பேரை அடைச்சிக் கொண்டாரு வானா? ''என்று கேட்டார் கொத்தனார் சாமி நாயக்கர் கடுப்போடு.

❖

---

★மாப்பிள்ளைமார் கலகம் - நிலப்பிரபுகளுக்கு எதிராக கிளர்ந்தெழுந்த மாப்பிள்ளைமார் என்கிற முஸ்லீம் விவசாயிகள். அப்போது சென்னை மாகாணத்தோடு இணைந்திருந்தது, மலபார் - மலப்புரம் பகுதி. ஜன்னலே கிடையாத, ஒரே குட்ஸ் வேகனுக்குள் 300 மாப்பிள்ளைமார்களைப் புளிமூட்டையாக அடைத்துப் பூட்டிச் சென்னைக்குக் கொண்டுவந்தது வெள்ளை அரசு. 30 மணி நேரம், சுவாசிக்கக் காற்று இல்லாமலும் குடிக்கத் தண்ணீரும் தராமல் கொண்டுவந்து சேர்த்தது. வேகனைத் திறந்தபோது பெரும்பாலோர் செத்துக்கிடந்தார்கள். *(500 பேர் என்பது மிகையாகச் சொல்லப்பட்டது)*

# 34

*1946* என்பது; தேசம் ஒரு போதுமில்லாத கொதிப்புநிலை அடைந்த வருசம் என்று சொல்லலாம். இதைப்பற்றி பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் பிரதமர் ஆட்லி இப்படிச் சொன்னார்:

''இந்த *1946*-ல் இருக்கும் இந்தக் கொதிநிலையின் அளவு *1920*-லோ, *1930*லோ, *1942*லோ இருந்தது போன்றதல்ல'' என்று வெனையமாகக் குறிப்பிட்டுவிட்டு, மேலும்...

''சமாதான காலத்தில் மெல்ல மெல்ல எழும் அலைகள் யுத்தகாலத்தில் மிகவும் அதிகமாக துரிதப்படுத்தப்படுகின்றன. அதுவும் குறிப்பாக யுத்தம் முடிந்தவுடன் மேலும் வேகமாக வந்து மோதுகின்றன. அந்த அலை ஓரளவுவரை யுத்தம் நடக்கும்போது கட்டுப்படுத்தப்பட்டது. யுத்தம் முடிந்தவுடனே கட்டுக்களைத் தகர்த்துக்கொண்டு ஓங்கி அடிக்கிறது. இன்று இந்தியாவில், - ஏன் ஆசியாக்கண்டம் முழுவதுமே - தேசிய அலைகள் வெகுவேகமாக வந்து மோதிக்கொண்டிருக்கின்றன'' என்று சொன்னார் பிரிட்டிஷ் பிரமர் ஆட்லி.

அந்த விவாதத்தில் கலந்துகொண்ட ஸர். ஸ்டாப் போர்ட் கிரிப்ஸ் சபை அங்கத்தினர்களுக்கு நிலைமையைப் பச்சையாகச் சொன்னார் இப்படி:

இந்தியாவில் இருக்கும் இந்திய ராணுவம் பிரிட்டிஷ் அதிகாரிகளின் கட்டுக்கு அடங்காத நிலையில் உள்ளது. இந்த நிலையில் பிரிட்டிஷ் ஆட்சியை இந்தியாவில் நிலைநாட்ட வேண்டுமெனில் பிரிட்டிஷ் துருப்புக்களைப் போதிய அளவு இந்தியாவில் நீண்ட காலத்துக்கு வைத்திருக்கவேண்டும். அதற்கு வேண்டிய துருப்புகள் இப்போது நம்மிடம் கிடையாது''

சுப்பையா சொன்னதுபோல ''லொட லொட்டை'' ஆகிவிட்டது பிரிட்டிஷ் ஏகாதிபத்யம். யுத்தத்தினால் அதற்கு ஏற்பட்ட சேதம், இந்திய சிப்பாய்களைக் கொண்டுபோய்க் களப் பலி கொடுத்தும் கூட பிரிட்டிஷ் சிப்பாய்களின் சேதம் கணக்கு வழக்கில்லை. மிஞ்சிய வர்களில் கை போனவர்கள் கால்போனவர்கள் பார்வை இழந்த வர்கள் இப்படி. பிரிட்டனில் ஏற்பட்ட சேதமோ சொல்லிமாளாது. பொது மக்கள், குண்டு வீச்சினால் செத்து மடிந்தது போக, அந்தத் தீவிலுள்ள தொழிற்சாலைகளை அத்தனையையுமே சரமழை

போல்ப் பெய்த குண்டு வீச்சினால்த் தரைமட்டம் ஆக்கியிருந்தான் ஹிட்லர்.

இந்த நட்டத்தையெல்லாம் எப்படித் தேத்துகிறது? தன்னிடம் முன்பு இருந்த காலனி நாடுகளையெல்லாம் தந்திரமாக வசப்படுத்தி, பொருளாதார ரீதியில் - ரத்தம் இழந்தவனுக்கு ரத்தம் கொடுப்பது போல - சரிக்கட்ட வேண்டும். ஆனால் ஏகாதிபத்தியங்களின் கீழ் காலனி ஆதிக்கத்தில் ஆண்டாண்டுதோறும் அல்லல்ப்பட்ட மக்கள் இதுக்குத் தயாரில்லை!

பர்மாவில், ஆங் - சான் தலைமையில் மக்கள் தேசிய முன்னனி அமைத்து, பர்மாவை மீண்டும் கைப்பற்றுவதற்காக வந்த பிரிட்டிஷ் ராணுவத்தை எதிர்த்து ஆயுதம் தாங்கிய போராட்டத்தை நடத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

மலேசியாவில் மீண்டும் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதை எதிர்த்து மக்கள் கொரில்லாக்கள் பிரிட்டிஷ் படைக்கு எதிராக ஒரு போராட்டத்தை ஆரம்பித்திருந்தார்கள்.

இந்தோனேசியாவில் டச்சு ஆட்சியை மீண்டும் ஸ்தாபிக்க அனுப்பப்பட்ட டச்சுப் படைகளை எதிர்த்து மக்கள் ஆயுதம் தாங்கிய பெரும் போராட்டத்தை சுகர்ணோ தலைமையில் ஆரம்பித்து விட்டனர்.

வியத்நாமில் ஜப்பானியப் படைகளை விரட்டியடித்துவிட்ட ஹோ-சி-மின் தலைமையில் மக்கள் குடியரசுப் பிரகடனம் செய்தார்கள்.

மக்கள் நலம் காக்காத, ஊழல் மிகுந்த சியாங்கே ஷேக் அரசுக்கு எதிராக சீன மக்களின் செஞ்சேனை நாளுக்கு நாள் பலம் அடைந்து வடக்கே ஏனாமிலிருந்து முன்னேறி வந்துகொண்டேயிருந்தது.

இந்த உலகப் பரப்பில் ஆறில் ஒரு பகுதி மட்டுமே சோஷலிஸ்ட் ருஷ்யக் குடியரசு என்று இருந்தது. ஆனால் யுத்தம் முடிவடைந்த இப்போதோ... போலந்து, பல்கேரியா ருமேனியா, ஹங்கேரி, ஆல்பேனியா, செக்கோஸ்லோவாகியா, கிழக்கு ஜெர்மனி, யுகே..ஸ்லாவியா ஆகிய நாடுகளிலும் சோஷலிஸக் குடியரசுகள் அமைக்கப்பட்டு ஏகாதிபத்தியச் சுரண்டல் மண்டலத்திலிருந்து விடுதலையானது. அதேபோல் ஆசியக்கண்டத்தின் கீழ்க் கோடியிலிருக்கும் கொரியா நாட்டின் வடபகுதியும் சோஷலிஸ்ட் குடியரசானது.

உலகத்தின் இந்த சர்வதேச நிலைமைகள் இந்தியாவையும் பாதித்தது. தாங்க முடியாத துன்பங்களினால் மக்கள் பிரிட்டிஷ் ஆட்சியையும் சமஸ்தானங்களில் மன்னர் ஆட்சியையும் எதிர்த்துக் கிளர்ந்தெழுந்தார்கள். நாடெங்கிலும் தொழிலாளர்களின் பிரம் மாண்டமான போராட்டங்கள் வெடித்தன. வங்காளத்தில் விவசாயிகள் ''தேபாகா'' என்ற போராட்டத்தை நடத்தினார்கள். (நிலச் சொந்தக்காரனுக்கு விளைச்சலில் மூன்றில் ஒரு பங்குதான் தரமுடியும் என்று.) காஷ்மீர் மன்னனை எதிர்த்து மக்கள் ஷேக் அப்துல்லா தலைமையில்போராட்டம் நடத்தியபோது அப்துல்லா வைச் சந்திக்கச் சென்ற பண்டித நேருவை அந்த மன்னனின் நிர்வாகம் கைது செய்ததை எதிர்த்து இந்தியா பூராவிலும் மாணவர்களும் தொழிலாளர்களும் கொதித்தெழுந்து வேலை நிறுத்தங்கள் செய்து தெருக்களில் இறங்கி ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

தெலுங்கானா மக்கள் ஹைதராபாத் நிஜாமை எதிர்த்து ஆயுதம் தாங்கிய போராட்டம் தொடங்கினார்கள். திருவாங்கூரிலும் மன்னர் ஆட்சியை முடிவுக்குக் கொண்டுவர மக்கள் கிளர்ந்தெழுந்தார்கள். (புன்னப்புரா - வயலார்) இந்தவிதப் போராட்டங்களுக்கு முக்கியமாக மாணவர் சங்கங்களும், தொழிற் சங்கங்கள், விவசாய சங்கங்கள் போன்ற பொதுஜன ஸ்தாபனங்களும் முன்னிருந்து தலைமை வகித்து நடத்தின. இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கும், மற்றும் தீவிர, முற்போக்குவாதிகளுக்கும் இதில் கணிசமான பங்கிருந்தது.

தேசத்தை மேலும் சூடுபிடித்து எழச் செய்தது. இந்திய தேசிய ராணுவத்தினர் (''அய்.யென்.யே'') கைது செய்யப்பட்டு, அவர்கள் பேரில் ராஜ துரோகக் குற்றப் பத்திரிகை வாசித்து கோர்ட்டில் கொண்டுவந்து நிறுத்திய பிரிட்டிஷ் அரசின் பழிவாங்கும் செய்கை. டில்லி செங்கோட்டையில் ராணுவக் கோர்ட்டில் இவர்களைக் கொண்டுவந்து நிறுத்தியதும் மக்கள் கோபாவேசம் கொண்டு எழுந்தார்கள். காங்கிரஸ் கட்சி, எதிர்வழக்காட பண்டித ஜவகர்லால் நேருவின் தலைமையில் வக்கீல் குழுவை நியமித்து ''அய் யென்யே''வுக்கு ஆதரவாக கோர்ட்டில் ஆஜராகிக்கொண்டிருந் தார்கள்.

மக்களுடைய எழுச்சி இந்தமாதிரியாக இருக்கும்போது ராணுவதளங்களில் இந்திய சிப்பாய்களும் வேலை நிறுத்தங்களிலும் கிளர்ச்சிகளிலும் இறங்கினார்கள். தரைப்படையினர் மட்டு

மில்லாமல் விமானப்படையில் பணிபுரியும் சிப்பாய்களும் தொழிலாளிகளும் வேலை நிறுத்தங்களில் இறங்கினார்கள். பல நகரங்களில் போலீஸ்காரர்களும் இப்படிப்பட்ட போராட்டங்களில் இறங்கினார்கள். இதெல்லாம் இதுவரை இங்கே இல்லாத ஒரு வித்தியாசமான காரியங்கள்!

இந்தச் சமயத்தில் டச்சு ஏகாதிபத்யத்தை எதிர்த்துக் கிளம்பிய இந்தோனேஷ்ய மக்கள் போராட்டத்தை அடக்கி ஒடுக்குவதற்காக டச்சுப் படைகளுக்கு ஆதரவாக இந்தியக் கப்பல் படையை அனுப்ப பிரிட்டிஷ் சர்க்கார் முடிவு செய்தது. விரைந்து அங்கே செல்லுமாறு இந்தியக் கடற்படைக்கு உத்தரவும் பிறப்பிக்கப்பட்டுவிட்டது.

பத்திரிகைகளில் இந்தச் செய்தியைப் பார்த்த மாத்திரத்தில் ''இந்தோனேஷ்யாமீது கை வைக்காதே'' என்று இந்திய மக்கள் - மாணவர்களும் பொதுமக்களும் ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். இதற்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல் பிப்ரவரி 18-ஆம் தேதி பம்பாயிலிருந்த ''தல்வார்'' என்ற கப்பல்படை பயிற்சித் தளத்தில் வேலை நிறுத்தம் துவங்கியது. மறுநாள் காலையில் அது பம்பாய் நகரத்துக்குள்ளும், நகர் சுற்றுப் புறங்களிலுமிருந்த கப்பல்படைத் தளங்களுக்கும் துறைமுகத்தில் நின்ற எல்லாக் கப்பல்களுக்கும் பரவிவிட்டது.

கப்பல்களில் பறந்த எல்லா யூனியன் ஜாக் - பிரிட்டிஷ் சர்க்காரின் கொடிகளும் இறக்கப்பட்டு, காங்கிரஸ், முஸ்லீம் லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளின் கொடிகள் ஏற்றப்பட்டன! பம்பாய் நகரத்துக்குள் இரவும் பகலும் மக்கள் தூங்காமல் இந்த மூன்று கொடிகளையும் ஏந்திப் போராட்டம் தொடங்கிவிட்டார்கள்.

''ஜெய் ஹிந்த்''
''இன்குலாப் ஜிந்தாபாத்''
''பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் ஒழிக''
''இந்துக்களும் முஸ்லீம் மக்களும் ஒன்றுபடுவோம்''
''இந்திய தேசிய ராணுவ வீரர்களை விடுதலை செய்''
''அரசியல் கைதிகள் அனைவரையும் வெளியே விடு''
''இந்தோனேஷ்யா மீது கை வைக்காதே.''

இந்த கோஷங்களின் ஒலியும் துப்பாக்கிகளின் ஓசையும் கேட்டுக்கொண்டேயிருந்தது பம்பாயில்.

❖

இந்தியாவுக்கு சுய ஆட்சி அதிகாரத்தைக் கொடுத்துவிடுவது என்று பிரிட்டன் தீர்மானித்துவிட்டது. இனிமேலும் அது இந்தியாவில் இருந்துகொண்டு ஆட்சி அதிகாரம் செலுத்தமுடியாது என்று கண்டுகொண்டது. ஆட்சி அதிகாரத்தை வேணுமென்றால் விட்டுக்கொடுத்து விடலாம்; சீண்ரம் பிடித்த காரியம்தான் அது. ஆனால் மூலதனத்தை என்ன செய்ய? பேராப்பணத்தை விட்டுக் கொடுக்க முடியுமா! பத்து ரூபாய் கடன் கொடுத்த கந்து வட்டிக்காரன் அது பெயராதபோது என்ன 'ஆட்டம்' போடுகிறான். பல கோடிக் கணக்கான ரூபாய்களைக் கொண்டுவந்து இந்தியாவில் மூல தனமாகப் போட்டு தொழில் ஆரம்பித்தவனுக்கு, அப்படியே சொளையாகத் தூக்கிக் கொடுத்துவிட்டுப் போக மனசு வருமா?

சொல்லப் போனால் அவன் ஆறாயிரம் மைல் கடந்து கப்பலில் வந்து இங்கே இறங்கியதே ஆட்சி செய்வதற்காக அல்ல. வியாபாரம் பண்ணி துட்டு சம்பாதிக்கத்தான். ஆனால் ஆட்சியும் கிடைத்தது!

இப்பொ இந்த ஆட்சி யாருக்கு வேண்டும்? 'பாப்பாத்தி யம்மா மாட்டெ ஒப்புக் கொ' என்று கொடுத்து விடலாம்தான். மூலதனம் இருக்கே; மூலதனம்... மூலதனம்... மூலதனம்.

குழந்தைகள் வீடுகட்டி விளையாடிவிட்டு அதை அப்படியே இருக்கட்டும் என்று விட்டுவைத்துவிட்டுப் போவதில்லை. காலால் 'ஒழப்பி' அழித்துவிட்டுத்தான் போறது வழக்கம். 'இவ்ளோ' பெரிய்ய இந்தியாவை எப்படி விட்டுட்டுப் போறது!

சுய ஆட்சி பெறுவதற்கு முன்னால் ஒரு இடைக்கால அரசு அமைக்கவேண்டும் என்று காங்கிரஸ் - முஸ்லீம் லீக் தலைவர்கள் கூடிப் பேசி, மத்தியில் அமைக்கும் அந்த அரசில் ஆளுக்குப் பேர்பாதி என்று தீர்மானித்து மந்திரி சபையில் காங்கிரஸ் கட்சிக்கு 40% முஸ்லீம் லீக்குக்கு 40% என்று ஒப்புக்கொண்டு (மீதமுள்ள 20% மற்ற கட்சிகளுக்கு) அந்தத் தீர்மானத்தை எடுத்துக்கொண்டு வைஸ்ராய் வேவலிடம் இரு கட்சித் தலைவர்களும் சேர்ந்து நேராகக் கொண்டுபோய்க் கொடுத்தார்கள்.

இவர்கள் இப்படி ஒன்று சேர்ந்து வருவார்கள் என்று வேவல் பிரபு கனவிலும் நினைத்திருக்கவில்லை! இவர்களின் ஒற்றுமை

இன்மைதான் அவருக்குத் துருப்புச் சீட்டாக இதுவரை இருந்து வந்தது.

அவர்கள் கொடுத்த தீர்மானத்தை எடுத்துக்கொண்டு வைஸ்ராய் வேவல் லண்டனுக்குப் பறந்தார். தீர்மானத்தைப் பார்த்த லண்டன், 'ஓஹோ கதை இப்படிப் போகிறதோ' என்று நினைத்து, அதில் ஒரு மாற்றத்தைச் செய்தது. வெளித்தோற்றத்தில் அந்த மாற்றம் அல்பமாகத் தெரியும்; ஆனால் தெரிந்தவர்களுக்குத்தான் தெரியும் பிரிட்டிஷ்காரனின் ராஜதந்திரம் என்றால் என்ன என்பது! காங்கிரஸுக்கும் முஸ்லீம் லீக்குக்கும் சமபங்கு என்பதை முஸ்லீம்களுக்கும் ஜாதி இந்துக்களுக்கும் சமபங்கு என்று மாற்றி அமைத்தது லண்டன்!

இந்த மாற்றத்தை ஏற்றுக்கொண்டால், காங்கிரஸ் ஒரு இந்துக்களுடைய ஸ்தாபனம் என்று ஒப்புக்கொள்ள வேண்டியது வரும். அது மட்டுமல்ல, காங்கிரஸ் தன் பங்கில் ஒரு முஸ்லீமை நியமிக்க அனுமதித்தால் முஸ்லீம் லீக் தனது பங்கில் ஒரு பிரதிநிதியைக் குறைத்துக்கொள்ள வேண்டியது வரும்!

இப்படி ஒரு தகராறை உண்டு பண்ணி இந்த ஒப்பந்தத்தையே தகர்த்துவிட்டது பிரிட்டிஷ் அரசு.

இப்படியெல்லாம் அது 'விளையாண்டு' கொண்டிருக்கையில்த் தான் அந்த ''*1946*'' வந்தது! இப்படி ஒரு 46 வரும் என்று அதுக்குத் தெரியாது.

❖

சுப்பையாவின் புஞ்சையில் அருகு எடுத்துக் கொண்டிருந்தார்கள். அருகெடுக்கும் கூட்டத்துக்குக் ''கொத்தன்'' சாமிநாயக்கராக இருந்ததால் அரசியல் பேச்சுக்கும் கொத்தாளிக் கவுண்டர் இருந்ததால் கதைகளுக்கும் காட்டுப் பாடலுக்கும் குறைவில்லாமல் இருந்தது.

அதிகாலை நேரத்தில் ஒரு பாச்சல் அருகு எடுத்து முடித்துவிட்டு காலைக் கஞ்சி குடிக்க உட்காரப் போகும் வேளை, யாரோ ஒரு சன்யாசியைக் கூட்டிக்கொண்டு அன்னமய்யா தூரத்தில் வருவது தெரிந்தது. வாயிலிருந்த பல்க்குச்சியை எடுத்துத் துப்பிவிட்டு சுப்பையா கேட்டான், ''யாரோ ஒரு சாமியாரை இழுத்துட்டு வாரான்?''

''வரட்டும் வரட்டும்; ஒரு வயித்துக்குக் கஞ்சி ஊத்தி நாமும் குடிப்போம்'' என்றார் கொத்தாளிக் கவுண்டர்.

அந்தப் புஞ்சை ரோட்டோரத்தில் இருந்ததால் இப்படி தேசாந்திரிகள் வந்து இவர்களிடம் தண்ணீரோ கஞ்சியோ சாப்பிட்டு விட்டுப் போவது வழக்கம்.

அன்னமய்யாவின்கூட வந்தது சன்யாசியோ பரதேசியோ இல்லை. அந்த ஆள் நடக்க முடியாமல் உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்திருந்து ஆயாசமாக, மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தார். தாடியும் அழுக்கும் ஆடையும் அந்தத் தள்ளாட்டமும் ஒரு பார்வைக்கு வயோதிகனாகவும் சாமியாரைப் போலவும் தோண வைத்தது. தற்செயலாக அந்தப் பக்கம் வந்த அன்னமய்யாவின் கண்ணில் இது பட்டது. கிட்டே போய்ப் பார்த்த பிறகுதான் தெரிந்தது அவன் ஒரு வாலிபன் என்று. கால்களை நீட்டி, புளிய மரத்தில் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவனை நெருங்கிப் போய் பார்த்தபோது, பசியால் வாடிப் போய்விட்ட அந்த முகத்தில் தெரிந்த கண்களின் தீட்சண்யம் கவனிக்கக்கூடியதாய் இருந்தது. அன்ன மய்யாவைப் பார்த்ததும் அவன் ஒரு சிறு நேசப் புன்னகை காட்டினான். பேசுவதற்கு இஷ்டப்படாதது போலிருந்தது அவன் இருப்பு. அந்த ரோடுவழியாக எத்தனையோ வகை தேசாந்திரிகள் வகைவகையான மொழியில் புரியாதபடி பேசிக்கொண்டு நடந்து வருவார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் லாடசன்யாசிகள். அவர்கள் வேட்டி கட்டிக்கொண்டிருப்பதே ஒரு தினுசு! பிட்டத்தை மறைத்த வேட்டி அதன் ரண்டு சொருகு நுனிகளும் குறுக்க மறுக்க மார்பின் மேலேறி பிடரியில் வந்து முடிச்சாகியிருக்கும். வேட்டியே வேட்டியும், மேல் வேட்டியுமாக அவர்கள் அப்படி அதை உடுத்தியிருப்பதைப் பார்க்கும் கோபல்லபுரத்துக் குழந்தைகள், அதேபோல் தங்கள் தகப்பனார்களின் மேல்த் துண்டுகளை எடுத்து உடுத்திக்கொண்டு லாடசன்யாசி விளையாட்டு விளையாடியது அன்னமய்யாவுக்கு ஞாபகம் வந்தது.

தன்னைப் பார்த்து ஒரு நேசப் புன்னகை காட்டிய அந்த வாலிப மனிதனிடம் போய் கிட்டே நின்று பார்த்துக்கொண்டே இருந்தான் அன்னமய்யா வாய்திறக்காமல்.

கொஞ்சம் அலுப்பு தீர்ந்தவுடன், ''தம்பி, கொஞ்சம் குடிக்கத் தண்ணி கிடைக்குமா?'' என்று தமிழில் அவன் பேசியது இவனுக்கு

ரொம்ப ஆச்சரியமாக சந்தோஷமாக இருந்தது. ''இந்தா பக்கத்துல அருகெடுத்துக்கிட்டிருக்கிறவங்ககிட்ட நீச்சுத் தண்ணி இருக்கும்; வாங்கிட்டு வரட்டுமா?''

''நீச்சுத் தண்ணி?'' என்று தனக்குள் அந்த வாலிபன் சொல்லிப் பார்த்துக்கொள்வது தெரிந்தது. கொஞ்சம் கை அமர்த்திவிட்டு, நாமே அங்கே போய்விடலாமே என்பதுபோல் அங்கே அவர்களைப் பார்த்தான். எழுந்திருப்பதுக்கு ஒத்தாசனையாக நீட்டிய கையை நன்றியுடன் மறுத்துவிட்டு அவனே சிரமப்பட்டு எழுந்து நின்றான்.

''எங்கெருந்து வர்ரீங்க?''

கேள்விக்குப் பதில், அலப்புடன் கூடிய ஒரு இதழ் விரியாத சிரிப்பே பதிலாக வந்தது.

சொல்லுகிறேன் என்றும் இப்பவே அதுதேவைதானா என்றும் இப்ப அதெல்லாம் எதுக்கு, கொஞ்சம் பொறு என்பது போலெல் லாம் இருந்தது அந்தச் சிரிப்பு.

அன்னமய்யா தனது தோளைப் பிடித்துக் கொண்டு நடந்துவரும் படியாகக் கேட்ட போதும் அந்த ஆள் அதே சிரிப்போடு மறுத்து விட்டு அவனோடு மெதுவாக நடந்து வந்தான்.

ஒரு வேப்பமரத்தின் அடியில் ஏகப்பட்ட மண்கலயங்கள் இருந்தன. அந்தக் கருப்புக் கலயங்கள் அந்தக் கரிசல் மண்தரையில் பாதி புதைக்கப்பட்டிருந்தன. தேங்காய்ப் பருமனுள்ள கற்களால் அந்தக் கலயங்களின் வாய் மூடப்பட்டிருந்தது. காகங்கள் வந்து கஞ்சிக் கலயங்களை உருட்டி விடாமலும் அலகை நுழைத்து அசிங்கப்படுத்திவிடாமலும் இருக்க இந்த ஏற்பாடு என்று அந்த மனிதன் பிறகு கேட்டுத் தெரிந்து கொண்டான்.

அன்னமய்யா ஒரு கலயத்தின்மேல் வைக்கப்பட்ட கல்லை அகற்றினான். ஒரு சிரட்டையில் காணத்துவையலும் ஊறுகாயும் இருந்தது. சிரட்டையே அந்தக் கலயத்தின் வாய்மூடியாகவும் அமைந்திருந்தது. இன்னொரு கலயத்தின் மேலிருந்த கல்லை எடுத்துப் பார்த்தபோது அதேபோல் இருந்த சிரட்டையில் மோர் மிளகாய் மட்டுமே இருந்தது. அதை இந்தச் சிரட்டையில் தட்டினான். சிரட்டையைத் துடைத்து சுத்தப்படுத்தினான். அந்தக் கலயத்தைப் பதனமாக எடுத்து தனது வலதுபாதத்தின்மேல் வைத்து, சிரட்டையில் நீத்துபாகத்தை வடித்து அவனிடம் நீட்டினான்.

கையில் வாங்கியதும் சப்பிக்குடிப்பதா அண்ணாந்து குடிப்பதா என்கிற தயக்கம் வந்தபோது கண்கள் சொருகின. மிடறு தொண்டை வழியாக இறங்குவதன் சொகத்தை முகம் சொல்லியது. ''உக்காருங்க; உக்காந்து குடிங்க'' என்று உபசரித்தான்.

உட்கார்ந்த பிறகு, ரண்டாவது சிரட்டைக்குக் கலயத்தை பாதத்தின் பேரிலேயே வைத்து சுற்றி ஆட்டியதும் தெளிவு மறைந்து சோற்றின் மகுளி மேலே வந்ததும் அதை வார்த்துக் கொடுத்தான். அதை உறிஞ்சிக் குடிக்கும்போது ''ஹ!'' என்கிற அனுபவிப்பின் குரல் அவனிடமிருந்து வந்தது.

கலயத்திலிருந்து சிரட்டை வழியாக மடக்கு மடக்காய் அவனுள் ஜீவஊற்று பொங்கி நிறைந்து வந்தது.

சிரட்டையைக் கையளித்துவிட்டு அப்படியே அந்த வேப்ப மரத்து நிழலே சொர்க்கமாய்ப் படுத்ததும் அவனைத் தென்னல்க் காற்றே தூக்கமாக வந்து அயரச் செய்தது.

வந்தவனுக்கு எப்படி ஒரு நிறைவு ஏற்பட்டதோ அதைவிட மேலான ஒரு நிறைவு அன்னமய்யாவுக்கு ஏற்பட்டது. மாரில் பால் குடித்துக் கொண்டிருக்கும் போதே வயிறு நிறைந்ததும் அப்படியே தூங்கிவிடும் குழந்தையைப் பார்ப்பதுபோல அவனை ஒருபிரியத் தோடு பார்த்துக் கொண்டிருந்தான் அன்னமய்யா.

❖

## 36

அந்த வரத்துக்காரனின் சிறு தூக்கம் முடியும்வரை அன்னமய்யா காத்திருந்தான். அந்தப் பக்கத்தில் தொகுதி தொகுதியாக அருகு எடுத்துக் கொண்டிருந்தார்கள். கரிசல் காட்டு சம்சாரிகளுக்கு அருகு ஒரு அரக்கன். வெட்ட வெட்டத் தலைமுளைப்பது போல அவர்களோடு அது விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தது. கள்ளிக்கு ஒரு வெள்ளைப் பூச்சியைக் கண்டுபிடித்த வெள்ளைக் காரன் அருகை அழிக்க ஒரு மருந்து கண்டுபிடிக்கல்லையே என்கிற கோபம் சம்சாரிகளுக்கு! ''அருகு எடுக்கிறதுலேயே நம்ம வாழ்நாள் முக்காவாசி போயிரும் போல'' சடைத்துப் புளித்துப் போவார் அன்னமய்யாவின் பாட்டனார்.

அன்னமய்யாவின் புஞ்சைக்குப் பக்கத்துலதான் சுப்பையாவின் புஞ்சையும். அங்கே போனால் சுப்பையாவும் இருப்பான். இவர் எழுந்திருச்சதும் அங்கே கூட்டிக்கொண்டு போவோம் என்று நினைத்த போது அந்த ஆளிடம் ஒரு அலுக்கம் தெரிந்தது. சரி; முழிப்பு வந்தாச்சி என்று நினைத்துப் பார்த்தபோது அந்த ஆளிடமிருந்து நன்றி கலந்த ஒரு புன்னகை வெளிப்பட்டது.

எழுந்திருக்க மனசில்லாமல் படுத்துக் கொண்டே பேசினான் அந்த ஆள். உங்க ஊர் பெயரென்ன? என்று கேட்டான். தெரிந்து கொண்டபோது அந்தப் பெயர் அவனுக்கு விநோதமாகத் தெரிந்திருக்க வேண்டும் போலப்பட்டது.

''எங்கருந்து வர்ரீங்க.. எங்க போகணும்?'' ''ரொம்பத் தொலவட்லயிருந்து வர்ரென்; எங் கதெ பெரிசு!'' என்றான். தம்பீ ஒம் பெரென்ன?''

''அன்னமய்யா''

வந்தவன் அந்தப் பேரை மனசுக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்த்துக்கொண்டான். எவ்வளவு பொருத்தம் என்று நினைத்துக் கொண்டான் போலிருக்கிறது! 'எனக்கு இன்று நீ இடும் அன்னம் தான்...'

பதிலுக்குப் பெயர் என்ன என்று கேட்கவேண்டும்போல் தோன்றியதால் அன்னமய்யா கேட்டான். கொஞ்சம் தயங்கியபின் 'என்னோட சொந்தப் பெயர் பரமேஸ்வரன். அதை இப்போதைக்கு மறந்துரு; இப்பொப் பேர் மணி, மணின்னே கூப்பிடு. நா எங்குருந்து வர்றேன்ங்கிறதெல்லாம் சாவகாசமாச் சொல்றேன்'' என்று சொல்லிவிட்டு. ''இப்பொ நாம எங்க போகணும் சொல்லு'' என்று கேட்டான். ''அந்தோ... அங்கெ, ''என்று கை காட்டினான். ''அங்கெ என்னொட பிரண்டு - சுப்பையான்னு பேரு, கலேஜ்ல படிக்கான். லீவுக்கு வந்திருக்கான். அவங்க பிஞ்சையிலேயும் அருகெடுக்கிறாங்க, அங்க போவமா?''

''ஓ; போவமே''

அன்னமய்யாவையும் புது ஆளையும் அவர்கள் மந்தகாசத்துடன் வரவேற்றார்கள். புதாளை அவர்கள் தங்களோடு உண்ணும்படி உபசரித்தார்கள். மணி அவர்களோடு வட்டத்தில் சேர்ந்து உட்கார்ந்தார். கையைக் கழுவிக்கொள்ள வேண்டும் என்று

அவருக்குத் தோன்றியது. ஆனால் அவர்களில் யாருமே சாப்பிடுவதற்கு முன்னால் கையைக் கழுவிக்கொள்வதாகத் தெரியவில்லை! அவர்களுக்கானது நமக்கு என்று அவர் கையை நீட்டினார். ஒரு கால் உருண்டை கம்மஞ்சோற்றை அவருடைய இடது கையில் வைத்தார்கள். இடது கையிலா என்று தயங்கினார். ஆம் இடது கையில்த்தான் என்று தெரிந்தது. அன்னமய்யாவும் சுப்பையாவும் அப்படித்தான் பெற்றுக்கொண்டார்கள். அவர்களைப் பார்த்து அவரும் இடதுகைச் சோற்றில் ஒரு சிறு பள்ளம் செய்து கொண்டார். அந்தப் பள்ளத்தில் துவையலை வைத்தார்கள். சிறிது சோற்றை எடுத்து துவையலில் பட்டதோ படலையோ என்று தொட்டு கழுக் என்று முழுங்கினார்கள். யாரோடும் யாரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை; முழுங்கு வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள்! அவர்கள் உண்ணுகிற வேகம் ஆர்வம் அனுபவிப்பு இதெல்லாம் பார்த்த போது இந்த உணவு எவ்வளவு ருசியாக இருக்குமோ என்று பட்டது மணிக்கு. முதலில் கொஞ்சம் வெறும் சோற்றை எடுத்து ருசி பார்த்தார். அந்தச் சோற்றின் நெடி அவரை என்னவோ செய்தது! துவையலோடு சேர்த்துச் சாப்பிட்டால் கொஞ்சம் பரவாயில்லை என்பதுபோல்ப் பட்டது. அந்தக் கடுமை யான பசியிலும் அவரால் அரை உருண்டைக்குமேல் சாப்பிட முடியவில்லை.

அன்னமய்யாவும் சுப்பையாவும் ஆளுக்கு ஒரு உருண்டைதான் சாப்பிட்டார்கள். சாப்பிட்டு முடித்து அவர்கள் மண்ணினால் கைகளை சுத்தப்படுத்தியதைப் பார்த்து அவரும் அதேபோல் மண்ணை எடுத்துக் கைகளில்த் தேய்த்து சுத்தப்படுத்திக்கொண்டார்.

மற்றவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். கொத்தாளிக் கவுண்டருக்கு முன்னால் சிரட்டை நிறைய சம்பாமிளகாய் மோர் வத்தல் இருந்தது. எண்ணெயில் பொரிக்கப்பட்டதால் மினுமினுப் பாகவும் மொறுமொறுப்பாகவும் இருந்தது. ஒரு வத்தலை எடுத்து அவர் சாப்பிடுகிறவிதம் ஒரு காரச்சேவு எடுத்துத் தின்பதுபோல் இருந்துது! மணிக்கு சிரட்டையில் நீத்துப்பாகம் ஊற்றிக் கொடுத்து சாப்பிடச் சொன்னபோது துவையலுக்குப் பதில் அந்த வத்தலில் ஒன்று தரக்கூடாதா என்று ஏங்கினார். அது எவ்வளவு ருசியாக இருக்குமோ என்று ஆசைப்பட்டார். வெட்கத்தைவிட்டு ''அதிலெ ஒண்ணு தாருங்களென்?'' என்று கேட்டுவிட்டார். வியப்பு கலந்த சிரிப்போடு அவரைப் பார்த்தார்கள்.

கொத்தாளிதான் சொன்னார்:

''வேண்டாம் ராஜா. இப்படித்தா(ன்) ஒரு தேசாந்திரி வந்து கேட்டான். யோசிக்காம நானும் குடுத்துட்டென். அய்யோ அவம்பட்ட பாதரவு அந்த பகவானுக்குத்தான் தெரியும். நாங்கள்ளாம் பயந்தே போனம்!'' என்றார்.

''அவம் எப்பிடிக் கூப்பாடு போட்டான்; அதமாதரி கொஞ்சம் காமிங்க மாமா' என்று அன்னமய்யா கொத்தாளிக் கவுண்டரிடம் கேட்டுக்கொண்டான், அவரும் உடனே ஒரு வத்தலை எடுத்துக் கடித்து காதுகளைப் பொத்தி வாயைப் பிளந்துகொண்டு ''ஆ... வோ...'' என்று கத்தித் தரையில் விழுந்து புரண்டு காட்டினார். புரண்டு எழுந்த வேகத்தில் அவர்களைப் பார்த்து அவன் எப்படி அவன் பாஷையில் வைதானோ அதேபோல் ''வைது'' திட்டி நொறுக்கினார்! கண்ணைத் துடைத்துக்கொண்டும் நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டும் வலி தாங்காதவன்போல சங்சங்கென்று குதித்தார். திடீரென்று அவர் அதிலிருந்து விடுபட்டு அமைதியாகி ''அய்யோ நல்லவேளை, அண்ணைக்கி இந்தக் கொத்தனார் சித்தப்பாதான் அவம் வாயிலெ உப்பை அள்ளிப் போட்டு மெல்லுடா மெல்லுடான்னு அடிச்சார். இவரு இல் லைன்னா அண்ணைக்கு அவம் வம்பா செத்துப் போயிருப்பான்!'' என்றார். அவர்கள் சாப்பிட்டு முடிந்ததும் கொஞ்சம் ஓய்வாக உட்கார்ந்து ஊர்க்கதைகள் பேச ஆரம்பித்தார்கள். சுண்ணாம்பு கேட்கவும் தீப்பெட்டி கேட்கவும் சிலர் பக்கத்துத் தொகுதிகளிடம் போனார்கள். மணி திரும்பவும் படுத்து அமைதியாகக் கண்களை மூடிக் கிடந்தார்.

பேச்சு ஊர்க் கதையிலிருந்து அரசியலுக்கு வந்தது. சிதம்பரம் பட்டி நாயக்கர்தான் ஆரம்பித்தார். ''இந்த வெள்ளைக் காரன் எப்பிடி அய்யா இந்தியாவ விட்டு கிளம்புறென் ன்னு துணிஞ்சி சொல்லிவிட்டான்!'' என்று வியந்தார்.

''எண்ணைக்கிருந்தாலும் கதெ அதுதான். வெளியேறாமத் தீராது'' என்றார் சாமிநாயக்கர் உறுத்தலாய்.

''அந்தப் பய புள்ளெகளை நம்ப முடியாதுங்கோ. தோலு இருக்க சுளை விளுங்கிப் பயபுள்ளெ கள்ளா'' என்றார் சிதம்பரம்பட்டி சந்தேகத்துடன். ''ராசு நீ சொல்லு; படிச்ச புள்ளெ'' என்று சுப்பையா பக்கம் முகம் திரும்பினார்.

''வெளியேறுதது நிச்சமாயிட்டது. தேதியெல்லாம் கூட சொல் லீட்டானெ'' என்றான் சுப்பையா.

சிதம்பரம்பட்டியால் இன்னும் நம்ப முடியவில்லை. வெள்ளை ஆட்சியை எதிர்த்துப் பெரிய பெரிய போராட்டமெல்லாம் நடந்த போதெல்லாம் அசைஞ்சி கொடுக்காதவன்; ஈவு இரக்கமில்லாமல் மக்களைத் தேய்த்து நசுக்கியவன் இப்போது ஒரு சலாம் போட்டு, 'நான் வெளியேறிக் கொள்ளுகிறேன்' என்று சொன்னால் எப்படி? அவன் இந்த நாட்டில் நிறுவிய மூலதனத்தெயெல்லாம் விட்டு எப்படிப் போயிறுவான்!!

சிதம்பரம்பட்டி நாயக்கரின் பலத்த சந்தேகத்தைத் தீர்த்து வைக்க மணி எழுந்திருந்து உட்கார்ந்து தொண்டையை செறுமி சரிசெய்து கொண்டு சொல்லத் துவங்கினார்

''வெள்ளைக்காரன் இந்தியாவுக்கு வந்தது அரசாட்சி நடத்தயில்லை; வியாபாராம் பண்றதுக்குத்தான். அரசாட்சி அவன் கைக்கு கிடைச்சது இங்கே உள்ள புத்திகெட்ட ராஜாக்களாலே; காஷ்மீரிலிருந்து கன்யாகுமரி வரை ஒரு பொதையல் கிடைச்சது போல கிடைச்சது அவனுக்கு. எப்படிக் காவல் இல்லைன்னா மகசூல் வீடு வந்து சேராதோ அதேபோல அரசைக் கட்டிக் காக்க ராணுவமும் போலீஸாரும் சரியாக இயங்கலைன்னா கதை நடக்காது. போலீஸை எல்லாம்விட ராணுவம்தான் ரொம்ப முக்கியம். அதனாலதான் மக்களை அடக்க கடேசியா ராணுவத்தை அனுப்புறதெ.

அன்றைக்கு எல்லைப்புற மாகாணத்து மக்களை அடக்க கூர்க்கா பட்டாளத்தை அனுப்பியபோது அவர்கள் மக்களைச் சுட மறுத் தார்கள். நம்முடைய சகோதரர்களைச் சுட மறுத்த அந்த ராணுவத்தை அடக்க வெள்ளைராணுவம் வந்தபோதும் அவர்கள் தங்கள் துப்பாக்கிகளை தரையை நோக்கித்தான் வைத்துக்கொண்டிருந் தார்கள். வெள்ளைக்காரனை நோக்கி ஒரு குண்டுகூட வெடிக்க வில்லை. அப்பேர்ப்பட்ட அந்த சிப்பாய்களுக்கு வெள்ளை அரசு தீவாந்திர சிட்சை அளித்தது.

அன்று ராணுவம் வெள்ளையனையும் அவனுடைய வெள்ளை ராணுவத்தையும் எதிர்த்துக் கிளம்பவில்லை. இன்று அப்படி யில்லை. இந்திய ராணுவமே வெள்ளை ராணுவத்தை எதிர்த்துப் பம்பாயிலும் கராச்சியிலும் போர் நடத்தியது. நம் மக்கள் நமது ராணுவத்துக்குப் பக்கபலமாக இருந்தார்கள்.

கடேசியில் நமது ராணுவ வீரர்களைப் பணிய வைக்க அவர்களால் முடியாமல் நமது தேசியத் தலைவர்களை நாடவேண்டிய கட்டாயம் வெள்ளை ஆட்சிக்கு ஏற்பட்டது. ''அந்தக் கதையைக் கொஞ்சம் சொல்லுகிறேன், கேளுங்கள்'' என்று ஆரம்பித்தார் மணி.

❖

## 37

மணி சொல்லத் தொடங்கினார்: ஜாதி நம்ம கண்ணுக்குத் தெரியிறதில்லை. நிறம் தெரியும். எப்படியோ சிகப்பு நிறம் நம்ம கண்ணுக்குப் பிடிச்சிப் போச்சி! செகப்பா இருக்கிறவங்க அழகா இல்லாவிட்டாலும் அந்த நெறத்தை நெனைச்சி அவங்களுக்கு மூக்கு முட்ட கர்வம் உண்டு! ஆனா, இந்தப் பறங்கி நிறம் இருக்கே - வெள்ளைக் குட்டம் வந்தமாதிரி-: அந்த நிறத்தெ நெனைச்சி அவங்களுக்கு என்னா கர்வம்! கர்வம் இருந்துட்டுத் தொலையுது, சவம் அது அவனோட விஷயம். ஆனா அதுக்காச் சுட்டி பிறத்தியானை நிறத் துவேஷத்தாலெ ஏசுறகிதோ அதெ சொல்லிக் காட்டி சிறுமெப் படுத்துறதயோ எத்தனை நாளைக்குத்தான் பொறுத்துக்க முடியும்? கப்பல்ப் படைப் பயிற்சியிலெ நாங்க சேர்ந்த உடனெ இதெ அனுபவிக்க வேண்டியது வந்தது. எதைப் பொறுத்துக்கிட்டாலும் மனுச அவமரியாதையெப் பொறுத்துக் கொள்றது எப்படி? அதும் ஒரு அந்நியன்ட்டெ. எங்களுக்கு உண்டாக்கித் தந்த வசதிக் குறைவு, படுமோசமான உணவு எல்லாத்தையும் பொறுத்துக்கிட்டொம்; எங்க நிறத்தைக் குறிச்சி, நாட்டைக் குறிச்சி இழிவாகப் பேசித் திட்டினதை எங்களால பொறுத்துக்கிட முடியலெ.

காலையிலெ உடல் பயிற்சிக்காக வரிசை வரிசையாக நிக்கிறோம். யாரு செஞ்ச வேலைன்னு தெரியிலை! மைதானத்து கொடிக் கம்ப மேடையிலெ சாக்பீஸாலெ ''ஜெய் ஹிந்த்''ன்று இங்கிலீஷ்ல எழுதியிருக்கு!! மேலெ யூனியன் ஜாக் - பிரிட்டிஷ் கொடி-; கீழே ஜெய் ஹிந்த் ன்னு எழுதியிருக்கு! பொறுப்பானா வெள்ளைக்காரன்?! வந்து பாத்ததும் காச்முச்ன்னு கத்தினான். யார் எழுதினதுன்னு இப்ப எனக்குக் கொஞ்சம் நேரத்துல தெரியணும் இல்லைன்னா நடக்கிற கதயே வேற; அம்புட்டுப் பயல்களையும் பிடிச்சி 'உள்ளெ' போட்டுச் சித்திரவதை பண்ணுவேன் ங்குறான்.

ஜெய் ஹிந்த்ன்னா என்ன; அது ஒரு வசவா. இல்லெ. இந்தியாவுக்கு வெற்றின்னுதான் அர்த்தம். இதுக்கு அவன் என்னத்துக்கு அவ்வளவு கோவப்படணும்? அதுக்கு ஒரு பலமான காரணம் இருக்கு. அந்த கோஷம் தந்தது நேதாஜி சுபாஷ்சந்திர போஸ்! யாரை எதுத்து. வெள்ளையனை எதுத்து...!!

''பெறகு பய பிள்ளைக்குக் கோவம் வராம என்ன செய்யும்'' என்று கேட்டார் சிதம்பரம்பட்டி நாயக்கர்.

அழிச்சபிறகு பார்த்தா, மறுநாளும் அதேபோல ஜெய்ஹிந்த்ன்னு எழுதியிருக்கு! சுவராஸ்யத்தில் சிரிப்பு வந்தது கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு.

ராத்திரி சென்ட்ரி - காவல் இருந்தவனுக்கு, காரணம் தெரியாமச் சிரிச்சவனுக்கு, மொறைச்சிப் பார்த்தவனுக்கெல்லாம் அடி, ஒதை, ஜெயில்!

இந்தச் செயல் எங்க கொண்டு போயிவிட்டது? காஞ்ச கரிமருந்து அம்பாரத்துமேலெ ஒரு தீக்குச்சிய ரோஸிப் போட்டதுபோல ஆயிட்டது!! '' H.M.I.S. தல்வார்''ங்கிற கப்பல்ப்படை பயிற்சித் தளத்தில் இருந்த இந்திய மாலுமிகள் இதை எதிர்த்து ஆவேசக் குரல் கொடுத்தாங்க. நேரம் ஆக ஆக ஆவேசம் கூடுனது. அடிவயித்தில இருந்து கத்துனாங்க; சுதந்திர கோஷ முழக்கங்களும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதுத்தும்.

தல்வார் கொடிக் கம்பத்ல பறந்துகொண்டிருந்த பிரிட்டிஷ் கொடியை இறக்கினாங்க. இதுதான் -இங்கதான்-இந்தியாவிலேயே முதல் முதல்ல பிரிட்டிஷ் கொடியையே இறக்கினது!! அதும் யாராலெ?யாரை நம்பி இத்தனை நாள் இந்தியாவை அரசாண் டானோ அதே ராணுவ வீரர்களாலெ.

இப்பொ அந்த தல்வார் கொடிக் கம்பத்துல பதிலுக்கு ஒரு கொடியைப் பறக்கவிடணுமெ; எந்தக் கொடியைப் பறக்க விடுதது? கொஞ்சம் திகைப்பும் யோசனையும் வந்தது. கொஞ்சநேரத்துக் கெல்லாம் தல்வார் கொடிக்கம்பத்தில் மூணு கொடிகள் சேர்ந்தாப்ல பறந்தன; மூவர்ணக்கொடி, பச்சைக்கொடி, செங்கொடி!!

இந்தச் செய்தி ரொம்ப வேகமாக எல்லா யுத்தக் கப்பல்களுக்கும் பரவியது. செய்தி கிடைத்த உடனேயே பம்பாய் துறைமுகத்தில் நின்ற அனைத்து யுத்தக் கப்பல்களிலுமுள்ள பிரிட்டிஷ் கொடி

இறக்கப்பட்டு காங்கிரஸ் கட்சியின் மூவர்ணக்கொடியும் மூஸ்லீம் லீக்கின் பச்சைக்கொடியும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் செங்கொடியும் பறக்க ஆரம்பித்துவிட்டன.

தல்வாரில் தொடங்கிய இந்தப் போராட்டம் பம்பாயில் முகாமிட்டிருந்த அறுபது போர்க் கப்பல்களிலும், மற்ற பயிற்சி நிலையங்களிலுமிருந்த அனைத்து மாலுமிகளின் வேலை நிறுத்தமாக மாறியது.

மறுநாள் பிப்ரவரி 19 காலையில், வேலை நிறுத்தம் செய்த மாலுமிகள் அனைவருமே ஒன்று திரண்டு பம்பாய் நகரத்தின் தெருக்களில் கோஷம் போட்டுக்கொண்டு ஊர்வலமாக வர ஆரம்பித்துவிட்டார்கள். அவர்களின் முக்கியமான மூன்று முழக்கங்கள்; ''புரட்சி ஓங்குக; வெள்ளையனே வெளியேறு; இந்து - முஸ்லீம் ஒற்றுமை வளரட்டும்;''

ஊர்வலமாக வந்த மாலுமிகள், கடைகளை அடைத்துத் தங்களுக்கு ஆதரவு தெரிவிக்கும்படி பொதுமக்களைக் கேட்டுக் கொண்டதும் வெள்ளையரின் கடைகள் தவிர மற்ற அனைத்துக் கடைகளும் வியாபாரத் தலங்களும் மூடி ஆதரவு அளித்தார்கள்.

மூட முடியாது என்று சொன்ன வெள்ளையரின் கடைகள் நொறுக்கப்பட்டன.

ஊர்வலம் முடிந்து, மதியம், ஆயிரக்கணக்கான மாலுமிகள் தல்வார் பயிற்சி நிலையத்தை அடைந்தார்கள்.

அங்கே நடந்த கூட்டத்தில் ஒரு கப்பலுக்கு ஒருவர் வீதமும் பயிற்சி நிலையத்துக்கு ஒருவர் வீதமும், பெரிய பயிற்சி நிலையமான காசின் பாராக்சுக்கு இருவரும் என்று போராட்டக்குழு ஒன்று அமைக்கப்பட்டது. குழுவுக்குத் தலைவராக எம்.ஏ.கான் தெரிந்தெடுக்கப்பட்டார்.

கூட்டத்தில் மாலுமிகளுக்குப் போராட்டத்தில் இறங்கவேண்டிய கட்டாயச் சூழ்நிலை எவ்வாறு ஏற்பட்டது என்பதுபற்றியும் போராட்டத்தை மேல்க்கொண்டு எவ்வாறு நடத்திச் செல்வது என்பதுபற்றியும் விவாதித்து, ஒரு எட்டு அம்சக் கோரிக்கைகள் அடங்கிய பட்டியல் தயாரிக்கப்பட்டது.

அவைகளில் முக்கியமானது; அய்.என்.ஏ. வீரர்களையும் மற்ற அரசியல் கைதிகளையும் உடனே விடுதலை செய்யவேண்டும். மாலுமிகளிடம் நாகரீகமில்லாமல் கீழ்த்தரமாகப் பேசியும் நடந்தும் கொண்ட ''தல்வார்'' கமாண்டிங் அதிகாரி கிங் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும்.

வெள்ளையர்களைக் கொண்ட ராயல் நேவியின் மாலுமிகளுக்கு அளிக்கப்படும் சம்பளவிகிதம் பஞ்சப்படி இதர சலுகைகள் இந்தியன் நேவி மாலுமிகளுக்கும் அளிக்கப்படவேண்டும். அனைத்து உணவகங்களுக்கும் இந்திய மாலுமிகள் செல்ல அனுமதிக்க வேண்டும். அளிக்கப்படும் உணவு நல்லதாக இருக்கவேண்டும். இந்தோனேஷ்யாவிலுள்ள இந்தியப் படைகள் உடனே வாபஸ் பெறப்படவேண்டும் - இப்படி.

''கிங் என்கிற அந்த வெள்ளை அதிகாரி உங்கள்ட்ட அப்படி என்ன மோசமா நடந்துக்கிட்டான்?'' என்று, விவரம் தெரிந்துகொள்ளக் கேட்டான் அன்னமய்யா.

''முதல்ல, அவங்கிட்ட மனுசத்தன்மையே கிடையாது. இந்தியர்கள்ண்ணாலே எளப்பம் அவனுக்கு, 'நாயிக்குப் பிறந்த பயல்களே' 'கூலிக்காரப் பயல்களே' ண்ணுதான் நம்மளைப் பார்த்துச் சொல்லுவான்'' என்றார் மணி. இதைக் கேட்டதும், கோபமே வராத கொத்தாளிக் கவுண்டர் சொன்னார், ''செருப்பால அடிக்கணும் பயபுள்ளெய; கூலிக்கு வேலை செய்யிறவன்ண்ணா அவ்வளவு கேவலமாப் போச்சோ?'' என்று கேட்டார்.

''பளய செருப்பால அடிக்கணும்'' என்றார் சிதம்பரம் பட்டி. ''பளய செருப்பிலும் நனையப்போட்ட செருப்பால அடிக்கணும் சிறுக்கிபிள்ளைய'' என்று திருத்தம் தந்தார் கொத்தனார் சாமி நாயக்கர்.

இவர்களின் ஏகோபித்த கோபத்தையும் அதை வெளியிட்ட பாங்கையும் கேட்ட மணி, திருப்தியான சிரிப்பை உதிர்த்துவிட்டு மேலே தொடர்ந்தார்:

இந்தக் கோரிக்கைகளின் அடிப்படையில் பேச்சு வார்த்தை நடத்த பதினான்குபேர் அடங்கிய ஒரு குழுவும் தேர்ந்தெடுக்கப்பட்டது. மீண்டும் நாலுமணிக்குக் கூட்டம் நடக்கும் என்றும் கூட்டத்தில் வந்து திருமதி அருணா அஸப் அலி பேசுவார் என்றும் அறிவிக்கப் பட்டது.

சொன்னபடி கூட்டம் மாலையில் கூடியது. அறிவித்திருந்தபடி தலைவர் திருமதி அருணா அஸப் அலி வரவில்லை. தல்வாரின் கொடி அதிகாரி அட்மிரல் ராட்ரே வந்தான்!

''ஏம் வரலை அருணா அஸப் அலி?'' என்று ஆர்வமுடன் கேட்டான் அன்னமய்யா.

''யாருக்குத் தெரியும்! வரலை? சொன்னபடிங்கிறதுதான் விஷயம்'' என்றார் மணி.

''ம்; பெறவு''

கொடி அதிகாரி அட்மிரல் ராட்ரேயுடன் மாலுமிகள் குழு பேச்சு வார்த்தை நடத்தியது.

பிரச்சனைகளைக் கடல்படையின் தலைமையகத்துக்குத் தெரிவிப்பதாக உறுதி சொன்னான்.

பேச்சு வார்த்தையின் முடிவுபற்றி அறியக் காத்துக்கொண்டிருந்த மாலுமிகளுக்குச் செய்தி கிடைத்தது. உணவு சம்மந்தப்பட்ட விஷயங்களுக்கு மட்டும் பரிகாரம் காணப்படுமாம்!

எங்களை அவன்கள் என்ன என்று நினைத்துவிட்டார்கள்; நாங்கள் வெறும் தின்னிமாடன்கள் என்றே நினைத்துவிட்டான்கள்! மாலுமிகள் இதை ஏற்கவில்லை. உணவுப் பிரச்சினைக்காக மட்டுமே அவர்கள் போராடவில்லை. போராட்டம் தொடர்ந்தது. பரவியது.

பம்பாய் புறக்கடலில் நங்கூரமிட்டிருந்த போர்க் கப்பல்களுக்குச் செல்லவும் அவற்றிலுள்ள மாலுமிகளையும் தங்களோடு போராட்டத்தில் கலந்துகொள்ளச் செய்யவும் தங்களுடைய கப்பலிலிருந்த படகுகளில் ஏறி கடல் அலைகளோடு கோஷித்துக்கொண்டு அந்தப் போர்க் கப்பல்களை நோக்கிச் சென்றனர். அரபிக் கடலின் அலை ஓசையும் மாலுமிகளின் புரட்சிக் கீதமும் இணைந்தன.

வெகு தூரத்திலிருந்த மாலுமிகளும் செய்தி அறிந்தவுடன் போராட்டத்தில் குதித்தார்கள். கொழும்பு துறைமுகத்தில் நங்கூரமிட்டிருந்த H.I.M.S. பரோடாவிலுள்ள மாலுமிகள் தங்கள் கப்பலில் பறந்துகொண்டிருந்த பிரிட்டிஷ் கொடியை இறக்கினார்கள். அந்த இடத்தில் தேசியக் கொடிகளைப் பறக்கவிட்டார்கள்.

கப்பல்படைத் தளபதி வைஸ் அட்மிரல் கோட் பிரே டில்லியிலிருந்து பம்பாய் வந்து சேர்ந்தான். இந்தக் கப்பல்படைப் புரட்சியை ஒடுக்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டான்.

❖

## 38

20ஆம் தேதி அதிகாலையிலேயே டிராம்பே பகுதியிலிருந்த H.M.I.S. சீட்டாவை மராட்டா ராணுவம் சுற்றி வளைத்துக்கொண்ட செய்தி பம்பாய் நகர் முழுவதும் வேகமாய்ப் பரவியது. இதனால் பதட்டநிலை அதிகரித்தது. தானா பகுதியில் H.M.I.S. அக்பரிலிருந்த

மூவாயிரம் வீரர்கள் இச்செய்தி கேட்டதும் ஆத்திரம் அடைந்து காவல் அறைகளுக்குள் நுழைந்து சிறையை உடைத்துக் கைதிகளை விடுவித்தார்கள். வீரர்கள் அனைவரும் ''தல்வார் சலோ'' என்று கோஷித்துக்கொண்டு தானா ரயில் நிலையத்தைப் பார்த்துப் புறப் பட்டார்கள் ஊர்வலமாக.

தானாவை அடைந்ததும் இவர்கள் ரண்டு பிரிவாகப் பிரிந்து, ஒரு பிரிவு வி.டி. ஸ்டேஷன் வழியாகவும் இன்னொரு பிரிவு சர்ச் கேட் வழியாகவும் கொலாபாவிலுள்ள தல்வாரைப் பார்த்துப் போனார்கள்.

இதற்குள் தல்வாரில் வந்து பல்வேறு பகுதிகளிலும் வேலை நிறுத்தம் செய்த மாலுமிகள் வந்து கூடிவிட்டார்கள்.

கடல்படை தளபதி வைஸ் அட்மிரல் கோட்பிரே மாலுமிகள் அனைவருக்கும் கீழ்க்கண்ட எச்சரிக்கையை விடுத்தான். ''மாலை *3-30*க்கு அனைத்து மாலுமிகளும் அவரவர்களுடைய கப்பல் களுக்கோ அல்லது கப்பல்படை நிறுவனங்களுக்கோ திரும்ப வேண்டும். *3.30* மணிக்கு மேல் எந்த மாலுமியாவது தெருக்களில் காணப்பட்டால் கைது செய்யப்படுவார்கள்''

இந்த எச்சரிக்கை மாலுமிகளை ஆத்திரமடையச் செய்யும் என்பதில் சந்தேகமில்லை. என்றாலும் அவர்கள் தனிமையில் தாக்கப்படும் அபாயத்தைத் தவிர்ப்பதற்காக, போராட்டக்குழு ''பேச்சு வார்த்தை நடைபெற இருப்பதால், அதற்கு உதவியாக அனைத்து மாலுமிகளும் மாலை *3.30* மணிக்குள் அவரவர் முகாமிற்கு வந்து சேர்ந்துவிடுமாறு கேட்டுக்கொள்கிறோம்'' என்று தெரிவித்தது. அதோடு -

யாரும் இதனால் ஆத்திரம் அடையவேண்டாம் என்றும், படையினரை வாபஸ் பெறச் செய்ய போராட்டக் குழு முடிந்ததனைத்தும் செய்யும் என்றும் தல்வாரிலிருந்து அனைத்துக் கப்பல்களுக்கும் சிக்னல் வழிச் செய்தி அனுப்பப்பட்டது.

இந்தச் செய்தி எல்லாக் கப்பல்களுக்கும் உரிய நேரத்தில் கிடைத்தது. என்றாலும் கப்பல் படை வீரர்கள் தற்காப்புக்காக தங்களை தயார் நிலையில் வைத்துக்கொள்ள ஆயுதங்களையும் வெடி மருந்துகளையும் தங்கள் பொறுப்பில் எடுத்துக் கொண்டார்கள். ராத்திரி நேரத்தில் புதிய கப்பல்கள் ஏதாவது வந்தால் எல்லாக் கப்பல்களுக்கும் தகவல் தெரிவிப்பதற்கான ஏற்பாடு களையும் செய்தார்கள்.

அன்றைக்கு ராத்திரி ரொம்ப நேரம் வரைக்கும் வைஸ் அட்மிரல் கோட்பிரேயின் பங்களாவில் கடல்படை அதிகாரிகளுக்கும் போராட்டக் குழுவினருக்கும் இடையில் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தது.

பேச்சின் முடிவில், எக்காரணத்தைக் கொண்டும் மராட்டா ராணுவத்தை வாபஸ் பெற முடியாது என்று கோட்பிரே சொல்லி விட்டான். சாப்பாட்டுப் பிரச்சினையைத் தவிர வேற ஒன்றையுமே பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளவே முடியாது என்று பிடிவாதமாக மறுத்துவிட்டான்!

அதனால் பேச்சு வார்த்தை முறிந்தது.

மத்திய வேலை நிறுத்தக் கமிட்டி உடனே கூடி, போராட்டம் நீடிக்கக்கூடிய நிலையில் ஏற்படும் பிரச்சனைகள் பற்றி யோசித்தது. தண்ணீரும் உணவும் பிரதான பிரச்சனையாகத் தெரிந்ததால் நேவல் ஸ்டோர்களில் உள்ள உணவுப் பொருள்களின் கையிருப்பைக் கவனித்தபோது மிகவும் குறைவாக இருப்பது தெரிந்தது. தண்ணீர்க் குழாய்கள் எந்த நிமிஷமும் துண்டிக்கப்படலாம். உணவு ஓரளவு அதிகமாகக் கையிருப்பில் உள்ள கப்பல்கள் குறைவாக உள்ள கப்பல்களுக்கு ஒரு பகுதியைக் கொடுத்து உதவவேண்டும் என்றும், மாலுமிகள் தங்கள் ரேஷன் அளவைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்றும் போராட்டக் கமிட்டி அறிவிப்புக் கொடுத்தது. தண்ணீர் டாங்குகளைச் சீக்கிரமே நிரப்பி வைத்துக்கொள்ளுங்கள் என்றது.

மூன்றாம் நாள் ராத்திரி, எந்த நிமிடம் என்ன நடக்கும் என்று தெரியாத நிச்சயமற்ற நிலை. வெள்ளை அதிகாரிகள் எதிர்த் தாக்கு தலுக்குத் தயாராகிக்கொண்டிருக்கிறார்கள்.

இந்தப் போரில் நாங்கள் வெற்றி பெறுவமா; முற்றாக அழிந்து போவமா! தெரியாது! வெள்ளையனை இந்த நாட்டைவிட்டு ஓட ஓட விரட்ட இதுதான் வேளை. எங்களுக்குப் பக்கபலம் இந்த நாட்டு மக்கள்; நம்முடைய தேசியத் தலைவர்கள். அவர்கள் ஓடி வந்து எங்களுக்கு உதவுவார்கள், பாராட்டுவார்கள் என்று நம்பினோம்.

தேசியத் தலைவர்களுடன் தொடர்பு கொண்டு ராத்திரி பூராவும் போராட்டக் குழு தலைவர்கள் பேசினார்கள். நம்பிக்கையூட்டும் பதிலே எங்களுக்குக் கிடைக்கவில்லை! சரி; இனி எது வந்தாலும் சரியே என்று தீர்மானமான முடிவுக்கு வந்துவிட்டோம். இந்த

தேசத்தின் விடுதலைக்காக தங்கள் உயிரைத் தந்த வீரர்களோடு நாமும் சேர்ந்து கொள்வோம்; ஆனாலும் எங்களுக்கு அடிமனசில் ஒரு நம்பிக்கை. நம்முடைய மக்கள் நமக்கு ஆதரவாகப் பொங்கி எழுவார்கள் என்று செயலில் இறங்கினோம். தண்ணீர் இல்லாமல், சாப்பாடு இல்லாமல் தனிமைப்படுத்தப்பட்டு, சக்தி வாய்ந்த படைகளால் சுற்றிவளைக்கப்படும் அபாயம் எங்களை எதிர் நோக்கியது. இந்நிலையிலும் வெள்ளையனுக்கு அடி பணியாமல் உறுதியாக நின்றோம். தேச பக்த உணர்வும் மனவுறுதியுமே எங்கள் பிரதான ஆயுதங்களாக இருந்தன.

❖

பம்பாய் துறைமுகத்துக்குச் சமமான முக்கியத்துவமுடையது கராச்சித் துறைமுகம். தல்வாரில் போராட்டம் நடந்த சமயத்தில் கராச்சித் துறைமுகத்தில் H.M.I.S. ஹிந்துஸ்தான், H.M.I.S திருவாங்கூர் என்ற ரண்டு போர்க்கப்பல்களும் நங்கூரமிட்டிருந்தன. கராச்சி துறைமுகத்துக்குப் பக்கத்தில் உள்ள மனோராதீவில் H.M.I.S. பஹாதூர், சமக், ஹிமாலயா ஆகிய மூன்று கப்பல்படை நிறுவனங்கள் இருக்கின்றன. தல்வாரின் போராட்டச் செய்தி 19ஆம் தேதி அன்றே கராச்சியிலுள்ள மாலுமிகளுக்குக் கிடைத்தது. அன்றைக்கு ராத்திரியே அவர்கள் ஒரு ரகசியக் கூட்டம் நடத்தி, தாங்களும் தல்வார் மாலுமிகளுக்கு ஆதரவாகப் போராட்டத்தில்க் குதிப்பது என்று தீர்மானித்துவிட்டார்கள். அதேபோல் ஹிந்துஸ்தான் கப்பல் மாலுமிகளும் சேர்ந்துகொண்டார்கள்.

காரியத்தில் உடனே இறங்கவேண்டும்; ஏனென்றால் அடுத்த நாள் காலையில் 'ஹிந்துஸ்தான்' கராச்சி துறைமுகத்தை விட்டுப் புறப்பட வேண்டும். பிறகு நடுக்கடலில் ஒன்றும் செய்ய ஏலாது. செய்தாலும் பலன் இருக்காது. அதனால் உடனடியாக அன்றைக்கு ராத்திரியே வேலை நிறுத்தம் தொடங்கிவிட்டார்கள்.

20ஆம் தேதி காலையில் கராச்சித் துறைமுகத்தில் இருந்த அமைதி இளம் மாலுமிகளால் மாறியது. ஹிந்துஸ்தானிலிருந்து சில இளம் மாலுமிகள் தரையிறங்கி வெள்ளையருக்கு எதிராக கோஷ முழக்கங்கள் இட ஆரம்பித்தார்கள். இதனால் இந்த உணர்ச்சி 'திருவாங்கூர்', 'சமக்', 'பஹாதூர்', 'ஹிமாலயா' முதலிய கப்பல்களிலும் பரவி அவர்களும் சேர்ந்துகொண்டார்கள். துறைமுகத்தில் மாலுமிகளின் வேலை நிறுத்தமும் அவர்களுடைய ஆவேச

உணர்ச்சியும் வெள்ளையர்களுக்கு எதிராக பரிபூரண வேலை நிறுத்தமாக மாறியதோடு, எல்லாக் கப்பல்களிலும் பறந்த பிரிட்டிஷ் கொடிகளை இறக்கி, நம்முடைய தேசியக்கொடிகளைப் பறக்க விட்டனர் அந்த மாலுமிகள். பிப்ரவரி 21ஆம் நாள்.

கப்பல்களை விட்டு இறங்கி வந்து கராச்சி நகரில் ஆர்ப்பாட்டம் செய்ய மாலுமிகள் முடிவு செய்தார்கள்.

மூன்று கப்பல்படை நிலையங்களிலிருந்த சிறைகளை உடைத்துக் கைதிகள் அனைவரையும் விடுவித்தனர். கைவசமிருந்த மோட்டார்ப் படகுகளையும் சாதாரணப் படகுகளையும் பயன்படுத்தி மனோரா தீவிலிருந்து கராச்சியை நோக்கிப் போனார்கள்.

வேலைநிறுத்தத்தை பலாத்காரமாக ஒடுக்க பிரிட்டிஷ் அதிகாரிகள் முடிவு செய்துவிட்டார்கள். இவர்களை அழைத்து என்ன ஏது என்று பேசிப் பார்க்கக்கூட அவர்கள் தயாரில்லை! பலுச்சி ரெஜிமெண்டின் ரண்டு படைப்பிரிவுகளைக் காலையிலேயே கொண்டு வந்து நிறுத்திவிட்டான்கள். அவர்களுடைய முதல் நோக்கம் ஹிந்துஸ்தான் கப்பலைக் கைப்பற்றுவது. அங்கிருந்து தானே முதல்க் கோஷமே அவர்களுக்குக் கேட்டது!

கப்பலுக்குள் நுழைய ஆணை பிறப்பிக்கப்பட்டது.

பலுச்சி படை வீரர்கள் வெள்ளை அதிகாரிகளின் ஆணையை ஏற்க மறுத்தார்கள்! கப்பல் படை வீரர்களுக்கு எதிராகத் தாங்கள் செயல்படத் தயாரில்லை என்று பிரகடனம் செய்தார்கள்!! நாங்கள் எல்லோரும் இந்தியர்கள் என்று சொல்வதுபோலிருந்தது.

வெள்ளை அதிகாரிகளுக்குப் பெரும் அதிர்ச்சி. குழம்பினார்கள். என்ன செய்ய என்று கொஞ்ச நேரம் திகைத்தார்கள். பலுச்சி ரெஜிமெண்டை வாபஸ் வாங்க உத்தரவிட்டார்கள். அவர்களுக்கு மிகவும் நம்பிக்கைக்குரிய கூர்க்காப் படைபிரிவுகள் - ரண்டு படைப் பிரிவுகளை - துறைமுகத்தைப் பார்த்துச் செல்ல உத்தரவிட்டார்கள்.

கூர்க்காப் படைப் பிரிவுகள் துறைமுகத்தைப் பார்த்து வந்தது. என்ன நடந்தது?

வெள்ளை அதிகாரிகளின் எண்ணத்தில் மண் விழுந்தது! கூர்க்காப் படைப்பிரிவின் வீரர்களும் தங்கள் சகோதரர்களான கப்பல் படை வீரர்களுக்கு எதிராக செயல்பட மறுத்துவிட்டார்கள். இப்படி நடக்கும் என்று கனவிலும் நினைக்கவில்லை வெள்ளை ராணுவ அதிகாரிகள்! இனி அவர்கள் எந்த இந்திய ராணுவ வீரனையும் நம்பத்

தயாரில்லை. இது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பெரும் நிகழ்ச்சி.

''பின்னெ இல்லியா'' என்று ஆதரித்தார் கொத்தனார் சாமி நாயக்கர். எந்த ராணுவத்தைக் கொண்டு இந்தியாவை அடக்கி ஆளலாம் என்று நம்பிக்கை கொண்டிருந்தானோ அதே ராணுவம் ஒட்டு மொத்தமாக வெள்ளையனை எதிர்த்து நின்றது! இது தான் சமயம். இதுதான் நல்ல சமயம். மக்களும் இவர்களோடு ஒன்று சேர்ந்துகொண்டால் இந்திய நாட்டிலிருந்தே வெள்ளை ஏகாதிபத்யத்தை வேரோடும் வேரடி மண்ணோடும் துடைத்து எறிந்துவிடலாம்.

''காங்கிரஸின் 42 ஆகஸ்ட் தீர்மானமே அதுதானெ'' என்றான் அன்னமய்யா.

கூர்க்காப்படையினரும் நடவடிக்கையில் இறங்க மறுத்துவிட்ட பிறகு வேற வழியில்லாமல் சுயம்பான வெள்ளைப்படையே அரங்குக்கு வந்தது. ''பிளாக் வாச் ரெஜிமெண்ட்'' என்று அழைக்கப் பட்ட அந்த வெள்ளைப்படையினர் நவீன ஆயுதங்களுடன் துறைமுகத்தில் அணி வகுத்தனர்.

போர் நிச்சயமாகிவிட்டது இப்போது. வெள்ளைப்படை யினருக்கும் நமது படைவீரர்களுக்கும்.

❖

## 39

ஹிந்துஸ்தான் கப்பலிலிருந்த டாக்டரைத் தவிர இதர அதிகாரிகள் அனைவரையும் கப்பலிலிருந்து வெளியேற வேண்டும் என்று மாலுமிகள் ஆணையிட்டனர். கப்பலின் கேப்டனான வெள்ளை யனையும் 'எறங்கு கீழே' என்றார்கள். வேற வழி இல்லாமல் அவனும் கப்பலைவிட்டுக் கீழே இறங்கினான். அப்படி இறங்கிக் கீழே போகும்போது அந்தப் பயல் ஒரு 'கிருத்திரியம்' பண்ணினான். தன்னிடமிருந்த கைத்துப்பாக்கியால் வானத்தை நோக்கிச் சுட்டான். வெள்ளைப் படையினர் நம்மீது தாக்குதல் தொடுப்பதற்கு அது ஒரு சைகையாக இருந்தது. வெள்ளைப் படையினர் கப்பலுக்குள் நுழைய முன்னேறி வந்தனர். முன்னெச்சரிக்கையாக மாலுமிகள் ஒரு

பதாகையை அவர்களுக்குக் காட்டினார்கள். ''உயிர்மேல் ஆசை இருந்தால் கப்பலில் ஏற முயற்சிக்கவேண்டாம்'' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. அதோடு மாலுமிகள் தங்கள் துப்பாக்கிகளை படகுக் கரையை நோக்கித் தயார் நிலையில் வைத்துக்கொண்டிருந்தார்கள்.

நிலைமை எளிதானதல்ல என்பதை அறிந்துகொண்ட வெள்ளைப் படை அடுத்த நிமிடமே எந்திரத் துப்பாக்கிகளைப் பயன்படுத்தித் தாக்குதலைத் தொடுத்தது. போர்க்கப்பலிலிருந்த அனைத்துத் துப்பாக்கிகளும் படகுக் கரையிலிருந்த வெள்ளைப் பட்டாளத்தை நோக்கிக் கோபத்தோடு குண்டுகளைக் கக்கத் தொடங்கின.

வெள்ளைப் பட்டாளம் பின்வாங்கியது.

அது, அவர்களுடைய ரண்டாவது தாக்குதலுக்கான தயாரிப்பாகயிருந்தது. சற்றும் எதிர்பார்க்காத இடத்திலிருந்து அந்த ரண்டாவது தாக்குதல் மாலுமிகள்மீது தொடுக்கப்பட்டது. துறைமுகத்திலிருந்த ஒரு உயரமான கட்டிடத்தின் மேல் மாடியிலிருந்து மணல் மூட்டைகளை அடுக்கி வைத்து அதன் பின்னாலிருந்து தாக்குதல் தொடுத்தார்கள். ரண்டு மாலுமிகள் குண்டடிபட்டு உயிரிழந்தனர்.

அந்த எதிர்பாராத இடத்திலிருந்து தொடுக்கப்பட்ட தாக்குதல் மாலுமிகளை நிலைகுலையச் செய்தது. என்றாலும் தங்களில் இரண்டுபேர் குண்டடிபட்டு துள்ளத்துடிக்க இறந்ததைக் கண்டதும் ஆவேசம் வந்து தொடர்ந்து போரிட்டனர்.

வசதியான இடத்திலிருந்துகொண்டு வெள்ளைப் படையினர் தொடர்ந்து தாக்குதல் நடத்தினார்கள். தீரம்மிக்க இந்திய மாலுமிகளும் தங்களிடமிருந்த இயந்திரத் துப்பாக்கியால் திருப்பித் தாக்கினார்கள். இருதரப்பிலிருந்தும் புறப்பட்ட குண்டு வெடிச் சத்தத்தில் கராச்சித் துறைமுகமே அதிர்ந்தது. இந்திய மாலுமிகளின் ஆவேச எதிர் தாக்குதலினால் துறைமுகக் கட்டிடத்தின் மேல் மாடியிலிருந்தும் வெள்ளைப் படையினர் பின்வாங்கிச் சென்றனர்.

''ஆக்கிரமிக்கப்பட்டால் திருப்பித் தாக்குங்கள்'' என்கிற உத்தரவு நர்மதா போர்க் கப்பலிலிருந்து போராட்டக் கமிட்டி ஒலிபரப்புவதை கராச்சி மாலுமிகள் கேட்டார்கள். காசின் பாரக்சில் பயங்கரமான யுத்தம் - நம்மவருக்கும் வெள்ளையருக்கும் - நடப்பது பற்றிய செய்தி ஒலிபரப்புகளும் அவ்வப்போது கிடைத்துக்கொண்டிருந்தது. மற்ற இடங்களில் என்ன நடக்கிறது என்று தெரியாமல்த் தவித்துக் கொண்டிருந்த கராச்சி மாலுமிகளுக்கு இந்தச் செய்திகள் உத்வேகம் அளித்தன.

அன்று இரவு ஹிந்துஸ்தான் கப்பலில் யாருமே தூங்கவில்லை. வெள்ளைப்படை எந்த நேரமும் எங்கிருந்து எப்படித் தாக்கினாலும் திருப்பித் தாக்க தயார் நிலையிலேயே இருந்தார்கள். ஆனால் ஒன்றுமே நடைபெறாமல் இரவு முடிந்தது.

மறுநாள் காலையில் ஒரு புதிய காட்சியை மாலுமிகள் கண்டார்கள். துறைமுகப் பகுதி முழுவதையும் பிரிட்டிஷ் பட்டாளம் சுற்றி வளைத்து நிற்கிறது. ஹிந்துஸ்தானைக் குறிவைத்து மர்மமான இடங்களில் நவீன எந்திரத் துப்பாக்கிகள் பொருத்தப் பட்டுள்ளன. ராயல் ஆர்ட்டிலரியைச் சேர்ந்த வெள்ளைப் பட்டாளம் அதன் பின்னால் அணிவகுத்து நிற்கிறார்கள்.

கடல்படை நிறுவனங்களான சமக், பஹதூர், ஹிமாலயா விலிருந்த ஆயுதங்களையும் வெடி மருந்துகளையும் ராத்திரியே வெள்ளையர்கள் கைப்பற்றிவிட்டார்கள்! அவற்றைச் சுற்றி வளைத்து தனிமைப்படுத்தி விட்டனர். வேலை நிறுத்தம் செய்த மாலுமிகளை ஒன்று சேரவிடாமல் செய்துவிட்டார்கள். அதோடு இறுதித் தாக்குதலுக்கான தயாரிப்புகளையும் வெள்ளைப்பட்டாளம் பூர்த்தி செய்துவிட்டது!

இப்போது தாங்கள் சுற்றிவளைத்துத் தாக்கப்படும் அபாயகரமான நிலையில் ஹிந்துஸ்தான் மாலுமிகள் இருப்பதை உணர்ந்தனர்.

''நிபந்தனை போடாமல் சரண் அடையுங்கள் உடனே, அல்லது ஒரு பகிரங்க ஆக்கிரமிப்பின் விளைவுகள் அனைத்தையும் சந்திக்கத் தயாராகுங்கள்'' என்று வெள்ளை அதிகாரி இறுதி எச்சரிக்கை விடுத்தான்.

''இறுதி எச்சரிக்கையைக் காட்டி மிரட்டாதே. நாங்கள் போராடத் தயாராக இருக்கிறோம். ஆனால் நாங்கள் தாக்கப்பட்டால் தான் திருப்பித் தாக்குவோம்? இல்லையென்றால் அமைதியாகவே செயல்படுவோம்'' என்று மாலுமிகள் பதிலளித்தார்கள். வெள்ளையர்களிடமிருந்து இதற்கு எந்தப் பதிலும் இல்லை.

சம்பவங்கள் ஏதுமின்றி சிலமணி நேரங்கள் நகர்ந்தன. காலை 10.30 மணிக்குத் தண்ணீர்மட்டம் இறங்கியவுடன் படகுக் கரை யிலிருந்து தாக்குதல் நடத்துவது வெள்ளைப் படைகளுக்குச் சுலபமாக இருந்தது. எந்திரதுப்பாக்கிகளையும் மோட்டார்களையும் பயன்படுத்திப் பல முனைகளிலிருந்தும் ''ஹிந்துஸ்தான்''மீது தாக்குதல் தொடுத்தார்கள் வெள்ளையர்கள்.

பாதகமான ஒரு நிலையிலிருந்துகொண்டு போராடும் நிலைமை நமது மாலுமிகளுக்கு ஏற்பட்டது என்றாலும் மன உறுதி தளராமல், உயிரைத் துச்சமாக மதித்துப் போராடினார்கள்.

இந்தத் துப்பாக்கிச் சண்டை முப்பது நிமிட நேரம் தொடர்ந்து நடைபெற்றது. வெடிகுண்டுகள் சீறிப் பாய்ந்தன. நமது வீரமாலுமிகள் ஆறு பேர் உயிர் இழந்தார்கள்; முப்பது பேர் படுகாயம் அடைந்தார்கள். நம்மைவிட எதிரி பலமடங்கு வலுவாக இருந்தான். தொடர்ந்து போராடுவது அசாத்யம் என்று பட்டது. மீதியுள்ள மாலுமிகளையும் கப்பலையும் காப்பாற்ற சரண் அடைவரைத் தவிர வேற வழியில்லை என்ற முடிவுக்கு நமது மாலுமிகள் வந்தார்கள். முழுமையான அழிவிலிருந்து தற்காத்துக் கொள்ள வேறு வழியேதும் தெரியவில்லை. அவர்களைக் காப்பாற்றவோ் அவர்களுக்கு உதவி செய்யவோ யார் இருக்கிறார்கள்?

சரணாகதி அடைகிறோம் என்று தெரிவிப்பதற்காக 18வயதான ஒரு இளம் மாலுமி வெள்ளைக் கொடியுடன் கப்பலின் மேல் தட்டுக்கு வந்தான். கொடியை உயர்த்திப் பிடித்தான். ஒரு நிமிஷம்; ஒரே நிமிஷம் வெடி ஓசை நின்றது. அடுத்த நிமிஷமே வெள்ளைக் காரர்களின் எந்திரத் துப்பாக்கிகள் அந்த பாலகன் மேலில் குண்டு மழை பொழியத் தொடங்கியது. உடல் சுக்கு நூறாய் சிதறுண்டு கொடியோடு விழுந்தான். அந்த வெண்கொடி செங்கொடியாக மாறியது.

''அடடா அடடா'' என்ற கொத்தாளிக் கவுண்டர், ''கும்பிட்ட கையெ வெட்டுனானே பாவி'' என்றார்.

''சமாதானக் கொடியைக் காட்ன பிறகும் சுட்டா எப்பிடி?'' என்று அன்னமய்யா கேட்டான்.

''அதுதான் வெள்ளைக்காரங்க நாகரீகம்!'' என்றார் மணி இகழ்ச்சியுடன்.

❖

கத்தியவார் துறைமுகத்திலிருந்த ''கத்தியவார்'' எனும் போர்க் கப்பலில் இருந்த மாலுமிகளுக்கு 21ம் தேதி சாய்ந்திரந்தான் தெரியும். நர்மதா கப்பிலிருந்து வந்த ஒரு வயர்லஸ் செய்தியைக் 'கத்தியவார்'

பற்றிக்கொண்டது. வயர்லஸ் இயக்குனர் உடனே அந்தச் செய்தியைக் கப்பலிலிருந்து தனது சகாக்களுக்குத் தெரியப் படுத்தினார். பம்பாயிலும் கராச்சியிலும் நம் மாலுமிகள்மீது வெள்ளையர் பட்டாளம் தொடுத்துள்ள தாக்குதல்பற்றி அறிந்ததும் அவர்கள் கொதிப்படைந்தார்கள். உடனே ஏதாவது செய்தாக வேண்டுமே என்று துடித்தார்கள். அன்றைக்கு ராத்திரியே ரகசியமாகக் கூடி யோசித்தார்கள். ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

அடுத்த நாள் காலையில் எல்லாம் சாதாரணமாக இருந்தது! கப்பலின் காப்டன் எந்த மாறுதலையும் காணவில்லை அவர்களிடம். எல்லாம் திருப்திகரமாக இருக்கிறது என்று நினைத்துக்கொண்டு ''நங்கூரத்தை நகர்த்துங்கள்; கப்பல் புறப்படட்டும்'' என்று உத்திரவிட்டான்.

கப்பல் புறக் கடலை அடைந்ததும் போராட்டம் தொடங்கியது! அந்தச் சமயம் அவர்களுக்குக் கராச்சி துறைமுகம் ஹிந்துஸ்தானி லிருந்து ஒரு செய்தி கிடைக்கிறது; ''எங்களுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கிறார்கள். நாங்கள் அடிபணியாமல், போராடுவது என்று முடிவு செய்திருக்கிறோம்''.

தங்கள் கராச்சித் தோழர்கள் நெருக்கடியான நிலையில் இருக்கிறார்கள் என்பதை இவர்கள் உணர்ந்துகொண்டார்கள், என்ன செய்ய என்று யோசித்துக்கொண்டிருக்கையில் ''போர் தொடங்கி விட்டது; நாங்கள் நெருக்கடியான நிலையில் இருக்கிறோம்'' என்கிற ஒலிபரப்புச் செய்தி வந்தது.

''கத்தியவார்'' தோழர்களின் கவலை அதிகரித்தது. கராச்சியில் தங்கள் தோழர்கள் தனிமையில் போராடுகிறார்கள். தனிமையில் போராடிக்கொண்டிருக்கும் ''ஹிந்துஸ்தான்'' தோழர்களுக்கு எப்படியும் உதவி செய்யவேண்டும். பம்பாய்த் தோழர்கள் எப்படியும் சமாளித்துக்கொள்வார்கள். அங்கே ஏராளமான கப்பல்கள் இருக்கின்றன. பரஸ்பரம் உதவிக் கொள்வார்கள். கராச்சியில் ஹிந்துஸ்தானை வெள்ளையர்கள் சுற்றி வளைத்துக் கொண்டு தாக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

உடனே கராச்சிக்கு விரைவது என்று கத்தியவார் மாலுமிகள் முடிவு எடுத்துவிட்டார்கள். தங்கள் முடிவைத் தெரிவிக்க காப்டனை அழைத்தார்கள். மாலுமிகள் இப்படிக் கூட்டமாகக் கூடி நிற்பதைக் கண்ட காப்டன் கொஞ்சம் அதிர்ச்சி அடைந்தான்!

இருந்தாலும் மனசுவிட்டுப் போகாதவன்போல சுதாரித்துக்கொண்டு ''பிள்ளைகளே என்ன விஷயம்?'' என்று புன்னகையோடு கேட்டான். மாலுமிகள் அணியிலிருந்து ஒருவன் முன்னோக்கி வந்தான். ''கப்பலை கராச்சிக்குக் கொண்டுசெல்ல வேண்டும்'', என்று சொல்லிவிட்டு, ''இது கோரிக்கை அல்ல; மாலுமிகளின் ஆணை'' என்றான்.

காப்டன் எல்லோரையும் முகந்திருப்பி ஒரு பார்வை பார்த்தான். உறுதியாகத் தலையைக் குலுக்கி ''நோ'' என்று கத்தினான். ''கப்பலைப் பம்பாய்க்குத்தான் கொண்டுசெல்ல வேண்டும், வழயில் உள்ள அனைத்துத் துறைமுகங்களிலும் நின்று நின்று போக வேண்டும் என்பதுதான் எனக்கு இடப்பட்டுள்ள உத்தரவு. அதை மீற முடியாது. நான் நிறைவேற்றி ஆகவேண்டும். உங்கள் சொல்லை நான் ஏற்கமுடியாது.''

''நாங்கள் கராச்சி செல்லவேண்டும். அங்கே எங்களுடைய தோழர்கள் செத்துக்கொண்டிருக்கிறார்கள்'' உரத்த குரலில் மாலுமிகள் கூவினர்.

கேப்டனுடைய மௌனம், அசையாத்தனம் மாலுமிகளுக்குக் கோபத்தை உண்டுபண்ணியது. உடனே அவர்கள் கப்பலில் பறந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் கொடியைக் கிழித்து கடலில் வீசி எறிந்தார்கள். ஆயுதக் கிடங்கில் புகுந்து ஆயுதங்களையும் வெடிகுண்டுகளையும் கைப்பற்றினார்கள். கத்தியவார் கப்பலை மாலுமிகள் கைவசப்படுத்திக்கொண்டு கேப்டனுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்தார்கள். ''கப்பலை கராச்சிக்கு ஓட்டு; இல்லை யென்றால் கப்பலின் பொறுப்பையே நாங்கள் ஏற்றுக்கொள்வோம்''

அசையவில்லை கேப்டன்! ''சரி; போ, உன் அறைக்குள். போய் முடங்கிக்கொள்'' என்று மாலுமிகள் உத்தரவிட்டனர். கேப்டன் மௌனமாகப் போய் தன் அறைக்குள் போய் தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டான்.

ஜுனாகத்தின் வீல்வார் துறைமுகத்தைப் பார்த்துப் போய்க் கொண்டிருந்த கத்தியவார், கராச்சியை நோக்கித் திரும்பியது.

எவ்வளவு வேகமாக கராச்சி போக முடியுமோ அவ்வளவு வேகமாகப் போகவேண்டும். கப்பல் அப்போது ஓடிக் கொண்டிருந்த வேகத்தில் போனால் கராச்சிப் போய்ச்சேர 26 மணி

நேரம் ஆகும்! 26 மணி நேரம் என்பது தாங்க முடியக்கூடிய நேரமில்லை. அவ்வளவு நேரம் வரைக்கும் ஹிந்துஸ்தான் தோழர்கள் உதவி இன்றித் தவிப்பதா? அவர்களால் தாக்குப் பிடிக்க முடியுமா. இல்லை இல்லை, சீக்கிரமே போக வேண்டும். ''கப்பலை முழுவேகத்தில் ஓட்டுக'' எஞ்சின் அறைக்கு உத்தரவு சென்றது. அரபிக் கடலின் அலைகளை முறித்துக்கொண்டு ''கத்தியவார்'' தாவித் தாவி ஓடியது. மணிக்கு 16 'கடல் மைல்' வேகத்தில் பாய்ந்து சென்றது. இந்த வேகத்தில் சென்றாலும் கராச்சியை போய்ச்சரே 16 மணி நேரம் ஆகும்.

கத்தியவாரிலிருந்து ஹிந்துஸ்தானுக்கு செய்தி பறந்தது. ''தோழர்களே தாக்குப் பிடித்து நில்லுங்கள். எங்களால் முடிந்த அளவு வேகத்தில் கராச்சியை நெருங்கிக்கொண்டிருக்கிறோம்.''

கப்பலோட்டும் பயிற்சியில்த் தேர்ந்த ஒருவர்தான் அவர்களுக்கு மத்தியில் இருந்தான். அதுவும் 16 மணிநேரம் தொடர்ந்து ஓட்டுவது என்பது முடியாது. கப்பலிலே இப்படி முழுவேகத்தில் ஓட்டுகிற போது வேலை கடுமையாக இருக்கும். ஆகவே அவர்கள் காப்டனைச் சந்தித்து, கப்பலை ஓட்டுவதற்கு ஒரு இந்திய அதிகாரியைத் தர வேண்டும் என்று கேட்டார்கள். அவன் தர மறுத்ததோடு. ''பம்பாய்க்குத் திரும்புங்கள். தயவு செய்து கராச்சி வேண்டாம்'' என்று உபதேசித்தான்.

அவன் நமக்கு உதவி செய்யமாட்டான் என்பதைத் தெரிந்து கொண்ட அந்தக் கப்பலோட்டி சொன்னான் ''கவலைப் படவேண்டாம்; நான் உங்களை கராச்சி சேர்க்கிறேன்; என் உயிரே போய்விட்டாலுஞ் சரி. அந்த வெக்கங்கெட்ட பொறுக்கிகளின் உதவி நமக்கு வேண்டாம்'' என்று இந்திய அதிகாரிகளை மனதில் நினைத்துச் சொன்னான்.

சாய்ந்தாடிக்கொண்டு கத்தியவார் கராச்சியைப் பார்த்து வேகமாய் போய்க்கொண்டிருந்தது. மாலுமிகள் உணர்ச்சியுடன் அடிக்கடி கோஷமிட்டார்கள். ஆவேச அலை மோதியது. 'கராச்சி சலோ கராச்சி சலோ', இதுவே தாரக மந்திரமாக இருந்தது.

இந்தச் சமயத்தில் ஹிந்துஸ்தானிலிருந்து அந்தச் செய்தி வந்தது. ''தோழர்களே, ஹிந்துஸ்தான் மாலுமிகளாகிய நாங்கள் சரண் அடைந்துவிட்டோம்''!!

இந்தச் செய்தி கத்தியவார் வீரர்களை நிலைகுலையச் செய்தது.

❖

# 40

நிழல் சரிய ஆரம்பித்ததும் ''அருகு வெட்டுத் தொண்டர் படை'' வீடுகளுக்குக் கிளம்ப ஆயத்தமானது. அவர்கள் மணியையும் தங்களோடு அழைத்துக்கொண்டு போனார்கள். அந்தப் புதிய மனிதருக்கு அந்த கிராமமும் மக்களும் அவர்களுடைய ரசனையும் பழக்க வழக்கங்களும் புதியவையாக இருந்தன. அந்தத் தீரவாசத்துக்காரனுக்குக் கமலைக் கிணற்றில் இறங்கிக் குளிப்பது புதிய அனுபவமாக இருந்தது. ஜவ்வரிசி போன்று உருண்டையான குதிரவாலி அரிசிச் சோற்றின் வித்தியாச மணமும் கும்பா நிறைய ரசமும் பருப்பும் கலந்த சோற்றை அவர்களைப் போலவே பிழிந்து பிழிந்து எடுத்துச் சாப்பிட்டுப் பார்த்தார்! ஊர் மடத்தில் அவர்களோடு ராத்திரிகளில் படுத்துக்கொண்டார். பகலில் அவர்கள் வேலைக்குப் போகும்போது பேச்சுத் துணைக்கு அவரையும் கூட்டிக்கொண்டு போனார்கள். கப்பல் படையில் தனக்கும் தன் சகாக்களுக்கும் நேர்ந்த அனுபவங்களையெல்லாம் அவர் அவர்களுக்குக் ''கதைகதை யாக''ச் சொன்னார்:

''கராச்சிக்கு இனிமேல்ப் போய் பிரயோஜனமில்லை; பம்பாய்க்குப் போவதுதான் சரி என்று பட்டது. ''கத்தியவார்'' பம்பாயைப் பார்த்துப் போனது.

23ம் தேதி - பிப்ரவரி - காலையில் கத்தியவார் கப்பல் பம்பாய்த் துறைமுகத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. 'எந்தக் கப்பலும் துறை முகத்துக்குள் வருவது தடை செய்யப்பட்டிருக்கிறது. க்ரூசர்களில் ராயல் நேவியைச் சேர்ந்த வெள்ளைப்படை ரோந்து சுற்றி வந்து கொண்டிருக்கிறது' என்கிற செய்தி சிக்னல் மூலம் தெரிவிக்கப்பட்டது.

என்ன ஆனாலும் சரி; துறைமுகத்துக்குள் நுழைவது என்று கத்தியவார் மாலுமிகள் தீர்மானித்தார்கள். ஒரு மோதலுக்குத் தங்களைத் தயார்ப்படுத்திக்கொண்டார்கள். ஆயுதங்கள் விநியோகிக்கப்பட்டன. எந்திரத்துப்பாக்கிகளுடன் கேந்திரமான இடங்களில் குறிபார்த்து நின்றுகொண்டார்கள். பீரங்கிகளை யெல்லாம் தயார் நிலையில் வைத்துக்கொண்டார்கள்.

இப்படியான ஒரு யுத்த சின்னத்துடன் கத்தியவார் கப்பல் துறைமுகத்துக்குள் நுழைந்துவிட்டது!

காலை 10.30 மணிக்கெல்லாம் பம்பாய்த் துறைமுகத்துக்குள் 'வெற்றிகரமாக' நுழைந்த கத்தியவார் கப்பல், துறைமுகத்துக்குள் நின்ற மற்ற போர்க்கப்பல்களில் பார்த்த காட்சி என்ன?! ராயல் இந்தியக் கடல் படையைச் சேர்ந்த அனைத்துக் கப்பல்களிலுமே கருப்புக்கொடியும் பிரிட்டிஷ் கொடியும் பறந்துகொண்டிருந்தன!!

என்ன நடந்தது; விவரம் என்ன என்று தெரியவில்லை இவர்களுக்கு.

❖

21ஆம் தேதி சாய்ந்திரம் பம்பாய் கப்பல்படையின் தீர எழுச்சியைக் கேள்விப்பட்டதிலிருந்து இந்த 23ஆம் தேதி காலை 10.30 மணிவரை கத்தியவார் வீரர்கள் உறுதியுடன் அளவற்ற ஆவேசத் துடன் செயல்பட்டார்கள். அவர்கள் துணிச்சல் இணையற்றது. பயமறியாத இளம்புலிகள்போல் செயல் பட்டார்கள். தங்களுக்குப் பின்னால் - தங்களைத் தொடர்ந்து - இந்த நாடே சுதந்திர ஆவேசத்தில் வெள்ளை சாம்ராஜ்யத்துக்கு எதிராகப் பொங்கி எழும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால்... ஆனால் - நடந்ததெல்லாம் வேற. அந்த 21ஆம் தேதி காலையில்...

பம்பாய்த் துறைமுகத்திலிருந்த மாலுமிகள், அவர்களுடைய பணிகளைச் செய்துகொண்டிருந்த நேரத்தில் திடீரென்று, கூச்சலும் குழப்பமும் கேட்ட அதே நேரத்தில் எந்திரத் துப்பாக்கிகள் குண்டுமாரி பொழியும் ஓசையும் கேட்டது.

காசின் பாரக்ஸ் மாடிக்கட்டிடத்திலிருந்து நம்முடைய இளைஞன் ஒருவன் சிக்னல் தருகிறான்: ''தோழர்களே, நம்மை வெள்ளையர்கள் நாலாபக்கமும் சுற்றி வளைத்துக்கொண்டு தாக்குகிறார்கள்''

''வெடிகுண்டுகளுக்கு வெடிகுண்டுகளாலேயே பதில்ச் சொல்லுங்கள்'' என்று எல்லாக் கப்பல்களுக்கும் கப்பல்ப்படை நிறுவனங்களுக்கும் சிக்னல் தரப்பட்டது. நிலைமையை மாலுமிகள் புரிந்துகொண்டனர். ஆயுதக் கிடங்கின் கதவுகளை உடைத்து ஆயுதங்களைக் கைப்பற்றிக்கொண்டார்கள்.

மர்மமான இடங்களிலெல்லாம் குறிவைத்துக்கொண்டு தயாராக நின்றார்கள்.

பிரிட்டிஷ் பட்டாளம் கோட்டை வட்டத்தைப் பார்த்து வந்து கொண்டிருந்தது. காசின் பாரக்ஸ் மாலுமிகளை ஆக்கிரமிப்பது

அவர்கள் நோக்கம். குறியான இடங்களைச் தேர்ந்தெடுத்தனர். டவுன்ஹாலில் படைகள் நிரம்பிக்கொண்டிருந்தன. பீரங்கிகேட் வழியாக ஆக்கிரமிப்பைத் தொடங்கத் திட்டமிடுகின்றனர். திடீரென்று மெயின்கேட்டில் வெடிச்சத்தம் கேட்டது. பிரிட்டிஷ் படைகள் மெயின்கேட் வழியாகவே தங்கள் முதல் ஆக்கிரமிப்பைத் தொடங்கினார்கள்.

தயார்நிலையில் இருந்த இந்திய மாலுமிகள் வெள்ளைப் படைகளைத் திருப்பித் தாக்கினார்கள். வெள்ளைப்படை பாரக்ஸுக்குள் நுழைவதைத் தடுக்கவேண்டும். இந்தியப் படை சுட்டதும் வெள்ளைப்படை தற்காலிகமாகப் பின்வாங்கியது. அடுத்த அவர்களது ஆக்கிரமிப்பைச் சந்திக்க நமது மாலுமிகள் வேகமாகத் தயாரிப்புகளைச் செய்தார்கள். கைத்துப்பாக்கி, குழல்துப்பாக்கி, எந்திரத்துப்பாக்கி, கை வெடிகுண்டு, இப்படி எல்லா மாலுமிகளிடமும் விநியோகிக்கப்பட்டன. அங்கேயுள்ள சிறைக்கதவுகளையெல்லாம் உடைத்துக் கைதிகளையெல்லாம் விடுவித்தார்கள். அவர்களும் இவர்களோடு சேர்ந்துகொண்டார்கள்.

எதிர்த்தாக்குதலுக்கு இப்போது காசின் பாரக்ஸ் தயாராகி விட்டது. தங்களை நோக்கித் தாக்குதல் பல முனைகளிலிருந்தும் வரலாம் என எதிர்பார்த்து நமது மாலுமிகள் தங்களைப் பல பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டனர். எதிர்த்தாக்குதலுக்கான தயார் நிலையில் வியூகம் அமைத்து நின்றார்கள்.

மாலுமிகளைத் தாக்க வெள்ளைப்படை நிறுத்தப்பட்ட இடத்தில் இப்போது மராத்திப் படைகள் வந்து நின்றன. இந்தியர்களைக் கொண்டே இந்தியர்களைக் கொல்ல ஏற்பாடு!

வந்திருந்த மராத்திப் படை வீரர்களுடன் ரகசியமாக நமது வீரர்கள் தொடர்பு கொண்டார்கள். ''இந்தியர்கள் நாம் இந்தியாவுக்காகப் போராடுகிறோம். இது நமது அனைவருக்கான போராட்டம். சகோதரர்களே நீங்கள் எங்களுக்கு உதவவேண்டும்.'' என்று கேட்டதும், ''நாங்கள் உங்களைச் சுடமாட்டோம்'' என்று அவர்கள் பதில் தந்தார்கள். மாலுமிகளின் உற்சாகம் கரை புரண்டோடியது.

இதைக் கவனித்துவிட்ட வெள்ளையரின் கண்கள், உடனே அந்த இடத்திலிருந்து மராத்திப் படைகளை வாபஸ் பெற்றது. முழுக்க வெள்ளைப் படையாகவே கொண்டு வந்து நிறுத்தியது. பாரக்ஸுக்கு அருகாமையிலிருந்த ரிசர்வ் பாங்க் கட்டிடத்தின்

மாடியிலிருந்துகொண்டு ஒரு வெள்ளை அதிகாரி உத்தரவுகள் தந்துகொண்டிருந்தான். போர் துவங்கிவிட்டது!

பிரஸாத் என்ற இந்திய மாலுமியின் குறிதவறாத குண்டு அந்த வெள்ளை அதிகாரியைப் பலிவாங்கியது. பிரஸாத் குறிதவறாமல் சுடுவதில் சமர்த்தன். அவனுடைய ரண்டாவது குண்டு அதே கட்டிடத்தின் இன்னொரு மூலையிலிருந்த ஒரு வெள்ளைப் பட்டாளத்துக்காரனை வீழ்த்தியது. ஒரு மரத்தின்மீது ஏறி பாரக்ஸின் மேல்மாடியில் தாவ முயன்ற ஒரு வெள்ளைச் சிப்பாயையும் பிரஸாத் குறிதவறாமல் சுட்டு வீழ்த்தினான்.

வெடிகுண்டுகள் இருபக்கமும் சீறிப் பாய்ந்தவண்ணமாக இருந்தன. இந்திய மாலுமிகளை ஒடுக்குவது லேசான காரிய மில்லை என்று உணர்ந்துகொண்ட வெள்ளையர்கள், மேலும் அதிக சக்தியுடன் தீவிரத் தாக்குதலுக்குத் தயாரானார்கள்.

பீரங்கி கேட்டுக்கு வெளியே வெள்ளைப் படையின் நடமாட் டத்தை நோட்டம் பார்க்க கிருஷ்ணன் என்ற மாலுமி நம்மவர்களால் அனுப்பப்பட்டிருந்தார். வெள்ளையர்களின் நடமாட்டங்களைக் கவனித்த கிருஷ்ணனை நோக்கி ஒரு வெள்ளைச் சிப்பாய் குறி வைத்தான். கிருஷ்ணன் அதிசாமர்த்தியமாக அவன் சுட்ட குண்டிலிருந்து உயிர் தப்பினார். தனக்கு இனி ஆபத்துதான் என்பதை தெரிந்துகொண்டும் தன் கடமையிலிருந்து நழுவாமல் மேலும் அவர்களுடைய நடமாட்டங்களையும் தயாரிப்புகளையும் கண்காணித்தார். ரண்டாவது முறை சுட்ட வெள்ளையனின் குண்டி லிருந்து கிருஷ்ணனால் தப்ப முடியவில்லை.

குண்டடிபட்டு விழுந்த கிருஷ்ணனைக் காப்பாற்றவேண்டும் என்கிற ஆவலில் சக மாலுமிகள், தங்கள் உயிரையும் பொருட் படுத்தாமல் அவரை ஆஸ்பத்ரிக்கு எடுத்துப்போனார்கள். உடலைத் துளைத்த குண்டை டாக்டர்கள் அப்புறப்படுத்தியும் கிருஷ்ணனைக் காப்பாற்ற முடியவில்லை. கேரளத்தைச் சேர்ந்த கிருஷ்ணன், எங்கோ பிறந்து வளர்ந்து, தாய் தந்தை சகோதரரைத் துறந்து பம்பாய் வந்து, தேச விடுதலைப் போராட்டத்தின் பிரதான பகுதியான கப்பல்படைப் போரில் களபலி ஆனார். அவர் கடைசியாகச் சொன்ன வார்த்தை ''தோழர்களே. தொடர்ந்து போராடுங்கள்''

வெள்ளைப் பட்டாளம் ரண்டாவது அலை ஆக்கிரமிப்பைத் தொடங்கியது. நவீன எந்திர துப்பாக்கிகளால் சுட்டுக்கொண்டே

காசின் பாரக்ஸுக்குள் நுழைய முயன்றனர். நம்முடைய மாலுமிகளின் நிலைமை சிரமந்தான். நம்மைவிட உயர்தரமுள்ள நவீன ஆயுதங்களைக் கொண்ட எதிரியை நாம் போரில் சந்திக்கிறோம். வீரத்துக்கு முன்னால் சாவு துச்சம். ஒன்று, எதிரியைக் கொல்வது; அல்லது நாம் மடிவது. நம்முன் இருந்தது இதுதான்.

கொஞ்ச நேரத்தில் வெள்ளையரின் எந்திரத் துப்பாக்கியின் ஓசை நின்றது. அவற்றை இயக்கிய வெள்ளைச் சிப்பாய்களும் செத்து விழுந்து கிடந்தனர்! இப்படியாக அவர்களுடைய ரண்டாவது ஆக்கிரமிப்பும் முறியடிக்கப்பட்டது.

எதிரிகள் நம்மீது மூன்றாவது தாக்குதலை ஆரம்பித்தார்கள். இந்த முறை மிக அதிக சக்தியோடு, பலமுனைத் தாக்குதலாக மின்னல் வேகத்துடன் - நம்மை, யோசித்து ஒரு நிதானத்துக்கு வர முடியாதபடி - தாக்கினார்கள், காசின் பாரக்ஸுக்கு எதிராகவே அவர்களது பிரதான தாக்குதல்; எம்.டி.இ. பாரக்ஸையும் தாக்கி இரண்டுக்கும் இடையிலுள்ள இடத்தைக் கைப்பற்றினார்கள். துறைமுகத்திலிருந்த கப்பல்கள் பேரிலும் தாக்குதல்கள் தொடுத்தார்கள். ஒரு ஜீவமரணம் போராட்டம்!

போராட்டக் குழுவின் தலைவர் கான், இந்திய கப்பல்ப் படை அதிகாரிகளுக்கு என்று பிரத்யேகமான ஒரு வேண்டுகோள் விடுத்தார். ''இந்த ஜீவ - மரணப் போராட்டத்தில் எங்களுடன் சேர்ந்துகொள்ளும்படி உங்கள் அனைவரையும் அழைக்கிறோம். நம்முடைய பொது எதிரியான வெள்ளையர்களுக்கு எதிரான போராட்டத்தில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். ஏதாவது காரணங்களால் நீங்கள் எங்களுடன் சேர முடியாவிட்டால் கப்பல்களிலிருந்து வெளியேறி உங்கள் வெள்ளை எஜமானர்களுடன் போய் விடுவது தான் உங்களுக்கு நல்லது''

கானின் இந்தச் செய்தி H.I.M.S. ஜமுனா போர்க் கப்பலுக்கு சிக்னல் மூலம் அனுப்பப்பட்டு, ஜமுனாவிலிருந்து அனைத்துப் போர்க் கப்பல்களுக்கும் கடல்ப்படை நிலையங்களுக்கும் அனுப்பப்பட்டது.

துறைமுகப்பகுதி முழுவதும் மிகப் பரபரப்பான நிலை தோன்றிவிட்டது. துப்பாக்கிகளில் வெடிகுண்டுகள் நிரப்பப் பட்டன. கப்பல் எஞ்சின்கள் அசையத் தொடங்கின. புகைச்சுருள்கள் வானை நோக்கி உயர்ந்தன. சொல்லி வைத்ததுபோல போர்க் கப்பல்கள் அனைத்துமே ஒன்றுபோல சைரன்கள் மூலம் ''கோரஸ்''

ஒலி எழுப்பிப் புல்லரிக்க வைத்தன. அவை பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்துக்கு ஊதிய மரணச் சங்குகள்.

''பஞ்சாப்'' போர்க் கப்பலில் இருந்த நமது மாலுமிகளுக்கு ஒரு குறை இருந்தது. தேவையான அளவு ஆயுதங்கள் அவர்களிடம் இல்லை. அந்தக் குறையை அவர்கள் உடனே தீர்த்துக் கொண்டார்கள்! ராயல் நேவியின் வெள்ளையர் போர்க்கப்பல் ஒன்றை ஆக்கிரமித்து அதிலிருந்த ஆயுதங்கள் அனைத்தையும் கைப்பற்றிக் கொண்டார்கள் அந்த பஞ்சாப் வீரர்கள்!

கைப்பற்றிய உடனேயே ''பஞ்சாப்பும்'' அதன் மாலுமிகளும் காசின் பாரக்ஸ் தோழர்களுக்கு உதவிடப் பாய்ந்து சென்றார்கள். கைப்பற்றப்பட்ட கனரக எந்திரத் துப்பாக்கிகளின் குண்டுகள் காசின் பாரக்ஸை ஆக்கிரமித்த வெள்ளைப்படைகளின்மீது கோபத்தோடு நெருப்பு மழையாகவே பொழிந்தது.

பம்பாய்த் துறைமுகம் முழுவதும் போர்க்களமாக மாறிவிட்டது. ''செர்லிகான்'' ''சவுத்'' ஆகிய போர்க்கப்பல்கள் வெள்ளைப் படைகளுக்கு எதிராக 12 பௌண்டர் துப்பாக்கிகளைத் திருப்பிக் குண்டுமழை பெய்வித்தனர். வெள்ளைப் படைகள் வெறிகொண்டு தாக்கின. என்றாலும் அவர்களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. சிறிது சிறிதாகப் பின்வாங்கினார்கள்.

காசின் பாரக்ஸுக்கு எதிரான பிரிட்டிஷ் பட்டாளத்தின் ஆக்கிரமிப்பை, கரையிலும் கடலிலிருந்தும் மாலுமிகள் ஒன்றுபட்டு எதிர்த்ததினால் வெள்ளைப்படை தற்காலிகமாகப் பின்வாங்கியது.

காசின் பாரக்ஸ் மாலுமிகளுக்கு எதிராக பிரிட்டிஷ் வெள்ளைப் படைகள் தாக்குதல் தொடுத்த செய்தி பம்பாய் நகரத்துக்குள் காட்டுத் தீபோல் பரவிவிட்டது. அந்நிய ஆதிக்க எதிர்ப்பு உணர்வு அலை மோதியது மக்களிடம். பிரிட்டிஷ் இந்தியப் படையிலிருந்த இளைஞர்கள் கொதித்து எழுந்தார்கள். உடனே ராயல் இந்திய விமானப் படையினர் தங்கள் இருக்கையை விட்டு வெளியே வந்து தெருக்களில் அணி வகுத்தார்கள். இந்திய மாலுமிகளை வெள்ளையர்கள் தாக்குகிறார்கள் என்கிற செய்தியை அவர்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

விமானப்படைச் செய்தியாளர் பாலகிருஷ்ணன் மோட்டார் சைக்கிளில் வாயு வேகமாக விமானப்படை முகாமுக்குப் 'பறந்து' வந்தார். வந்த வேகத்தாலும் ஆத்திரத்தாலும் அவரால் பேச முடியவில்லை. அவ்வளவு உணர்ச்சிவசப்பட்டிருந்தார். ''கொல்கிறார்கள்; நம்மைக் கொல்கிறார்கள்'' என்றுதான் சொல்ல முடிந்தது.

''எங்கே? யார்; யார்?'' என்று ஏக காலத்தில் கேட்டபோது. காசின் பாரக்ஸ் பக்கம் கையைக் காட்டினார். ''அவர்கள் நமது தோழர்களை... அந்த வெள்ளையர்கள் நம்மவர்களை எந்திரத் துப்பாக்கிகளால் சுட்டுக்கொன்று கொண்டிருக்கிறார்கள்'' என்று பாலகிருஷ்ணன் கதறினார்.

செய்தி தெரிந்துகொண்ட விமானப் படை இளைஞர்களின் ரத்தம் சூடேறியது. அதில் ஒரு சீக்கிய இளைஞன் காது ஜவ்வு கிழிபடக் கூவினான் ''பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் அடியோடு ஒழிக'' ''வெள்ளையனே வெளியேறு''.

❖

# 41

வரலாற்றுப் புகழ்பெற்ற விமானப்படை ஊர்வலம் ஆரம்ப மாகியது. கப்பல்படை வீரர்களின் போராட்டத்துக்கு ஆதரவாக தெருவில் இறங்கிய முதல்ப்படைப் பகுதி இந்திய விமானப் படையினர் என்பது குறிப்பிடத்தகுந்தது.

கராச்சியில் கூர்க்கா பாராசூட் படையினர், ''ஹிந்துஸ்தான்'' மாலுமிகளைச் சுட மறுத்தனர்.

காசின் மாலுமிகளை மராட்டாப்படை வீரர்கள் சுட மறுத்தனர்.

இப்போது விமானப்படை வீரர்களும் கப்பல்படை வீரர்களுக்கு ஆதரவாக அணிவகுத்துத் 'தெரு'வுக்கு வந்துவிட்டார்கள்

❖

கப்பல்படை வீரர்களின் போராட்டத்தை ஒடுக்க பிரிட்டிஷ் அரசுக்குத் தெரிந்த ஒரே ஒரு போர்த்தந்திரம் அவர்களிடம் இருந்தது. போர்க் கப்பல்களிலும் கப்பல்படை நிலையங்களிலும் உணவுப் பொருள் கையிருப்பு மிகக் கொஞ்சமே இருந்தது. இதைப் பயன் படுத்தி அவர்களைப் பட்டினிபோட்டு பணியவைக்கலாம் என்று பிரிட்டிஷ் அரசு தீர்மானித்தது. இந்த அவர்கள் எண்ணத்திலும் மண்விழுந்தது!

உணவில்லாமல் மாலுமிகள் தவிக்கிறார்கள் என்று கேள்விப் பட்ட பம்பாய் பொது ஜனங்கள் - தொழிலாளிகள், மாணவர்கள் - அவர்களுக்காக வீடுவீடாகச் சென்று உணவு சேகரித்தார்கள். தங்கள் குழந்தைகளுக்கு என்று வைத்திருந்த சப்பாத்தியையும் தூக்கிக் கொடுத்த தாய்மார்களும் அங்கே இருந்தார்கள்.

வசூலித்த உணவை எப்படிக் கொண்டுபோய் கப்பலில் இருக்கும் மாலுமிகளுக்குத் தருவது? மீன்பிடித் தொழிலாளர்கள் தங்கள் படகுகளில் கொண்டுபோய் அவர்களுக்கு அதைச் சேர்ப்பித்தார்கள்.

இதை மணி சொல்லியதும் சாமிநாயக்கரும் கொத்தாளிக் கவுண்டரும் மற்றவர்களும் ''ஆஹ ஆஹா'' என்று பாராட்டினார்கள். சொல்லிவிட்டு, அப்புறம் என்ன நடந்தது என்பதுபோல் மணியைப் பார்த்தார்கள்.

இப்படியாக, கப்பல்படை வீரர்களைப் பட்டினி போட்டும் பணியவைக்க முடியாது என்று கண்டுகொண்டது வெள்ளை அரசு. லண்டன் மாத்திரமல்ல உலகமெல்லாம் இதை - இந்த ராணுவப் புரட்சியை - என்ன நடக்குமோ என்று இமைக்காமல் கவனித்துக் கொண்டே இருந்தது.

கடேசியில் பிரிட்டிஷ் அரசு மண்டியிட்டது!

யாரிடம்?

இந்தியக் கப்பல்படை வீரர்களிடம் அல்ல; நமது தேசியத் தலைவர்களிடம்.

❖

''மாலுமிகள் உடனடியாக சரண் அடையவேண்டும். இல்லாவிட்டால் அரசின் அனைத்துச் சக்திகளையும் ஒருங்கே திரட்டிப் பயன்படுத்தி ஒடுக்கப்படுவார்கள்''

வெள்ளை அரசு பகிரங்கமாக அறிவித்தது. பம்பாயை நோக்கி வெள்ளைப்படைகள் மேலும் மேலும் வந்துகொண்டிருப்பதாக பத்திரிகைச் செய்திகள் கூறின.

மாலுமிகளின் போராட்டக்குழு கீழ்க்கண்ட அறிக்கையை இந்திய மக்களுக்கும் நமது தலைவர்களுக்கும் பகிரங்கப்படுத்தியது.

''பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அனைத்து சக்திகளையும் பயன்படுத்தி எங்களை நசுக்கிவிடுவதாக பயமுறுத்தியிருக்கிறது. அவர்கள்

அப்படிச் செய்வார்கள் என்பதிலும் எங்களுக்குச் சந்தேகமில்லை. ஆனால் அவர்களிடம் நாங்கள் வெட்கம்கெட்ட சரணாகதிக்குத் தயாரில்லை.

''எங்களைக் காப்பாற்றும் சக்தி நமது மக்களுக்கும் நமது தலைவர்களுக்குமே உண்டு என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.''

''எங்கள் போராட்டம் நியாயமானது, நேர்மையானது. காங்கிரஸ், முஸ்லீம்லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளின் தலைவர்களுக்கு நாங்கள் விடும் விண்ணப்பம் இதுதான்; பம்பாய் நகரம் ரத்த வெள்ளத்தில் மூழ்காமலிருக்க உங்கள் மகத்தான சக்திகளைப் பயன்படுத்தவேண்டும். கப்பல்படை அதிகாரிகளைக் கட்டாயப் படுத்தித் துப்பாக்கிப் பிரயோகங்களை நிறுத்தவேண்டும்.

''அமைதியான முறையில் அர்த்தாலும் வேலைநிறுத்தமும் செய்து எங்களுக்கு ஆதரவு தெரிவிக்கவேண்டும் என்று கோருகிறோம். எங்களுடைய சகோதரர்களும் சகோதரிகளும் எங்களை ஆதரிக்க வேண்டுகிறோம்.

''உங்கள் பதிலுக்காக நாங்கள் காத்துக்கொண்டிருக்கிறோம்''

மாலுமிகளின் கோரிக்கையை காங்கிரஸும் முஸ்லீம்லீக்கும் ஆதரிக்கவில்லை. அர்த்தால் செய்யவேண்டும் என்ற அவர் களுடைய அறைகூவலை பண்டித நேரு பலமாக ஆட்சேபித்தார்.

பத்திரிகையாளர் கூட்டத்தில் பண்டிதநேரு பேசினார்.

அவர்களுடைய கேள்விக்குப் பதில் அளிக்கையில், ''ராயல் இந்திய கப்பல்படைப் போராட்டக் குழுவிற்கு அர்த்தால் செய்யச் சொல்லவும் வேலை நிறுத்தத்துக்கு அறைகூவல் விடுக்கவும் எந்த உரிமையும் இல்லை'' என்றார்.

மற்றொரு கேள்விக்குப் பதில் அளிக்கும்போது. ''அவர்களுக்கு மக்களின் ஆதரவு அமோகமாக இருந்தது என்பதை நாம் ஒப்புக்கொள்கிறோம்'' என்றார்.

சர்தார் வல்லபாய் படேல் மாலுமிகளின் வேலைநிறுத்த அறைகூவலைக் கண்டனம் செய்து ஒரு அறிக்கை வெளியிட்டார். காங்கிரஸ் கட்சியின் தலைவர் மௌலானா அபுல்கலாம் ஆஸாத்தும் கண்டித்தார்.

ஆனாலும் தலைவர்களின் எதிர்ப்பையெல்லாம் மீறி பம்பாய் நகரம் மாலுமிகளின் போராட்டத்துக்கு ஆதரவாகத் திரண்டது.

மாணவர்கள் பள்ளியைவிட்டு வெளியேறினார்கள். பம்பாய் நகரத்தின் மூன்றுலட்சம் தொழிலாளிகள் கட்டுப்பாடாக அமைதியாக வேலைநிறுத்தம் செய்தார்கள்.

கோட்டைப் பகுதியில் அமைதியாக நடந்துகொண்டு வந்த தொழிலாளர்களின் ஊர்வலத்தின்மீது குறுக்கே - வேண்டுமென்றே - ஒரு பிரிட்டிஷ் ராணுவ லாரி ஓட்டப்பட்டு லாரியடியில் ரண்டு தொழிலாளிகள் நசுங்கிச் செத்தார்கள்.

இதுவே மோதலின் துவக்கமாக அமைந்தது. லாரியடியில் சிக்கிய மற்ற தொழிலாளிகளைக் காப்பாற்ற தொழிலாளிகள் பாய்ந்து சென்றார்கள். அந்தத் தொழிலாளர்களை விரட்ட போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில் அந்த இடத்திலேயே மேலும் ரண்டு தொழிலாளிகள் குண்டடிபட்டு இறந்தார்கள்.

கட்டுக்கு அடங்கா நிலைமை உருவாகிவிட்டது. கோபம் அடைந்த தொழிலாளர்கள், பிரிட்டிஷ் ராணுவ லாரிகள் இரண்டைச் சுற்றி வளைத்துத் தீயிட்டார்கள். விரைந்து வந்த பிரிட்டிஷ் படைகள் தொழிலாளர்மீது சரமாரியாகச் சுட்டார்கள். தெருவீதிகளில் தடைகள் ஏற்படுத்திக்கொண்ட தொழிலாளர்கள் கையில் கிடைத்த வற்றைக் கொண்டு பின்வாங்காமல் போராடினார்கள்.

இதே நேரத்தில், பம்பாய் நகரின் பல்வேறு பகுதிகளிலும் இதேபோல் போர்கள் நடந்துகொண்டிருந்தன. வெலஸ்லி சாலையில் 150 ஆயுதப் போலீசாருக்கும் தொழிலாளர்களுக்கும் மூன்றரை மணிநேரம் இடைவிடாத சண்டை நடந்து அடக்க முடியாமல் ராணுவம் வந்தது. ராணுவத்துடனும் தடைகள் ஏற்படுத்திக்கொண்டு தொழிலாளர்கள் போராடினார்கள். அவர் களுக்கு ஈடுகொடுக்க ஆயுதங்கள் இல்லாததால் தொழிலாளர்கள் கடைசியில் சாலைத் தடைகளை விட்டுக்கொடுத்துப் பின் வாங்கினார்கள்.

பம்பாய் நகர வீதிகள் எங்கும் பிரிட்டிஷ் ராணுவ லாரிகள் சீறிப்பாய்ந்துகொண்டு ஓடின. அவைகளிலிருந்த வெள்ளைச் சிப்பாய்கள் கண்ணெதிரில் தட்டுப்பட்டவர்களையெல்லாம் சுட்டுக்கொண்டே போனார்கள்; ஒரு விளயாட்டைப்போல. அன்று மட்டும் 270 பேர் - இந்தியர்கள் - மாண்டதாகக் கணக்கு வந்தது.

கப்பல் படை வீரர்களின் போராட்டத்துக்கு ஆதரவாக நாடு முழுவதும் மக்கள் கோபாவேசமாய்க் கொதித்து எழுந்தார்கள்.

எல்லா முக்கிய நகரங்களிலும் ஆர்ப்பாட்டம் ஊர்வலங்கள் நடந்தன. சென்னையில் இருந்த H.M.I.S. ''அடையார்'' கப்பல் மாலுமிகள் சென்னை மக்களோடு ஊர்வலத்தில் வந்து கலந்துகொண்டார்கள். கண்ணுக்குத் தட்டுப்படுகிற வெள்ளையர்களை இவர்கள் விரட்டினார்கள். பிரிட்டிஷ் கொடிகளை இறக்கிக் கிழித்தனர். அன்று சென்னையில் நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் இருவர் மரணம் அடைந்தார்கள். பலர் காயமடைந்தார்கள்.

கராச்சியில் நடந்த அர்த்தாலைக் குறிப்பிட்டுச் சொல்ல வேணும். வெள்ளை அரசு பிறப்பித்திருந்த தடை உத்தரவையும் மீறி மக்கள் பல்லாயிரக்கணக்கில் இதிஹாத் மைதானத்தில் கூடினார்கள். தெருக்களில் கூடிய மக்களைக் கலைக்கக் கண்ணீர்க் குண்டுகள் வீசியபோது, கண்ணீர்ப் புகையைப் பயனற்றதாகச் செய்ய மாடிகளிலிருந்து பெண்கள் தண்ணீர் ஊற்றியது அரிய காட்சியாக இருந்தது! கடைசியில் அங்கே எட்டுப் பேரை துப்பாக்கிப் பிரயோகத்தில் கொன்றுதான் கூட்டத்தைக் கலைக்க முடிந்தது. பலர் படுகாயம் அடைந்தார்கள்.

பம்பாய் தெருக்களில் இரண்டு நாட்கள் வெள்ளை அரசின் ராணுவத்தோடு மக்கள் போராடியதில் மட்டும் மொத்தம் 300 பேர்கள் மாண்டார்கள். இந்திய நாட்டின் வரலாற்றில், பிரிட்டிஷ் படைகளுடன் மக்கள் போராடியதும் அதில் இந்திய ராணுவவீரர் களும் தொழிலாளர்கள், மாணவர்கள் என்று இணைந்து வெள்ளை ராணுவத்தை எதிர்த்து போராடியதும் வரலாற்று முக்கியம் வாய்ந்த நிகழ்ச்சி. இதுவரை நடந்தவற்றிற்கு இது முற்றிலும் மாறுபட்டது. இது எதிரிக்கும் புரிந்தது; நம்மவர்களுக்கும் புரிந்தது. இதனால் நிலைமைகள் வேகமாக மாறத் தொடங்கின.

''இப்பொ இங்கே ரண்டு விசயங்களைக் கவனிக்க வேணும்'' என்றார் மணி.

ஒண்ணு:

இந்திய ராணுவத்தை நம்பி இனி இந்தியாவை அரசாள முடியாது என்று பிரிட்டிஷார் கண்டுகொண்டது.

ரண்டு.

தேசியத் தலைவர்கள் என்று கருதப்பட்டு வந்த மாபெரும் தலைவர்கள், அர்த்தால் வேண்டாம் என்று சொல்லித் தடுத்தும்கூட தேசம் பூராவும் மக்கள் பொங்கி எழுந்து ஆவேசமாகக் கப்பல்

படைவீரர்களின் போராட்டத்துக்கு ஆதரவாக ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தியது.

வெள்ளைக்காரனுக்கு எப்படி இந்த நாட்டை இனி ஆளமுடியாது என்கிற பயம் வந்ததோ, அதேபோல் நம்முடைய தேசியத் தலைவர்களுக்கும் இந்த மக்கள் இனி நம்முடைய கட்டுப்பாட்டில் இருப்பார்களா என்கிற யோசனையும் பயமும் வந்தது என்பதுவும் வாஸ்தவம்.

❖

## 42

இந்தியாவுக்கு சுய ஆட்சி தரப் போவதாக பிரிட்டன் பகிரங்கமாகவே - ''வாயைத் தொறந்து'' - சொல்லிவிட்டது. தேதி கூட அறிவித்தாகிவிட்டது!

ரொம்பப் பேர் இதை நம்பவில்லை!! வெள்ளைக்காரனோட ''ட்ரிக்'' இது, என்றார்கள் கோபல்லபுரத்துப் பெரியாட்கள். அவனுடைய இங்கிலீஸ் வார்த்தைகளையெல்லாம் இவர்கள் சாதாரணமாகப் பேச்சில் உபயோகித்ததால் அவனுடைய எண்ணங்களும் அத்துபடி என்பதுபோல்ப் பேசினார்கள்.

பேப்பர் படிக்காத ஆட்களும் பேப்பர் படிக்க ஆரம்பித்ததும், பேப்பர் படித்துக் கேட்காத ஆட்களும் நின்று கேட்க ஆரம்பித்ததும், கிராமத்தில் நேர்ந்த வித்தியாசமான காட்சி. நேத்து வரைக்கும் 'வெள்ளைத்துதி' பாடிக்கொண்டிருந்த நுன்ன கொண்டப் பெரியவர் இன்று சடாரென்று காங்கிரஸ் துதிபாட ஆரம்பித்தது கஸ்தூரி யாலேயே நம்பமுடியவில்லை!

நுன்னகொண்ட நாயக்கர் வீட்டுத் தாழ்வாரத்திலும் ஊர் மடத்திலும் கம்மாய்க் கரை மரத்துநிழல் அடியிலும் காடுகளில் ''அருகுவெட்டித் தொண்டர் படை'' கருவமரத்து நிழலில் கஞ்சி குடிக்க உட்காரும்போதும் இந்த அரசியல் சமாச்சாரங்கள் காரசாரமாகப் பேசப்பட்டன.

இந்தச்சமயத்தில் இங்கே மணி என்று அழைக்கப்படும் தேசாந்திரி வந்து சேர்ந்தது தற்செயலான ஒரு விஷயம் என்றாலும்

கோபல்லபுரத்து இளவட்டங்களிடம் அது பெரிய பாதிப்பை ஏற்படுத்தியிருந்தது.

பம்பாயில் கப்பல்படை மாலுமியாக இருந்து அந்தப் போராட்டங்களிலெல்லாம் பங்குகொண்ட அவர் அரசியல்த் தெளிவும் கொண்டவராக இருந்தார். இங்கே தங்கியிருந்த அத்தனை நாட்களிலும் அவரைச் சுற்றி இருந்த வாலிபக் கூட்டங்களுக்கும் மற்றவர்களுக்கும் பல தேசிய சர்வதேச அரசியல் விவகாரங்களைப் பள்ளிப் பிள்ளைகளுக்கு வகுப்பு எடுப்பதுபோல் விவரித்துச் சொன்னார்.

1947 ஆகஸ்ட் 15 நெருங்க நெருங்க கிராமம் பரபரப்பும் முனைப்பும் கொண்டது. முதல் சுதந்திர தினத்தை எப்படிக் கொண்டாடுவது என்பதைத் தனித்தனியாக விவாதித்தது.

ஊருக்குப் புறப்பட்ட மணியை இருந்து போகலாம் என்று வற்புறுத்தியதின் பேரில் சம்மதித்தார். சொல்லப் போனால் அவருக்குத் தான் பிறந்த ஊரைவிட பம்பாயும் பம்பாய் நிகழ்ச்சி களுமே கண்ணுக்கு முன்னால் வந்து நின்றன. அவருக்கு இந்த 'சுதந்திர'த்தில் மகிழ்ச்சியில்லை. நாடு ரண்டாக உடைந்ததும் மதங்களின் பெயரால் மக்கள் ஒருவரை ஒருவர் கொன்று குவித்ததும் பெண்டுகளை மானபங்கப் படுத்தியதும், பச்சைக் குழந்தைகளைத் திரிசூலத்தில் குத்தி ஏந்திக்கொண்டு வெறி ஊர்வலம் வந்த மிருக மனிதர்களைப் பற்றி எண்ணி மனது பதைத்தது.

'போராட்டத்தை வாபஸ் வாங்குங்கள்; உங்களைப் பழி வாங்காமலும் உங்கள் வேலைகளுக்கு நாங்களே உத்திரவாதம் தருகிறோம் என்று வாக்குறுதித் தந்த படேல் உட்பட பல தலைவர்கள் தேசியத் தலைவர்கள் திடீரென்று ''காணாமல்'' போனதும், போராட்டத்தை வாபஸ் வாங்கிய மறுநாளே, ஈவு இரக்கமில்லாமல் இந்திய மாலுமிகளை வெள்ளையர்கள் அடித்து நொறுக்கிக் கொன்றதும், கைதும், பழிவாங்கல்களும், கேஸூம், டிஸ்மிஸ்ஸூம்... அந்நிலைமையில் தப்பி ஓடித் தலைமறைவான மாலுமிகளில் மணியும் ஒருவர். இப்போது அவர், படுபாவிகளான வெள்ளையர்களைக்கூட மன்னிக்கத் தயாராக இருந்தார்; நமது தேசியத் தலைவர்களை அவர் மன்னிக்கத் தயாரில்லை!

கிராமத்தில் மூன்று அரசியல் பிரிவுகள் - சொல்லப் போனால் நான்கு - இருந்தது. காங்கிரஸ்கட்சி, திராவிட இயக்கம், கம்யூனிஸ்ட் கட்சி, பிரிட்டிஷ்காரனுக்குத் துதிபாடும் உதிரிகள்.

இந்த முதல் சுதந்திரதினக் கொண்டாட்டத்தைக் கொடியேற்றிக் கொண்டாட காங்கிரஸ் கட்சியாரோடு பிரிட்டிஷ் தாஸர்கள் இணைந்துகொண்டார்கள். (அதில் ஒன்றிரண்டு பேர் மாத்திரம் இன்னும் கலைந்துகொண்டே இருந்தார்கள்)

கம்யூனிஸ்ட் ''பையன்கள்'' போய் காங்கிரஸ்காரர்களைப் பார்த்து சுதந்திரதினத்தை நாம் சேர்ந்தே கொண்டாடுவோமே என்று கூப்பிட்டார்கள். ''ஒங்களுக்கும் நம் மகளுக்கும் ஒத்துவராது; நாங்க ஒங்களோடு சேரமுடியாது. நாங்க வாங்கின சொதந்தர தினத்தெ நாங்க தனியாத்தான் கொண்டாடுவோம்'' என்று சொல்லி விட்டார்கள்.

கொத்தனார் சாமிநாயக்கர் அதுபற்றிச் சொன்னார் ''காங்கிரஸ் காரங்க நடந்துகிட்டது சரியாத்தெரியல'' என்று. ''அந்தப் பேச்சுக் காலெ சரியில்லெ'' என்றார். கொஞ்சம் கழித்து எரிச்சலான கோபத் தோடு ''நாங்க வழங்குன சொதந்திரொம்'' என்று சொல்லிவிட்டுக் காட்டி, ''ஓம், அப்பன் வாங்கின சொதந்திரண்டா!!'' என்று சொல்லி, ஒரு வசவையும் சேர்த்து முடித்தார்.

அழகரசனும் அவனது சேக்காளிகளும் இந்த சுதந்திரத்தை வேற விதமாகப் பார்த்தார்கள். தமிழன் இனி இந்தி ஏகாதிபத்தியத்துக்கு அடிமையாக வேண்டும். பார்ப்பனியத்துக்குக் கிடைத்த வெற்றி. ஏக இந்தியா என்று சொல்லித் தமிழன் நசுக்கப்படுவான். எல்லா மத்திய அரசு பதவிகள், உத்தியோகங்கள் இனி நமக்கில்லை. பார்ப்பனிய அறிவு ஜீவிகளோடு அறிவுத்திறனில் நம்முடைய பிள்ளைகள் போட்டிபோட முடியாது. வஞ்சகமாக நாம் முறியடிக்கப்பட்டுக்கொண்டே இருப்போம்.

கம்யூனிஸ்ட் ''பையன்கள்'' தரப்பில் எழுந்த சிந்தனை வேற விதமாக இருந்தது, ''வெந்தது போதும்; முந்தியில போடு'' என்கிற கதையாகிவிட்டது. வெறும் அதிகார மாற்றம் இது. எல்லாம் அப்படியே இருக்கும்; வெள்ளையன் உட்கார்ந்த இடத்தில் - பதவிகளில் - கருப்பந்துரைகள் உட்கார்ந்துகொண்டிருப்பார்கள். ஏழ்மை அப்படியே இருக்கும். எந்திர முதலாளிகள் கொழுக்கப் போகிறார்கள்; வெள்ளை மூலதனத்தோடு இணைந்துகொண்டு. சுதந்திரம் என்று சொல்லிவிட்டு பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்கு உள்ளே இரு என்கிற வஞ்சகத்தை இந்த ''மூதி''கள் புரிந்து கொள்ளவில்லை. யுத்தத்தில் ஏற்பட்ட தண்டச் செலவுகளை யெல்லாம் இந்தியாவின் தலையில் வைத்து கட்டப்போகிறான்

அவன். இந்த வெறும் அதிகார மாற்றத்துக்காகவா இத்தனை காலம் எத்தனை தியாகிகள் மடிந்தார்கள்? இன்னும் ஒரு பெரும் போராட்டம் இருக்கு இவனுகளோட. ஆனாலும் வெள்ளையன் இந்த நாட்டைவிட்டுப் போறது ஒரு மகிழ்ச்சியான விஷயம்தான்.

காங்கிரஸ்காரர்களின் சிந்தனை இப்படி இருந்தது: பசுவும் புலியும் ஒரு தண்ணீர்த்துறையில் ஒன்று சேர்ந்து தண்ணீர் குடிக்கும் அந்த ''ராமராஜ்யம்'' வரப்போகிறது. இந்தியாவைப் பிடித்திருந்த கிரஹணம் விலகிவிட்டது. எல்லாம் நமது தலைவர்கள் பார்த்துக் கொள்வார்கள். இனி எல்லாமே சந்தோஷமே. 'ஆடுவோமே பள்ளுபாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று'

கிராமத்தைத் தோரணங்களாலும் கொடிகளாலும் அலங்கரித் தார்கள். ஊர்ப்பொங்கலுக்குக் காப்புக் கட்டுவதுபோல ஊருக்குள் நுழையும் பாதைகளிலெல்லாம் வைக்கோல் புரியில் மாங்குழை களைச் செருகித் தொங்கவிட்டுக் கட்டினார்கள். பெரியவர்கள் எல்லா கிராம தேவதைகளுக்கும் பூசைக்கு ஏற்பாடு செய்தார்கள்.

ஊருக்கு வடக்கே பார்வதி அம்மன் கோவில் முன்புள்ள மைதானத்தில் கம்யூனிஸ்ட்களும் ஊருக்குத்தெற்கே கிருஷ்ணன் கோவில் முன் உள்ள மைதானத்தில் காங்கிரஸ்காரர்களும் முதல் சுதந்திர தினத்தைத் தனித்தனியே கொண்டாடினார்கள்.

காங்கிரஸ்காரர்களின் ஏற்பாடும் கம்யூனிஸ்ட்களின் ஏற்பாடும் வித்தியாசமாக இருந்தது. காங்கிரஸ் கூட்டத்தில் இதுவரை வெள்ளைக்காரனை ஆதரித்தே பேசியவர்களும் ''நமதே ராஜ்யம் அடைந்தே தீருவோம்'' என்கிற கோஷத்தைக் கேலி செய்தவர்களும் இருந்தார்கள். எல்லோரும் குளித்து ரொம்ப சுத்தமாக் இருந்தார்கள். கூட்டத்தின் முடிவில் விநியோகிக்க தயாராக சர்க்கரைப் பொங்கலும் இருந்தது.

கம்யூனிஸ்ட்களின் கூட்டத்தில் அவ்வளவும் இளவட்டங் களாகவே இருந்தார்கள். அதில் அந்த கிராமத்தின் ஆதிதிராவிட சமூகத்தவர்கள் உட்பட அனைத்து ஜாதிக்காரர்களுமே இருந்தார்கள். சிறுவர்களைக்கொண்ட ஒயில்கும்மி கலை நிகழ்ச்சியாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அந்தக் கூட்டத்தில் சில புதிய முகங்களும் தட்டுப்பட்டன. அவர்கள் சுப்பையாவுக்குத் தெரிந்தவர்கள். இங்கே அவர்கள் வந்ததே தனிக்கதை. சுசிந்திரம் தாணுமாலயன் கோவில்

தேர்த்திருவிழாவில் தேரில் தேசியக்கொடியான மூவர்ணக்கொடி கட்டினால்த்தான் தேர் நகரும் என்று சொன்னார்கள். மூவர்ணக் கொடி கட்டாமல் தேர் நகரவில்லை. தேரில் கட்டிய மூவர்ணக் கொடியைத் திருவாங்கூர் போலீஸ் அவிழ்க்கப்போனது. கொடியை அவிழ்க்கவிட மாட்டோம் என்றது கூட்டம். போலீஸுக்கும் மக்களுக்கும் போராட்டம் தொடங்கியது. ''திவான் ஆட்சி ஒழிக, மன்னர் ஆட்சி ஒழிக'' என்று முன்னேறிய மக்கள் கூட்டத்தை முன்னறிவிப்புகூட இல்லாமல் கண்மூடித்தனமாக மக்களைச் சுட்டுக் குவித்தது திருவாங்கூர் போலீஸ்.

''எத்தனைபேர் செத்தாங்க என்றே தெரியலை; அவ்வளவு உடம்புகளையும் அள்ளிப் போட்டுக்கொண்டு போலீஸ் லாரி போகும்போது மறித்தோம். பயனில்லை. வாய் ஜனநாயகம் பேசுவதும் கை சுடுவதும் திவான் ஆட்சியின் அழகு. உயிர் தப்பி ஓடிவந்தோம்'' என்று சொன்னார்கள் அந்த இளைஞர்கள். அவர்களும் கூட்டத்தில் பேசுவதாக இருந்தது.

ராத்திரி பன்னிரெண்டு மணிவரை பொழுது போகணுமே; சலங்கைக் கொத்துகளைக் காலில் கட்டிக்கொண்ட சிறுவர்கள் கையில் செங்கொடி பிடித்துக்கொண்டு மேளத்தின் தாளக்கட்டுக்கு ஏற்ப ஒழுங்காக ஒன்றுபோல் காலடிகளை எடுத்து வைத்து கைக்கொடிகளை வீசிக் கூட்டுக் குரலில்ப் பாடி ஆடினார்கள்.

> ''சங்கத்திலெல்லோரும் சேருங்க
> விவசாய
> சமுதாயம் ஓங்க வேணுங்க...''

மக்கள் கவிஞன் திருமூர்த்தியின் பாடல்களை அவர்கள் தொடர்ந்து ஆடிப் பாடினார்கள்.

மணி பன்னிரெண்டு.

கிராம தேவதைகளின் கோவில்களிலுள்ள மணிகளெல்லாம் கணகணவென்று ஒலித்தன. பிடாங்கு வேட்டுகளை வெடிக்கச் செய்தார்கள். அதுவரை பறக்க விடப்பட்டிருந்த கறுப்புக் கொடியைக் கீழே இறக்கினார்கள். மூவர்ணக்கொடியைப் பலத்த ஆரவாரங்களுடனும் சொல்லமுடியாத ஆனந்தத்தோடும் ஏற்றி னார்கள். கரகோஷங்களோடு கோஷங்களும் ஒலித்தன. பெண்டுகள் குலவையிட்டார்கள்.

❖

வழக்கம்போல் பொழுது விடிந்தது!

மறுநாள்

பேப்பரில் வந்த அந்தச் செய்தியைப் பற்றிய பேச்சு வந்தது. தேசமெல்லாம் இந்த சுதந்திரதினக் கொண்டாட்டத்தில் மூழ்கி இருக்கிறது. கல்கத்தாவில், மகாத்மா காந்தி ராட்டையில் வேகமாக நூல் நூற்றுக்கொண்டிருந்தாராம்.

பத்திரிகை நிருபர்கள் போய் காந்திஜி முன்னால் நின்றார்களாம். அப்பவும் அவர் அவர்களைப் பார்க்கலையாம்.

''பாபுஜி, தேசத்துக்கு சுதந்திரம் வந்துவிட்டது. தேசமே மகிழ்ச்சியில் திளைத்துக்கொண்டிருக்கிறது. நீங்கள் மௌனமாக நூல் நூற்றுக்கொண்டிருக்கிறீர்கள். ஒரு செய்தி சொல்லவேண்டும்'', என்று கேட்டு நின்றார்கள்.

பதிலே சொல்லலையாம்; அவர்பாட்டுக்கு ''விர் விர்'' என்று வேகமா நூல் நூற்றுக்கொண்டிருந்தாராம். திரும்பவும் பத்திரிகை நிருபர்கள் அதே கேள்வியை காந்திஜியிடம் கேட்டார்களாம்.

ராட்டை சுற்றுவதை நிறுத்தினாராம். நிருபர்களைப் பார்த்தாராம். என்ன சொல்லுவாரோ என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்த நிருபர்களுக்கும் தேசத்துக்கும் அவர் சொன்ன ஒரே வார்த்தை;

''ஒண்ணுமில்லை''

சொல்லிவிட்டு முன்னிலும் வேகமாய் நூற்க ஆரம்பித்து விட்டாராம். சுதந்திரத்தைப்பற்றி கல்கத்தாவில் காந்தி சொன்ன வார்த்தை கோபல்ல புரத்திலும் வந்து எதிரொலித்தது.

''ஒண்ணுமில்லை''
''ஒண்ணுமில்லை''
''ஒண்ணுமில்லை''

அன்னமய்யா அந்த வார்த்தையைத் தனக்குள் சொல்லிப் பார்த்துக்கொண்டான்.

❖

# கி.ராஜநாராயணன்
# சாகித்திய அக்காதெமி
# விருது ஏற்புரை
### 25-பிப்ரவரி - 1992

மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே,
சக எழுத்தாளர்களே,
அறிஞர் பெருமக்களே, சகோதரி சகோதரர்களே,

என் வாழ்வில் நினைவில் கொள்ளவேண்டிய இந்நாளில், எனக்கு இங்கே விருதுவழங்கி கௌரவித்த சாகித்ய அக்காடமிக் கமிட்டியார்களுக்கும் என்னைத் தேர்ந்தெடுக்கக் காரணமான அனைவர்க்கும் முதலில் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய நாட்டின் ஒரு தெற்குக் கடேசி மூலையில் இருக்கிறது எனது கிராமமான இடைசெவல். 250 வீடுகளே கொண்ட சிறிய கிராமம்தான். இப்போது அங்கே என்னையும் சேர்த்து சாகித்ய அக்காடமி விருது பெற்றவர்களின் எண்ணிக்கை இரண்டு என்று ஆகிறது.

தமிழ்ச்சிறுகதை இலக்கியத்தில் குறிப்பிட்டுச் சொல்லும்படியான அந்த மற்றொரு எழுத்தாளன் எனது நண்பன் கு.அழகிரிசாமி எனது தெருவைச் சேர்ந்தவன்.

மரணத்துக்குப்பின் அவனுக்கும், உயிரோடு இருக்கும்போதே எனக்கும் விருதுவழங்கி எங்களை கௌரவித்திருக்கிறது சாகித்ய அக்காடமி.

நாட்டின் மிக உயர்ந்த அளவு மழை கொட்டும் இடம் சிரபுஞ்சி என்று சொன்னால், நாட்டின் மிகக்குறைந்த அளவு மழை பெய்யக்கூடிய இடம் எனது வட்டாரமான கரிசல் பிரதேசம்.

இந்த மண்ணைக் ''கரும்பாலைவனம்'' என்று ஒரு விதத்தில் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

என்றாலும், இந்த வறண்ட மண்ணில்தான் பல மகத்துவர்கள் தோன்றியிருக்கிறார்கள்.

பெருங்கவிஞர் வரிசையில் ஸ்ரீ ஆண்டாளும் பெரியாழ்வாரும், சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியாரும் எட்டையபுரம் சுப்ரமண்ய பாரதியாரும், ரசிக ஞானி என்று புகழ்பெற்ற ரசிகமணி டி.கே.சி.யும் இசையோகி விளாத்திகுளம் சுவாமிகளும், தேசபக்தச் செம்மல்களான வீரபாண்டிய கட்டபொம்மனும் வ.உ.சிதம்பரம் பிள்ளையும். (இசை மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீட்சிதர் வாழ்ந்து அடங்கிய மண்ணும் இதுதான்)

''கருப்புகாந்தி'' என்று புகழ்பட்ட காமராஜும், இப்படியான இன்னும் பலர் பிறந்த மண் இது.

இந்தக் கரிசல் மண் வட்டாரம் ஒரு காலத்தில் வெறும் கள்ளிச் செடிகளும் முள்ளுக்காடுகளும் நிறைந்த வனாந்திரப் பிரதேச மாகவே இருந்தது. இந்த இடத்திற்கு ஆந்திர நாட்டிலிருந்து வந்த தெலுங்கு மக்களும் கன்னட நாட்டிலிருந்து வந்து கன்னடம்பேசும் கவுண்டர் இன மக்களும் வந்து, இந்தக் காடுகளையெல்லாம் திருத்தி நாடாக்கினர்.

இந்த மக்கள், அவர்கள் பிறந்து வாழ்ந்த மண்ணை விட்டுவிட்டு இங்கேவந்து இப்படிக் குடியேறப் பலப்பல காரணங்கள் இருந்தன.

தமிழ் மொழியில் ஒரு பாடல் உண்டு.

''கொடிய மன்னன் இருக்கும் நாட்டில் வசிப்பதைவிட கடும்புலிகள் வாழும் காடு நன்றே'' என்கிறது அப்பாடல்.

ஆந்திர நாட்டிலிருந்து தெலுங்குபேசும் மக்களில் ஒரு பகுதியினர் இந்தக் காட்டுக்குள் வந்து ஒரு கிராமத்தை அமைத்த சோகமான நீண்டகதையை வர்ணிக்கிறேன் - இப்போது இங்கே விருதுபெற்ற ''கோபல்ல புரத்து மக்கள்'' நாவலின் முதல் பாகமான'' கோபல்ல கிராம''த்தில்.

இப்படியாக அந்த மண்ணிலிருந்து இந்த மண்ணுக்குக் குடி பெயர்ந்து வந்த நடப்பை எங்கள் முன்னோர்கள் எங்களுக்கு நாங்கள் குழந்தைப் பருவத்தில் இருந்தபோதே கதைகதையாகச் சொல்லி யிருக்கிறார்கள்.

ஆரம்பத்தில் பிறந்த அந்தக் கதைகளை, தாத்தாக்களும் பாட்டிகளும் தங்கள் பேரன் பேத்திகளுக்குச் சொன்னார்கள். அந்தப் பேரன்மாரும் பேத்திமாரும் கிழவர்களாகித் தங்கள் பேரன் பேத்திகளுக்குச் சொன்னார்கள்; இப்படியாக அந்த நடப்புச் சம்பவங்கள் கதையாகி, கதை புராணமாக உருவெடுத்து, மனதைத் தொடும் கதைகளாகக் கேட்ககேட்க தெவிட்டாதபடி ஆகிவிட்டது! ''கோபல்லபுரத்துமக்க''ளின் முதல்பாகமான ''கோபல்லகிராம'' நாவலுக்கு அடிப்படையாக இந்த நாட்டுப்புறக் கதைகளே அமைந்தன.

இந்நாவலின் முதல்பாகம், கிழக்கிந்தியக் கம்பெனியார் இங்கே வந்து கால்ஊன்றி, ஆட்சியைக் கைப்பற்றியதோடு முடிகிறது.

இரண்டாம் பாகமான ''கோபல்லபுரத்து மக்களில்'' பிரிட்டிஷ் ஆட்சி வந்ததின் விளைவால் இந்த கிராமத்தில் ஏற்பட்ட மாற்றங்கள், அந்த ஆட்சியை எதிர்த்து இந்திய மக்கள் கிளர்ந் தெழுந்து போராடிய போராட்டம், அப்போராட்டம் இந்தச் சிறிய கிராம மக்களை எவ்வாறு பாதித்தது என்பதைச் சொல்லுகிறேன்.

இந்தியா சுதந்திரம் பெற்ற கதையோடு இந்நாவல் இப்போதைக்கு முடிவடைகிறது.

சாகித்ய அக்காடமி விருது பெறும் ''கோபல்லபுரத்து மக்க'' ளோடு ''கோபல்லகிராம''த்தையும் சேர்த்துப் பார்த்தால்தான் ஒரு முழுமை கிடைக்கும்.

நாளைக்கு சாகித்ய அக்காடமி இந்நாவலை மற்ற இந்திய மொழிகளில் மொழிபெயர்க்க விரும்பும்போது இந்த எனது யோசனையையும் மனதில்கொண்டால் சிறப்பாக இருக்கும் என்பதை இங்கே கூற விரும்புகிறேன்.

இந்நாவலைப் பிறமொழிகளில் மொழியாக்கம் செய்வதில் சில சிக்கல்கள் இருப்பதாக ஒரு கருத்து நிலவுகிறது. அதைப் பற்றியும் இரண்டொரு வார்த்தைகள் கூறுவது இங்கே பொருத்தம் எனப் படுகிறது.

பொதுவாக,

வட்டாரமொழி இலக்கியங்களைப் பிறமொழிகளில் மொழி யாக்கம் செய்வது என்பது கடினமான காரியமாகவே இருக்கும் என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

என்றாலும், உலகின் பிற பகுதிகளில் இவைகளை சிரமம் மேற்கொண்டு செய்துகொண்டிருப்பதாகவே அறிகிறேன். நமது நாட்டிலும் அவ்வகை முயற்சியில் சாகித்ய அக்காடமி முனைந்து செயல்படுமானால் வெற்றிகாண இயலும் என்று நம்புகிறேன்.

சாதாரண மேம்போக்கான பொதுமொழி நடையை விட வட்டாரவழக்கு நடைமொழி ஆழமானது, அது மக்களின் ஆன்மாவிலிருந்து உதிப்பது. அதற்கே என்று ஒரு மொழிச்சிறப்பு உண்டு.

வட்டார வழக்குச் சொற்களை சரியாகப் புரிந்துகொள்ள விஸ்தாரமான ஒரு அகராதி தமிழில் இல்லாதது பெரிய்ய குறை. எனது கரிசல் வட்டாரத்துக்கு என்று ஒரு சிறிய அகராதி ஒன்றைத் தமிழில் முதன்முதலாக எனது நண்பர்களின் உதவியோடு செய்து வெளியிட்டிருக்கிறேன். என்றாலும் எனக்கு அது நிறைவு தருவதாக இல்லை.

இன்னும் திருத்தமாகவும் சிறப்பாகவும் அதை மறுபதிப்பாகக் கொண்டு வரவேண்டும் என்று தோன்றிக்கொண்டேயிருக்கிறது. அதன் இரண்டாவது பதிப்பு வெளிவரும்போது அக்குறைகளைக் களைந்து சீராக்கலாம் என்றிருக்கிறேன்.

சாகித்ய அக்காடமி எனக்கு வழங்கியிருக்கும் இந்த விருது எனக்கு மட்டுமல்ல, கரிசல் இலக்கிய எழுத்தாளர்களுக்கும் எனது மக்களுக்கும் கிடைத்த ஒரு விருதாகவே கருதி ஏற்றுக்கொள்கிறேன்.

இங்கு கூடியுள்ள அனைவருக்கும் எனது பணிவான வணக்கத்தையும் நன்றியையும் கூறி அமர்கிறேன்.

❖

## கி இராவின்

# கையெழுத்துப்பிரதி



- 25 -

*
*

காலை நேரம் ஒரு நாள்.

என்ன நேர்ந்தது?

வேப்ப மரங்களில் அங்கங்கே இலைகள்

கரிந்து போக ஆரம்பித்திருப்பதைக் காண முடிந்தது

நோய்களை விரட்டும் தெய்வீக மரம்-

இதற்குமா இப்படிப் பார்த்ததில்லையே யாரும்!

எங்கோ தூரத்திலிருந்து பெண்களின்

நோக்குகள் இலையையும் இரை கேட்டது.

யோசனை யோசனை பெரியவர்கள்

ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

வானத்தில் கருப்புப் பட்டிகள் உயரத்தில் வட்ட

மிட்டுக் கொண்டிருந்தன.

இந்த எழுத்தின் முதல் பாகத்தில்

அண்டரண்டப் பட்சிகள் வந்து போனது

நல்ல சகுனமாகப் படுகிறது.

அடுத்த பாகத்தில் சந்திப்போம்.

என்றும்

கி.ரா

உ-13.

22-06-2020

புதுவை-8.

